ஸ்ரீ:

# ஸ்ரீராமாயணம்

## யுத்தகாண்டம்.

தமிழ் வசனம்.

இஃது

ஸ்ரீவால்மீகி ராமாயணத்திற்கிணங்க

ஸ்ரீ. அ. வீ. நரஸிம்ஹாசாரியரால்

இயற்றப்பெற்று





சென்னை

ஆர். வெங்கடேஸ்வர் அண்டு கம்பெனியாரவர்களால்

ஆநந்த அச்சுக்கூடத்தில் அச்சிட்டு

வெளியிடப்பட்டது.

---

1923



1923 –

ஸ்ரீ:

கல்யாணகல்பகேதநம் கவிகுலாவிஷ்ட வம்ஶைககோதியமம்
நாநாபாவமநோஹரம் நவரஸோந்மேஷப்ரியம்பாவுகம் |
ரீதீநாமுபபாதநம் விமலவிர்முகுலார்யவிர்ஹேதநம்
ஶ்ரீராமாயணமாதிகாவ்யமநகம் கோ வேத்தி கோவா பவி || ௧

தத்தாத்ருஶந்த்ரதரகம் வஹகீர்த்திவம்ஶ்ய
பாராயணாம்ருதரஸோதயஸித்யதிருப்தஃ |
ஶ்ரீமச்சடாரிமுகதிவ்யகவிப்ரபந்த்ய
வாணீவைபவாநுபவநிர்மலசித்தவ்ருத்திஃ || ௨

அத்யுக்திநாம்நி யதிஜநே ஸ்வஜநைகமாந்ய
மாஸேதுஷேஉவதரமுஜ்ஜ்வலபுண்யகீர்த்தேஃ |
ஶ்ரீமத் குமாரகவிபூஷண தாதஸூரேஃ
ஶ்ரீபாதபங்கஜநிஷேவணதஃ க்ருதார்த்யஃ || ௩

வேலூர் வேங்கடக்ருஷ்ணவர்ய
தநயஃ ஸ்ரீரங்கநாயாஹ்வயஃ
ஶ்ரேஷ்டே வைஷ்ணவஸம்ப்ரதாய
ரஸிகஃ ஸதீயர்மகார்யே ரதஃ |
ஸ்ரீராமாயண மாதிகாவ்யமநகம்
பாஷாஸ்வநேகாஸ்வபி
ப்ரேம்ணா உலீலவதாத்மநா வஹாமதை
ரவ்யாஹதைஃ பண்டிதைஃ || ௪

தஸ்யநிதேஶேநாஹம் ராமாயணமேததீவமபரேபி |
ஸ்ரீராமசந்த்ரக்ருபயா த்ரவிட ஜநாநந்தநைர்வசநைஃ || ௫

யே ஹி புநரஸ்மதீயம-
மிமம் ரகூத்தமஸசரிதஸப்ரணயாஃ |
ஸஃபலமகுர்வந் ஸுஜநாஸ்-
தேஷு வஹாமஶ்சிராய கார்த்தஜ்ஞ்யம் || ௬

விக்யாத ஸ்ரீயுதவீரவல்ல்யுபபதோ
வித்வஜ்ஜநாநாம் ப்ரிய:
கௌண்டின்யான்வயஸிந்து ஶீதகிரண
ஸ்ரீவேங்கடார்யாத்மஜ: ।
ஆர்ய ஸ்ரீநரஸிம்ஹஸூரிரநவம்
காவ்யம் முநேராதிமம்
வ்யாஹாரைர்த்ரவிடோசிதைரநுஸரந்
வ்யாதிஶ்யாமலேவீதிதம் ॥ ௭

ய: ஶ்ரத்தயாஹரமேதுரேண மநஸா
ஸம்ஶ்ராவயந் பண்டிதாந்
பாஷாபிர்பஹுபிர் வ்யலீலிகதிதம்
காவ்யம் முநேராதிமம் ।
தஸ்யாயு:ஶ்ரியமுஜ்ஜ்வலாமநுதிநம்
தர்மே ரதிம் ஶாஶ்வதீம்
பக்திம் பாகவதேஷு பத்ரமகிலம்
தத்தாம் ரமாவல்லப: ॥ ௮

ஶரசந்த்ர ககநஸாயக
ஸம்வீதேஷு கதேஷு வத்ஸரேஷு கலே: ।
ஆநந்தஶரதி கும்பே
ராமாயணமேததாபூரி ॥ ௯

ஸ்ரீ:

# யுத்தகாண்டம் இரண்டாம்பாகம்.

## விஷயங்கள்

ஸர்க்கம். பேஜ்.

# படங்களின் விவரம்.

---

3031. இந்த்ரஜித்து வானரர்களின் எதிரில் மாயா ஸீதையை வெட்டுதல்.

3062. லக்ஷ்மணன் நிகும்பிலையில் ஹோமஞ் செய்கின்ற இந்த்ரஜித்தின்மேல் பாணம் ப்ரயோகித்தல்.

3092. லக்ஷ்மணன் இந்த்ரஜித்தை வதித்தல்.

3223. மாண்ட ராவணனை அவனுடைய அந்தப்புர ஸ்த்ரீகள் சூழ்ந்து புலம்புதலும், ராமன் அவனுக்கு ஸம்ஸ்காரஞ் செய்யும்படி விபீஷணனைத் தூண்டுதலும்.

3251. லக்ஷ்மணன் ராம நியோகத்தின்படி விபீஷணனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்தல்.

3258. ஹனுமான் ராக்ஷஸிகளைக் கொல்லவேண்டுமென்ன, ஸீதைகூடாதென்று தடுத்தல்.

3265. விபீஷணன் ஸீதையை ராமனிடம் அழைத்துக் கொண்டு வருதல்;

3276. ஸீதை அக்னிப்ரவேசம் செய்தல்.

3290. அக்னிதேவன் ஸீதையை ஏந்திக்கொண்டுவந்து ராமனுக்குக் கொடுத்தலும், ப்ரஹ்மாதிகள் ராமனை ஸ்தோத்ரம் செய்தலும்.

3333. பரதன் அக்னிப்ரவேசத்திற்கு ஸித்தனயிருத்தலும், ஹனுமான் வந்து ஸமாதானப்படுத்துதலும்.

{ ராவணன் அனுப்பின மஹோதரன் முத லிய ராக்ஷஸர் யுத்தத்திற்கு வருதல். }

துர்ப்புத்தியாகிய ராவணன் இங்ஙனம் சோகத்தி னால் பரிதபித்துப் புலம்புவதைக் கேட்டு த்ரிசிரன் அவ னைப் பார்த்து, 'ராஜனே! எமது நடுத்தந்தையாகிய கும்பகர்ணன் நீ சொன்னபடி மஹாபராக்ரமசாலியே. ஸந்தேஹமில்லை. தெய்வாதீனமாய் அடியுண்டு மாண்ட னன். ஆயினும் ஸத்புருஷராயிருப்பவர் உன்னைப்போல் சிறிதும் புலம்பமாட்டார்கள். ப்ரபூ! மூன்று லோகங்க ளுக்கும் நீயொருவனே போதுமானவன்; இது நிஜம். அப்படிப்பட்ட நீ உன்னைக் குறித்து அற்பன்போல், இவ்வண்ணம் வருந்துவதேன்? உனக்கு ப்ரஹ்மதேவன் கொடுத்த சக்தியும் கவசமும் பாணமும் தனுஸ்ஸும், ஆயிரங்கழுதைகள் பூட்டப்பெற்று மேகம்போல் கர் ஜிப்பதான மஹாரதமும் இருக்கின்றன அல்லவா? ஒருக் கால், நீ ஆயுதமொன்றுமில்லாமலே தேவதானவர்களை யுங்கூட ஹிம்ஸித்திருக்கின்றனை. அப்படிப்பட்ட நீ இப்பொழுது ஸமஸ்த ஆயுதங்களும் குறைவற்றிருக்கப் பெற்று ராமனை அடக்க உரியவனுயிருக்கின்றனை. மஹா ராஜனே! இவ்வளவு ஏதுக்கு? நீ வெறுமனே இங்கேயே மனம்போனபடி இருப்பாயாக. நான் யுத்தத்திற்குப் புறப்பட்டுப் போகிறேன். கருடன் ஸர்ப்பங்களைப்போல், நான் சத்ருக்களை வேரோடு களைந்து நாசஞ்செய்கிறேன். தேவேந்த்ரன் சம்பராஸுரனைப்போலவும் விஷ்ணு[1] நர காஸுரனைப் போலவும், இப்பொழுதே யுத்தத்தில்

1. இங்குச் சொல்லப்பட்ட நரகாஸுரன் பூதேவியின் குமார னான நரகாஸுரனன்று. அவன், வால்மீகி ப்ரபந்தம் நிர்மிக்கிறபோது பிறக்கவே இல்லை. விப்ரசித்திக்கு ஸிம்ஹிகையிடத்தில் 'வாதாபிர் நமுசிஸ்சைவ இல்வலஸ் ஸ்ருமரஸ்ததா| அந்யகோ நரகஸ்சைவ கால நாஹஸ்ததைவச' என்று பிறந்த வாதாபி முதலியவர்களில் அடங்கின நரகாஸுரனென்று தெரிகிறது. கோவிந்தராஜர்.

ராமனை விழத்தள்ளிப் படுக்கச்செய்கிறேன்' என்றனன். ராக்ஷஸராஜனான ராவணன் த்ரிசிரனுடைய வார்த்தையைக்கேட்டுக் காலத்தினால் தூண்டப்பட்டவனாகையால் ராமனை வெல்லுவது அஸாத்யமென்று அறியாமல் இவ்வார்த்தையினால் தன்னை மீளவும் புதிதாகப் பிறந்தாற் போல் நினைத்தனன். த்ரிசிரன் சொன்ன வார்த்தையைக் கேட்டு, ராவண குமாரர்களும் வீரர்களும் தேவேந்த்ரனோடொத்த பராக்ரமமுடைய ராக்ஷஸஶ்ரேஷ்டர்களுமான தேவாந்தகன், நராந்தகன், மஹாதேஜஸ்வியாகிய அதிகாயன் ஆகிய இவர்கள் அப்பால் 'நான் நான்' என்று கர்ஜித்துக்கொண்டு யுத்தத்திற்குப்போக ஸந்தோஷத்தினால் மிகுந்த உத்ஸாஹமுற்றனர். அவர்களெல்லோரும் ஆகாயத்தில் போக வல்லவர்; எல்லோரும் மாயையில் கைதீர்ந்தவர்; எல்லோரும் தேவதைகளுடைய கர்வத்தையும் அடக்குந் தன்மையர்; எல்லோரும் யுத்தத்தில் வெல்லமுடியாதவர்; எல்லோரும் நல்ல பலமுடையவர்; எல்லோரும் பரந்த புகழுடையவர்; எல்லோரும் யுத்தத்தில் தேவதைகளும் கந்தர்வர்களும் கின்னரர்களும் மஹோரகர்களும் ஒன்றுகூடி எதிர்த்து வரினும் தோல்வி அடைந்ததாகக் கேட்டதில்லை; எல்லோரும் கல்வியில் பயிற்சியுடையவர்; வீரர்கள்; எல்லோரும் யுத்தத்தில் கைதீர்ந்த சூரர்கள்; எல்லோரும் சிறந்த சாஸ்த்ரஜ்ஞான முடையவர்; எல்லோரும் வரங்கள் பெற்றவர். அப்பொழுது அந்த ராக்ஷஸராஜனாகிய ராவணன் ஸூர்யன் போன்ற தேஜஸ்ஸுடையவரும் சத்ருக்களை அழிப்பவருமாகிய பிள்ளைகள் சூழ்ந்திருக்கப் பெற்று, தானவர்களின் பெருங்கர்வத்தை அடக்க வல்ல தேவதைகளால் சூழப்பட்ட தேவேந்த்ரன்போல் ப்ரகாசித்தனன். அந்த ராவணன் புதல்வர்களை அணைத்

துச் சிறந்த பூஷணங்களால் அலங்கரித்து மேலான ஆசீர்வாதங்களால் உத்ஸாஹப்படுத்தி யுத்தத்திற்கு அனுப்பினன். ராவணன் யுத்தத்தில் பிள்ளைகளின் காப்புக்காகத் தனது உடன்பிறந்தவரும்[1] யுத்தோன்மத்தன் மத்தன் என்று வழங்கிவருபவருமாகிய மஹோதரமஹா பார்ஸ்வர்களை அனுப்பினன். மஹாகாயர்களான அந்த ராக்ஷஸர் மஹானுபாவனும் சத்ருக்களை அழப்படுத்தும் தன்மையனுமாகிய ராவணனுக்கு நமஸ்காரஞ்செய்து வலம் வந்து யுத்தத்திற்குப் புறப்பட்டனர். மஹாபலிஷ்டர்களான அந்த ராக்ஷஸஶ்ரேஷ்டர்கள் அறுவரும் ஆயுதங்களின் அடிகளைத் தகையும்படியான [2]ஒஷதிகளையும் நானாவித நற்கந்தங்களையும் பூசிக்கொண்டு யுத்தத்திற்கு உத்ஸாஹமுற்றுப் புறப்பட்டனர். த்ரிசிரன் அதிகாயன் தேவாந்தகன் நராந்தகன் மஹோதரன் மஹாபார்ஶ்வன் என்கிற இவர்கள் காலத்தினுல் தூண்டப்பட்டு யுத்தத்திற்குப் புறப்பட்டனர். அப்பால் மஹோதரன் ஐராவதகுலத்தில் பிறந்ததும் கறுத்த மேகம் போன்றதுமாகிய ஸுதர்ஶனமென்னும் யானையின்மேல் ஆரோஹித்தனன். அம்மஹோதரன் ஸமஸ்த ஆயுதங்களோடுங்கூடி அம்பறாத்தூணிகளால் அலங்கரிக்கப்

---

1. இந்த யுத்தோன்மத்தனும் மத்தனும் முறையே, ராவணன் தம்பிகளான மஹோதரனும் மஹாபார்ஶ்வனுமே.

2. ஒஷதிகள் கோஷ்ம் மாம்ஸீ ஹரித்ரே த்வே முரா ஶைலேய ஸந்தநே। வசா சம்பகமுஸ்தாஶ்ச ஸர்வெளஷதயோ தஶ ஸ்ம்ருதா꞉ (கோஷ்டம், ஜடாமாம்ஸி இரண்டு வகையான மஞ்சள், முறை, சிலாஜது, சந்தனம், வசம்பு, செண்பகமொட்டு, கோரைக்கிழங்கு என்கிற இந்தப் பத்து ஒஷதிகள் ஆயுதங்களின் அடிகளாலுண்டான புண்களைப் போக்குகின்றனவென்று தெரிகிறது.

பட்டயானையின்மேல் ஏறிக்கொண்டு, [1] அஸ்தமய பர்வ தத்தில் ஸூர்யன்போல் ப்ரகாசித்தனன். ராவணபுத்ர ஞகிய த்ரிசிரன், சிறந்த குதிரைகள் பூட்டப்பெற்று ஸம ஸ்த ஆயுதங்களும் நிறைந்த மேலான ரதத்தில் ஆரோ ஹித்தனன். ஆயுதகாந்திகளோடுகூடிப் பெருங்கோஷ மிடுகின்ற தேரின்மேல் ஏறி வில்லைத் தரித்திருக்கிற த்ரி சிரன் மின்னல்களோடும் கொள்ளிகளோடும் இந்த்ர தனுஸ்ஸோடும் கூடிப் பர்வத சிகரத்தின்மேலிருக்கிற மேகம்போல் விளங்கினன். அந்த த்ரிசிரன் அவ்வுத்தம ரதத்தில் மூன்று தலைகளிலும் மூன்று கிரீடங்களை அணிந்து மூன்று பொன் சிகரங்களையுடைய பர்வத ராஜ ஞகிய ஹிமவத்பர்வதம்போல் திகழ்ந்தனன். அப்பொ ழுது மஹா தேஜஸ்வியும் வில்லாளிகள் அனைவரிலும் மேன்மையுற்றவனும் ராக்ஷஸ ப்ரபுவான ராவணனது புதல்வனுமாகிய அதிகாயன், நல்ல சக்ரங்களும் இருசும் அமைந்த மேலான தேரின்மேல் ஆரோஹித்தனன். அது ஏர்க்காலின் கீழுள்ள அண்டைமரமும் நுகத்தடி யும் திடமாயிருக்கப் பெற்று அம்பறாத்தூணிகளோடும் விற்களோடும் விளங்குவதும் ஈட்டி கத்தி இரும்புத்தடி முதலியவற்ருல் நிரம்பியதுமாயிருந்தது. அந்த அதி காயன் மிகுந்த ஒளியுடன் ப்ரகாசிப்பதும் பொன்னுல் விசித்ரஞ் செய்யப்பட்டதுமாகிய கிரீடத்தையும் ஆபர ணங்களையும் அணிந்து கிரணங்களால் திகழ்கின்ற மே ருபர்வதம்போல் விளங்கினன். மஹாபலமுடைய அந்த ராஜகுமாரன் அதிகாயன், தேவதைகளால் சூழப்பட்ட தேவேந்த்ரன்போல், ராக்ஷஸர்களால் சூழப்பட்டு அந்த ரதத்தில் மிகுதியும் ப்ரகாசித்தனன். நராந்தகன், உச் சைஸ்வரஸ்ஸென்கிற இந்த்ரனுடைய அஸ்வம்போல்

1 அஸ்தமய பர்வதத்தில் ஸூர்யன்போல் உடனே நாசமடையப் போகிருனென்றமை அறிவிக்கப்பட்டது.

தோற்றுவதும் பொன் பூஷணங்களால் அலங்கரிக்கப் பட்டதும் மனோவேகமுடையதும் பேருருவம் அமைந்த துமாகிய வெளுத்த குதிரையின்மேல் ஏறிக்கொண்ட னன். நராந்தகன் இங்ஙனம் குதிரையின்மேல் ஏறிக் குறைக்கொள்ளிபோன்ற ஈட்டியை ஏந்திக்கொண்டு, மயிலின்மேல் ஏறிச் சக்தியென்கிற ஆயுதத்தைத் தரித் து மஹாதேஜஸ்வியான குமாரஸ்வாமிபோல் ப்ரகாசித் தனன். தேவாந்தகன் வஜ்ரங்கள் இழைத்த இரும்புத் தடியைக் கையில் பிடித்து ஸமுத்ரங் கடைந்தபோது மந்தரபர்வதத்தை ஏந்திக்கொண்டிருக்கிற விஷ்ணு வின் மேனியை அனுஸரித்து ப்ரகாசித்தனன். தேவ தைகள், நிகரில்லாத ஸைன்யங்களால் சூழப்பட்டு அம ராவதியினின்று புறப்படுவதுபோல், மஹா பலிஷ்டர்க ளான அந்த ராக்ஷஸர்கள் நிகரில்லாத ஸைன்யங்களால் சூழப்பட்டு லங்கையினின்று புறப்பட்டனர். மஹாபல ரான ராக்ஷஸர் மேலான ஆயுதங்களைத் தரித்துச் சிலர் யானைகளின் மேலும், சிலர் குதிரைகளின் மேலும் சிலர் மேகம்போல் கர்ஜிக்கின்ற ரதங்கள் மேலும் ஏறிக் கொண்டு அந்த மஹோதராதிகளைப் பின்றொடர்ந்தனர். மஹாபலசாலிகளும் ஸூர்யனோடொத்த ஒளியுடையவ ரும் கிரீடம் அணிந்தவரும் அழகு நிறைந்தவருமாகிய அந்த ராக்ஷஸ குமாரர்கள் ஆகாயத்தில் விளங்கும் க்ர ஹங்கள்போல் ப்ரகாசித்தனர். அந்த ராக்ஷஸர் தரித் திருந்த ஆயுதங்களின் வரிசை, சரத்காலமேகங்கள் போல் வெளுத்து ஆகாயத்தில் கூட்டங்கூடின ஹம் ஸங்களின் வரிசைபோல் விளங்கிற்று. அந்த ராக்ஷ ஸர்கள் 'சத்ருக்களையாயினும் ஜயிக்கவேண்டும். அல் லது அவர்களால் மரணத்தையாவது பெறவேண்டும். என்று நிச்சயித்துக்கொண்டு புறப்பட்டனர். அந்த

வீரர்கள் இங்ஙனம் செய்யவேண்டுமென்று நிச்சயித்து யுத்தஞ்செய்ய விரும்பிப் புறப்பட்டுப்போயினர். வீரர்களான அந்த ராக்ஷஸர் யுத்தத்தில் மிகுதியும் கொழுத்தவராகையால் யுத்தரங்கத்திற்குப் போகத்தொடங்கி கர்ஜித்தனர்; ஸிம்ஹநாதங்களைச் செய்தனர்; செருக்கினுல் அலக்ஷ்யமான பேச்சுக்களைப்பேசினர்; பாணங்களை எடுத்துக்கொண்டனர். அப்பொழுது ராக்ஷஸர்களின் இறைச்சல்களாலும் தோள் தட்டுகிற சப்தங்களாலும் பூமியும் நடுங்கிற்று அவர்களுடைய ஸிம்ஹநாதங்களால் ஆகாயம் வெடிப்பதுபோலிருந்தது. மஹாபலிஷ்டர்களும் மேன்மையுற்றவருமாகிய அந்த ராக்ஷஸவீரர்கள் அங்ஙனம் ஸந்தோஷத்துடன் சென்று கற்களையும் வ்ருக்ஷங்களையும் தரித்து யுத்தத்திற்கு ஸித்தமாயிருக்கின்ற வானரஸைன்யத்தைக் கண்டனர். மஹாபலிஷ்டர்களான வானரர்களும், ரதகஜதுரகங்கள் (தேர் யானை குதிரைகள்) நிறைந்து ரதங்களிலுள்ள அநேகமாயிரஞ் சிறு சதங்கைகளால் கணகணவென்று ஒலிப்பதாகிப் பெருப்பெரிய ஆயுதங்களை ஏந்தி, எரிகின்ற அக்னிபோலும், விளங்குகின்ற ஸூர்யன்போலும் தோற்றுகின்ற ராக்ஷஸர்கள் நாற்புறத்திலும் சூழ்ந்திருக்கப்பெற்றுக் கறுத்தமேகம்போல் இருண்டு வருகின்றராக்ஷஸப்படையைக் கண்டனர். மஹாபலிஷ்டர்களான வானரர், வருகின்ற ராக்ஷஸஸேனையைக்கண்டு, தமது பராக்ரமத்தை வெளியிட அவகாசம் கிடைத்ததென்று பெரிய மலைகளை ஏந்திக்கொண்டு உரக்க ஸிம்ஹநாதங்களைச் செய்வதும், அந்த ராக்ஷஸர்களைப் பார்த்துப் பொறுக்க முடியாமல் கர்ஜிப்பதுமாயிருந்தனர். அப்பால் மஹாபலமுடைய அந்த ராக்ஷஸக்கூட்டங்களும் வானர யூதபதிகளின் ஸிம்ஹநாதங்களைக்கேட்டுச் சத்ருக்களின் பெரிய

ஸந்தோஷத்தைப் பொறுக்க முடியாமல் மிக உரக்கவும் மிகப் பயங்கரமாகவும் கோஷமிட்டனர். அந்த வானர யூதபதிகள் பயங்கரமான ராக்ஷஸஸேனையில் புகுந்து பர்வதங்களைக் கைகளில் ஏந்திச் சிகரங்களோடுகூடின பர்வதங்கள்போல் உலாவினர். வானரர் கற்களையும் மரங்களையும் ஆயுதமாகக்கொண்டு யுத்தஞ் செய்பவர்; ஆகையால் பெரிய அடிபாகத்தையுடைய வ்ருக்ஷங்களைப் பிடுங்கி ஏந்திக்கொண்டு அவ்வானரபுங்கவர்கள் பெருங்கோபாவேசத்துடன், சிலர் ஆகாயத்திலிருந்தும் சிலர் பூமியிலிருந்தும் ராக்ஷஸ ஸைன்யங்கள்மேல் திரிந்தனர். அப்பொழுது ராக்ஷஸர்களும் வானரர்களும் நிறைந்து பயங்கரமாக யுத்தஞ் செய்தனர். பயங்கர பராக்ரமரான வானரர்கள், ராக்ஷஸர் ப்ரயோகித்த பாணஸமூஹங்களால் எவ்வளவு தடுக்கப்பெறினும் நிற்காமல் அவர்மேல் வ்ருக்ஷங்களையும் சிலைகளையும் சைலங்களையும் நிகரில்லாதபடி மழைபெய்தாற்போல் பெய்தனர். வானரர்களும் ராக்ஷஸர்களும் யுத்தத்தில் உத்ஸாஹத்தினால் ஸிம்ஹநாதஞ் செய்தனர். வானரர்கள் ராக்ஷஸர்களைக் கற்களால் அடித்துச் சூர்ணஞ் செய்தனர். சில வானரர்கள் யுத்தத்தில் கோபித்து மிகுதியும் கோபாவேசமுற்று, கவசங்களைப் பூட்டியும் ஆபரணங்களை அணிந்தும் ரதங்களில் ஏறி வீற்றிருக்கின்ற வீரர்களான ராக்ஷஸர்மேல் திடீலென்று குதித்துப் புடைக்கலாயினர். யானைமேலும் குதிரைமேலும் உட்கார்ந்திருப்பவரை அங்ஙனமே மேல் விழுந்து ஹிம்ஸித்தனர். அந்த யுத்தத்தில் மேலான ராக்ஷஸர்கள், பர்வத சிகரங்கள் அங்கம் முழுவதும் நிரம்பியிருக்கவும் குத்துவரிசைகளால் கண் மண்டை பிதுங்கி வெளித்தோற்றவும் பெற்று இங்கும் அங்கும் திரிந்து தரையில் விழுந்து

இறைச்சலிட்டனர். ராக்ஷஸர்களும் கூரான பாணங்களால் வானரஸ்ரேஷ்டர்களைப் பிளந்தனர்; சூலங்களாலும் இரும்புத் தடிகளாலும் கத்திகளாலும் ஈட்டிகளாலும் சக்திகளாலும் வானரகுஞ்சரர்களை வதித்தனர். அந்த யுத்தத்தில் வானரர்களும் ராக்ஷஸர்களும் ஒருவரையொருவர் ஜயிக்கவிரும்பி அவயவங்களெல்லாம் சத்ருக்களின் ரக்தங்கள் தோயப்பெற்று ஒருவரையொருவர் விழத்தள்ளினர். அனந்தரம் ஒரு முஹூர்த்தகாலத்தில் அந்த யுத்தபூமி முழுவதும் வானரர்களும் ராக்ஷஸர்களும் ஒருவர்மேல் ஒருவர் ப்ரயோகித்த பர்வதங்களாலும் கத்திகளாலும் மறைக்கப்பட்டு ரக்தப்ரவாஹத்தினால் நிறைந்திருந்தது. அப்பொழுது அந்த யுத்தபூமி பர்வதம்போன்ற உருவமுடையவர்களும் பகைவரை அடக்குகின்றவரும் யுத்தத்தில் கர்வமுற்றவருமாகிய ராக்ஷஸர்களின் சரீரங்களால் முழுவதும் நிரம்பியிருந்தது. வானரர்கள் கைச்சண்டையில் ராக்ஷஸர்களை மேல்தூக்குவதும் கீழ் வீசியெறிவதும் அவரது சூலாயுதங்களை முறித்தெறிவதுமாயிருக்கையில், ராக்ஷஸர்களும் பின்வாங்காமல் திரும்பி அவ்வானரர்களைக் கிட்டிக் காண்போர்க்கு வியப்புண்டாகும்படி கைகால் முதலிய அவயவங்களால் போராடினர். ராக்ஷஸர் வானரர்களைக் கொண்டே வானரர்களை அடித்தனர். வானரர்களும் ராக்ஷஸர்களைக்கொண்டே ராக்ஷஸர்களை அடித்துக் கொண்டிருந்தனர். ராக்ஷஸர்கள், வானரர் ப்ரயோகிக்கிற கற்களைத் தடுத்து அவ்வானரர்களை முடித்தனர். வானரர்களும் ராக்ஷஸருடைய ஆயுதங்களைப் பிடுங்கிக் கொண்டு அவர்களை அடித்துக்கொன்றனர். வானரர்களும் ராக்ஷஸர்களும் யுத்தத்தில் ஒருவரையொருவர்பர்வதங்களாலும் சூலங்களாலும் பாணங்களாலும் அடித்து தேஹங்களைப் பிளந்து ஸிம்ஹநாதங்களைச் செய்

தனர். அந்த யுத்தபூமியில், ராக்ஷஸர் வானரர்களால் அடிக்கப்பட்டுக் கவசங்கள் முறியப்பெற்று, கத்தியால் வெட்டுண்ட வ்ருக்ஷங்கள் ரஸத்தைப் பெருக்குவது போல் ரக்தத்தைப் பெருக்கினர். சில வானரர்கள் யுத்தத்தில் ரதத்தினுல் ரதத்தையும் யானையால் யானையையும் குதிரையால் குதிரையையும் அடித்துக் கொன்றனர். வானரர்களெல்லோரும் மனக்களிப்புடன் மனச்சிலைகளையும் பலகிளைகள் நிறைந்த வ்ருக்ஷங்களையும் கொண்டு ராக்ஷஸர்களை வதித்தனர். அப்பொழுது ராக்ஷஸர்களுக்கும் வானரர்களுக்கும் யுத்தம் பயங்கரமாயிருந்தது. ராக்ஷஸர்கள் க்ஷுரப்ர மென்ற பாணங்களாலும் அர்த்தசந்த்ரபாணங்களாலும் பல்ல பாணங்களாலும் மற்றுமுள்ள கூரான பாணங்களாலும், வானரஶ்ரேஷ்டர்கள் போடுகிற வ்ருக்ஷங்களையும் கற்களையும் சேதித்தனர். யுத்தத்தில் சிதறியிருக்கின்ற பர்வத சிகரங்களும் முறிந்திருக்கின்ற வ்ருக்ஷங்களும் மாண்டுபோன வானர ராக்ஷஸர்களும் நிறைந்திருக்கையால் பூமி நடந்து போக முடியாதிருந்தது உத்ஸாஹத்தை மேன்மேலும் வளர்க்கின்ற பலமுடைய அவ்வான்ரர்கள் அனைவரும் கர்வத்தினுலும் ஸந்தோஷத்தினுலும் தோன்றிய சேஷ்டைகளைச் செய்பவராகி யுத்தத்தில் புகுந்து பயத்தைத் துறந்து ராக்ஷஸர்களின் நானுவித ஆயுதங்களைப் பிடுங்கிக்கொண்டு அவற்ருல் ராக்ஷஸர்களோடு யுத்தஞ்செய்தனர். அங்ஙனம் த்வந்த்வயுத்தம் நடக்கும்பொழுது வானரர்கள் ஸந்தோஷத்தினுல் வளர்ந்து வருவதையும் ராக்ஷஸர்கள் பலங்குறைந்து கீழ்விழுவதையும் பார்த்து மஹரிஷிகளும் தேவதைகளும் ஸந்தோஷத்தினுல் இரைச்சலிட்டனர். அப்பால் நராந்தகன் வாயுவேகமுடைய குதிரையின்மேல் ஏறிக்கொண்டு கூரான சக்தி

ஆயுதத்தைக் கொண்டு, மஹாஸமுத்ரத்தில் மத்ஸ்யம் ப்ரவேசிப்பதுபோல், வானர ராஜஸைன்யத்தில் ப்ரவேசித்தனன். அவ்வீரன் ஜ்வலிக்கின்ற ஈட்டியினல் ஏழாயிரம் வானரர்களைப் பிளந்து கொன்றனன். அங்ஙனம் இந்த்ர சத்ருவாகிய அம்மஹா பலன் தானொருவனுயினும், இங்ஙனம் ஒருக்ஷணமாத்ரத்தில் மேலான வானரஸேனையை அடித்துக் கலங்கச் செய்தனன். வித்யாதரர்களும் மஹாரிஷிகளும், குதிரைமேல் உட்கார்ந்து வானரஸேனையின்மேல் விழுந்து விளையாடுகின்ற மஹாபலனுகிய நராந்தகனைக் கண்டனர். அந்த நராந்தகன் பர்வதம்போன்ற உருவமுடைய வானரர்களை விழத்தள்ளிக்கொண்டுபோகையில், அவனுடைய மார்க்கம், வெறும் பர்வதாகாரர்களான வானரர்களின் சரீரங்களால் மறைக்கப்பட்டு மாம்ஸங்களும் ரக்தங்களும் நிறைந்து சேருகிப் புலப்பட்டது. அம்மேலான வானரர்கள் பராக்ரமத்தைக் காட்ட நினைப்பதற்குள்ளேயே நராந்தகன் அவர்களை ஆக்ரமித்துப் பிளந்துகொண்டேயிருந்தனன். நராந்தகன் யுத்தத்தின் முனையில், ஜ்வலிக்கின்ற ஈட்டியைப் பிடித்துக்கொண்டு, காட்டுத்தீ அரண்யத்தைக் கொளுத்துவதுபோல், வானர ஸைன்யங்களைக் கொளுத்தினன் (ஹிம்ஸித்தனன்). வானரர்கள் வ்ருக்ஷங்களையாவது பர்வதங்களையாவது பெயர்த்தெடுத்துப் பொகடுவதற்குள்ளாகவே நராந்தகனுடைய ஈட்டியால் அடிக்கப்பட்டு,வஜ்ரத்தினல் அறுக்கப்பட்ட பர்வதங்கள் போல் தரையில் வீழ்ந்தனர். பலிஷ்டனுகிய நராந்தகன் யுத்தத்தில் வானரஸைன்யங்களை யெல்லாம் ஹிம்ஸித்துக்கொண்டு வர்ஷகாலத்தில் வீசும்காற்றுபோல் எதிரின்றி எல்லாத்திசைகளிலும் ஸஞ்சரித்துக்கொண்டிருந்தனன். மிகுந்த வீர்யமுடைய அந்த நராந்தகன், வானரர்கள் மேற்கிளம்பினும் நிற்பினும் ஓடிப்போயினும்

எல்லோரையும் பிடித்து வதித்துக் கொண்டிருக்கை யால், அவ்வானர வீரர்கள் ஓடவும் நிற்கவும் இப்படி அப்படி அசையவும் வல்லமையற்றிருந்தனர். ம்ருத்யு வைப்போன்றதும் ஸூர்யன்போல் ஜ்வலிப்பதுமாகிய ஒரு ஈட்டியினுல் வானர ஸைன்யங்கள் பிளக்கப்பட்டுத் தரையில் விழுந்தன. வானரர்கள் வஜ்ராயுதத்தின் அடிபோன்ற அந்த ஈட்டியின் அடியைப் பொறுக்க முடியாமல் மிகுதியும் உரக்கக் கூச்சலிட்டனர். அப் பொழுது ஈட்டியால் அடிக்கப்பட்ட வானர வீரர்களின் உருவங்கள் வஜ்ராயுதத்தினுல் சிகரங்கள் பிளக்கப்பெற் று விழுகின்ற பர்வதங்கள்போல் புலப்பட்டன. முன்பு கும்பகர்ணனுல் பூமியில் தள்ளுண்டு மூர்ச்சித்திருந்த மஹா பலிஷ்டர்களான வானர ஶ்ரேஷ்டர்கள், இவ்வ ளவில் மூர்ச்சை தெளிந்து ஸுக்ரீவனைப் பணிந்து நின் றனர். ஸுக்ரீவன் நாற்புறத்திலும் உற்றுப்பார்த்து, வா னரஸேனை நராந்தகனிடம் பயந்து வருந்தி இங்கும் அங்கும் ஓடுவதைக்கண்டனன். அவன் அங்ஙனம் ஓடு கின்ற தன் வானரஸேனையைக் கண்டு, அப்பால் குதிரை மேல் உட்கார்ந்து ஈட்டியைக் கையில் ஏந்தி வருகின்ற நராந்தகனைக் கண்டனன். உடனே மஹாதேஜஸ்வியா கிய அவ்வானர ராஜனுன ஸுக்ரீவன், இந்த்ரனைப் போன்ற பராக்ரமமுடைய குமாரனுன அங்கதனைப்பார் த்து 'நீபோய், இதோ குதிரைமேல் இருந்து வானரஸே னையைக் கலக்குகின்ற வீரனுகிய அந்த ராக்ஷஸனை ப்ராணன்களால் பிரிந்திருக்கச் செய்வாயாக' என்றனன். அனந்தரம் அந்த அங்கதன் ராஜனுகிய ஸுக்ரீவன் மொழிந்ததைக் கேட்டு, மேக ஸமூஹத்தினின்று ஸூர் யன் வெளிப்படுவதுபோல், மேக ஸமூஹம்போல் கறுத்தி ருக்கின்ற வானர ஸைன்யத்தினின்று வெளிப்பட்டு வந்த னன். திடமாக ஒன்றோடொன்று பின்னிக்கொண்டிருக்

கின்ற பர்வதம்போல் விளங்குகின்ற வானரோத்தமனான அவ்வங்கதன் தோள்வளை அணிந்திருக்கையால், கைரிகதாதுக்களோடுகூடின பர்வதம்போல் ப்ரகாசித்தனன். மஹாதேஜஸ்வியும் வாலியின் புதல்வனுமாகிய அங்கதன் எந்த ஆயுதத்தையும் எடுத்துக்கொள்ளாமல் கேவலம் நகங்களும் தந்தங்களுமே ஆயுதமாயிருக்கப்பெற்று நராந்தகனுக்கெதிரே சென்று அவனைப் பார்த்து 'நில், இந்த அல்ப வானரர்களோடு என் செய்கின்றாய்? வஜ்ரம்போல் திடமாகப் படுவதான இந்த ஈட்டியை என்னுடைய இந்த மார்பின்மேல் விடுவாயாக' என்றனன். நராந்தகன் அங்ஙனம் அங்கதன் சொன்னதைக் கேட்டுப் பற்களால் உதட்டைக் கடித்து ஸர்ப்பம்போல் பெருமூச்செறிந்துகொண்டு மிகுதியும் கோபமுற்றவனாயினன். நராந்தகன் அங்ஙனம் கோபித்து வாலிபுத்ரனாகிய அங்கதன்மேல் எதிர்த்துச் சென்று, அப்பொழுது ஜ்வலிக்கின்ற ஈட்டியைக் கிருகிருவென்று சுழற்றி வேகமாக அவன்மேல் வீசியெறிந்தனன். ப்ரயோகித்த அச்சூலம் வஜ்ரம்போன்ற அங்கதனுடைய வக்ஷஸ்தலத்தில் பட்டு முறிந்து பூமியில் வீழ்ந்தது. வாலிகுமாரனான அவ்வங்கதன் கருடனால் கிழிக்கப்பட்ட ஸர்ப்ப சரீரம்போல் முறிந்து விழுந்த அந்த ஈட்டியைப் பார்த்து, அப்பொழுது உள்ளங்கையை எடுத்து அவனது குதிரையின் சிரஸ்ஸில் அறைந்தனன். பர்வதம்போன்ற உருவமுடையதான அந்த நராந்தகனுடைய குதிரை அங்கதனுடைய உள்ளங்கை யறையினால் தலை உடைந்து தவடை உள்ளே அடங்கவும் கண்விழி பிதுங்கவும் நாக்கு வெளிப்படவும் பெற்றுத் தரையில் வீழ்ந்தது. மஹா ப்ரபாவனாகிய நராந்தகன் தன் குதிரை முடிந்து தரையில் விழுந்தமை கண்டு, கோபாவேசமுற்று, முஷ்டியைத் தூக்கி யுத்தத்தில் வாலி புத்ர

ணுகிய அங்கதன்மேல் தலைப்பட்டு அடித்தனன்; அனந்தரம் அங்கதன் நராந்தகனுடைய முஷ்டியால் தலை பிளக்கப்பெற்று மிகுதியும் உஷ்ணமான ரக்தத்தை வேகமாகப் பெருக்கினன்; அடிக்கடி மிகவும் ஜ்வலித்தனன்; கடைசியில் மூர்ச்சையும் அடைந்தனன். சிறிது நேரத்தில் ப்ரஜ்ஞை தெளியப்பெற்று நராந்தகனுடைய பலத்திற்கு ஆச்சர்யமுற்றனன். அப்பால் மஹாபலனான வாலி புத்ரன் அங்கதன், வஜ்ரம்போன்ற வேகமுடையதும் பர்வத சிகரத்தை நிகர்த்ததுமாகிய பிடியைப் பிடித்து நராந்தகனுடைய மார்பில் அடித்தனன். அந்த நராந்தகன் அந்த முஷ்டியின் அடியினால் மார்பு நன்கு முறியப்பெற்று அக்னிஜ்வாலைப்போல் மேற்கிளம்புகின்ற ரக்தத்தினால் உடம்பு முழுவதும் நிரம்பப்பெற்று, வஜ்ராயுதத்தின் அடியினால் முறிக்கப்பட்ட பர்வதம்போல், தரையில் வீழ்ந்தனன். அனந்தரம் வீரர்களில் தலைவனாகிய அந்த நராந்தகன் வாலியின் புதல்வனான அங்கதனால் யுத்தத்தில் அடிக்கப்பட்டு முடிகையில், ஆகாயத்தில் மேலான தேவதைகளும் வானரர்களும் ஸந்தோஷத்தினால் பெருங்கோஷமிட்டனர். அப்பால் அங்கதன், மிகவும் துஷ்கரமாயிருப்பதும் ஆனது பற்றியே ராமனது மனத்திற்கு மிகுதியும் ஸந்தோஷத்தை விளைப்பதுமான அப்படிப்பட்ட பராக்ரமத்தை நிறைவேற்றுகையால், ராமன் தான் மிகுந்த வீர்ய விக்ரமங்களை யுடையவனாயினும், அந்த அங்கதனுடைய கார்யத்திற்கு ஆச்சர்யப்பட்டனன். ராமன் அங்ஙனம் புகழ்ந்ததற்கு ஸந்தோஷமுற்று அவ்வங்கதனும் மீளவும் யுத்தத்திற்கு ஸந்நாஹமுற்றிருந்தனன். அறுபத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.



ஹனுமான் தேவாந்தகனையும் த்ரிசிரனையும் நீலன் மஹோதரனையும், ருஷபன் மஹாபார்ஸ்வனையும் வதித்தல்.

நராந்தகன் மாண்டதைக் கண்டு, தேவாந்தகனும் புலஸ்த்ய வம்சத்திற் பிறந்த த்ரிசிரனும் மஹோதரனும் ஆகிய ராக்ஷஸஸ்ரேஷ்டர்கள் கூச்சலிட்டனர். வீர்ய சாலியாகிய மஹோதரன் மேகம்போல் புலப்படுகின்ற மேலான யானையின்மேல் ஏறிக்கொண்டு மஹா வீர்யமுடைய அங்கதனை எதிர்த்து ஓடினன். அங்ஙனம் பலிஷ்டனாகிய தேவாந்தகன், உடன் தோன்றலான நராந்தகன் மரண மடைந்த சோகத்தினால் மிகுதியும் பரிதபித்து ஜ்வலிக்கின்ற பரிகத்தை ஏந்தி அங்கதன் மேல் எதிர்த்துப் போயினன். அப்பால் வீரனாகிய த்ரிசிரன், ஸூர்யன்போல் தகதகவென்று ஜ்வலிப்பதும் மேலான குதிரைகள் பூட்டப்பெற்றதுமாகிய ரதத்தில் ஏறிக்கொண்டு அங்கதன்மேல் எதிர்த்துப் போயினன். அங்ஙனம் தேவதைகளின் கர்வத்தை அடக்குந்தீரர்களாகிய மேலான ராக்ஷஸர்கள் அவன்மேல் எதிர்க்கையில் அங்கதன் பெருங்கிளைகள் அமைந்த ஓர் வ்ருக்ஷத்தைப் பிடுங்கிக் கொண்டனன். வீரனாகிய அங்கதன், தேவேந்த்ரன் ஜ்வலிக்கின்ற வஜ்ராயுதத்தை ப்ரயோகிப்பது போல், பெருங்கிளைகளையுடைய அந்தப் பெரும் வ்ருக்ஷத்தை, தேவாந்தகன்மேல் வேகமாக வீசியெறிந்தனன். த்ரிசிரன் க்ருஷ்ண ஸர்ப்பம்போன்ற பாணங்களால் அந்த வ்ருக்ஷத்தைப் பிளந்தனன். அப்பொழுது அங்கதன் அந்த வ்ருக்ஷம் துண்டிக்கப்பெற்று வீணானதைக் கண்டு ஆகாயத்தில் கிளம்பினன். அப்பால் அந்த வானரஸ்ரேஷ்டன் வ்ருக்ஷங்களையும் பர்வதங்களையும் பெய்த

னன். த்ரிசிரன் மிகவும் கோபாவேசமுற்று அவற்றை யெல்லாம் கண்டித்து விட்டனன். தேவாந்தகன் இரும்புத்தடியின் நுனியால் அந்த வ்ருக்ஷங்களை முறித்துக் கொண்டிருந்தனன். த்ரிசிரன் வீரனுகிய அங்கதன்மேல் பாணங்களைப் பெய்துகொண்டே அவனை எதிர்த்தனன். மஹோதரன் மிகுந்த கோபாவேசத்துடன் யானையை அங்கதனருகே ஓட்டி, வஜ்ரம்போன்ற தோமரத்தினுல் அங்கதனுடைய மார்பில் அடித்தனன். வேகம் மிகுந்த தேவாந்தகனும் பெருங் கோபமுற்று, அப்பொழுது அங்கதன்மேல் எதிர்த்து வேகமாக அவனைப் பரிகத்தினுல் அடித்து இடம் உண்டாவதற்காகப் பின்னே போயினன். வாலிகுமாரனுன அவ்வங்கதன் மஹாதேஜஸ்வியும் மிகுந்த ப்ரதாப முடையவனுமாகையால், அங்ஙனம் மூன்று ராக்ஷஸஸ்ரேஷ்டர்கள் ஒரேகாலத்தில் தன்மேல் எதிர்த்துப் போராடினும் சிறிதும் வருத்தமுறவில்லை. மிகுந்த வேகமுடையவனும் எவர்க்கும் ஜயிக்க முடியாதவனுமாகிய அவ்வங்கதன் பெரும் வேகத்தை ஏற்றுக் கொண்டு மேற்கிளம்பி, மஹோதரன் ஏறிக்கொண்டிருந்த மஹாநாகத்தை உள்ளங்கையால் நன்ருக அறைந்தனன். யுத்தத்தில் அவ்வங்கதனுடைய அடியினுல் அம் மஹோதரனது யானையின கண்கள் இரண்டும் வீழ்ந்தன. அந்த நாகமும் உரக்கவீரிட்டது. அங்கதன் மஹாபலனுகையால் அந்த யானையின் தந்தத்தைப் பிடுங்கி யுத்தத்தில் தேவாந்தகனை எதிர்த்துப் பாய்ந்து அதனுல் அவனை அடித்தனன். அவன் காற்றுல் அசைக்கப்பெற்ற வ்ருக்ஷம்போல் அவயவங்களெல்லாம் விலவிலக்கப் பெற்று வீழ்ந்து, முகத்தினின்று செம்பஞ்சுக் குழம்புபோல் சிவந்த ரக்தத்தைக் கக்கினன். அப்பால் மஹாதேஜஸ்வியும் பலிஷ்டனுமாகிய தேவாந்தகன் மிகவருத்தப்பட்டு

ப்ரஜ்ஞை தெளியப்பெற்று, பயங்கரமான உருவமுடைய பரிகத்தைக் கிருகிருவென்று சுழற்றி அப்பொழுது அங்கதனை அடித்தனன். அத்தருணம், வானரராஜபுத்ரனாகிய அங்கதன் பரிகத்தினால் அடிக்கப்பட்டு, முழந்தாள்களைத் தரையில் ஊன்றி விழுந்து, மீளவும் உடனே எழுந்தனன். த்ரிசிரன் வானரராஜகுமாரன் எழுந்ததைக்கண்டு பயத்தை விளைப்பவைகளும் கோணிக்குறி தவறாமல் நேரே பாய்பவைகளுமான மூன்று பாணங்களால் அவனை நெற்றியில் அடித்தனன். அப்பால் அங்கதனொருவனை மேலான மூன்று ராக்ஷஸர்கள் சுற்றித் தகைவதைக் கண்டு ஹனுமானும் நீலனும் ஸஹாயஞ் செய்யப் புறப்பட்டு வந்தனர். பிறகு நீலன் த்ரிசிரன்மேல் ஒரு பர்வத சிகரத்தை எறிகையில் புத்திமானாகிய அந்த ராவணகுமாரன் கூரான பாணங்களால் அதைத் துண்டித்தனன். அந்தப் பர்வதசிகரம் த்ரிசிரனுடைய பாண ஸமூஹத்தினால் பிளக்கப்பெற்றுக் கற்களெல்லாம் உடைந்து நெருப்புப் பொரிகளோடும் ஜ்வாலைகளோடுங்கூடித் தரையில் விழுந்தது. அனந்தரம் தேவாந்தகன் அந்தப் பர்வதம் பிளவுண்டதைக் கண்டு ஸந்தோஷித்துப் பரிகத்தை எடுத்துக்கொண்டு யுத்தத்தில் வாயுகுமாரனாகிய ஹனுமான்மேல் எதிர்த்தனன். அப்பொழுது வாயுகுமாரன் தன்மேல் தேவாந்தகன் எதிர்த்து வருவதைக் கண்டு, அவன்மேல் கிளம்பி வஜ்ரம்போன்ற முஷ்டியினால் சிரஸ்ஸில் அடித்தனன். அப்பொழுதும் வீரனும் பலிஷ்டனுமாகிய அம்மஹாகபி தேவாந்தகனைத் தலையில் அடித்து, ராக்ஷஸர்களெல்லோரும் நடுங்கும்படி ஸிம்ஹநாதஞ் செய்தனன். ராக்ஷஸராஜனாகிய ராவணனது புதல்வன் அந்த தேவாந்தகன் அந்த முஷ்டியின் அடியால் தலை உடைந்து பற்களும் கண்களும் வெளித் தோன்றவும் நாக்குத் தொங்கவும் பெற்று உயிரை

இழந்து உடனே பூமியில் வீழ்ந்தனன். ராக்ஷஸப் போர்வீரர்களில் முக்யனும் மஹாபலனும் தேவதைகளுக்குச் சத்ருவுமாகிய அந்த தேவாந்தகன் அடிபட்டு மாண்டதைக் கண்டு, த்ரிசிரன் கோபித்து நீலனுடைய மார்பில் நுனி கூராயிருக்கப்பெற்ற பல பாண ஸமூஹங்களை மழையைப்போல் தாருணமாகப் பெய்தனன். மஹோதரனும் மிகுந்த கோபாவேசத்துடன், மந்தர பர்வதத்தில் ஸூர்யன் ஆரோஹிப்பதுபோல், மீளவும் பர்வதம் போன்ற உருவமுடைய மற்றொரு யானையின் மேல் ஏறிக்கொண்டு யுத்தத்திற்கு வந்தனன். அப்பால் மின்னற் குவியல்களோடும் இந்த்ரதனுஸ்ஸோடும் கூடின மேகம் பர்வதத்தின்மேல் வர்ஷிப்பதுபோல் பல ஆபரணங்களை அணிந்து வில்லைத் தரித்து விளங்குகின்ற அம்மஹோதரன் நீலனுடைய மார்பில் பாண வர்ஷத்தைப் பெய்தனன். அப்பால் மஹாபலனாகிய அம்மஹோதரன் அங்ஙனம் பாணஸமூஹங்களைத் தன்னைச் சுற்றிலும் வர்ஷித்துக்கொண்டிருக்கையில், கபி ஸைன்யங்களுக்கு ரக்ஷகனான நீலன் சரீரம் பிளக்கப்பட்டு அவயவங்களெல்லாம் விலவிலக்கப் பெற்று இப்படியப்படி அசையவும் முடியாமல் ஸ்தம்பிக்கப்பட்டிருந்தனன். பிறகு நீலன் சிறிதுநேரங்கழித்து ப்ரஜ்ஞை அடைந்து வ்ருக்ஷஸமூஹங்களோடு கூடின ஒருபர்வதத்தைப் பிடுங்கி மிகவும் தாருணவேகத்துடன் கிளம்பி வந்து அந்தப் பர்வதத்தினால் மஹோதரனுடைய தலையில் அடித்தனன். அனந்தரம் அந்த மஹோதரன் அந்தப் பர்வதத்தின் அடியால் தானும் தன் மஹாகஜமுமாக முறிந்து வருந்தி வஜ்ராயுதத்தினால் அடிபட்ட பர்வதம்போல் ப்ராணன்களை இழந்து பூமியில் வீழ்ந்தனன். அங்ஙனம் தன் சிற்றப்பனாகிய மஹோதரன் மாண்டு விழுந்ததைக் கண்டு, த்ரிசிரன்

மிகுதியும் கோபாவேசமுற்று வில்லை ஏந்திக்கொண்டு ஹனுமானைக் கூரான பாணங்களால் நன்கு ஹிம்ஸித்த னன். அந்த ஹனுமான் கோபித்து ஓர் பர்வதசிகரத் தை எறிந்தனன. பலிஷ்டனாகிய த்ரிசிரன் அதைக் கூரான பாணங்களால் பல துண்டாகத் துண்டித்த னன். மஹாகபியான ஹனுமான் தான் பொகட்ட பர்வ தம் வீணானதைக் கண்டு அந்த யுத்தத்தில் ராவண புத் ரனாகிய த்ரிசிரன்மேல் வ்ருக்ஷங்களை மழையைப்போல் ஓயாமல் பெய்தனன். ப்ரதாபம் மிகுந்த த்ரிசிரன் வ்ரு க்ஷங்கள் மழைபோல் ஓயாது மேல் வருவதைக் கண்டு, அவற்றை ஆகாயத்திலேயே பல பாணங்களால் பிளந்து ஸிம்ஹநாதஞ் செய்தனன். அனந்தரம் ஹனுமான் கோபித்து மேற்கிளம்பி, ஸிம்ஹம் மேலான யானையைக் கிழிப்பதுபோல், த்ரிசிரனுடைய குதிரையைப் பீறிக் கிழித்தனன். அப்பால் ராவண புத்ரனான த்ரிசிரன் யமன் காளராத்ரியைத் தூண்டி விடுவதுபோல் சக் தியை எடுத்து வாயுகுமாரன்மேல் பொகட்டனன். வானர ஶ்ரேஷ்டனாகிய ஹனுமான் ஆகாயத்தினின்று விழும் கொள்ளிபோல் த்ரிசிரன் தன்மேல் பொகட்ட அந்த சக்தி ஆயுதம் தன்மேல் படுவதற்கு முன்னமே அதைப் பிடித்து முறித்து ஸிம்ஹநாதஞ் செய்தனன். அங்ஙனம் பயங்கரமான ஒளியுடைய அந்த சக்தியை ஹனுமான் முறித்துப் பொகட்டதைக் கண்டு வானரர் கள் மிகுதியும் ஸந்தோஷமுற்று மேகங்கள்போல் கர் ஜித்தனர். அனந்தரம் ராக்ஷஸோத்தமனாகிய த்ரி சிரன் கத்தியை எடுத்து விசாலமான ஹனுமானுடைய மார்பில் அடித்தனன். மிகுந்த வீர்யமுடைய அந்த வாயுகுமாரன் கத்தியால் அடிக்கப்பட்டு த்ரிசிரனுடைய மார்பில் உள்ளங்கையால் அறைந்தனன். மஹாதேஜஸ் வியாகிய அந்த த்ரிசிரன் ஹனுமானுடைய உள்ளங்கை யறையால் மூர்ச்சித்துக் கையிலிருந்த ஆயுதம் நழுவப்

பெற்று பூமியில் வீழ்ந்தனன். பர்வதாகாரனும் வானரஸ்ரேஷ்டனுமாகிய ஹநுமான் அங்ஙனம் மூர்ச்சித்து பூமியில் விழுகின்ற அந்த த்ரிசிரனுடைய கையிலுள்ள கத்தியைப் பிடுங்கிக்கொண்டு ஸமஸ்த ராக்ஷஸர்களும் பயமுறும்படி ஸிம்ஹநாதஞ்செய்தனன். த்ரிசிரன் அந்த ஸிம்ஹநாதத்தைப் பொறுக்க முடியாமல் ஹநுமான் மேல் கிளம்பினன். அங்ஙனம் கிளம்பி அவனை முஷ்டியால் புடைத்தனன் மஹாகபியான ஹநுமான் அந்த முஷ்டியின் அடிக்கு மிகுதியும் கோபித்து, ராக்ஷஸதிலகனுகிய த்ரிசிரனைக் கிரீடத்துடன் பிடித்துக்கொண்டனன். இந்த்ரன் த்வஷ்டாவின் புத்ரனுகிய விஸ்வரூபன் தலைகளைக் கண்டித்தாற்போல்; அந்த ஹநுமான் கோபாவேசத்துடன் கூரான அந்தக் கத்தியால், கிரீடமுடையதும் குண்டலம் அணிந்ததுமாகிய அந்த த்ரிசிரனுடைய மூன்று தலைகளையும் சேதித்தனன். எரிகிற அக்னிபோல் ஜ்வலிக்கின்ற நீண்ட கண்களுடையவைகளும் பர்வதம் போன்றவைகளுமாகிய அந்த இந்த்ரசத்ருவான த்ரிசிரனுடைய தலைகள் மூன்றும் ஆகாயத்தினின்று புண்ணிய பலம் தீரப்பெற்ற நக்ஷத்ரங்கள் விழுவதுபோல் பூமியில் வீழ்ந்தன. தேவசத்ருவாகிய அந்த த்ரிசிரனை, தேவேந்த்ரனேடொத்த பராக்ரமமுடைய ஹநுமான் வதித்தவுடனே, வானரர்களெல்லோரும் ஸந்தோஷித்து ஸிம்ஹநாதங்களைச் செய்தனர். பூமி மிகுதியும் நடுக்கமுற்றது. அப்பால் ராக்ஷஸர்கள் பயந்து நாற்புறத்திலும் ஓடிப்போயினர். த்ரிசிரன் மாண்டதையும், அங்ஙனமே மஹோதரன் உருமாய்ந்ததையும், அதற்கு முன்னமே தேவாந்தக நராந்தகர்கள் முடிந்ததையும் கண்டு, மஹா கோபிஷ்டனும் ராக்ஷஸஸ்ரேஷ்டனுமாகிய மத்தனென்னும் மஹா பார்ஸ்

வன் மேன்மேலும் கோபாவேச முற்றனன். அவன் மிகுதியும் தகதகவென்று ஜ்வலிப்பதும் பயங்கரமாயிருப்பதும் வெறும் இரும்பினுற் செய்யப்பட்டதுமாகிய மேலான கதையை எடுத்துக்கொண்டனன். அது பொன்பட்டங்களால் அலங்கரிக்கப்பட்டு முன்பு சத்ருக்களின் ரக்தங்கள் படிந்து சிவந்து இப்பொழுது யுத்தத்தில் மாம்ஸ ரக்தங்களால் நுரையெழப்பெற்றுத் தனது உருவத்தினுல் மிகவும் ப்ரகாசித்துக்கொண்டிருந்தது. மற்றும் அது நுனியில் மிகுந்த ஒளியுடன் ஜ்வலிப்பதும் சிவந்த பூமாலைகளால் அலங்கரிக்கப்பட்டதும், ஐராவதம் புண்டரீகம் ஸார்வபௌமம் முதலிய திக்கஜங்களுக்கும் பயத்தை விளைவிப்பதுமாயிருந்தது. ராக்ஷஸஶ்ரேஷ்டனுகிய அந்த மத்தனென்னும் மஹாபார்ஶ்வன் மிகவும் கோபாவேசமுற்றுக் கையில் கதையை ஏந்திக்கொண்டு ப்ரளயகாலாக்னிபோல் ஜ்வலிப்பவனுகி வானரர்மேல் எதிர்த்துப் போயினன். அப்பால், பலிஷ்டனுகிய ருஷபன், ஒரு கிளம்பு கிளம்பி, ராவணன் தம்பியான மஹா பார்ஶ்வனைக் கிட்டி அவனுக்கெதிரே வந்து நின்றனன். அம்மஹாபரர்ஶ்வன், பர்வதம்போன்ற உருவமுடைய ருஷபன் தன்முன்னே நின்றிருப்பதைக்கண்டு, கோபித்து, வஜ்ரம்போன்ற கதையால் அவனது மார்பில் அடித்தனன். வானர ஸிம்ஹனுகிய ருஷபன் அங்ஙனம் அந்த கதையால் அடிக்கப்பட்டு மார்பு முறியப்பெற்று மிகுதியும் தடுமாற்றமுற்று மிதமில்லாத ரக்தத்தைப் பெருக்கினன். வானரதிலகனுன ருஷபன் வெகு நேரங் கழித்து ப்ரஜ்ஞை அடைந்து, மஹாபலமுடைய மஹா பார்ஶ்வனது கதையைக் குறித்து வேகமாக எதிர்த்தோடினன். அந்த ருஷபன் பயங்கரமான அந்த கதையைப் பிடுங்கிக் கொண்டு பலவாறு கிருகிருவென்று திரு

ப்பி அதனுல் யுத்தத்தில் மஹாபலமுடைய [1] மத்தானீ கனை அடித்தனன். அனந்தரம் அந்த மத்தன் தனது கதையாலேயே அடிக்கப்பட்டு முறிந்து தந்தங்கள் வெளித்தோன்றவும் கண்கள் பிதுங்கவும் பெற்று வஜ்ரா யுதத்தினுல் அடிக்கப்பட்ட பர்வதம்போல் தரையில் விழுந்தனன். அம்மஹா பார்ஶ்வன் கண்கள் சிதறி பலம் தொலைந்து ஆயுளும் முடியப்பெற்று பூமியில் விழுந்த வுடனே, ராக்ஷஸ ஸைன்யம் பயத்தினுல் பறந்தோடியது. உன்மத்தனென்கிற மஹோதரன் அப்பொழுது தனது உடன் தோன்றலாகிய மஹாபார்ஶ்வன் யுத்தத்தில் ஹதனுனதைக்கண்டு இயற்கையாகவே மிகுந்த கோப முடையவனுகையால் அப்பொழுது மிகுதியும் பெருங் கோபமுற்று ப்ரளய காலாக்னிபோல் தேஜஸ்ஸுடன் ப்ரகாசித்தனன். அனந்தரம் அந்த வீரன் கதையைக் கொண்டு பயங்கரமான வானர ஸைன்யத்தைப் பய முறுத்துபவனும் மிகவும் தாருணமான அக்னிபோல் தஹிப்பவனுமாகி அந்த ஸைன்யத்தினிடையில் வேகத் துடன் ஓடிவந்தனன். பயங்கர பராக்ரமனுகிய அந்த ராக்ஷஸன் அங்ஙனம் மேல்விழுந்து வருவதைக்கண்டு, பர்வதம்போன்ற உருவமுடையவனும் மஹா பலிஷ் டனுமாகிய கவாக்ஷன் ஓர் பர்வதத்தைக் கொண்டு அந்த ராக்ஷஸனை அதனுல் அடிக்க விரும்பி அவன் மேல் எதிர்த்தனன். வீரனுகிய உன்மத்தன், அங்ங னம் யுத்தத்தில் அம்மஹாபர்வதம் தன்மேல் வருவதைக் கண்டு கதையினுல் அதை நூறு துண்டங்களாகச் சேதி தனன். மஹாபாஹுவும்வானரஶ்ரேஷ்டனுமாகிய கவாக் ஷன் அந்தப் பர்வதம் பொடியானதைக் கண்டு வியப் புற்று அடிக்கடி கர்ஜித்தனன். ராக்ஷஸோத்தமனுன

---

1 மஹாபார்ஶ்வனுக்கே மத்தனென்றும் மத்தானீகனென்றும் இரண்டு பெயர்கள் உண்டு.

உன்மத்தனும் மிகவும் கோபித்து, தகதகவென்று விளங்கும் கதையை வேகமாக ஏந்திக்கொண்டு கவாக்ஷனுடைய மார்பில் அடித்தனன். வீரனாகிய அந்தக் கபிகுஞ்சரன் அந்த கதையால் அடிக்கப்பட்டு மிகுதியும் ரக்தத்தைப் பெருக்கிக்கொண்டு மூர்ச்சித்துத் தரையில் வீழ்ந்தனன். அனந்தரம் அந்த கவாக்ஷன் மீளவும் மூர்ச்சை தெளியப்பெற்று அம்மஹோதரனுடைய நெற்றியின்மேல் உள்ளங்கையால் அறைந்தனன். வீரனும் பர்வதம் போன்ற உருவமுடையவனுமாகிய அந்த ராக்ஷஸன் அந்த அடியினால் பற்கள் உதிரவும் கண்கள் சிதறி விழவும் பெற்றுத் தரையில் வீழ்ந்து உஷ்ணமான ரக்தத்தை வெகுவாகப் பெருக்கினன். உடனே ப்ராணன்களையும் இழந்தனன். அந்த ராவணன் தம்பி மாண்டவுடனே ஸமுத்ரம்போல் விஸ்தீர்ணமான ராக்ஷஸஸைன்யமானது ஆயுதங்களைத் துறந்து, கீர்த்தியில்லாமல் வெறும் பிழைப்பு நேர்ந்தால் போதுமென்று கரையைக் கடந்த ஸாகரம்போல் பறந்தோடிற்று. எழுபதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## அதிகாயனை லக்ஷ்மணன் கொல்லுதல்.

மஹாதேஜஸ்வியும் ப்ரஹ்மாவினிடம் வரம்பெற்று யுத்தத்தில் தேவதானவர்களது கர்வத்தை அடக்கும் பர்வதாகாரனுமாகிய அதிகாயன், பிறர்க்கு மயிர்க்கூச்சலை விளைக்கும்படியான தன்பலமெல்லாம் துமுலமாகக் கலங்கி வருத்த முற்றிருப்பதையும், தேவேந்த்ரனோடொத்த பராக்ரமமுடைய உடன்பிறந்தவர்கள் மாண்டதையும், மற்றும் தன் சிற்றய்யர்களான ராக்ஷஸ ஸ்ரேஷ்டர்களும் அண்ணன் தம்பிகளுமான அந்த யுத்தோன்மத்த மத்தர்களும் யுத்தத்தில் உருமாய்ந்ததையும் கண்டு, மிகுதியும் கோபமுற்றனன். இந்த்ரனுக்குச் சத்ருவாகிய அந்த அதிகாயன், ஆயிரம் ஸூர்யர்

கள் ஒன்று சேர்ந்தாற்போல் மிகவும் ஜ்வலிக்கின்ற ரதத்தில் ஏறிக்கொண்டு வானரர்கள்மேல் எதிர்த்தனன். அவன் கிரீடந்தரித்து நிர்மலமான குண்டலங்கள் விளங்கப்பெற்றுத் தன் பெரிய வில்லின் நாணை ஒலிப்பித்துத் தன் பேரைச் சொல்லிப் பெருங்கோஷம் உண்டாகும்படி ஸிம்ஹநாதஞ் செய்தனன். அங்ஙனம் அவன் செய்தஸிம்ஹநாதத்திற்கும் பேரைச் சொன்ன கோஷத்திற்கும் பயங்கரமான நாண்ஶப்தத்திற்கும் வானரர்களெல்லோரும் பயந்தனர். அந்த வானரர்களெல்லோரும் அதிகாயனுடைய பெருஞ்சரீரத்தைப் பார்த்து 'இவன் கும்பகர்ணனே மீளவும் எழுந்து வந்தான்' என்று பயத்தினால் வருந்தி ஒருவரை யொருவர் பற்றினர். அந்த வானரக்கூட்டங்கள், த்ரிவிக்ரமாவதாரத்திலுள்ள விஷ்ணுவினுருவம்போன்ற அதிகாயனுடைய உருவத்தைக்கண்டு பயந்து ஆங்காங்கு ஓடிப்போயினர். அவ்வானரர்கள் அதிகாயனைக்கண்டு ஏதுந் தோற்றப்பெறாமல் யுத்தத்தில் ஶரண்யனும் லக்ஷ்மணனுக்குத் தமையனுமாகிய ராமனைச் சரணம் அடைந்தனர். அனந்தரம் ரதத்தில் ஏறிக்கொண்டு பர்வதம்போன்ற உருவமுடையவனாகி வில்லைத்தரித்து ப்ரளயகால மேகம்போல் கர்ஜிக்கின்ற அதிகாயனை ராமன் தூரத்தில் கண்டனன். ராமன் மஹத்தான சரீரமுடைய அதிகாயனைப் பார்த்து ஆச்சர்யம் அடைந்து வானரர்களுக்கு நல் வார்த்தை சொல்லி, பயத்தைப்போக்கி, விபீஷணனைப் பார்த்து 'பர்வதம்போன்ற உருவமுடையவனும் வில்லைத் தரித்து ஸிம்ஹப்பார்வை அமைந்தவனுமாகிய இவன் எவன்? ஆயிரங்குதிரைகள் பூட்டப்பெற்று அகன்றிருக்கிற ரதத்தின்மேல் இருக்கின்றானே! மிகுந்த ஒளியுடைய கூரான சூலங்களும் மிகவும் தீக்ஷ்ணமான ப்ராஸ தோமரங்களும் சுற்றிலும்விளங்கப்பெற்று, பூதங்களால்

சூழப்பட்ட ஈஸ்வரன்போல் விளங்குகின்றனன். மற்றும், ம்ருத்யுவின் நாக்குப்போல் ப்ரகாசிக்கின்ற ரதசக்திக ளோடுகூடி மின்னல்களோடுகூடின மேகம்போல்மிகவும் திகழ்கின்றானே! இவன் எவன்? இவனுடைய தனுஸ் ஸுக்களெல்லாம் நாணேற்றப்பெற்றுப் பின்புறங்களில் பொன்னால் அலங்கரிக்கப்பட்டு, இந்த்ர தனுஸ்ஸு ஆகா யத்தை விளங்கச்செய்வதுபோல், இவனது மேலான ரதத்தை விளங்கச்செய்கின்றன. இந்த ரதிக ஸ்ரேஷ் டன் ஸூர்யன்போல் ஜ்வலிக்கின்ற ரதத்தில் உட்கார் ந்து யுத்தபூமியை விளங்கச் செய்துகொண்டு வருகின் றானே! இந்த ராக்ஷஸ ஸ்ரேஷ்டன் யாவன்? இவன் ஸூர்யகிரணம்போன்ற பாணங்களால் பத்துத் திசைக ளையும் ப்ரகாசிக்கச் செய்துகொண்டு த்வஜத்தின் நுனி யிலுள்ள ராஹுவால் மிகுதியும் விளங்குகின்றனன். இவன் கையிலுள்ள தனுஸ்ஸு கடையிலும் அடியிலும் இடையிலும் வணங்கி, மேகத்வனிபோன்ற நாண் ஸப் தத்தோடுகூடிப் பின்புறத்தில் பொன்னால் அலங்கரிக் கப்பட்டு இந்த்ர தனுஸ்ஸைப்போன்று மிகுதியும் ப்ர காசிக்கின்றது. இவனுடைய மஹாரதம் அடையாள மான த்வஜங்களோடும் பதாகைகளோடும் ஏர்க்காலின் கீழுள்ள அண்டை மரத்தோடுங்கூடி நான்கு ஸாரதி களால் ஓட்டப்படுவதாகி மேகம்போல் கர்ஜிக்கின்றது. இவனுடைய ரதத்தில் முப்பத்தெட்டு அம்பறாத்தூணி கள் இருக்கின்றன. மற்றும் பயங்கரமான விற்களும் பொன்வர்ண முடையவைகளுமான நாண்களும் பல இருக்கின்றன. நான்கு கையளவு நீண்ட பிடிகள் அமைந்து பத்துக்கை நீளமுடையதாகி இரண்டு பக்கத் திலும் காந்தி விளங்கப்பெற்ற இரண்டு கத்திகள் ரதத் தில் இவனுடைய இருபுறங்களிலும் இருக்கின்றன

இந்த தீரன் சிவந்த பூமாலையைக் கழுத்தில் தரித்து மஹா பர்வதம்போல் தோற்றிக் கறுத்து ம்ருத்யுவைப் போல் பெரிய முகமுடையவனாகி மேகங்களால் மறைக்கப்பட்ட ஸூர்யன்போல் ப்ரகாசிக்கின்றனன். இவன் பொன் தோள்வளைகள் கட்டப்பெற்ற புஜங்களுடன் திகழ்ந்து, உயர்ந்த இரு சிகரங்களோடுகூடின பர்வத ஸ்ரேஷ்டமான ஹிமவத் பர்வதம்போல் ப்ரகாசிக்கின்றனன். மஹாபாஹோ! அழகான கண்களை யுடைய இவனது முகம் குண்டலங்களை அணிந்திருக்கையால் புனர்வஸூநக்ஷத்ரங்களின் இடையிலிருக்கிற பூர்ணசந்த்ரபிம்பம்போல் திகழ்கின்றது. மற்றும், இவனைப் பார்த்து வானரர்களெல்லோரும் பயத்தினுல் வருந்தி நான்குத் திசைகளையும் பற்றி ஓடுகின்றனர். இப்படிப்பட்ட இந்த ராக்ஷஸோத்தமன் எவனோ? நீ எனக்குச் சொல்வாயாக' என்று வினவினன். அபார தேஜஸ்வியாகிய ராஜகுமாரன் இங்ஙனம் வினவுகையில், மஹா தேஜஸ்வியாகிய விபீஷணன் அவனுக்கு விவரிக்கத் தொடங்கி, மஹா தேஜஸ்வியும் குபேரனுடைய தம்பியும் பயங்கரமான செய்கையும் மஹாத்தான உத்ஸாஹமும் உடையவனும் ராக்ஷஸ ஸ்ரேஷ்டனுமாகிய ராவணன் இருக்கிறனல்லவா! அந்த ராவணனுக்குவீர்யசாலியாகிய இவன் புதல்வன; யுத்தத்தில் ராவணனைப்போன்றவன். இவன் வ்ருத்தர்களைப் பணியும் வித்யாவந்தனும் ஸமஸ்த அஸ்த்ரங்களையும் அறிந்தவர்களில் சிறந்தவனும், குதிரை தேர் யானை இவற்றில் ஏறி உலாவத் தெரிந்தவனும், கத்தி வில் க்ருஷி ஸாம தான பேதங்கள் யுக்தி மந்த்ராலோசனை ஆகிய இவற்றில் ஸமர்த்தனுமாயிருப்பவனென்று புகழ் பெற்றவன். இவன் தான்யமாலினியின் பிள்ளை; அதிகாய னென்னும் பேருடையவன்.

இவனது புஜபலத்தைப்பற்றியே லங்காபுரி நிர்ப்பயமாயிருக்கின்றது. தனது உண்மையை அறிந்தவனும் தீக்ஷ்ணமான புத்தியுடையவனுமாகிய இந்த அதிகாயன் தவஞ் செய்து ப்ரஹ்மதேவனை ஆராதித்து திவ்யாஸ்த்ரங்களைப் பெற்றுச் சத்ருக்களை ஜயித்தனன். இவனுக்கு ப்ரஹ்மதேவன் தேவாஸுரர்களால் சாவில்லாமையையும் திவ்யமான இந்தக் கவசத்தையும் ஸூர்யன் போல் ஜ்வலிக்கின்ற இந்த ரதத்தையும் ஈந்தனன். இவன் நூறு தடவைகள் தேவதைகளையும் தானவர்களையும் தோற்கச்செய்து ராக்ஷஸர்களை ரக்ஷித்திருக்கின்றனன்; யக்ஷர்களையும் உருமாய்த்தவன். இவன் யுத்தத்தில் புத்திமானுகிய இந்த்ரனுடைய வஜ்ராயுதத்தை ஸ்தம்பிக்கச்செய்தனன். அங்ஙனமே வருணனுடைய பாசாயுதத்தையும் வீண் செய்தனன். இப்படிப்பட்ட பலிஷ்டனுகிய இந்த ராக்ஷஸ ஸிம்ஹன் அதிகாயன், ராவண புத்ரன், புத்திமான், தேவதானவர்களது கொழுப்பை அடக்கினவன், புருஷஶ்ரேஷ்டனே! ஆகையால் இவன் வானர ஸைன்யங்களை பாணங்களால் நாசஞ்செய்வதற்கு முன்னமே, இவனைச் சீக்ரத்தில் ஜயிக்க ப்ரயத்னஞ் செய்வாயாக' என்றனன். அனந்தரம் பலிஷ்டனுகி அதிகாயன் வானரஸேனையில் புகுந்து வில்லினுடைய நாணை ஒலிப்பித்துப் பலவாறு ஸிம்ஹநாதஞ்செய்தனன். பயங்கரமான மேஹமுடையவனும் ரதிகர்களில் சிறந்தவனும் ரதத்தின் மேலிருப்பவனுமாகிய அந்த அதிகாயனைப் பார்த்து வானரர்களில் ப்ரதானர்களான பலிஷ்டர்கள் அவனை எதிர்கொண்டனர். குமுதன் த்விவிதன் மைந்தன் நீலன் சரபன் ஆகிய இவர்கள் வ்ருக்ஷங்களையும் பர்வத சிகரங்களையும் கையில் ஏந்திக்கொண்டு ஒரே தடவையில் எதிர்த்தனர். அஸ்த்ரங்களை அறிந்தவரனைவரிலும் மேன்மையுற்றவனும் மஹா தேஜஸ்வியுமான அதிகாயன் அவர்கள்

பொகட்ட வ்ருக்ஷங்களையும் பர்வதங்களையும் பொன்னால் அலங்கரிக்கப்பட்ட பாணங்களால் சேதித்துவிட்டனன். பலிஷ்டனும் பயங்கரமான உருவமுடையவனுமாகிய அதிகாயன் யுத்தத்தில் அவ்வானரர்களுக்கு எதிர்முகமாகி, முழுவதும் இரும்பினால் செய்யப்பட்ட பாணங்களைத் தொடுத்து அவர்களைப் பீடித்தனன். அந்த வானரர்கள் அதிகாயனுடைய பாணவர்ஷத்தினால் பீடிக்கப்பட்டு தேஹம் முழுவதும் வ்ரணமாகி அம் மஹாயுத்தத்தில் அவனுக்கு ப்ரதி ஒன்றுஞ் செய்யமுடியாதிருந்தனர். அதிகாயன், யௌவனத்தினால் கர்வித்துக் கோபமுற்ற ஸிம்ஹம் மற்றை ம்ருகங்களைப் பயப்படுத்துவதுபோல், அவ்வானர வீரர்களின் ஸைன்யத்தையெல்லாம் பயப்படுத்திக் கலக்கினன். ராக்ஷஸ ஶ்ரேஷ்டனாகிய அந்த அதிகாயன் வானர ஸேனைக்குள் தன் மேல் யுத்தத்திற்கு வாராதவன் எவனையும் அடிக்காமல், தனுஸ்ஸோடும் அம்பறாத்தூணியோடும் ராமனிடம் போய் கர்வம் அமைந்திருக்கும்படி 'நான் வில்லையும் பாணங்களையுங் கொண்டு யுத்தத்திற்கு நின்றிருக்கின்றனன். அற்பனான எவனோடாயினும் யுத்தஞ் செய்யேன். இதில் யுத்தத்திற்கு உத்ஸாஹ முடையவன் எவனோ அவன் எனக்கு இப்பொழுது சீக்ரத்தில் யுத்தங் கொடுப்பானாக' என்றனன். அதிகாயன் அங்ஙனம் கர்வித்துச் சொல்லுகின்ற வசனத்தைக் கேட்டுச் சத்ருக்களை அழிக்குந் திறமையுடைய லக்ஷ்மணன், அதைப் பொறுக்க முடியாமல் கோபித்து, அவன் முன்னே கிளம்பிக் குதித்து அவனைச் சிறிதும் பொருள் செய்யாமல் வில்லை ஏந்திக்கொண்டனன். லக்ஷ்மணன் கோபித்து அங்ஙனங் குதித்து அம்பறாத்தூணியினின்று பாணத்தை எடுத்து அதிகாயனுக்கெதிரில்

அந்தப் பெரிய தனுஸ்ஸை இழுத்தனன். லக்ஷ்மணனுடைய நாண் சப்தமானது பயங்கரமாகப் பூமியையும் பர்வதங்களேயும் ஆகாயத்தையும் ஸமுத்ரத்தையும் திசைகளேயும் நிறைத்து ராக்ஷஸர்களெல்லோரையும் பயப்படுத்துவதுமாகிக் கிளம்பிற்று. அப்பொழுது பயங்கரமான லக்ஷ்மணனுடைய தனுஸ்ஸின் த்வனியைக்கேட்டு மஹா தேஜஸ்வியும் பலிஷ்டனும் ராக்ஷஸ ராஜபுத்ரனுமாகிய அதிகாயன் மிகுதியும் ஆச்சர்ய முற்றனன். அப்பால் அதிகாயன், லக்ஷ்மணன்மேல் விழுவதைக் கண்டு கோபங்கொண்டு கூரான பாணத்தைக் கையில் எடுத்து அவனைப் பார்த்து, 'லக்ஷ்மணா! நீ அறியாத இளேயோன்; பராக்ரமகார்யங்களில் கைதீர்ந்தவனல்லே. ஆகையால் போவாயாக. ம்ருத்யுவைப்போன்ற என்னேடு யுத்தஞ்செய்ய ஏன் விரும்புகின்றனே? என்கையால் விடுகிற அஸ்த்ரங்களின் வேகத்தைப் பூமியும் ஆகாயமும் ஹிமவத்பர்வதமுங்கூட எள்ளளவும் பொறுக்க வல்லவையல்ல. ஸுகமாகத் தூங்குகின்ற ப்ரளய காலாக்னியை ஏன் எரியச் செய்கின்றனே? தனுஸ்ஸைத் துறந்து திரும்புவாயாக. என்னே எதிர்த்து ப்ராணன்களேப் போக்கடித்துக்கொள்ள வேண்டாம். அப்படியில்லாமல் நீ என்னெதிரில் நின்று திரும்பிப்போக விரும்பமாட்டாயாயின், நிற்பாயாக. இதோ ப்ராணன்களே இழந்து யமலோகத்திற்குப் போவாய். தீக்ஷ்ணங்களும் சத்ருக்களின் கர்வத்தை நாசஞ்செய்பவைகளும் ருத்ரனுடைய த்ரிசூலம் போன்று மேலான பொன்னுல் அலங்கரிக்கப்பட்டவைகளுமான என்பாணங்களேக்காண்பாய். ஸர்ப்பம் போன்ற இந்த பாணம், கோபித்திருக்கிற ஸிம்ஹம் மேலான யானேயின் குருதியைப் பருகுவது போல், உன் குருதியைப் பானஞ் செய்யும்' என்றனன்.

அவன் இங்ஙனஞ் சொல்லி மிகுதியுங் கோபித்து வில்லில் பாணத்தைத் தொடுத்தனன். மஹா பலனும் மிகுந்த ஒளியுடையவனும் ராஜ புத்ரனுமாகிய லக்ஷ்மணன், யுத்தத்தில் அதிகாயன் ரோஷமும் கர்வமும் விளங்கும்படி மொழிந்த வார்த்தையைக்கேட்டு மிகுதியுங் கோபமுற்றுப் பெரும் பொருளடக்கமுடைய வசனத்தை மொழியத்தொடங்கி, 'துர்ப்புத்தி! கேவலம் பேச்சினல் நீ முக்யனுக மாட்டாய். கார்யத்தைப் பற்றியே சூரராவார்களன்றித் தம்மைத்தாம் புகழ்ந்துகொள்கையாலன்று. நான் வில்லையும் பாணங்களையுந் தரித்து நின்றிருக்கையில், உன் பலத்தைக் காட்டுவாயாக. வெறுமனே உன்னை நீயே புகழ்ந்துகொள்வது யுக்தமன்று. எவன் பௌருஷ முடையவனே அவனே சூரனெனப்படுவான்; வெறுமனே தன்னைத்தான் புகழ்ந்துகொள்ளுதலால் சூரனுக மாட்டான். நீ எல்லா ஆயுதங்களையும் தரித்திருப்பவன்; தனுஸ்ஸைத் தரித்து ரதத்தில் ஏறிக்கொண்டிருக்கின்றனை. பாணங்களாலாவது திவ்யாஸ்த்ரங்களாலாவது உன் பராக்ரமத்தைக் காண்பிப்பாயாக. அதன் பிறகு, காற்று, நன்கு பழுத்த பனம் பழத்தைக் காம்பினின்று விழத் தள்ளுவதுபோல், நான் கூரான பாணங்களால் உன் சிரஸ்ஸை விழத்தள்ளுகிறேன். இப்பொழுது மேலான கனகத்தினல் அலங்கரிக்கப்பட்ட என் பாணங்கள், உன் தேஹத்தில் பாணசல்யங்களால் செய்யப்பட்ட ரந்த்ரங்களினின்று பெருகும் ரக்தத்தைப் பானஞ் செய்யப்போகின்றன. இவன் பாலனென்று என்னைச் சிறிதுங்குறைவாக நினைக்கவேண்டாம். நான் பாலனுயினும் வ்ருத்தனுயினும் யுத்தத்தில் ம்ருத்யுவைப் போன்றவனென்று நினைப்பாயாக. பாலனுகிய விஷ்ணு த்ரிவிக்ரமாவதாரத்தில்மூன்று லோகங்களையும் மூன்றடிகளால் ஆக்ரமிக்கவில்லையா ?'

என்றனன். யுக்திகளும் பரமார்த்தமும் அமைந் திருக்கும்படி லக்ஷ்மணன் மொழிந்த வார்த்தை யைக் கேட்டு அதிகாயன் மிகுதியுங் கோபமுற்று மே லானபாணத்தை எடுத்துக்கொண்டனன். அப்பால் மஹானுபாவர்களான வித்யாதரர்களும் பூதர்களும் தேவதைகளும் தைத்யர்களும் மஹர்ஷிகளும் குஹ்ய கர்களும் அந்த யுத்தத்தைப் பார்க்க அவ்விடம் வந்து சேர்ந்தனர். அனந்தரம் அதிகாயன் கோபாவேச முற்று, தனுஸ்ஸில் பாணத்தைத் தொடுத்து பாணவே கத்தினுல் இடையிலுள்ள ஆகாயத்தை விழுங்குவான் போல், லக்ஷ்மணன்மேல் விடுத்தனன். வீரர்களான பகைவரையும் அடக்குந்திறமையுடைய லக்ஷ்மணன் ஸர் ப்பம்போல் பயங்கரமாய்த் தன்மேல் வருகின்ற அந்தக் கூரான பாணத்தை அர்த்தசந்த்ரபாணத்தினுல் சேதித் தனன். அதிகாயன் சரீரம் சேதிக்கப் பெற்ற ஸர்ப் பம்போல் அந்த பாணம் துண்டிக்கப்பட்டதைக் கண்டு மிகுதியும் கோபித்து ஐந்து பாணங்களை எடுத்துக் கொண்டனன். அதிகாயன் அந்த பாணங்களை லக்ஷ்மணன்மேல் ப்ரயோகித்தனன். பரதனுக்குத் தம் பியாகிய லக்ஷ்மணன், அந்த பாணங்கள் தன்மேல் படு வதற்கு முன்னமே கூரான பாணங்களை விடுத்துக் கண் டித்தனன். சத்ரு வீரர்களை உருமாய்க்க வல்லனுகிய அந்த லக்ஷ்மணன் அந்த பாணங்களைக் கூரான பாணங் களால் துண்டித்து, தேஜஸ்ஸினுல் எரிகின்றதுபோன்ற ஓர் தீக்ஷ்ணமான பாணத்தை எடுத்துக்கொண்டனன். மிகுந்த வீர்யமுடைய லக்ஷ்மணன் அந்த பாணத்தை எடுத்துத் தனது மேலான தனுஸ்ஸில் தொடுத்துக் காது நுனிவரையிலும் வேகமாக இழுத்து அதிகாயன் மேல் விட்டனன். வீர்யசாலியாகிய அந்த லக்ஷ்மணன்,

அங்ஙனம் நிரம்பவும் இழுத்து விடப்பெற்றதும் வளைந்த கணுக்களுடையதுமாகிய பாணத்தினால் ராக்ஷஸஶ்ரேஷ்டனாகிய அதிகாயனை நெற்றியில் அடித்தனன். அந்த பாணம் பயங்கரனான ராக்ஷஸனுடைய நெற்றியில்பொற்றுக்கொண்டு ரக்தத்தினால் நனைந்து பர்வதத்தின் மேலிருக்கிற மேலான ஸர்ப்பம்போல் புலப்பட்டது. அதிகாயன் அந்த லக்ஷ்மணனுடைய பாணத்தினால் பீடிக்கப்பட்டு, ருத்ரனுடைய பாணத்தினால் பீடிக்கப்பட்ட த்ரிபுரத்வாரம்போல் மிகவும் துடித்தனன். மஹாபலனான அதிகாயன் சிறிது ஆஶ்வாஸம் அடைந்து இனிச் செய்யவேண்டிய தென்னென்று ஆலோசித்து இன்னதென்று நிச்சயித்து, லக்ஷ்மணனைப் பார்த்து 'நீ இங்ஙனம் பாணப்ரயோகஞ் செய்வதால் எனக்குப் புகழத்தகுந்த சத்ருவாகின்றனை' என்று இங்ஙனம் மொழிந்து, முகத்தை வணக்கி புஜங்களைச் சுருக்கி ஸ்வாதீனப் படுத்திக்கொண்டு ரதத்தினிடையில் உட்கார்ந்து ரதத்தினால் ஸஞ்சரித்தனன். அந்த ராக்ஷஸோத்தமன் 'ஒன்று, மூன்று! ஐந்து, ஏழு' என்று இங்ஙனம் பாணங்களை எடுத்து தனுஸ்ஸில் தொடுத்து நாணை இழுத்து லக்ஷ்மணன்மேல் ப்ரயோகித்தனன். ம்ருத்யுவை நிகர்த்துப் பொன்பிடிகள் இடப்பெற்று ஸூர்யன்போல் விளக்கமுற்று ராக்ஷஸ ஶ்ரேஷ்டனாகிய அதிகாயனுடைய தனுஸ்ஸினின்று வெளிவந்த அந்த பாணங்கள் ஆகாயத்தை ஜ்வலிக்கச் செய்தன. அப்பால் ராமன் தம்பியாகிய லக்ஷ்மணன், எள்ளளவும் பரபரப்பின்றி அதிகாயன் ப்ரயோகித்த பாண ஸமூஹங்களையெல்லாம் கூரான பல பாணங்களால்கண்டித்தனன். தேவேந்த்ரனுக்குச் சத்ருவும் ராவணனுக்குப் புதல்வனுமாகிய அதிகாயன் யுத்தத்தில் அந்த பாணங்களெல்லாம் கண்டிக்கப்படுவது கண்டு, கோபித்துத் தீக்ஷ்ணமான ஓர் திவ்ய பாணத்தை எடுத்தனன்.

மஹாதேஜஸ்வியாகிய அவ்வதிகாயன் அந்த பாணத்தை தனுஸ்ஸில் தொடுத்து வேகமாக விடுத்தனன். அப்பால் அந்த பாணம் மேல்விழுந்து வருகின்ற லக்ஷ்மணனுடைய மார்பில் பொற்றுக் கொண்டது. அங்ஙனம் யுத்தத்தில் அதிகாயனுல் மார்பில் அடிக்கப்பட்ட லக்ஷ்மணன், மதித்த யானை மதஜலத்தைப் பெருக்குவதுபோல், உஷ்ணமான ரக்தத்தைப் பெருக்கினன். லக்ஷ்மணன் ஸமர்த்தனுகையால் அப்பொழுது தன் தேஹத்திலுள்ள பாணத்தைத் திடீலென்று பிடுங்கிப் போகட்டு, பாதையற்றுக் கூரான ஓர் பாணத்தை எடுத்து அதை திவ்யாஸ்த்ர மந்த்ரத்தினுல் அபிமந்த்ரித்தனன். அப்பொழுது லக்ஷ்மணன் அந்த பாணத்தை, ஆக்னேயாஸ்த்ர மந்த்ரத்தினுல் அபிமந்த்ரித்தனன். அது மஹானுபாவனுகிய லக்ஷ்மணனுடைய தனுஸ்ஸில் அப்பொழுது மிகுதியும் ஜ்வலித்தது. மஹாதேஜஸ்வியாகிய அதிகாயனும் ஸௌர்யாஸ்த்ரமந்த்ரத்தை அனுஸந்தித்து அந்த மந்த்ரத்தினுல், ஸர்ப்பம்போன்றதும் பொன்பிடியுடையதுமாகிய பாணத்தை அபிமந்த்ரித்தனன். லக்ஷ்மணன் ஆக்னேயாஸ்த்ரத்தினுல் அபிமந்த்ரிக்கப் பெற்று பயங்கரமாக ஜ்வலிக்கின்ற அந்த பாணத்தை. யமன் காலதண்டத்தை ப்ரயோகிப்பதுபோல், அதிகாயன்மேல் ப்ரயோகித்தனன். ஆக்னேயாஸ்த்ர மந்த்ரத்தினுல் அபிமந்த்ரிக்கப்பெற்ற பாணம்வருவதைக் கண்டு, அதிகாயன் அப்பொழுது ஸௌர்யாஸ்த்ரமந்த்ரத்தினுல் அபிமந்த்ரிக்கப்பெற்று விளங்குகின்ற அந்த பாணத்தை லக்ஷ்மணன்மேல் விடுத்தனன். அந்த பாணங்களிரண்டும் தேஜஸ்ஸினுல் ஜ்வலிக்கின்ற நுனியுடையவையாகி ஆகாயத்தில் கோபித்த ஸர்ப்பங்கள் போல். ஒன்றின்மேல் ஒன்று பாய்ந்து அடித்துக்கொண்

டன. அந்த பாணங்களிரண்டும் ஒன்றை யொன்று தஹித்துத் தரையில் வீழ்ந்தன. இங்ஙனம் அவை மேலான பாணங்களாயினும் தேஜஸ்ஸை இழந்து நீருகி நிலத்தில் வீழ்ந்து சிறிதும் ப்ரகாசிக்கவில்லை அனந்தரம் அதிகாயன் கோபித்து ஐஷீகாஸ்த்ரத்தை ப்ரயோகித்தனன். மிகுந்த வீர்யமுடைய லக்ஷ்மணன் அந்த அஸ்த்ரத்தை ஐந்த்ராஸ்த்ரத்தினுல் அடித்தனன். ராவணபுத்ரனுகிய அதிகாயன் தனது ஐஷீகாஸ்த்ரம் பாழானமைகண்டு ரோஷம் மேலெழப்பெற்று யாம்யாஸ்த்ரத்தை லக்ஷ்மணன்மேல் ப்ரயோகித்தனன். லக்ஷ்மணனும் வாயவ்யாஸ்த்ரத்தினுல் அதை அடித்தனன். பிறகு லக்ஷ்மணன் மிகுந்த கோபாவேசமுற்று, மேகம் வர்ஷதாரைகளைப் பெய்வதுபோல், பாணதாரைகளை அதிகாயன்மேல் பெய்தனன். அந்த பாணங்கள் அதிகாயனை அடைந்து வஜ்ரங்களால் அலங்கரிக்கப்பட்ட அவனது கவசத்தில் பட்டு நுனியிலுள்ள ஆணிகளெல்லாம் முறியப்பெற்று பூமியில் வீழ்ந்தன. சத்ருவீரர்களை முடிப்பவனும் மஹா யசஸ்வியுமாகிய லக்ஷ்மணன் அந்த பாணங்களெல்லாம் வீணுனமை கண்டு, மீளவும் மேலான பாணங்களை ஆயிர மாயிரமாய் ப்ரயோகித்தனன். மஹாபலமுடைய அந்த அதிகாயன், லக்ஷ்மணன் தன்மேல் பாணஸமூஹங்களை எவ்வளவு வர்ஷித்துக்கொண்டிருப்பினும் யுத்தத்தில் பிளக்கமுடியாத கவசத்தை அணிந்திருக்கையால் சிறிதும் வருத்தம் அடையவில்லை; (அதிகாயன் கொடிய ஸர்ப்பம்போன்ற உருவமுடைய ஓர் பாணத்தை லக்ஷ்மணன்மேல் ப்ரயோகித்தனன். பகைவரைத் தபிக்கச் செய்யுந் திறமையுடைய அம்மஹாவீரன் அந்த பாணம் மர்மத்தில் பொற்றினமையால் முஹூர்த்த காலமாத்ரம் மூர்ச்சை அடைந்தனன். அப்பால் சிறிது நேரத்தில் மூர்ச்சை

தெளிந்து, அம்மஹாபலன் சிறந்தநான்கு பாணங்களால் யுத்தத்தில் குதிரைகளையும் ஸாரதியையும் கொன்றனன். அந்த அரிந்தமன் (சத்ருக்களை அழிப்பவன்) பாணங்களைப் பெய்து த்வஜத்தை த்வம்ஸஞ்செய்து தழதழப்பின்றி அந்த ராக்ஷஸனைக் கொல்லும் பொருட்டு பாணங்களைத் தொடுத்துக் குறிவைத்து விட்டனன்.) புருஷர்களில் சிறந்த லக்ஷ்மணன் யுத்தத்தில் அதிகாயனை எள்ளளவும் வருந்தச்செய்ய வல்லனாகவில்லை. அப்பால் வாயுதேவன் லக்ஷ்மணனிடம் வந்து 'இந்த அதிகாயன் ப்ரஹ்மதேவனிடம் வரம்பெற்றுப் பிளக்கமுடியாத கவசந் தரித்திருக்கின்றனன். இவனை ப்ரஹ்மாஸ்த்ரத்தினால் முடிப்பாயாக. ஏனென்னில், வேறுவிதமாக இவனைக் கொல்லமுடியாது. கவசம் அணிந்திருப்பவனும் பலிஷ்டனுமாகிய இவனை மற்ற அஸ்த்ரங்களால் வதிக்கமுடியாது' என்று மொழிந்தனன். அனந்தரம் தேவேந்த்ரனோடொத்த பராக்ரமமுடைய லக்ஷ்மணன் வாயுதேவனுடைய வசனத்தைக் கேட்டு, சீக்ரமாக ப்ரஹ்மாஸ்த்ரமந்த்ரத்தை ஜபித்து வீணாகாத வேகத்தையுடைய பாணத்தை வில்லில் தொடுத்தனன். லக்ஷ்மணன், கூரிய நுனியுடைய மேலான பாணத்தை ப்ரஹ்மாஸ்த்ர மந்த்ரத்தினால் அபிமந்த்ரித்தவுடனே, சந்த்ரஸூர்யர்களும் மற்றுமுள்ள மஹாக்ரஹங்களும் திசைகளும் ஆகாயமும் பயந்தன. பூமியும் நடுங்கிற்று. லக்ஷ்மணன், அழகான பிடியுடையதும் வஜ்ரத்தோடொத்ததும் அதிகாயனுக்கு யமதூதன்போன்றதுமாகிய அம்மஹா பாணத்தை ப்ரஹ்மாஸ்த்ர மந்த்ரத்தினால் அபிமந்த்ரித்து வில்லில் தொடுத்து, தேவேந்த்ரனுக்குச் சத்ருவும் ராவணனுக்குப் புதல்வனுமாகிய அந்த அதிகாயன்மேல் யுத்தத்தில் ப்ரயோகித்தனன். அப்பொழுது யுத்தத்தில் லக்ஷ்மணன் ப்ரஹ்மாஸ்த்ரம் ப்ரயோ

கிக்கையில், வீணுகாத வேகமுடையதும் அக்னிபோல் ஜ்வலிப்பதும் பொன்னுற்செய்யப்பட்டு வஜ்ரம்போல் திடமாகி வியப்பை விளைக்கின்ற மேலான பிடியுடையதுமாகிய அந்த பாணம் தன்மேல் வருவதை அதிகாயன் கண்டனன். அவன் அந்த பாணத்தைப் பார்த்துக்கொண்டே வேகமாக அதைக் கூரான பலபாணங்களால் அடித்தனன். அப்படி அடிப்பினும், கருடனைப்போன்ற வேகமுடைய அந்த பாணம் அப்பொழுது அதிகாயனுடைய பார்ஸ்வத்திற்கு வந்தது. அப்பொழுது அதிகாயன், அந்த பாணம் ஸமஸ்த லோகங்களையும் பாழ்செய்யமுயன்று ஜ்வலிக்கின்ற யமன்போல் ப்ரகாசித்துக்கொண்டு வருவதைக் கண்டு சிறிதும் மனத்தில் கலக்கமின்றி, சக்திகளாலும் அஷ்டிகளாலும் கதைகளாலும் கண்டக் கோடாலிகளாலும் சூலங்களாலும் இரண்டு கூருடைய இலைகளமைந்த சூலங்களாலும் அதை அடித்தனன். அந்த மஹாஸ்த்ரமானது அற்புதமான உருவமுடைய அந்த ஆயுதங்களைப் பொருள் செய்யாமல் வீணுக்கி அக்னிபோல் ஜ்வலித்துக்கொண்டு சென்று, கிரீடத்தினல் அலங்கரிக்கப்பட்ட அந்த அதிகாயனுடைய சிரஸ்ஸை அறுத்துப் பொகட்டது. கிரீடத்தோடுகூடின அந்த அதிகாயனுடைய சிரஸ்ஸு, லக்ஷ்மணனுடைய பாணத்தினல் அறுக்கப்பட்டு ஹிமவத்பர்வதத்தினுடைய சிகரம்போல் தீடீலென்று பூமியில் வீழ்ந்தது. அங்ஙனம் ஆபரணங்களெல்லாம் இங்குமங்குஞ் சிதறப்பெற்ற அந்த அதிகாயனைப் பார்த்தவுடனே அடிபட்டு மிகுந்த ராக்ஷஸர்களெல்லோரும் மிகவும் வருத்தமுற்றனர். அந்த ராக்ஷஸர்களெல்லோரும் முகத்தில் துக்கம் தோற்ற தீனர்களாகி வானரர்களின் அடிகளால் இளைப்புற்றுப் பொறுக்க முடியாமல் பலரும் ஒன்றுசேர்ந்து விகாரமான குரலுடன் உரக்கக் கூச்ச

விட்டனர். அனந்தரம் தமது நாயகன் மாண்டுபோகை யில் அந்த ராக்ஷஸர்க ளெல்லாரும் பயந்து யுத்தவிருப் பத்தைத் துறந்து லங்கைக்கு எதிர்முகமாக விரைந் தோடிப்போயினர். அப்பொழுது பயங்கரமான பல முடையவனும் எவர்க்கும் எதிரிடக்கூடாத பகைவனு மாகிய அதிகாயன் ஹதனுகையில் வானரர்களெல்லோ ரும் மிகுந்த ஸந்தோஷம் அடைந்து, முகங்கள் கலக்க மின்றி மலர்ந்த தாமரை மலர்போன்றிருக்கப் பெற்று விரும்பின விருப்பமாகிய ஜயத்தைப்பெற்று விளங்கு கின்ற லக்ஷ்மணனைப் பூஜித்தனர். (அப்பால் மஹா பல னும் மேகம் போன்றவனுமாகிய அதிகாயனை யுத்தத் தில் முடித்து அந்த லக்ஷ்மணன் மிகவும் ஸந்தோஷ முற்று வானர ஸமூஹங்களால் நிரம்பவும் பூஜிக்கப் பட்டு, அப்பொழுது ராமனிடம்போய்ச் சேர்ந்தனன்.) எழுபத்தொன்றுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராவணன் அதிகாயவதாதிகளைக் கேட்டுத் தான் அனுப்பின வீரர்களெல்லோரும் மாண்டதுபற்றி ராமனது பராக்ரமத்தைப் புகழ்ந்து நகர ரக்ஷணத்தின் பொருட்டுப்ருத் யர்களை நியோகித்துப் புத்ர சோகத்தினல் அந்தப்புரத்திற்குப் போதல்.

ராக்ஷஸ ராஜனுகிய ராவணன், மஹா தேஜஸ்ஸு டைய லக்ஷ்மணனுல் அதிகாயன் மாண்டதைக் கேட்டு திகில் அடைந்து 'சத்ருக்களைச் சிறிதும் பொறுக்காத வனும் ஆயுதம் பிடித்தவர்கள் அனைவரிலும் சிறந்த வனும் நல்ல வில்லாளியுமாகிய தூம்ராக்ஷனும் அகம் பனனும் ப்ரஹஸ்தனும் கும்பகர்ணனுமாகிய இந்த ராக்ஷஸர்கள் மஹா பலசாலிகள், வீரர்கள், யுத்தத்தை எப்போதெப்போதென்றுவிரும்புந்தன்மையர். இவர்கள் சத்ருஸைன்யங்களை ஜயித்துக் கொண்டிருப்பார்களே

யன்றி எப்பொழுதும் சத்ருக்களால் தோல்விய டைந்தறியார். மஹத்தான வீர்ய முடையவர்களும் மஹா சரீரர்களும் பலவகை ஆயுதங்களை உணர்ந்தவரு மாகிய ராக்ஷஸர்களையுங்கூட ராமன் எப்படிப்பட்ட கார்யத்தையும் வருத்தமின்றி விரைவில் செய்பவனுகை யால் வதிந்துவிட்டனன். மஹா பலிஷ்டர்களும் சூரர் களுமாகிய மற்றவர் பலரும் முடிக்கப்பட்டனர். கராதி களைக் கொன்று ப்ரஸித்திபெற்ற வீரர்களான அந்த ராமலக்ஷ்மணர்களையும், ப்ரக்யாதியடைந்த பல பராக்ர மங்களையுடைய என் புத்ரனுகிய இந்த்ரஜித்து வரங்க ளால் அடையப்பட்ட திவ்ய பாணங்களால் பந்தித்த னன். அந்த பந்தனத்தை விடுவிக்க தேவதைகளுக் காவது மஹா பலரான அஸுரர்களுக்காவது யக்ஷ கந் தர்வ கின்னரர்களுக்காவது ஸாத்யமன்று. அண்ணன் தம்பியுமான அந்த ராமலக்ஷ்மணர்கள் அப்படிப்பட்ட பந்தத்தினின்றும் விடுபட்டார்களே! அது தம் ப்ர பாவத்தினுலோ? மாயையாலோ? வஞ்சனையாலோ? எனக்குத் தெரியவில்லை. எனது ஆஜ்ஞையால் வீரர் களும் சூரர்களுமான ராக்ஷஸர்கள் எவரெவர் யுத்தத் திற்குப் போனுர்களோ, அவர்களெல்லாரும் மிகுந்த பலமுடைய வர்னரர்களை வதித்து விட்டனர். இப் பொழுது யுத்தத்தில் மஹா வீரனுன ராமனை லக்ஷ்மண னேடும் வானர ஸேனையோடும் ஸுக்ரீவனேடும் விபீ ஷணனேடுங்கூட வதிக்க வல்லவன் எவனும் எனக்குப் புலப்படவில்லை. ராமனது பராக்ரமத்தில் பட்டு ராக்ஷ ஸர்கள் உருமாய்ந்து போயினரே! ஆ ஆ! ராமன் எப் படிப்பட்ட பலமுடையவன்! அவனுடைய அஸ்த்ரபலம் எவ்வளவு பெரியது! வீரனுகிய அந்த ராமன் அனமய னுன (ஒருவிதக் கெடுதியுமில்லாத) நாராயணனே யென்று நினைக்கிறேன். அவனிடம் பயத்தினுலல்லவா,

லங்காபுரியின் உள்ளும் வெளியும் உள்ள வாசல்களெல்லாம் மூடப்பட்டிருக்கின்றன. ஆகையால், ராக்ஷஸர்களே! நீங்கள் சிறிதும் ஏமாறுதலின்றி உங்களைப் பாதுகாத்துக்கொண்டு இந்தப் பட்டணத்தையும் ஜாக்ரதையுடன் பாதுகாத்துக் கொண்டிருக்கவேண்டும். ஸீதையைக் காக்கும் அசோகவனிகையில் எவனையாயினும் எவ்விதத்திலும் எமக்குத் தெரியாமல் உள்ளே விடக்கூடாது; வெளியிலும் போக விடலாகாது. மற்றும், எங்கெங்கு ஸேனை இருக்கிறதோ, ஆங்காங்கு முழுவதும், அவரவர்க்குள்ள ஸேனைகளால் சூழப்பட்டுக் கண்ணுேக்க முற்று அடிக்கடி திரிந்துகொண்டிருக்க வேண்டும். ராக்ஷஸர்களே! ஸாயங்காலத்திலாவது அர்த்த ராத்ரியிலாவது விடியற்காலத்திலாவது எப்பொழுதாயினும் அந்த வானரர்கள் முயன்ற கார்யத்தைப் பார்த்துப் கொண்டிருக்க வேண்டும். வானரர்களென்று அவர்களை எப்பொழுதாயினும் குறைவாக நினைக்கலாகாது. 'பகைவரது ஸைன்யம் யுத்தத்திற்கு ஸித்தமாயிருக்கின்றதா? அல்லது நம்மேல் எதிர்த்து வருகின்றதா? அல்லது வெறுமனே நின்றிருக்கிறதா?'' என்று எப்பொழுதும் எந்த ரீதியில் இருக்கிறதென்பதை அறியவேண்டும்' என்று ஆஜ்ஞாபித்தனன். அனந்தரம் மஹாபலிஷ்டர்களான ராக்ஷஸர்களெல்லோரும், லங்காதிபதியான ராவணன் மொழிந்த அந்த வார்த்தையைக் கேட்டு, அவன் ஆஜ்ஞாபித்தபடி முழுவதும் செய்தனர். ராக்ஷஸாதிபதியான ராவணன் அந்த ராக்ஷஸர்களெல்லோர்க்கும் அங்ஙனம் ஆஜ்ஞாபித்து, துக்கமாகிற சல்யத்தைத் தரித்து தீனனுகித் தன் க்ருஹத்திற்குப் போயினன். அப்பால், மஹாபலனும் ராக்ஷஸேஸ்வரனுமாகிய ராவணன், கோபாக்னி மேன்மேலும் வளர்ந்து வரப்

பெற்று, அப்பொழுது அடிக்கடி அந்தப் புத்ர வ்ய ஸனத்தையே நினைத்துக்கொண்டு நெடுமூச்செறிந்த னன். எழுபத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

இந்த்ரஜித்து ராவணனை ஸமாதானப்படுத்தி ஹோமஞ்செய்து ப்ரஹ்மாஸ்த்ரத்தினுல் ராமலக்ஷ்மணர்களையும் வானர யூதபதிகளை யும் மூர்ச்சிக்கச் செய்தல்.

அனந்தரம், தேவாந்தகன் த்ரிசிரன் அதிகாயன் முதலிய ப்ரஸித்தர்களான ராக்ஷஸ ஸ்ரேஷ்டர்கள் யுத்தத்தில் மாண்டார்களென்று அடிபட்டு மிகுந்த ராக்ஷஸக் கூட்டங்கள் விரைந்தோடிச் சென்று ராவ ணனுக்குச் சொல்லினர். அப்பால் ராக்ஷஸ ராஜனுன ராவணன், அதிகாயாதிகள் அனைவரும் மாண்டார்க ளென்ற ஸங்கதியைக் கேட்டுத் திடீலென்று துக்கத்தி னுல் கண்களில் நீர் பெருக மூர்ச்சித்துச் சிறிது நேரங் கழித்து மூர்ச்சை தெளிந்து பயங்கரமான புத்ரநாசத் தையும் ப்ராதாக்களுடைய வதத்தையும் நினைத்துக் கொண்டு நெடுநேரஞ் சிந்தையில் ஆழ்ந்தனன். அதன் பிறகு ராக்ஷஸ ராஜனுகிய ராவணனுடைய புதல்வனும் ரதிகர்களில் சிறந்தவனுமாகிய இந்த்ரஜித்து, ஸந் தோஷமின்றி துக்கஸாகரத்தில் மிதக்கின்ற ராஜா வான ராவணனைப் பார்த்து 'ராக்ஷஸேந்த்ரனே! இந் த்ரஜித்து பிழைத்திருக்கும்பொழுது நீ இங்ஙனம் துக் கப்படவேண்டாம். யுத்தத்தில் இந்த்ரஜித்தினுடைய பாணங்களால் அடிக்கப்பட்டு எவனுயினும் ப்ராணன் களைத் தப்பித்துக்கொள்ள வல்லனல்லன். இப்பொழுது ராமன் லக்ஷ்மணனேடுகூட என் பாணங்களால் தேஹம் சின்ன பின்னமாகவும் கூரான பாணங்கள் தேஹம் முழு வதும் பொற்றுக்கொள்ளவும் பெற்று ப்ராணன்களை இழந்து பூமியில் விழுந்திருக்கும்படி செய்கிறேன், காண்

பாய். இந்த்ரஜித்து நன்ருக நிச்சயித்துப் பௌருஷ தேஹபலங்கள் இரண்டினேடுங் கூடின இந்த ப்ரதிஜ் ஞையைச் செய்கின்றனன், கேட்பாயாக. இப்பொழுதே ராமனையும் லக்ஷ்மணனையும் வீணுகாத பாணங்களால் நிறைத்து விடுகிறேன். இப்பொழுது, தேவேந்த்ரனும் யமனும் விஷ்ணு தேவனும் மித்ரனும் ஸாத்யர்களும் அஶ்வினீ தேவதைகளும் அக்னியும் சந்த்ரனும் ஸூர் யனும், பலிசக்ரவர்த்தியின் யாகசாலையில் த்ரிவிக்ர மாவதாரஞ் செய்த விஷ்ணுதேவன் நடத்தின பராக்ர மம்போன்ற எனது அப்ரமேய பராக்ரமத்தைக் காண் பார்கள்' என்றனன். பலத்தில் குறைவில்லாத அந்த இந்த்ரஜித்து ராஜனுகிய ராவணனிடம் இங்ஙனஞ் சொல்லி, அவனிடத்தில் விடைபெற்றுக் கொண்டு, வாயுவோடொத்த வேகமுடையதும் மேலான கழுதை கள் கட்டப்பெற்றதுமாகிய ரதத்தில் ஆரோஹித்த னன். மஹா தேஜஸ்வியும் பகைவரை அடக்கும் வீர னுமாகிய அவ்விந்த்ரஜித்து, ஸூர்ய ரதம்போல் விள ங்குகின்ற அந்த ரதத்தில் ஏறிக்கொண்டு யுத்தஞ் செய்ய வேண்டிய இடத்திற்கு உடனே போயினன். மஹாபலனுன அந்த இந்த்ரஜித்து புறப்பட்டவுடனே, மிகுந்த பலமுடைய ராக்ஷஸர் பலர் மிகுதியும் மனக் களிப்புற்று மேலான தனுஸ்ஸுக்களைக் கைகளில் ஏந் திச் சிலர் யானைகளின் மேலும், சிலர் சிறந்த குதிரை கள் மேலும் ஏறிக்கொண்டு (பயங்கரமான பராக்ரம முடைய சிலர் பர்வதம் போன்ற உருவமுடைய புலி தேள் பூனை கழுதை ஒட்டை ஸர்ப்பம் காட்டுப்பன்றி ஸிம்ஹம் நரி முயல் ஹம்ஸம் மயில் ஆகிய இவற்றின் மேல் ஏறி) ஈட்டி இரும்புத்தடி கத்தி கண்டக்கோடாலி கதை ஆகிய இவைகளைத் தரித்து அவனைப் பின்ருெ டர்ந்து போயினர். அவ்விந்த்ரஜித்து, தன் பின்னே

வரும் ராக்ஷஸர்கள் பெருங்கோஷம் உண்டாகும்படி சங்கங்களை ஊதியும் பெரிவாத்யங்களை வாசித்தும் தன்னைப் புகழப்பெற்றுப் பேரோலக்கமாகப் போயினன். சத்ருக்களை உருமாய்க்கவல்ல அவ்விந்த்ரஜித்து பூர்ண சந்த்ரனால் ஆகாயம் ப்ரகாசிப்பதுபோல், சங்கம்போலும் சந்த்ர பிம்பம்போலும் வெளுத்திருக்கிற குடையினால் மிகுதியும் ப்ரகாசித்தனன். அனந்தரம், வில்லாளிகள் அனைவரிலும் மேன்மையுற்றவனும் மஹாதீரனுமாகிய இந்த்ரஜித்துக்கு, பொன்பிடிகளாலும் பொன் கம்பிகளாலும் அலங்கரிக்கப்பட்டு அழகுற்றுச் சிறந்த சாமரங்களைக்கொண்டு வீசினர். (செல்வப் பெருக்கனும் பேரொளி அமைந்தவனும் ஸௌர்யாதி லக்ஷ்மீ விலாஸமுடையவனும் ராக்ஷஸேஸ்வரனுமாகிய ராவணன், அங்ஙனம் இந்த்ரஜித்து பெரிய ஸைன்யத்தை அழைத்துக் கொண்டு புறப்படுவதைக் கண்டு, 'புதல்வனே! உனக்கு எதிரி எவனுமே இல்லை. நீ தேவேந்த்ரனையும் ஜயித்தவனல்லவா? இனி எதிர்க்க வரும் மனுஷ்யன் எவ்வளவு? நீ எவ்விதத்திலும் ராமனைக் கொல்லுவாய்' என்றனன். அங்ஙனஞ் சொல்லி அந்த ராக்ஷஸ ராஜன் பல ஆசீர்வாதங்களைச் செய்கையில், இந்த்ரஜித்து அவற்றை அங்கீகரித்தனன்.) அனந்தரம் தேஜஸ்ஸினால் ஸூர்யனைப் போல் ப்ரகாசிப்பவனும் பராக்ரமத்தில் எதிரில்லாதவனுமாகிய அவ்விந்த்ரஜித்தினால், லங்காபுரம் முழுவதும் ஸூர்யனால் ஆகாயம் ப்ரகாசிப்பதுபோல் ப்ரகாசித்தது. மஹா தேஜஸ்வியும் சத்ருக்களை அடக்கும் தீரனுமாகிய அவ்விந்த்ரஜித்து யுத்தபூமியை அடைந்து, திவ்ய ரதம் பெறுதற்கு ஹோமஞ்செய்ய முயன்று சுற்றிலும் ராக்ஷஸர்களைக் காவல் வைத்தனன். அக்னியோடொத்த ஒளியுடைய அந்த ராக்ஷஸோத்தமன் அப்பொழுது மந்த்

ரங்களைச் சொல்லி க்ரமத்தின்படி அக்னியில் ஹோமஞ் செய்தனன். அங்கு ப்ரதாபசாலியாகிய அந்த ராக்ஷஸோத்தமன் கந்த மால்யங்களோடுகூட, ஸம்ஸ்காரஞ் செய்யப்பெற்ற ஹவிஸ்ஸையும் பொரிகளையும் அக்னியில் ஹோமஞ் செய்தனன். அந்த ஹோமத்தில் இந்த்ரஜித்து நாணலுக்குப் பதிலாக ஆயுதங்களையும் தானிக் கட்டைகளை ஸமித்துக்களாகவும் கொண்டு சிவந்த வஸ்த்ரங்களைச் சுற்றி இரும்பு ஸ்ருவத்தையும் ஏற்படுத்திக் கொண்டனன். அவன் அந்த யுத்தபூமியில் தோமரங்களாலும் நாணல்களாலும் அக்னிக்குப் பரிஸ்தரணஞ் செய்து கறுத்த நிறமுடையதும் ஜீவித்திருப்பதுமாகிய ஓர் ஆட்டின் கழுத்தைப் பிடித்து ஹோமஞ் செய்தனன். ஒருதடவை ஸமித்துக்களை ஹோமஞ் செய்தவுடனே, அவ்வக்னி புகையின்றிப் பெரும் ஜ்வாலைகளோடு எரிகின்றமையால் அந்தப் புகையின்மை முதலியவையே அவனுக்கு வெற்றியை அறிவிக்கும் அடையாளங்களாயிருந்தன. அக்னிதேவன் தானே புருஷ உருவத்துடன், ப்ரதக்ஷிணமாகச் சுழன்றுவரும் ஜ்வாலைகளோடுகூடி அழகான ஸ்வர்ண பூஷணங்களை அணிந்து ஹோமஞ்செய்த அந்த ஹவிஸ்ஸை அங்கீகரித்தனன் அப்பொழுது அந்த இந்த்ரஜித்து ப்ராஹ்மாஸ்த்ரத்தை அழைத்து, மற்றும் அதில் தனது ரதம் தனுஸ்ஸு முதலியவை யெல்லாவற்றையும் அபிமந்த்ரித்தனன். அங்ஙனம் இந்த்ரஜித்து, ஹோமஞ் செய்யப்பட்ட அக்னியினின்று ப்ரஹ்மாஸ்த்ரத்தை அழைத்தவுடனே க்ரஹங்களோடும் நக்ஷத்ரங்களோடும் சந்த்ரனோடுங் கூடின ஆகாயமெல்லாம் பயத்தினால் நடுக்கமுற்றது. அக்னியைப்போல் தேஜஸ்ஸினால் ஜ்வலிப்பவனும் தேவேந்த்ரனோடொத்த ப்ரபாவமுடையவனும் பிறர்க்கு எண்ணமுடியாத மந்த்ர சக்தியுடையவனுமாகிய அவ்

விந்த்ரஜித்து அங்ஙனம் அக்னியில் ஹோமஞ் செய்து, தான் தனுஸ்ஸையும் பாணங்களையும் கத்தியையும் ரதத்தையும் அஶ்வத்தையும் ஸாரதியையும் பெற்று ஆகாயத்தில்சென்றுஒருவர்க்கும்புலப்படாது மறைந்தனன். அப்பால் ராக்ஷஸ ஸைன்யம் குதிரைகளும் ரதங்களும் நிறைந்து பதாகைகளாலும் த்வஜங்களாலும் அலங்கரிக்கப்பட்டு யுத்த விருப்பத்தினால் கர்ஜித்துக்கொண்டு புறப்பட்டது. அந்த ராக்ஷஸர்கள், அங்ஙனம் யுத்தத்திற்கு வந்து, அற்புதமாகி மஹாவேகம் அமைந்து ஸ்வர்ணத்தினால் அலங்கரிக்கப்பட்டவைகளான பல பாணங்களாலும் தோமரங்களாலும் மாவெட்டிகளாலும் யுத்தத்தில் வானரர்களை அடித்தனர். அனந்தரம் இந்த்ரஜித்து கோபித்து ராக்ஷஸர்களைப் பார்த்து 'நீங்கள் வானரர்களைக் கொல்ல விரும்பி ஸந்தோஷத்துடன் அவர்களோடு போராடுங்கள்' என்றனன். அவன் அங்ஙனஞ் சொல்லுகையால் உடனே அந்த ராக்ஷஸர்களெல்லோரும் ஜயத்தை விரும்பி கர்ஜித்துக்கொண்டு பயங்கரர்களான அந்த வானரர்கள் மேல் பாணங்களைப் பெய்தனர். அவ்விந்த்ரஜித்து யுத்தத்தில் ராக்ஷஸர்கள் நாற்புறங்களிலும் சூழ்ந்திருக்க, அவரிடையில் மேலே இருந்து நாளிகபாணங்களாலும் கதைகளாலும் முஸலங்களாலும் வானரர்களை ஹிம்ஸித்தனன். அவ்வானரர்கள் அங்ஙனம் இந்த்ரஜித்தினால் அடிக்கப்பட்டு வ்ருக்ஷங்களைக்கொண்டு எல்லோரும் ஒன்றுகூடி யுத்தத்தில் நிலைநின்று போராடும் வீரனாகிய இந்த்ரஜித்தின் மேல் எதிர்த்தனர். அப்பால் மஹாதேஜஸ்வியும் மஹாபலனும் ராவண குமாரனுமாகிய இந்த்ரஜித்து கோபாவேசங்கொண்டு அவ்வானரர்களின் சரீரங்களை அடித்தனன். அவன் யுத்தத்தில்

சினந்து ராக்ஷஸர்கள் ஸந்தோஷிக்கும்படி ஒவ்வொரு பாணத்தினுல் ஒன்பதும் ஐந்தும் ஏழுமாக வானரர்களைச் சேதித்தனன். மிகுதியும் ஜயிக்க முடியாத அவ்வீரன் யுத்தத்தில் ஸூர்யனைப் போன்று ஸ்வர்ணத்தினுல் அலங்கரிக்கப்பட்டவையான பாணங்களால் வானரர்களை ஹிம்ஸித்தனன். அவ்வானரர்கள் யுத்தத்தில் பாணங்களால் பீடிக்கப்பட்டு தேஹம் முழுவதும் சின்னபின்னமாகப் பெற்று ஜயிப்பதில் விருப்பமற்று, தேவதைகளால் அடிக்கப்பட்ட பெரிய அஸுரர்கள்போல் பூமியில் வீழ்ந்தனர். அனந்தரம், யுத்தத்தில் மேலான மற்றுஞ் சில வானரர்கள் கோபாவேசமுற்று பாணங்களென்னுங் கிரணங்களால் விளங்கும் ஸூர்யன் போன்று அணுகமுடியாதிருக்கிற இந்த்ரஜித்தின்மேல் எதிர்த்துப் போயினர். பிறகு, அந்த வானரவீரர்கள் அனைவரும் இந்த்ரஜித்தின் பாணங்களால் தேஹம் பிளக்கப்பெற்று தைர்யத்தை இழந்து வருந்தி ரக்தப்ரவாஹத்தில் நனைந்து பறந்தோடிப் போயினர். அவ்வானரர்கள் யுத்தத்தில் ராமனது கார்யத்தின் பொருட்டு ப்ராணன்களின்மேல் ஆசைவைக்காமல் பராக்ரமித்துக்கற்களை ஆயுதமாகக்கொண்டு கர்ஜனை செய்பவராகிப் பின்வாங்காமல் இந்த்ரஜித்தை எதிர்கொண்டனர். அவ்வானரர்கள் அங்ஙனம் யுத்தத்தில் இந்த்ரஜித்தைச்சுற்றிலுஞ் சூழ்ந்து அவன்மேல் வ்ருக்ஷங்களையும் பர்வதசிகரங்களையும் கற்களையும் வர்ஷித்தனர். மஹாதேஜஸ்வியும் யுத்தத்தில் ஜயம் பெறுவோனுமாகிய அவ்விந்த்ரஜித்து ப்ராணன்களைப் போக்குவதும் மழை பெய்தாற்போல் ஓயாது விழுவதுமான அந்த வ்ருக்ஷங்களையும் கற்களையும் பாணங்களால் தடுத்தனன். அனந்தரம் யுத்தத்தில் ஸமர்த்தனுகிய இந்த்ரஜித்து அக்னியையும்

கொடிய ஸர்ப்பங்களையும் நிகர்த்த பாணங்களை ப்ரயோகித்து வானர ஸைன்யங்களைப் பிளந்தனன். அவன் கூரான பதினெட்டு பாணங்களால் கந்தமாதனனை அடித்து, தூரத்திலிருக்கும் நீலனை ஒன்பது பாணங்களால் ஹிம்ஸித்தனன். அம்மஹாவீரன் யுத்தத்தில் மர்மங்களைப் பிளக்கும்படியான ஏழு பாணங்களால் ஜாம்பவானையும் முப்பது பாணங்களால் நீலனையும், அங்ஙனமே பயங்கரங்களும் வரத்தினல் அடையப்பெற்றவைகளும் தீக்ஷ்ணங்களுமான பல பாணங்களால் ஸுக்ரீவனையும் ருஷபனையும் அங்கதனையும் அடித்து மூர்ச்சிக்கச் செய்தனன். அவன் அப்பொழுது மேலெழுந்து வளர்ந்த ப்ரளயகாலாக்னிபோல் கோபித்து மற்றும் ப்ரமுகர்களான மற்றை வானரர்கள் பலரையும் பல பாணங்களால் ஹிம்ஸித்தனன். அம்மஹா யுத்தத்தில் இந்த்ரஜித்து, ஸூர்யனேடொத்தவைகளும் காது வரையில் இழுத்து விடப்பெற்றவைகளும் மஹா வேகமுடையவைகளுமான பாணங்களால் வானர ஸைன்யங்களை யெல்லாம் ஹிம்ஸித்தனன். அவன் தன் பாணஸமூஹங்களால் வானர ஸேனையெல்லாம் கலங்கி வருந்தி மூர்ச்சித்து ரக்த ப்ரவாஹத்தில் மிதந்து சேஷ்டையற்றிருப்பதை மிகுந்த ஸந்தோஷத்துடன் கண்டனன். மஹா தேஜஸ்வியும் வீர்யபல ஸம்பன்னனும் வரதான பலமுடையவனுமாகிய அந்த ராவண புத்ரன் இந்த்ரஜித்து மீளவும் பாணங்களையும் கத்திமுதலிய ஆயுதங்களையும் மழை பெய்தாற்போல் பெய்து வானர ஸேனை முழுவதையும் ஹிம்ஸித்தனன். அவன் அந்த மஹா யுத்தத்தில் தன் ஸைன்யத்தை விட்டு வானரஸைன்யங்களுக்கு நேராக ஆகாயத்தில் சென்று அங்குங் கண்ணுக்குப் புலப்படாமலே, கறுத்த மேகம் ஜலத்தை வர்ஷிப்பதுபோல் பாணங்களை வர்ஷித்தனன். அந்தயுத்

தத்தில் பர்வதம் போன்ற உருவமுடைய அவ்வானரர்கள் இந்த்ரஜித்தின் பாணங்களால் சரீரம் பிளக்கப்பெற்று அவனது மாயையால் அடிக்கப்பட்டு விகாரமான குரலுடன் கூச்சலிட்டுக்கொண்டு, இந்த்ரனது வஜ்ராயுதத்தினால் அடிக்கப்பட்ட மேலான பர்வதங்கள் போல் தரையில் வீழ்ந்தனர். அவர்கள் யுத்தத்தில் தமது ஸைன்யங்களின்மேல் கூரான முனையுடைய பாணங்கள் வந்து விழுந்துகொண்டிருப்பதை மாத்ரங் கண்டார்களேயன்றி மாயையினால் மறைந்திருக்கிற இந்த்ரஜித்தை மாத்ரங் காணவில்லை. அனந்தரம் மஹானுபாவனாகிய அந்த ராக்ஷஸஸ்ரேஷ்டன், நுனிகூராகி ஸூர்யனேடொத்து விளங்கும் பாணங்களால் திசைகளை யெல்லாம் மறைத்து வானரோத்தமர்களை ஹிம்ஸித்தனன். மற்றும், அவன் எரிகிற அக்னிபோல் ஜ்வலிக்கின்ற சூலங்களையும் கத்திகளையும் கண்டக்கோடாலிகளையும் நெருப்புப் பொரிகளோடுகூடின அக்னிஜ்வாலைகள் கிளம்பும்படி கிருகிருவென்று சுழற்றி வானரராஜ ஸைன்யத்தின்மேல் மழை பெய்வதுபோல் ப்ரயோகித்தனன். அப்பால் மேலான வானரவீரர்கள் ராக்ஷஸோத்தமனான இந்த்ரஜித்தின் அக்னியைப்போன்ற பாணங்களால் அடிக்கப்பட்டு, தேஹங்கள் சின்னபின்னமாகவும் ரக்தவெள்ளம் பெருகவும் பெற்று நன்கு புஷ்பித்த பலாச வ்ருக்ஷங்கள் போன்று ஒருவரையொருவர் அடுப்பவராகி விகாரமான குரலுடன் இரைச்சலிட்டுக்கொண்டு பூமியில் வீழ்ந்தனர். சிலர் தலையைத் தூக்கி ஆகாயம் பார்த்துக்கொண்டே யிருந்து கண்களில் கூரான பாணங்கள் விழப்பெற்று ஒருவர்மேலொருவர் சாய்ந்துகொண்டு தரையில் வீழ்ந்தனர். ராக்ஷஸோத்தமனான இந்த்ரஜித்து, ஹனுமான் ஸுக்ரீவன் அங்கதன் கந்தமாதனன் ஜாம்பவான் ஸுஷேணன்

வேகதர்ஸிமைந்தன் த்விவிதன் நீலன் கவாக்ஷன் கஜன் கோமுகன் கேஸரி ஹரிலோமன் வித்யுத்தம்ஷ்டரன் ஸூர்யானனன் ஜ்யோதிர்முகன் ததிமுகன் பாவகாக்ஷன் நலன் குமுதன் ஆகிய இவ்வானரோத்தமர்களனைவரையும் ப்ரஹ்மாஸ்த்ர மந்த்ரத்தினல் அபிமந்த்ரிக்கப்பட்ட ஈட்டிகளாலும் சூலங்களாலும் கூரான பாணங்களாலும் மிகுதியும் ஹிம்ஸித்தனன். அங்ஙனம் அவன் கதைகளாலும் பொற் பிடியுள்ள பாணங்களாலும் வானரயூதபதிகளை ஹிம்ஸித்து உடனே ராமலக்ஷ்மணர்கள்மேல் ஸூர்யகிரணங்கள் போன்ற பாணஜாலங்களை ஓயாமல் பெய்தனன். அப்பொழுது ராமன் மிகுதியும் ஆச்சர்யகரமான தைர்ய ஸம்பத்தியுடையவனுகி அங்ஙனம் இந்த்ரஜித்து தன்மேல் பாணதாரைகளைப் பெய்து கொண்டேயிருப்பினும் ஜலதாரைகளைப்போல் அவற்றைப் பொருள் செய்யாமல் சுற்றிலும் ஸேனையைப் பார்த்துக்கொண்டே லக்ஷ்மணனைக் குறித்து லக்ஷ்மண! மீளவும் ராக்ஷஸதிலகனுகிய அவ்விந்த்ரஜித்து ப்ரஹ்மாஸ்த்ர மந்த்ரத்தை அவலம்பித்து முடித்து அதன் ப்ரபாவத்தினல் பயங்கரமான வானரஸைன்யத்தை விழத்தள்ளி ப்ரஸங்கத்தினல் நம்மையும் பாணங்களால் வருத்துகின்றனன். மஹானுபாவனுகிய இவன் ப்ரஹ்மதேவன் கொடுத்த வரமஹிமையால் இப்பொழுது யுத்தத்தில் ஆகாயத்தை அடைந்து பயங்கரமான தன் தேஹத்தை மறைத்துக் கொண்டிருக்கின்றனன். இங்ஙனம் தேஹத்தையே காட்டாமல் மறைந்து பாணங்களை மாத்ரம் ப்ரயோகிக்கின்ற இவ்விந்த்ரஜித்தை வதிப்பது எப்படி? புத்தியிற் சிறந்தவனே! இப்படிப்பட்ட மஹனீயமான அஸ்த்ரத்திற்கு தேவதையும் இதன் உற்பத்திக்குக் காரணமும் பகவானுமாகிய ப்ரஹ்மதேவனுடைய மஹிமை சிந்திக்க முடியாததென்று நினைக்

கிறேன். ஆகையால் நீயும் என்னுடன் மனக்கலக்க மின்றி இப்பொழுது இந்த பாணங்களைப் பொறுத்திருப் பாயாக. இந்த ராக்ஷஸோத்தமன் பாண ஸமூஹங்களா கிற மழையைப் பரப்பி ஸமஸ்த திசைகளையும் நன்றாக மறைக்கின்றனன். இந்த வானர ராஜ ஸைன்யம் முழுவ தும் மேலான சூரர்கள் வீழ்கையால் சிறிதும் விளக்க முறாதிருக்கின்றது. இவன், நாம் யுத்தஞ் செய்ய அவ காச மில்லாமல் தெளிவின்றிக் கோபத்தையும் ஸந் தோஷத்தையும் துறந்து மூர்ச்சித்துத் தரையில் வீழ்ந் தமை கண்டவுடனே யுத்தத்தின் முனையில் விளைவ தான ஜயலக்ஷ்மியைப் பெற்று ஸந்தோஷத்துடன் லங் காபுரிக்குப்போவான் 'இது நிச்சயம்' என்றனன். அனந் தரம் அங்கு அந்த ராமலக்ஷ்மணர்கள் இந்த்ரஜித் தின் பாணஸமூஹங்களால் பீடிக்கப்பட்டு அங்ஙனமே வீழ்ந்திருந்தனர். ராக்ஷஸஸ்ரேஷ்டனாகிய அவ்விந்த்ர ஜித்தும் அங்ஙனம் ராமலக்ஷ்மணர்கள் வீழ்ந்திருப் பதைக்கண்டு ஸந்தோஷத்தினால் யுத்தத்தினிடையில் ஸிம்ஹநாதஞ்செய்தனன். அவன் அப்பொழுது யுத் தத்தில் அங்ஙனம் அந்த வானரஸைன்யம் முழுவதையும் ராமலக்ஷ்மணர்களையும் வருத்தத்தில் ஆழ்ந்திருக்கச் செய்து, உடனே ராவண புஜங்களால் பாதுகாக்கப் பட்ட லங்காபுரியுள் ப்ரவேசித்தனன். எழுபத்து மூன் றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஹனுமான் கொண்டுவந்த ஒஷதியின் வாஸ னையை மோந்து ராமலக்ஷ்மணர்களும் மற்ற வரும் மூர்ச்சை தெளியப்பெறுதல்.

அப்பொழுது ராமலக்ஷ்மணர்கள் வருத்தமுற்றிருக் கக் கண்டு, வானர ஸைன்யமெல்லாம் பயத்தினால் மூர்ச் சித்தது. ஸுக்ரீவன் நீலன் அங்கதன் ஜாம்பவான் ஆகிய

இவர்கள் யாதுஞ்செய்யத் தோற்றிருந்தனர். அனந்தரம், புத்திமான்களனைவரினும் சிறந்த விபீஷணன் வானர ஸைன்யமெல்லாம் பயத்தினால் தழதழத்திருப்பது கண்டு, வானரோத்தமர்களை நிகரில்லாத நல்வார்த்தைகளால் ஸமாதானப்படுத்தி 'நீங்கள் பயப்பட வேண்டாம். ராமலக்ஷ்மணர்கள் பாணங்களால் அடிக்கப்பட்டு ஸ்வாதீன மற்று வருந்துகின்றார்களென்று நீங்கள் வருத்தப்படவேண்டும்படியான காலம் ஒன்றும் இல்லை. ஏனென்னில், அவர்கள் ப்ரஹ்மதேவனது வார்த்தையைக் கௌரவிக்கும்பொருட்டு இங்ஙனம் இந்த்ரஜித்தின் பாணஸமூஹங்களால் வருந்தினாற்போலிருக்கின்றார்களேயன்றி வேறில்லை. ஆகையால் வருத்தப்படுவதற்கு இது ஸமயமன்று. ப்ரஹ்மதேவன் அவ்விந்த்ரஜித்துக்கு வீணாகாத வேகமுடைய இந்த ப்ரஹ்மாஸ்த்ரத்தைக் கொடுத்தனன். ராஜ புத்ரர்களான ராமலக்ஷ்மணர்கள் பிரமனைத் தேவதையாகவுடைய அம்மஹாஸ்த்ரத்தைக் கௌரவிக்கும்பொருட்டுப் பூமியில் வீழ்ந்திருக்கின்றனர். இதற்கு வருத்தப்பட வேண்டிய காரணமென்?' என்றனன். அனந்தரம் புத்திமானாகிய வாயு புத்ரன் ஹனுமான் ப்ரஹ்மாஸ்த்ரத்தைக் கௌரவிக்கும் பொருட்டு ஒரு முஹூர்த்த காலம் கட்டுண்டிருந்து, உடனே விடுவித்துக்கொண்டு விபீஷணனுடைய வார்த்தையைக் கேட்டு, அவனுடன் 'பலிஷ்டர்களான; இந்த வானரஸேனையிலுள்ளவர் அடிபட்டிருக்கின்றனர்; இனி எவரெவர் ப்ராணன்களைத் தரித்திருக்கின்றார்களோ, அவர்களை ஸமாதானப்படுத்துவோம்' என்றனன். அங்ஙனம் அன்றிரவு, வீரர்களான ஹனுமான் விபீஷணன் ஆகிய இருவரும் குறைக்கொள்ளிகளைக் கையில் எடுத்துக்கொண்டு யுத்த பூமியில் வானர வீரர்களைத் தேடிக்கொண்டு திரிந்தனர். வால் கை

துடை கால்விரல் கழுத்து இவை முறியப்பெற்றவரும் மலமூத்ரங்களை விடுகின்றவரும் தேஹங்களினின்று ரக்தம் பெருகப் பெற்றவருமாகிப் பர்வதம் போன்ற உருவத்துடன் ஆங்காங்கு வீழ்ந்திருக்கிற வானரர்களாலும், பளபளவென்று ஜ்வலித்துக்கொண்டு வீழ்ந்திருக்கிற ஆயுதங்களாலும் நிறைந்திருக்கிற யுத்த பூமியை அவ்விருவரும் கண்டனர். அனந்தரம் அவர்கள் யுத்தத்தில் மாண்டாற்போல் வீழ்ந்திருக்கிற ஸுக்ரீவன் அங்கதன் நீலன் சரபன் கந்தமாதனன் கவாக்ஷன் ஸுஷேணன் வேகதர்சி ஆஹுகன் மைந்தன் நலன் ஜ்யோதிமுகன் த்விவிதன் பனஸன் ஆகிய இவர்களையும் மற்றுமுள்ள வானர வீரர்களையும் கண்டனர். ப்ரஹ்மதேவனுக்கு ப்ரியனான அவ்விந்த்ரஜித்து ப்ரஹ்மாஸ்த்ரத்தினால் அன்று ஸாயங்காலம் ஆறு நாழிகையில் பலிஷ்டர்களான அறுபதினாயிரங்கோடி வானரர்களை வதித்தனன். ஹனுமானும் விபீஷணனும் ஸமுத்ரம்போல் பயங்கரமான அவ்வானர ஸைன்யம் முழுவதும் பாணங்களால் பீடிக்கப்பட்டிருப்பதைக் கண்டு, ஜாம்பவானைத் தேடினர். இயற்கையால் முதிர்ந்தவனும் ஜ்ஞானவ்ருத்தனும் அனேகம் பாணங்கள் உடம்பு முழுவதும் பொற்றப் பெற்று அணைகின்ற அக்னிபோன்றவனும் வீரனுமாகிய ஜாம்பவானை விபீஷணன் கண்டு, அவனருகே சென்று, 'பெரியோனே! இந்தக்கூரான பாணங்களின் அடிக்கு உன் ப்ராணன்கள் போகாதிருக்கின்றனவல்லவா?' என்று வினவினன். பல்லூக ராஜனாகிய ஜாம்பவான் விபீஷணன் சொன்னதைக் கேட்டு, மிக வருத்தத்துடன் வார்த்தை சொல்லத்தொடங்கி, 'ராக்ஷஸோத்தமா! மஹாவீர்யசாலீ! உன் குரலினால் உன்னைத் தெரிந்துகொண்டனன். கூரான பாணங்களால்

பீடிக்கப்பட்டிருக்கையால் உன்னைக் கண்களால் காண முடியாதிருக்கின்றனன். விபீஷணு! எவனைப்பெற்று அஞ்ஜனையும் வாயுதேவனும் நல்ல பிள்ளையுடையவராயினரோ, அப்படிப்பட்ட வானரோத்தமனுகிய ஹனுமான் ப்ராணன்களோடிருக்கிறுனல்லவா?'' என்று வினுவினன். ஜாம்பவான் சொன்ன வார்த்தையைக்கேட்டு, விபீஷணன் அவனைப்பார்த்து 'ராமலக்ஷ்மணர்களையுங்கூட விட்டு, வாயு குமாரனுன ஹனுமானை ஏன் வினவுகின்றனை? பெரியோனே! நீ வாயு குமாரனுன ஹனுமானிடத்தில் எவ்வளவு மிகுந்த ப்ரீதியைக் காட்டினையோ, அந்த ப்ரீதியை, வானர ராஜனுன ஸுக்ரீவனிடத்திலாவது யுவராஜனுகிய அங்கதனிடத்திலாவது எல்லார்க்கும் ப்ராணனுன ராமனிடத்திலாவது ஏன் காட்டவில்லை?'' என்று வினுவினன். விபீஷணன் சொன்ன வார்த்தையைக் கேட்டு, ஜாம்பவான் அதற்கு மறுமொழி கூறத்தொடங்கி, 'ராக்ஷஸஸ்ரேஷ்டனே! எல்லோரையும் விட்டு வாயு புத்ரனுன ஹனுமானை வினவினதற்குக் காரணஞ் சொல்லுகிறேன் கேள். வீரனுகிய அந்த ஹனுமான் ஒருவன் மாத்ரம் பிழைத்திருப்பானுயின், மற்றை ஸைன்யமெல்லாம் மாண்டு போயினும் பயமில்லை; பிழைத்தாற் போலவே ஹனுமானெருவன் ப்ராணன்களை இழந்திருப்பானுயின், நாமெல்லோரும் பிழைத்திருப்பினும் செத்தாற் போலவே. அப்பனே! வேகத்தில் வாயுவைப்போன்றவனுகி வீர்யத்தில் அக்னி தேவனேடொத்து விளங்கும் அவ்வாயு குமாரனுகிய ஹனுமான் ப்ராணன்களோடிருப்பானுயின், அப்பால் நமக்குப் பிழைப்பில் ஆசை உண்டாகும்' என்றனன். அனந்தரம் வாயு குமாரனுன ஹனுமான் வ்ருத்தனுகிய ஜாம்பவானிடஞ் சென்று சாஸ்த்ரங்களில்

விதிக்கப்பட்ட நியமத்தின்படி அவனுடைய பாதங்களைப் பிடித்துக்கொண்டு நமஸ்காரஞ் செய்தனன். பல்லூக திலகனான ஜாம்பவான் அங்ஙனம் பாணங்களால் இந்த்ரியங்கள் கலக்கமுற்றிருப்பினும், ஹநுமான் 'நான் ஹநுமான்' என்று மொழிந்து வந்தனஞ் செய்தது கேட்டுத் தான் மீளவும் ஜன்மித்தாற்போல் நினைத்தனன். அனந்தரம் மஹாதேஜஸ்வியாகிய அந்த ஜாம்பவான் ஹநுமானைப் பார்த்து 'வானர ஸிம்ஹனே! இப்படி வருவாய். நீ இப்பொழுது வானரர்களெல்லோரையும் பாதுக்கவேண்டும். இவர்களை ரக்ஷிப்பதற்கு வேண்டிய பராக்ரமம் உனக்கிருப்பதுபோல் மற்றெவனுக்கும் போதாது. உனக்கு மிகுதியும் போதுமானதா யிருக்கின்றது. மற்றும் நீ இவர்களுக்கு மிகுந்த நண்பன். ஆகையால் நீயே ரக்ஷிக்கவேண்டும்; உன்னைப் போன்றவன் பராக்ரமத்தைக் காட்ட இதுவே தகுந்த ஸமயம். இப்படிப்பட்ட ஸமயத்தில் பராக்ரமத்தை உபயோகப்படுத்த வல்லவன் மற்றெவனும்எனக்குப் புலப்படவில்லை. பல்லூக வீரஸைன்யங்களுக்கும் வானர வீரஸைன்யங்களுக்கும் ஸந்தோஷம் விளைப்பாயாக. வருந்துகின்ற இந்த ராமலக்ஷ்மணர்களையும் சல்யந்தீரச் செய்து ஸுகப்படுத்துவாயாக. ஹநுமானே! நீ ஸமுத்ரத்திற்கு மிகவும் அருகான ஆகாயத்தில் வெகு தூரஞ் சென்று பர்வத ஸ்ரேஷ்டமாகிய ஹிமவத் பர்வதத்திற்குப் போகவேண்டும். சத்ருக்களை அழிப்பவனே! அப்பால் அங்கு, நீ மிகுதியும் உயர்ந்த ஸ்வர்ணமயமான ருஷபமென்னும் பர்வதத்தையும் கைலாஸ சிகரத்தையுங் காண்பாய். வானர ஸிம்ஹனே! அந்தப் பர்வத சிகரத்தில் உண்டாகி ஜ்வலிக்கின்றவைகளும் பத்துத்திசைகளையும் விளங்கச் செய்பவைகளுமான

நான்கு திவ்ய ஓஷதிகளைக் காண்பாய். அவையே [1]ம்ருத ஸஞ்ஜீவினியும் விசல்யகரணியும் ஸாவர்ண்யகரணியும் ஸந்தான கரணியுமாகும். ஹனுமானே! வாயுகுமாரனே! நீ அந்த ஓஷதிகளை யெல்லாம் எடுத்துக்கொண்டு சீக்ர மாக வரவேண்டும். வந்து வானரர்களின் ப்ராணன் களை மூட்டி அவர்களை ஸமாதானம் பண்ணுவாயாக' என்றனன். வானர ஸ்ரேஷ்டனாகிய ஹனுமான் ஜாம் பவானுடைய வார்த்தையைக் கேட்டவுடனே, ஜல ப்ர வாஹங்களால் ஸமுத்ரம் வளர்ந்துவருவதுபோல், பலத் தின் மிகுதியால் நிறைந்து வளர்ந்தனன். வீரனாகிய அந்த ஹனுமான் த்ரிகூடபர்வதத்தின் நுனிக்குக் குதித் து அடியின் உறைப்பினால் அந்தப் பர்வதோத்தமத் தைப் பிடித்துக் கொண்டு இரண்டாவது பர்வதம் போல் புலப்பட்டனன். அந்தப் பர்வதம் ஹனுமானு டைய பாதங்களால் துவைக்கப்பட்டு மிகுதியும் கலக்க முற்றது. அங்ஙனம் அது மிகுதியும் பிடிக்கப்பட்டி ருக்கையால் தன்னைத் தான் நிலை நிறுத்திக்கொள்ள முடியாதிருந்தது. அங்ஙனம் அம்மலை பிடிக்கப்பட்டி ருக்கையால் அதிலுள்ள வ்ருக்ஷங்கள், ஹனுமான் ஹிமவத் பர்வதத்திற்குப் போவதற்குரிய சக்தியை ஏற் றுக்கொண்ட வேகத்தினால் நெருப்பு உண்டாகப் பெற்று எரியலாயின. அதன் சிகரங்களும் சூர்ணமா யின. அங்ஙனம் பிடிக்கப்பட்டு முறிந்த வ்ருக்ஷங்க ளோடும் கல்ப்ரதேசங்களோடும் அப்பர்வதம் கிடுகிடு வென்று நடுங்குகையில், அதன் தாழ்வரையே யுத்த பூமி யாகையால் அதிலுள்ள வானரர்கள் நிற்க முடியா

---

1 மரணமடைந்தவர்களைப் பிழைக்கச் செய்யும் ஓஷதி ம்ருதஸஞ் ஜீவினி. ப்ராணன் வந்தபின்பு எழுந்துலாவும்படி செய்வதற்குச் சல் யங்களைப் போக்குவது விசல்யகரணி. சல்யங்களை வாங்கின பின்பு சர்மத்தை யதாஸ்தியாக ஒன்றோடொன்று ஸந்திக்கச் செய்வது ஸந் தானகரணி. புண்களில் உண்டான நிறமாற்றத்தைப் போக்கி மற்ற தேஹபாகத்தோடு நிறமொத்திருக்கச் செய்வது ஸாவர்ண்யகரணி.

திருந்தனர். அப்பொழுது ராத்ரியில் லங்காபுரி, ஹனு மானுடைய வேகத்தினால் ஜனங்களெல்லோரும் திகி லடையவும் பெரிய வாசல்கள் அசையவும் க்ருஹங்களும் கோபுரங்களும் முறிந்து விழவும் பெற்று நர்த்தனஞ் செய்வது போலிருந்தது. பர்வதம் போன்ற உருவ முடைய அவ்வாயு குமாரன், அங்ஙனம் த்ரிகூட பர்வதத் தைப் பிடித்து ஸமுத்ரங்களோடு கூட பூமி முழுவதும் அசையும்படி செய்தனன். அனந்தரம் ஹனுமான் அந்தப் பர்வதத்தினின்று மேருமந்தர பர்வதங்களை நிகர்த்து நானாவித அருவிகள் நிறைந்த லங்காமலய பர்வதத்தில் ஆரோஹித்தனன். அந்தப் பர்வதம் பல வகை வ்ருக்ஷங்களும் கொடிகளும் நிறைந்து தாமரை களும் கருநெய்தல்களும் மலர்ந்திருக்கவும் தேவதை களும் கந்தர்வர்களும் உலாவவும் பெற்று அறுபது யோஜனை உயரமுடையது மாயிருக்கும். மேகம்போ ன்ற வாயுகுமாரன் அங்குள்ள யக்ஷ கந்தர்வ கின்ன ரர்களனைவரையும் ஆகுலப்படுத்திக் கொண்டு தேஹத் தை வளர்த்திக் கொண்டனன். அந்த ஹனுமான் பாதங்களால் பர்வதத்தைத் துவைத்துக் கொண்டு பயங்கரமான படபாக்னிபோன்ற வாயைத்திறந்து ராக்ஷஸர்களை பயப்படுத்தும் பொருட்டு உரக்க இறைச் சலிட்டனன். லங்கையிலுள்ள ராக்ஷஸர்களெல்லோ ரும், அங்ஙனம் ஆச்சர்யமாக கர்ஜிக்கின்ற ஹனுமா னுடைய கர்ஜனத்தைக் கேட்டு, பயத்தினால் இப்படி அப்படி அசையவும் வல்லமையற்றிருந்தனர். அனந்த ரம் பயங்கரமான பராக்ரமமுடைய அந்தப் பரந்தபன் ஹனுமான், ராமனுக்கு நமஸ்காரஞ் செய்து, அவனுக் காகப் பெரிய கார்யத்தைச் செய்ய முயன்றனன். ப்ர சண்டவேகமுடைய அந்த ஹனுமான் ஸர்ப்பம்போல் தொங்குகின்ற வாலைத்தூக்கிக் கிளம்பும்பொருட்டுப் பின்

புறத்தை வணக்கி பலத்தை உத்தீபனஞ் செய்வதற்கா கக் காதுகளை மடக்கி படபாக்னி போன்ற வாயைத் திறந்துகொண்டு ஆகாயத்திற்குக் கிளம்பினன். அந்த ஹனுமானுடைய புஜங்களுடையவும் தொடைகளுடைய வும் வேகத்தினல் வேரறுந்து கிளம்பின வ்ருக்ஷ ஸமூ ஹங்களும் கற்களும் அந்த த்ரிகூட பர்வதத்தில் எப் பொழுதும் வாஸஞ்செய்கிற அற்ப வானரர்களும் அவ னேடு கூடவே வெகு தூரம் இழுக்கப்பட்டுச் சென்று, அப்பால் முறையே வேகம் குறையப்பெற்று ஜலத்தில் வீழ்ந்தன. கருடனேடொத்த வீர்யமுடைய அவ்வாயு குமாரன் ஸர்ப்பத்தின் உடல் போன்ற புஜங்களை நீட் டித் திசைகளை இழுத்துக்கொண்டு செல்பவன்போன்று, பர்வத ஸ்ரேஷ்டமாகிய மேரு இருக்கும் திசை வழியாக ஹிமவத் பர்வதத்தைக் குறித்துப் போயினன். அப் பொழுது தன் வேகத்தினல் அலைகளின் வரிசைகள் கலங்கி ஸமஸ்த ஜந்துக்களும் மிகுதியும் சுழலப்பெற்ற ஸமுத்ரத்தைப் பார்த்துக் கொண்டு ஹனுமான், விஷ் ணுவின் ஹஸ்தத்தினல் ப்ரயோகிக்கப்பட்ட ஸுதர் சன சக்ரம்போல் மிகுந்த வேகத்துடன் போயினன். வேகத்தில் தந்தையோடொத்த அந்த ஹனுமான், பர் வதங்களையும் நதிகளையும் குளங்களையும் தாமரை யோடைகளையும் வ்ருக்ஷ ஸமூஹங்களையும் பெருப் பெரிய பட்டணங்களையும் ஸம்ருத்தமான ஜன பதங்களையும் பார்த்துக்கொண்டு வேகமாகப் போயினன். பராக்ர மத்தில் தந்தையோடொத்த வீரனுகிய அந்த ஹனு மான் ஆகாயத்தில் சிறிதும் வருத்தமின்றி மிகுந்த வேகத்துடன் போயினன். வானர ஸ்ரேஷ்டனுகிய ஹனுமான் வாயுவைப்போல் மிகுந்த வேகத்துடன் திசைகளை யெல்லாம் சப்தத்தினல் நிறைத்துக்கொண்டு போயினன். வாயு குமாரனுன ஹனுமான், வேகத்தி னுல் போகவேண்டிய இடத்தைக் கடந்து அப்புறம்

போகாதிருக்கும் பொருட்டு ஜாம்பவானுடைய வாக்யத்தையே நினைத்துக் கொண்டு, வாயு வேகத்துடன் போய் உடனே ஹிமவத் பர்வதத்தைக் கண்டனன். அந்த ஹனுமான் பலவகை அருவிகளோடு கூடிப் பல குஹைகளோடும் சிற்றாறுகளோடும் விளக்கமுற்று, வெளுத்த மேகக்கூட்டங்கள்போல் அழகாய்ப் புலப்படுகின்ற சிகரங்களோடும் நானாவித வ்ருக்ஷங்களோடுங் கூடி மிகுதியும் ப்ரகாசிக்கின்ற ஹிமவத் பர்வதத்திற்குப் போய்ச் சேர்ந்தனன். அந்த ஹனுமான் மிகுதியும் உயர்ந்து பயங்கரமாயிருக்கின்ற சிறந்த சிகரங்களோடு விளங்குகின்ற அம்மஹா பர்வதத்தைச் சேர்ந்து, அங்கு மேன்மையுடைய தேவதைகளும் மஹர்ஷிகளும் உலாவப்பெற்றுப் பரிசுத்தங்களான பெருப் பெரிய ஆஶ்ரமங்களைக் கண்டனன். அந்த ஹனுமான் ப்ரஹ்மதேவனுடைய க்ருஹமான ப்ரஹ்ம கோசத்தையும் கைலாஸத்தையும் இந்த்ரன் தவஞ் செய்த ஆஶ்ரமங்களையும், ருத்ரன் விளையாட்டுக்காக பாண ப்ரயோகஞ் செய்த இடத்தையும், ஹயக்ரீவனது ஆராதன க்ஷேத்ரத்தையும், ப்ரகாசிக்கின்ற ப்ரஹ்ம கபாலத்தையும், இளைப்பாறும் பொருட்டு நின்றிருக்கும் ஸூர்யகிங்கரர்களையும் கண்டனன். இந்த்ரனுக்கு ப்ரஹ்மதேவன் வஜ்ராயுதங்கொடுத்த இடத்தையும், ஸூர்யன்போல் ப்ரகாசிக்கின்ற குபேரஸ்தானத்தையும், ஸூர்யனது பார்யையாகிய சாயா தேவியின் ப்ரீதிக்காக விஶ்வகர்மா ஸூர்யனுடைய வெப்பத்தைக் குறைக்கும்பொருட்டுச் சாணை பிடிப்பதற்காக ஏற்படுத்தின ஸ்தானத்தையும், தேவகணங்களைப் பார்க்கும் பொருட்டு ப்ரஹ்மதேவனுக்கு ஏற்படுத்தின ஸிம்ஹாஸனம் அமைந்த ப்ரஹ்மாஸனத்தையும், சிவதனுஸ் ஸ்தானத்தையும், பூமியினின்று பாதாளத்தில் புகும் ரந்த்ரத்தை

யும், கண்டனன். மற்றும், அவன் சிறந்த கைலாஸ பர்வதத்தையும், கைலாஸ பார்ஸ்வத்தில் ஹிமவச் சிலை யெனப்படும் ஓர் விசேஷமான சிலையையும், ருஷபமென்கிற ஓஷதி பர்வதத்தையும், காஞ்சன பர்வதத்தையும், ராத்ரியில் விளங்கும் ஸகல த்ருணஜ்யோதிஸ்ஸுக்களாலும் ப்ரகாசிப்பதும் ம்ருதஸஞ்சீவினி முதலிய ஸமஸ்த ஓஷதிகளும் அமைத்ததுமாகிய பர்வதோத்தமத்தையுங் கண்டனன். வாயுகுமாரனாகிய அந்த ஹனுமான் அக்னியின் காந்திகள் போன்ற ஓஷதிகளால் ப்ரகாசிக்கின்ற அவ்வோஷதி பர்வதத்தைக்கண்டு ஆச்சர்யம் அடைந்து அந்தப்பர்வதம் முழுவதும் திரிந்து அதில் ஓஷதிகளைத் தேடினன். வாயுகுமாரனான அம்மஹாகபி அங்ஙனம் ஆயிரம் யோஜனைகள் நடந்து போயினும் இளைப்படையாமல் திவ்ய ஓஷதிகள் நிறைந்த அந்தப் பர்வதத்தில் ஓஷதிகளைத் தேடிக்கொண்டு திரிந்தனன். அனந்தரம் அந்தப் பர்வத ராஜத்திலுள்ள திவ்ய ஓஷதிகள் தம்மை எடுத்துக்கொண்டு போகும் பொருட்டு ஹனுமான் வந்தானென்று தெரிந்துகொண்டு அவை யெல்லாம் அவனுக்குத்தெரியாமல் மறைந்தன. அவை அங்ஙனம் புலப்[illegible]ாது போகையில் மஹானுபாவனான ஹனுமானுக்குக் கோபம் உண்டாயிற்று. அந்தக் கோபத்தினால் அவன் பொறுக்காமல் மிகுதியும் உரக்க நாதஞ் செய்து அக்னி போல் கண்கள் சிவக்கப் பெற்று அந்தப் பர்வதத்தைப் பார்த்து 'பர்வத ராஜனே! நீ ராமனிடத்திலுங்கூட தயையில்லா திருக்கின்றனையே! இப்படியே கெட்டியாக நீ நிச்சயித்திருப்பதேன்? அப்படியாயின், என் பாஹு பலத்தினால் உன்னை வருத்திக் கீழே சிதறி விழும்படி செய்கிறேன் காண்பாய்' என்றனன். அப்பால், அவன் வ்ருக்ஷங்களோடும் யானைகளோடுங் கூடிப் பொன்கனி

கள் நிறைந்து அனேகமாயிரங் கைரிகதாதுக்களால் ப்ரகாசிப்பதும் ஔஷதிகளால் திகழ்கின்ற மேல் தாழ் வரைகளமைந்ததுமாகிய அந்தப் பர்வத சிகரத்தை, அதிலுள்ள சிறிய சிகரங்கள் முறிந்து உடைந்து விழும்படி பிடித்துக்கொண்டு வேகமாகத் திடீலென்று பிடுங்கினன். அந்த ஹநுமான், தேவதைகளும் மேலான அஸுரர்களும் ஸமஸ்த லோகங்களும் பயப்படுமாறு அந்தப் பர்வதத்தைப் பிடுங்கிக் கொண்டு ஆகாயத்திற்குக் கிளம்பி, கருடன்போல் பயங்கரமான வேகமுடையவனுகையால், மஹா வேகத்துடன் ஆகாயத்திலுள்ள தேவாதிகள் பலரும் புகழப்பெற்றுப் போயினன். அப்பொழுது, ஹநுமான் ஸூர்யனைப் போல் திகழ்ந்து ஸூர்யனேடொத்த ஒளியுடைய அந்தச்சிகரத்தை ஏந்திக்கொண்டு ஆகாயத்தில் கிளம்பி ஸூர்யனுக் கருகில் இரண்டாவது ஸூர்யன்போல் ப்ரகாசித்தனன். பர்வதம் போன்ற உருவமுடைய அந்த வாயுகுமாரன் அந்தப் பர்வதத்தைக் கையில் ஏந்திக்கொண்டு ஆகாயத்தில், ஆயிரம் அரங்களையுடையதும் அக்னி ஜ்வாலைகள் அமைந்ததுமாகிய ஸுதர்சனத்தைக் கையிலேந்தின விஷ்ணுதேவன்போல் மிகுதியும் ப்ரகாசித்தனன்.[1] வானரர்கள், அவன் பர்வத சிகரத்தோடு வருவதைக் கண்டு, ஸந்தோஷத்தினுல் உரக்கக் கூச்சலிட்டனர். அனந்தரம் மஹானுபாவனுன அந்த ஹநுமான் அந்தத்ரிகூட பர்வதஸ்ரேஷ்டத்தில் வானர ஸேனையின் இடையில் இறங்கி, அங்கு வானரோத்தமர்களுக்குத் தலைவணக்கி நமஸ்காரஞ் செய்து, விபீஷணனை அணைத்துக்கொண்

[1] இங்கு வானரர்கள் ஹநுமானைப் பார்த்து இரைச்சலிட்டதாகச் சொல்லுகையால் தூரத்தினின்றே அந்தப் பர்வதத்திலுள்ள ஔஷதிகளின் வாஸனையை மோந்து எல்லோரும் ஜீவித்தார்களென்று தெரிகிறது.

டனன்; அப்பொழுது ராஜ குமாரர்களான அந்த ராம லக்ஷ்மணர்கள் இருவரும் அம்மஹௌஷதிகளின் கந்தத்தை மோந்து சல்யங்களெல்லாம் தீரப்பெற்றனர். மற்றை வானர வீரர்களும் அந்த வாஸனையை மோந்தவுடன் மூர்ச்சை தீர்ந்து ஸுகித்து எழுந்திருந்தனர். மற்றும் இதற்கு முன்பு அடியுண்டு மாண்டு விழுந்திருந்த வானர வீரர்களும் அம்மேலான ஓஷதிகளின் வாஸனை மேல்பட்டவுடனே ஸஞ்ஜீவினியால் ஒரு நொடியில் எழுந்து விசல்யகரணியால் அனைவரும் சல்யந்தீரப்பெற்று நோயெல்லாம் தொலைந்து, ஸாவர்ண்யகரணியால் ராத்ரி படுத்துறங்கினவர் காலையில் தூக்கந் தெளிந்தெழுந்திருப்பதுபோல் எழுந்து ப்ரகாசித்துக் கொண்டிருந்தனர். லங்கையில் வானரர்களும் ராக்ஷஸர்களும் யுத்தஞ் செய்யத் தொடங்கினது முதல், ராக்ஷஸர்கள் இத்தனைபேர் மாண்டார்களென்று எவர்க்கும் கணக்குத் தெரியாதிருக்கும் பொருட்டு ராவணனது ஆஜ்ஞையால் யுத்தத்தில் வானரோத்தமர்களால் அவ்வப்பொழுது அடியுண்ட ராக்ஷஸர்களை அனைவரையும் அவ்வப்பொழுதே ஸமுத்ரத்தில் போகட்டுக்கொண்டிருந்தனர். (ஆகையால் மாண்டுபோன ராக்ஷஸர்களும் பிழைத்தெழுந்திருக்க நேராது போயிற்று.) அனந்தரம் பயங்கரமான பராக்ரமமுடைய அவ்வாயுகுமாரன் ஓஷதி பர்வதத்தை வேகமாக ஹிமவத் பர்வதத்தில் கொண்டுபோய்ச் சேர்த்து மீளவும் ராமனிடம் வந்து சேர்ந்தனன். எழுபத்து நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

வானரர்கள் லங்கையை தஹித்தலும், ராவணன் கும்ப நிகும்பாதிகளை யுத்தத்திற்கனுப்புதலும், வானரர்க்கும் ராக்ஷஸர்க்கும் துமுலயுத்தமும்.

அனந்தரம், மஹா தேஜஸ்வியாகிய வானர ராஜன் ஸுக்ரீவன் ராமனைப் பார்த்து, ப்ரயோஜனம் அமைந்த

வசனத்தை மொழிந்துகொண்டேயிருந்து ஹனுமானைக் குறித்து 'ராவணன் தன் தம்பியான கும்பகர்ணனும் குமாரர்களும் மாண்டதைப்பற்றி உத்ஸாஹங் குறைந்திருக்கிறானாகையால் அவன் இப்பொழுது வெளிவந்து நமக்கு யுத்தங்கொடுக்கமாட்டான். நம் வானரர்களில், எவரெவர் மஹா பலமுடையவரும் வேகமுடையவருமாயிருப்பவரோ, ஸிம்ஹம் போன்ற அந்த வானர ஸ்ரேஷ்டர்கள் ராவணாலயத்தைக் கொளுத்த முயன்று குறைக்கொள்ளிகளைக் கையில் எடுத்துக்கொண்டு ப்ராகாரத்தின் மேல்கிளம்பிச் சீக்ரமாக லங்கைக்குள் புகுவார்களாக' என்றனன்[1] அனந்தரம், ஸூர்யன் அஸ்தமிக்கையால் பயங்கரமாயிருக்கின்ற அன்றிரவின் பின் ஜாமத்தில் அந்த வானர ஸ்ரேஷ்டர்கள் குறைக்கொள்ளிகளை எடுத்துக்கொண்டு லங்கையைக் குறித்துப் போயினர். வானர ஸேனைகள் கொள்ளியைக் கொண்டு வந்து நாற்புறத்திலும் துரத்துகையில்,குல்மங்களிலிருந்து நகரத்தைக் காக்கும் விகாரமான கண்களையுடைய ராக்ஷஸர்கள் உடனே ஓடிப்போயினர். அவ்வானரர்கள்

---

1 இங்கு 'ததோஉஸ்தம்கத ஆதித்யே ரௌத்ரே தஸ்மிந் நிசாமுகே। லங்காமபிமுகாஸ் ஸோல்கா ஜக்முஸ்தே ப்லவகர்ஷபாஃ' என்பது மூலம். முன்பு விபீஷணனும் ஹனுமானும் 'உல்காஹஸ்தௌ ததா ராத்ரௌ' என்று ராத்ரியில் குறைக் கொள்ளியை எடுத்துக்கொண்டு திரிந்ததாகச் சொல்லப்பட்டது. இங்கு 'அஸ்தம்கத ஆதித்யே' என்று அஸ்தமயத்தையே சொல்லுகிறது. இவ்விரண்டுக்கும் பொருந்த மெப்படி யென்னில்—ஸூர்யன் அஸ்தமித்தானென்ற இடத்தில் ஸூர்ய ப்ரகாசமில்லாமையைக் கண்டுகொள்வது. நிசாமுகமென்று இங்குப்பின் மாலையைச் சொல்லுகிறது. (ரௌத்ரே) என்னும் விசேஷணத்தினால் அந்த வேளையில் பயங்கரமான காடாந்தகாரம் சூழ்ந்திருக்கை சொல்லப்பட்டது. ஹனுமான் மிகுதியும் வேகமுடையவனாகையால் ஒரு முஹூர்த்தத்திற்குள் போய் ஓஷதி பர்வதத்தைக் கொண்டுவந்து.அதை மீளவும் கொண்டுபோய் ஹிமவத் பர்வதத்தில் வைத்து வந்தானென்று அவனுடைய வேகத்தின் மிகுதியைச் சொல்லுகிறது.

மிகுந்த ஸந்தோஷத்துடன் எழுந்து பட்டணத்து வாசற்படிகளிலும் கோட்டையின் நுனிகளில் இயற்றப் பட்ட க்ருஹங்களிலும் பெரிய வீதிகளிலும் பலவகை அவாந்தர வீதிகளிலும் உப்பரிகைகளிலும் நெருப்பு வைத்தனர். அப்பொழுது அவ்வானரர்கள் மூட்டின அக்னி அநேகமாயிரம் ராக்ஷஸக்ருஹங்களைக் கொளுத்தியது. பர்வதம்போன்ற மேடைகள் எரிந்து பூமியில் வீழ்ந்தன. அங்குள்ள அகருக்களும் நல்ல வாஸனையுடைய ஹரிசந்தனங்களும் எரிந்துபோயின. அங்குள்ள அழகான முத்துக்களும் மற்றை ரத்னங்களும் வஜ்ரமணிகளும் பவழங்களும் வெளுத்த நார்த்துணிகளும் பூச்சிப்பட்டு வஸ்த்ரங்களும் பலவாறு விசித்ரஞ் செய்யப்பெற்று விளங்கும் நாநாவித வஸ்த்ரங்களும் கம்பளங்களும் பொற்பூஷணங்களும் ஆயுதங்களும் குதிரைக்கிடும் அலங்காரங்களும் சேணம் முதலியவைகளும் யானையின் கண்ட பூஷணங்களும் அதன் இடையில் கட்டுங் கயிறுகளும் நன்கு துடைத்து வைக்கப்பட்ட ரதாலங்கார வஸ்துக்களும் போர்வீரர்களின் கவசங்களும் இரும்பு வெண்கலம் முதலியவற்றால் செய்யப்பட்ட குதிரை யானைகளின் கவசங்களும் கத்திகளும் தநுஸ்ஸுக்களும் நாண்களும் பாணங்களும் ஈட்டிகளும் மாவெட்டிகளும் சக்தி ஆயுதங்களும் கம்பளி முதலியவைகளும் சாமராதிகளும் புலித்தோல்களும் கஸ்தூரி முதலிய நல்ல வாஸனாத்ரவ்யங்களும் கொளுத்தப்பட்டன. அப்பொழுது அந்தப் பட்டணத்தில் முத்துக்களும் ரத்னங்களும் இழைக்கப்பெற்ற உப்பரிகைகளையும் நாநாவித ஆயுத ஸமூஹங்களையும் நாற்புறத்திலும் அக்னி தஹித்தனன். அப்பொழுது க்ருஹஸ்தர்களான ராக்ஷஸரது வாஸஸ்தானங்களும் ஸ்வஸ்திகம் முதலிய பல ஸந்நிவேசங்களோடு இயற்றப்

பட்டவைகளுமான க்ருஹங்களை யெல்லாம் அக்னி தஹித்தனன்; அப்பொழுது அந்த லங்கையில் பொன்னாற் செய்யப்பட்டு விளங்கும் விசித்ர கவசங்களை அணிய முயன்றவர்களும் பூமாலைகளையும் சிறந்த வஸ்த்ரங்களையும் தரிக்கமுயன்றவர்களும் மத்யபானத்தினால் கண்சுழலப்பெற்றவர்களும் மதத்தினால் தழதழப்புற்றவர்களும் காதலிகளின் வஸ்த்ரங்களைப் பிடித்துக் கொண்டு ஸம்போகத்திற்கு முயன்றவர்களும் சத்ருக்களிடத்தில் மிகுதியும் கோபம் மேலெழப்பெற்றவர்களும் கதைகளையும் சூலங்களையும் கட்கங்களையும் கைகளில் தரிக்க முயன்றவர்களும் மாம்ஸாதிகளைப் பக்ஷிப்பதும் பால் முதலியவற்றைப் பருகுவதுமா யிருப்பவர்களும் மிகுதியுஞ் சிறந்த படுக்கைகளில் காதலிகளுடன் படுத்துறங்க விரும்புகின்றவரும், பயந்து குழந்தைகளை எடுத்துக் கொண்டு விரைந்து நாற்புறத்திலும் ஓடுகின்றவருமாகிய லங்கையிலுள்ள அநேகமாயிரம் ராக்ஷஸர்களை அக்னிதேவன் தஹித்து அவரது ரக்தம் முதலியவற்றால் மேன்மேலும் ஜ்வலித்துக் கொண்டிருந்தனன். அவ்வக்னி, சிறந்த பொருளமைந்தவைகளும் பெரு விலை யுடையவைகளும் மேலான படுக்கைகள் அமைக்கப் பெற்றவைகளும் மிகவும் அழகாயிருப்பவைகளும் பொன்னாற் செய்யப்பட்டவைகளும் சந்த்ரனையும் அர்த்தசந்த்ரனையும் நிகர்த்த உருவமுடையவைகளும் மேல் மாளிகைகளால் மிகுதியும் உயர்ந்திருப்பவைகளும் ரத்னங்களால் விசித்ரஞ் செய்யப்பெற்ற சாளரமுடையவைகளும்எல்லா இடங்களிலும் படுக்கைகளும் பலவகை ஆஸனங்களும் அமைந்திருக்கப் பெற்றவைகளும் ரத்னங்களும் பவழங்களும் இழைக்கப் பெற்றிருக்கையால் அற்புதமாய்த் திகழ்கின்றவைகளும் உயர்வினால் ஸூர்யனைத் தொடுவனபோன்றவை

களும் க்ரௌஞ்சம் மயில் வீணை ஆபரணங்கள் ஆகிய இவற்றின் சப்தங்களால் ஒலி யெழப்பெற்றவைகளும் பர்வதம்போன்ற உருவமுடையவைகளுமான உத்தம க்ருஹங்களைத் தஹித்தனன். நெருப்பு முழுவதும் நிரம்பி எரிகின்ற லங்காபுரத்தின் த்வாரங்கள், வர்ஷா காலத்தில் மின்னல்களோடு கூடின மேகஸமூஹங்கள் போல் ப்ரகாசித்தன. அப்பால் அந்த க்ருஹங்கள் சுற்றிலும் நெருப்பு சூழ்ந்தெரியப்பெற்று இந்த்ரனுடைய வஜ்ராயுதங்களால் சேதிக்கப்பட்ட மஹா பர்வத சிகரங்கள்போல் தரையில் வீழ்ந்தன அப்பொழுது விமானங்களில் படுத்து நித்ரித்துக் கொண்டிருக்கிற சிறந்த மாதரார்மணிகள் தேஹத்தில் நெருப்புப்பட்ட வுடனே அவயவங்களிலுள்ள ஆபரணங்களை யெல்லாம் கழற்றிப் பொகட்டு, ஹாஹா என்று உரக்கக் கூச்சலிட்டனர். அப்பொழுது நெருப்புப்பற்றி எரிகின்ற அவ்விமானங்கள், ராத்ரி காலங்களில் ஓஷதிகள் நிறைந்தகானகங்கள் எரியப்பெற்ற ஹிமவத் பர்வத சிகரங்கள்போல் தூரத்தில் புலப்பட்டன; அந்த லங்கையில் அன்றிரவு எரிந்து ஜ்வாலைகள் நிறைந்த மேல்மாளிகைகளின் நுனிகள், புஷ்பித்த பலாச வ்ருக்ஷங்கள் போல் மிகுதியும் புலப்பட்டன. அப்பொழுது அக்னிக்குப் பயந்து யானைக்காரர்களும் குதிரைக்காரர்களும் யானைகளையும் குதிரைகளையும் கட்டுத்தறியினின்று அவிழ்த்து விடுகையில், அவை ஓடப்பெற்ற லங்காபுரியானது, ப்ரளய காலத்தில் அலைகளின் வேகத்தினால் முதலைகள் தடுமாறப் பெற்ற மஹா ஸமுத்ரம்போல் இருந்தது. யானை, குதிரைக்காரர்களால் அவிழ்த்து விடப்பட்டு, பயத்தினால் ஓடுவதுமாகிய குதிரையைக் கண்டு தானும் பயந்து மற்றொரு திசைக்கு ஓடிற்று. லங்கை அங்ஙனம் நெருப்புப்

பற்றி எரிகின்றபோது. சிவந்த ஜ்வாலைகளோடு கூடின அதன் ப்ரதிபிம்பம் ஜலங்களில் தோன்றப்பெற்ற அந்த ஸமுத்ரம் சிவந்த ஜலமுடைய ஸமுத்ரம்போல் ப்ரகாசித்தது; அங்ஙனம் வானரர்கள் லங்காபுரியில் நெருப்பு மூட்டுகையில் முஹூர்த்தகாலத்திற்குள் அம் மஹாநகரம் இவ்வுலகத்திற்குண்டாகும் பயங்கரமான ப்ரளயத்தில் மிகுதியும் தஹிக்கப்படுகிற பூமிபோல் இருந்தது. புகை சூழ்ந்திருக்கப்பெற்று நெருப்புப்பற்றி எரிவதைக் கண்டு, உரக்க இரைச்சலிடுகின்ற பெண்களின் துக்கத்வனியானது பத்து யோஜனை வரையிலும் செவிப்பட்டது. அனந்தரம் வேறு சில ராக்ஷஸர் மிகுதியும் பற்றி எரிகின்ற தேஹங்களோடு பொறுக்க முடியாமல் பட்டணத்தினின்று வெளிப்புறப்பட்டவுடனே யுத்தத்தின் பொருட்டுப் பரபரப்புற்றிருக்கின்ற வானரர்கள் அவர்களை வேகமாக எதிர்த்தனர். வானரர்களின் உத்ஸாஹத்வனிகளும் ராக்ஷஸர்களின் துக்கத்வனிகளும் பத்துத்திசைகளிலும் ஸமுத்ரத்திலும் பூமியிலும் ப்ரதித்வனி உண்டாகும்படி நிரம்பி வளர்ந்தன; அப்பொழுது மஹானுபாவர்களான அந்த ராமலக்ஷ்மணர்களிருவரும் சல்யந்தீரப்பெற்று பாணத்தினால் உண்டான நோயும் தொலைந்து தழுதழுப்பின்றி உத்தமங்களான இரண்டு தனுஸ்ஸுக்களை எடுத்துக் கொண்டனர். அனந்தரம் ராமன் சிறப்புற்ற தனுஸ்ஸின் நாணை இழுத்து ஒலிப்பிக்கையில் அம்மஹாத்வனி துமுலமாகக் கிளம்பி ராக்ஷஸர்களனைவர்க்கும் பயத்தை விளைவித்தது. அப்பொழுது ராமன் மிகுதியுங் கோபித்துப் பெரிய தனுஸ்ஸை இழுத்து ஒலிப்பித்துக்கொண்டு, பகவானாகிய சிவன் ஸம்ஹாரகாலத்தில் கோபித்து 'வேதோக்தமான லக்ஷணங்கள் அமைந்த தனுஸ்ஸை ஒலிக்கச்

செய்வது போல் ப்ரகாசித்தனன். வானரர்களின் கோலாஹல த்வனியும் ராக்ஷஸர்களின் துக்கத் வனியும் ஆகிய இரண்டையும் அடக்கி மேலிட்டு ராமனுடைய நாண் சப்தமே செவிப்பட்டது. வான ரர்களின் கோலாஹல த்வனியும் ராக்ஷஸர்களின் துக் கத்வனியும் ராமனுடைய நாண்கோஷமும் ஆகிய இம் மூன்றும் பத்துத் திசைகளையும் வ்யாபித்து எழுந்தது. ராமன் தனுஸ்ஸினின்று விடுத்த பாணங்களால் கைலாஸசிகரம் போன்ற அந்த லங்காத்வாரங்கள் முறிந்து தரையில் வீழ்ந்தன. அப்பால் மேலான ராக்ஷஸர்கள் விமானங்களிலும் க்ருஹங்களிலும் ராம பாணங்கள் நிரம்ப விழுவதைக் கண்டு, அதிகமாக யுத்த ஸன்னாஹஞ் செய்தனர். அங்ஙனம் அந்த ராக்ஷ ஸோத்தமர்கள் யுத்த ஸன்னாஹஞ் செய்பவராகி ஸிம்ஹ நாதங்களைச் செய்துகொண்டிருக்கையில், அந்த ராத்ரி ப்ரளயகால ராத்ரிபோலிருந்தது. மஹானுபாவனாகிய ஸுக்ரீவன் வானரோத்தமர்களை நோக்கி, 'வானரதில கர்களே! நீங்கள் ராவணாந்தப்புரத்திற்கு அருகாமையி லுள்ள இடைக்கட்டு வாசலில் சேர்ந்து யுத்தஞ் செய் வீர்களாக. உங்களில் அந்தந்த யுத்த பூமியிலிருப்ப வன் எவன் என் கட்டளையை வீண்செய்வானோ, அவனை ராஜாஜ்ஞையை உல்லங்கனஞ் செய்ததற்காக ஒரு குதி குதித்துப் பிடித்துக் கொல்லவேண்டும்' என்று ஆஜ்ஞா பித்தனன். எரிகின்ற குறைக்கொள்ளிகளைக் கையில் ஏந்திக்கொண்டு அவ்வானர முக்யர்கள் த்வாரத்தினரு கில் நின்றிருப்பதைக் கண்டவுடனே ராவணனுக்குக் கோபாவேசம் விளைந்தது. அவன் உடம்பை விரித்துக் கால் கைகளை நீட்டிச் சோம்பல் முறிக்கையில் பத்துத் திக்குகளும் வ்யாகுலமாயின. காலாக்னி ருத்ரனுடைய அவயவங்களிலுள்ள கோபமே உருவமுற்றாற்போல் ராவணன் புலப்பட்டனன். அவன் மிகுதியும் கோபமுற்

றுக் கும்பகர்ணனது குமாரர்களான நிகும்ப கும்பர்க ளிருவரையும் பல ராக்ஷஸர்களுடன்கூட்டி யுத்தத்திற்கு அனுப்பினன். ராவணனது ஆஜ்ஞையின்படி யூபாக்ஷ னும் சோணிதாக்ஷனும் ப்ரஜங்கனும் கம்பனனும் கும்ப நிகும்பர்களோடு புறப்பட்டுப் போயினர். ராவணன் மிகுதியும் பலிஷ்டர்களான அந்த ராக்ஷஸர்களனை வரையும் பார்த்து 'இந்த க்ருஹத்தினின்றுமே ஸிம்ஹ நாதஞ் செய்துகொண்டு போவீர்களாக. சீக்ரமாக ஜயம்பெறுவீர்களாக' என்று ஆஜ்ஞாபித்தனன். அனந் தரம் வீரர்களான அந்த ராக்ஷஸர் ஜ்வலிக்கின்ற ஆயு தங்களைத் தரித்து ராவணன் ஆஜ்ஞாபித்தபடி அடிக் கடி ஸிம்ஹநாதங்களைச் செய்பவராகி லங்கையினின்று புறப்பட்டனர். வானரர்களின் ஆயுதகாந்திகளாலும் அவரது கையிலுள்ள அக்னியின் காந்திகளாலும் ராக்ஷஸர்களின் பூஷண காந்திகளாலும் எரிகின்ற க்ரு ஹங்களின் காந்திகளாலும் அவ்வானர ஸைன்யமும் ராக்ஷஸ ஸைன்யமும் நாற்புறத்திலும் மிகுதியும்விளக்க முற்றிருந்தன. மற்றும், அப்பொழுது மேல் முகமாக மிகுதியும் ஜ்வாலைகள் கிளம்பி எரிகின்ற க்ருஹங்களின் காந்திகள் அலையெழுப்பெற்ற ஸமுத்ரத்தில் பாதாளம் வரையில் நிரம்பவும் வ்யாபிக்கையில், அந்த ஸமுத்ரம் மிகவும் அழகுடன் ப்ரகாசித்தது. அப்பொழுது பயங் கரமான ராக்ஷஸஸைன்யம் பதாகைகளோடும் த்வஜங் களோடுங்கூடி, கட்கங்கள்போன்ற மேலான கண்டக் கோடாலிகளைத் தரித்து பயங்கரமான ரதகஜதுரகங் கள் நிறைந்து பலவகைக் காலாள் ஸைன்யமும் நிரம்பப் பெற்றிருந்தது. மற்றும், அது ஜ்வலிக்கின்ற சூலங்களும் கட்கங்களும் ப்ராஸங்களும் தோமரங்களும் தனுஸ் ஸுக்களும் அமைந்திருந்தது. அது, பயங்கரமான உருவமும் பௌருஷபராக்ரமங்களும் அமைந்த ஸேனு

ஜனங்களுடன்கூடி இப்படியும் அப்படியும் திருப்புகை யில் தளதளவென்று ஜ்வலிக்கின்ற சிறிய ஈட்டிகளும் அமைந்து, தேர் யானை முதலியவற்றிலுள்ள அனேக மாயிரம் சிறு சதங்கைகள் கணகணவென்று ஒலிக்கவும் பெற்று விளக்கமுற்றிருந்தது. மற்றும், அதிலுள்ள ஸேனுஜனங்கள் பொன் பூஷணங்களின் வரிசைகளை புஜங்களில் அணிந்து மதத்தினுல் கண்டக்கோடாலி களைச் சுழற்றிக்கொண்டு கையிலுள்ள தனுஸ்ஸு முறிந்துபோனல் வேண்டுமென்று வேறு தனுஸ்ஸையும் பாணத்துடன் பின்புறத்தில் கட்டிக்கொண்டிருந்தனர். அவர்கள் பூசிக்கொண்டிருக்கும் சந்தனுதிகளின் கந்தங் களாலும் தரித்த பூமாலைகளாலும் வீரபாணமாகக் குடித்த மத்யங்களாலும் மணங்கமழப் பெற்றுக் காற்று மிகுதியும் ஸுகமாய் வீசிக்கொண்டிருந்தது. மற்றும், அந்த ஸேனை மஹாசூரர்கள் நிறைந்து மஹாமேகம் போல் கர்ஜித்துக்கொண்டு மிகுதியும் பயங்கரமாகப் புலப்பட்டது. வானர ஸைன்யமானது, மிகுதியும் பயங் கரமான அந்த ராக்ஷஸப்படை வருவதைக் கண்டு, உரக்க இரைச்சலிட்டுக் கொண்டு புறப்பட்டு எதிர்த்துச் சென்றது. அந்த ராக்ஷஸர்களின் மஹாஸைன்யம் வேகமாகக் கிளம்பிப் பாய்ந்துகொண்டு விட்டில்கள் அக்னியை எதிர்ப்பதுபோல், வானரஸேனையின் மேல் எதிர்த்துச் சென்றது. உத்தமர்களான அந்த ராக்ஷ ஸப் படையிலுள்ளவர் புஜங்களில் இடைவிடாமல் தீட் டிக்கொண்டிருக்கையால் அவரது இரும்புத்தடிகளும் வஜ்ராயுதங்களும் சாணைபிடித்தாற்போல், தளதள வென்று ஜ்வலிக்கையில், அவர்கள் மற்றும் அதிகமாக ப்ரகாசித்தனர்; அப்பொழுது வானரர்கள் யுத்தத் திற்கு விருப்பமுற்று, வெறிபிடித்தாற்போல் கிளம்பி வ்ருக்ஷங்களாலும் பர்வதங்களாலும் முஷ்டிகளாலும் ராக்ஷஸர்களை அடித்துக் கொண்டிருந்தனர். பயங்

கராகாரர்களான ராக்ஷஸர்களும், அவ்வானரர்கள் தம் மேல் எதிர்க்கையில், அவரது சிரஸ்ஸுக்களைத் திடீ லென்று கூரான கத்திகளால் அறுத்துக் கொண்டிருந் தனர். அந்த யுத்தத்தில் சில ராக்ஷஸர் வானரர்களால் காதுகள் பற்களால் பிடுங்கப் பெற்றும், சிலர் முஷ்டி யடிகளால் தலை உடைக்கப்பெற்றும், சிலர் சிலர்ப்ரஹா ரங்களால் (கல்லடிகளால்) முறிக்கப்பெற்றதும் துடித் துக் கொண்டிருந்தனர். அங்ஙனம் அவ்வானரர்களில் ப்ரஸித்தர்களான மற்றுஞ் சிலர் ராக்ஷஸர்களில் மஹா பலமுடைய பல வீரர்களையும் மடக்கி நாற்புறத்திலும் அடித்துக்கொண்டிருந்தனர். அங்ஙனமே பயங்கரகரா காரர்களான வேறு சில ராக்ஷஸர், அவ்வானரர்களில் ப்ரமுகரான வீரர்களைக் கூரான கத்திகளால் வதித்த னர். அந்த யுத்தத்தில் ஒருவன் தன்னை அடித்தவனை அடித்தனன். மற்றொருவன் தன்னை விழத்தள்ளின வனை விழத்தள்ளினன். மற்றொருவன் தன்னைப் பழித் தவனைப் பழித்தனன். வேறொருவன் தன்னைப்பற்களால் கடித்த மற்றவனைக் கடித்தனன். ஒருவன் 'எனக்கு யுத் தங்கொடுப்பாய்' என்றும், மற்றொருவன் 'இதோ! கொ டுக்கிறேன்' என்றும், வேறொருவன் 'இதோ! கொடுக்கி றேன்' என்றும், இன்னொருவன் 'ஏன் கஷ்டப்படுகிறாய்? நில்' என்றும், இங்ஙனம் அந்தயுத்தத்தில் ஒருவர்க்கொ ருவர் வீரப்பேச்சுக்களை பேசிக் கொண்டிருந்தனர். அப்பொழுது வானரர்களும் ராக்ஷஸர்களும், அரைத் துணி அவிழ்ந்து தொங்கவும் கவசங்கள் கட்டுத்தளர வும் ஆயுதங்கள் கைசோரவும் பெற்றுப் பெருப்பெரிய ப்ராஸங்களையும் யஷ்டிகளையும் சூலங்களையும் கட்கங்க ளையும் எடுத்துக்கொண்டு ஸங்குலமாக யுத்தஞ்செய்கை யில், அந்தப் போர் மிகுதியும் பயங்கரமாயிருந்தது.

அந்த யுத்தத்தில் ராக்ஷஸர் வானரர்களை ஏழும் பத்துமாகப் பிடித்து ஹிம்ஸித்துக் கொண்டிருந்தனர். அங்ஙனமே வானரர்களும் ராக்ஷஸர்களை ஏழும் பத்துமாகப் பிடித்து விழத்தள்ளினர். வானரர்கள் தலைமயிர்கள் உதிர்ந்து வஸ்த்ரங்கள் தொலைந்து கவசங்கள் தூள்தூளாகி த்வஜங்கள் முறிந்து கலக்கமுற்றிருக்கிற ராக்ஷஸ ஸைன்யத்தைப் பற்றிச் சுற்றிலும் தகைந்து நின்றனர். எழுபத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

அங்கதன் கம்பனனையும் ப்ரஜங்கனையும்,
த்விவிதன் சோணிதாக்ஷனையும்,
மைந்தன் யூபாக்ஷனையும்,
ஸுக்ரீவன் கும்பனையும்
கொல்லுதல்.

அங்ஙனம் இடைவீடின்றி, அனேக வீரர்களை உருமாய்க்கின்ற யுத்தம் பயங்கரமாக நடந்து கொண்டிருக்கையில், அங்கதன் யுத்தோத்ஸாஹத்தினால் வீரனாகிய கம்பனன்மேல் தலைப்பட்டனன். கம்பனன் கோபத்தினால் அங்கதனைப் பொறுமையுடன் விரட்டிக்கொண்டே அழைத்து விரைவாக முன்னே வந்து கதையால் அவனை அடித்தனன். அங்கதன் அங்ஙனம் நன்கு அடிக்கப்பட்டு வருந்தித் துடித்துப் பூமியில் வீழ்ந்தனன். அங்கதன் மஹா தேஜஸ்வியாகையால் தெளிவு பெற்று ஒரு பர்வத சிகரத்தைப் பிடுங்கிக் கம்பனனுடைய மார்பில் அடிக்கையில், அவன் மரணம் அடைந்து பூமியில் வீழ்ந்தனன். அப்பால் கம்பனன் யுத்தத்தில் அடிபட்டு மாண்டதைக் கண்டு, சோணிதாக்ஷன் பயமின்றி வேகமாக அங்கதன் மேல் ரதத்துடன் எதிர்த்துப் போயினன். அப்பொழுது சோணிதாக்ஷன் விரைந்து காலாக்னியோடொத்த உருவமுடையவைகளும் சரீரத்

தைப் பிளப்பவைகளும் பயங்கரங்களும் கூருள்ளவை களுமான பாணங்களை அங்கதன்மேல் ப்ரயோகித்த னன். வாலி புத்ரனும் ப்ரதாபசாலியும் பலிஷ்டனு மாகிய அங்கதன் சோணிதாக்ஷன் ப்ரயோகித்த அம் பட்டன் கத்திபோன்ற முகமுடைய பாணங்களாலும் அர்த்த சந்த்ராகாரமான பாணங்களாலும் வத்ஸதந் தம் போன்ற (குழந்தையின் பல் போன்ற) நுனியுடைய பாணங்களாலும் கங்க பக்ஷியின் இறகுபோன்ற முக முடைய பாணங்களாலும் (பாதி இரும்பினால் செய்யப் பட்ட பாணங்களாலும் அலரியிலையின் நுனிபோன்ற முகமுடைய பாணங்களாலும் மற்றுங் கூரான பல பாணங்களாலும் தேஹம் முழுவதும் துளைக்கப்பெற்று, அந்தச் சோணிதாக்ஷனுடைய மேலான தனுஸ்ஸையும் ரதத்தையும் பாணங்களையும் விரைவில் முறித்துப் பொடி செய்தனன். அனந்தரம் சோணிதாக்ஷன் கோ பாவேச முற்றுக் கத்தியையும் கேடயத்தையும் எடுத் துக்கொண்டு முன் பின் பாராமல் மஹா வேகத்துடன் விரைந்து ரதத்தினின்று ஆகாயத்திற்குக் கிளம்பினன். பலிஷ்டனுகிய அங்கதன் அவனைக் காட்டிலும் மிகுந்த வேகத்துடன் ஆகாயத்திற்குக் கிளம்பி அவனைத் தடுத் துக்கொண்டு கையினுல் அவனது பெருங்கத்தியைப் பிடுங்கிக்கொண்டு ஸிம்ஹநாதஞ் செய்தனன். அனந்த ரம் கபிஸ்ரேஷ்டனுகிய அங்கதன் அந்தச் சோணி தாக்ஷனுடைய தோளில் கத்தியால் யஜ்ஞோபவீதம் போல் ஒருவெட்டுவெட்டிச் சேதித்தனன். ஆனுல்அவன் மரணம் அடையவில்லை. வாலி குமாரனுகிய அங்கதன் அம்மஹா கட்கத்தை ஏந்தி அடிக்கடி ஸிம்ஹநாதஞ் செய்துகொண்டு யுத்தத்தின் முனையின் ப்ரஜங்கன் முதலிய வேறு சத்ருக்களின் மேல் எதிர்த்துப் போயி னன். பொன் தோள்வளைகள் விளங்கப்பெற்ற அந்தசோ

ணிதாக்ஷன் இரும்பு கதையை எடுத்துக் கிருகிருவென்று சுழற்றிக்கொண்டு அந்த அங்கதனைக்குறித்தே எதிர்த்துச் சென்றனன். அனந்தரம் வீரனும் பலிஷ்டனுமாகிய யூபாக்ஷன் கோபித்து ப்ரஜங்கனுடன் கூடி மஹா பலனுன அங்கதன் மேல் தேரோடு எதிர்த்துச் சென்றனன். வானரஸ்ரேஷ்டனுகிய அங்கதன் சோணிதாக்ஷ ப்ரஜங்கர்களின் இடையில், விசாகா நக்ஷத்ரங்களிரண்டின் நடுவில் இருக்கும் பூர்ண சந்த்ரன்போல் ப்ரகாசித்தனன். மைந்தனும் த்விவிதனும் மாமன்மார்களாகையால் அங்கதனைப் பாதுகாத்துக்கொண்டு தந்தமக்கு எதிரிகளான ராக்ஷஸர்களைக் கண்டு பிடிப்பதற்காக அங்கதன் ஸமீபத்தில் நின்றிருந்தனர். மஹா சரீரர்களும் மஹா பலிஷ்டர்களுமான ராக்ஷஸர்கள் தகுந்த ஏற்பாட்டுடன் முயற்சிகொண்டு கத்தி கேடயம் கதைகளைத் தரித்து ரோஷத்துடன் வானரர்மேல் எதிர்த்தனர். அங்கதன் மைந்தன் த்விவிதன் ஆகிய மூன்று வானரஸ்ரேஷ்டர்களும், ப்ரஜங்கன் யூபாக்ஷன் சோணிதாக்ஷன் ஆகிய மூன்று ராக்ஷஸ வீரர்களோடுபோர் புரியத் தலைப்படுகையில், அப்பொழுது மயிர்க்கூச்சலை விளைக்கும்படியான மஹாயுத்தம் நடந்தது. அவ்வானரர்கள் யுத்தத்தில் வ்ருக்ஷங்களைப் பிடுங்கிக்கொண்டு வீசியெறிகையில், மஹா மலமுடைய ப்ரஜங்கன் கத்தியினால் அவற்றையெல்லாம் சேதித்துப் பொகட்டனன். அவ்வானரர்கள் யுத்தத்தில் ராக்ஷஸருடைய ரதங்கள் மேலும் குதிரைகள் மேலும் வ்ருக்ஷங்களையும் பர்வதங்களையும் வீசி யெறிகையில், யூபாக்ஷன் பாண ஸமூஹங்களால் அவற்றைக் கண்டித்தனன். த்விவிதனும் மைந்தனும் தன்மேல் பிடுங்கி யெறிகிற வ்ருக்ஷங்களை வீர்ய சாலியாகிய சோணிதாக்ஷன் கதையினால் இடையிலேயே முறித்துவிட்டனன். ப்ரஜங்கன் பகைவரது மர்மங்

களைப் பிளக்கும்படியான பெரிய கத்தியை எடுத்துக் கொண்டு அங்கதனைக் கொல்லும் பொருட்டு வேகமாக அவன்மேல் எதிர்த்தனன். மஹா பலமுடைய வான ரோத்தமனுன அங்கதன், தன்மேல் ப்ரஜங்கன் எதிர்த்து வருவதைக் கண்டு, அவன் மிதமின்றி வளர்ந்த பலமுடையவனுகையால் அப்பொழுது ஆச்சாமரத்தினுல் அவனை அடித்தனன். மற்றும், அவ்வங்கதன் கத்தியேந்தின ப்ரஜங்கனது புஜத்தை முட்டியால் அடித்தனன். அவ்வடியினுல் அவன் கையினின்று கத்தி நழுவிக் கீழ் விழுந்தது. மஹா பலமுடைய ப்ரஜங்கன் கருநெய்தலின் காந்தியுடைய கத்தி பூமியில் நழுவினதைக் கண்டு விரல்களை மடக்கி வஜ்ரம் போன்ற பிடியைப் பிடித்தனன். மஹா தேஜஸ்வியான அந்த ப்ரஜங்கன், மஹா வீர்யமுடைய வானரஸிம்ஹனுன அங்கதனது நெற்றியில் அடிக்கையில் அவன் சிறிதுநேரம் மூர்ச்சித்துத் துடித்தனன். மஹா தேஜஸ்வியும் ப்ரதாபசாலியுமாகிய அவ்வங்கதன் சிறிது நேரங்கழித்து ப்ரஜ்ஞை தெளிந்து கத்தியினுல் ப்ரஜங்கனுடைய சிரஸ்ஸை அவனது சரீரத்தினின்று தரையில் விழும்படி அறுத்துத் தள்ளினன். யூபாக்ஷன் யுத்தத்தில் தனது சிற்றப்பனுகிய ப்ரஜங்கன் மாண்டதைக் கண்டு, கண்களில் நிரம்பவும் நீர் தளும்பப்பெற்று பாணங்கள் எல்லாம் தீர்ந்து போகையால் சீக்ரமாக ரதத்தினின்று இறங்கிக் கத்தியைக் கையில் எடுத்துக்கொண்டனன் அந்த யூபாக்ஷன் வருவதைக் கண்டு, பலிஷ்டனுகிய த்விவிதன் கோபாவேசமுற்று வேகத்துடன் அவனது மார்பில் அறைந்து பலாத்காரமாகப் பிடித்துக்கொண்டனன். அனந்தரம் மஹா பலனுகிய சோணிதாக்ஷன் தனது உடன் தோன்றல் பிடியுண்டதைக்கண்டு கோபங்கொண்டு கதையின் நுனியால் த்விவிதனது மார்பில் அடித்தனன். மஹா

பலிஷ்டனுன த்விவிதன் அந்த கதையின் அடிக்கு மிகு
தியும் வருந்தி, மீளவும் சோணிதாக்ஷன் அடிக்க கதை
யை எடுக்கையில் அந்த கதையைப் பிடுங்கிக்கொண்ட
னன். இதனிடையில், வீரனும் வீர்யசாலியும் வானரயூத
பதியுமான மைந்தன், யூபாக்ஷனது வக்ஷஸ்தலத்தில்
உள்ளங்கையால் அடித்தனன். பலிஷ்டர்களான அந்
தச் சோணிதாக்ஷ யூபாக்ஷர்கள் அந்த யுத்தத்தில்
மைந்த த்விவிதர்கள் மேல் எதிர்த்து ஒருவரை.யொரு
வர் மிகுதியும் உரப்பாகப் பிடித்திழுப்பதும் அடிப்பது
மாயிருந்தனர். வீர்யம் மிகுந்த த்விவிதன் நகங்களால்
சோணிதாக்ஷனுடைய முகத்தை முழுவதும் பீறி வேக
மாகப் பிடித்துக் கிரு கிருவென்று சுழற்றித் தரையில்
அறைந்து அவன் தேஹத்தை முழுவதும் பிசைந்து
பிண்டமாக்கினன். வானரயூதபதியான மைந்தன் மிகுதி
யும் கோபித்து யூபாக்ஷனை இரண்டு கைகளாலும் பிடி
த்து ஹிம்ஸிக்கையில் அவன் மாண்டு பூமியில் வீழ்ந்த
னன். அங்ஙனம் பல மஹாவீரர்களும் மாண்டு போகை
யில், அந்த ராக்ஷஸப்படை பயந்து கும்பகர்ண குமா
ரன் இருக்குமிடத்திற்குப் பறந்தோடிச் சென்றது. கும்
பனும், அங்ஙனம் விரைவுடன் ஓடி வருகின்ற ஸைன்
யத்திற்கு தைர்யஞ் சொல்லி ஸமாதானப் படுத்தினன்.
அப்பால் ராக்ஷஸ ஸ்ரேஷ்டனும் மஹாதேஜஸ்வியுமா
கிய கும்பன் எதிரில்லாத மஹாவீர்யசாலிகளான வான
ரர்களால் ராக்ஷஸ ஸைன்யத்திலுள்ள மேலான வீரர்
கள் அடியுண்டு விழுந்ததைக் கண்டு, யுத்தத்தில் எத்
தகைய பிறர்க்கும் சிறிதுஞ் செய்ய முடியாத பெரிய
கார்யத்தைச் செய்ய முயன்றனன். அம்மேலான வில்
லாளி மிகுதியும் மனவூக்கமுற்று வில்லைப் பிடித்து க்ரு
ஷ்ண ஸர்ப்பங்கள் போன்று உடலைப் பிளக்கும்படி

யான பாணங்களை ப்ரயோகித்தனன். அந்தக் கும்பனு டைய சிறந்த வில்லானது நாணோடும் பாணத்தோடும் கூடி மின்னலும் [1]ஐராவதமென்னும் இந்த்ரதனுஸ் ஸும் போல் பேரொளியுடன் திகழ்வதாகி இரண்டா வது இந்த்ர தனுஸ்ஸுபோல் ப்ரகாசித்தது. அப்பொ ழுது கும்பன் பொற்பிடி இடப்பெற்று வஸ்த்ரம்போன்ற கங்கபக்ஷியின் இறகுகளோடு கூடின அந்த பாணத் தைக் 'காதுவரையிலும் இழுத்து த்விவிதனை அடித்த னன்; பர்வத சிகரம்போன்ற உருவமுடைய அவ்வான ரோத்தமனான த்விவிதன் அந்த பாணத்தினால் அடிக் கப்பட்டுக் கால்கள் தளர்ந்து துடிதுடித்துத் தழதழப் புற்றுப் பூமியில் விழுந்தனன். மைந்தன் தன் ப்ராதா அம்மஹாயுத்தத்தில் பங்கம் அடைந்ததைக் கண்டு, பெரிய கல்லை எடுத்துக்கொண்டு விரைவுடன் கும்பன் மேல் எதிர்த்துப்போயினன். மஹாபலமுடைய மைந் தன் அந்த சிலையைக் கும்பன்மேல் வீசியெறிந்தனன். அக்கும்பன் மிகுதியும் கூரான ஐந்து பாணங்களால் அச்சிலையைப் பிளந்தனன். மஹா தேஜஸ்வியாகிய கும் பன், நல்ல முகமுடையதும் கொடிய ஸர்ப்பம் போன்ற

---

1 'இந்த்ராயுதம் சக்ரதனு: தீர்க்கமருஜு ரோஹிதம்| ஐராவதம்ச' என்று வைஜயந்தி நிகண்டுவிற் சொல்லியபடியே நீண்டு நேராயிருக் கும் இந்த்ரதனுஸ்ஸை ஐராவதமென்கிறது. இங்கு நாணுக்கு மின்ன லும் பாணத்திற்கு ஐராவததனுஸ்ஸும் உவமையாகச் சொல்லப்பட் டன. மின்னல் போன்ற நாணும் ஐராவதம் போன்ற பாணமும் அமைந்த கும்பனது தனுஸ்ஸு மின்னல் ஐராவதம் இவற்றின் காந்தி யுடையதாகி, மின்னலும் ஐராவதமும் கூடின இரண்டாவது இந்த்ர தனுஸ்ஸு போல் ப்ரகாசித்ததென்று கருத்து. மின்னலும் ஐராவத மெனப்படும் இந்த்ரதனுஸ்ஸும் ஸாதாரணமான இந்த்ரதனுஸ்ஸும் கூடுவது உத்பாத காலத்திலென்று உணர்க. அல்லது கூடாததைக் கூட்டி உவமையாகச் சொல்லுகையால் அபூதோபமையுமாகலாம்.

துமான ஓர் பாணத்தை வில்லில் தொடுத்து த்விவித னுக்குத் தமையனாகிய மைந்தனை மார்பில் அடித்த னன். அந்த பாணம் வானர யூதபதியான மைந்தனு டைய மர்மஸ்தானத்தில் படுகையில், அவன் அதனால் மூர்ச்சித்துத் தரையில் வீழ்ந்தனன். அங்கதன் மஹா பலிஷ்டர்களான தன் மாமன்மார்களிருவரும் விழுந்த தைக் கண்டு, வில்லை யேந்திக்கொண்டிருக்கிற அக்கும் பன் மேல் வேகமாக எதிர்த்தனன். அங்கதன் தன் மேல் எதிர்த்து வருவதைக் கண்ட கும்பன் யானை யைத் தோமரங்களால் அடிப்பதுபோல், அவ்வங்க தனை ஐந்து இரும்பு பாணங்களாலும் மற்றும் கூரான மூன்று பாணங்களாலும் அடித்தனன். வீர்யம் மிகு ந்த அக்கும்பன் மொக்கையில்லாத நுனியுடையவைக ளும் சிறந்தவைகளும் இரும்பினாற் செய்யப் பட்டவைக ளும் பொன்னலங்காரஞ் செய்யப்பெற்றவைகளுமான பல வகை பாணங்களால் அங்கதனை அடித்தனன். அங்ங னம் கும்பன் தனது அவயவங்கள் முழுவதும் பாணங் களை நாட்டி வருத்தினும் வாலி குமாரனாகிய அங்கதன் சிறிதும் அசையாமல் அவன் நெற்றியில் கற்களையும் மரங்களையும் ஓயாமற் பெய்தனன். ஸ்ரீமானாகிய அந்த கும்பகர்ண குமாரன் கும்பன், அங்கதன் பொகட்ட அந்த வ்ருக்ஷங்களை யெல்லாம் பேதித்துக் கற்களை யெல்லாம் பொடி செய்தனன். மற்றும், அவ்வானர யூத பதியான அங்கதன் அடுத்து வருவதைக் கண்டு, யானை யை இரண்டு குறைக்கொள்ளிகளால் ஹிம்ஸிப்பது போல், அவனது புருவங்களில் இரண்டு பாணங்களை நாட்டி ஹிம்ஸித்தனன். அவ்வங்கனுடைய வாயினின்று ரக்தம் பெருகியது. அவனது கண்களும் மூடிக்கொண் டன. அங்கதன் ரக்தம் பெருகப்பெற்ற கண்களை ஒரு

கையால் மூடிக்கொண்டு இரண்டாவது கையினுல் அருகே இருப்பதொரு மரத்தைப் பிடித்துக்கொண்டனன். மற்றும், அவன், அது ஒரு கையால் பிடுங்கக் கூடாதிருக்கையால் மார்பினுல் அழுக்கி அடியை அசக்கிக் கையால் பிடித்துக்கொண்டு சிறிது வணங்கி, யானை வ்ருக்ஷத்தைப் பிடுங்குவது போல், அதைப் பேர்த்தனன். இந்த்ரத்வஜம் போன்றதும் மந்தர பர்வதம்போல்திகழ்வதுமாகிய அந்த வ்ருக்ஷத்தை அங்கதன் வேகமாகக் கும்பன்மேல் விடுகையில், கும்பன் ஸமஸ்த ராக்ஷஸர்களும் பார்த்துக்கொண்டிருக்க, தேஹங்களைப் பிளக்கவல்ல கூரான ஏழு பாணங்களை விடுத்து அவ்வங்கதனை அடித்தனன். அங்கதன் அந்த பாணங்களால் பீடிக்கப்பட்டு உரக்கக் கூச்சலிட்டு மூர்ச்சித்தனன். சத்ருக்களால் எதிர்க்க முடியாத வானர ஶ்ரேஷ்டனுகிய அங்கதன், ஸமுத்ரத்தில் விழுந்தாற்போல் யுத்தத்தில் வருந்துவதைக் கண்டு, மற்றவர் அந்த ஸங்கதியை ராமனுக்குத் தெரிவித்தனர். ராமனும் வாலி குமாரனுகிய அங்கதன் யுத்த பூமியில் வருந்தினுனென்று கேட்டவுடனே, ஜாம்பவான் முதலிய வானரஶ்ரேஷ்டர்களை அங்கதனுக்கு ஸஹாயமாகப் போகும்படி ஆஜ்ஞாபித்தனன். அந்த வானரஶ்ரேஷ்டர்கள் ஸ்ரீராமபிரானது ஆஜ்ஞையைக்கேட்டு மிகுதியுங் கோபமுற்றவராகிவில்லையேந்திக்கொண்டு நிற்கிற அந்தக் கும்பன் மேல் எதிர்த்து வேகமாகப்போயினர். அனந்தரம் அவ்வானர திலகர்கள் அங்கதனைப் பாதுகாக்க விரும்பி வ்ருக்ஷங்களையும் கற்களையும் கொண்டு கோபத்தினுல் கண்கள் சிவக்கப்பெற்றுக் கும்பன் மேல் எதிர்த்தோடினர். ஜாம்பவான் ஸுஷேணன் வேகதர்சி யென்னும் வானரன் ஆகிய இம்மூவரும் கோபித்துக் கும்பகர்ண குமாரனு

கிய கும்பன் மேல் எதிர்த்தனர். மஹா பலமுடைய அம்மேலான வானரர்கள் தன்மேல் எதிர்த்து வருவதைக் கண்டு, கும்பன் ஜலப்ரவாஹத்தை வ்ருக்ஷஸமூஹங்களால் தடுப்பதுபோல், பாண ஸமூஹங்களால் அவர்களைத் தடுத்தனன். அவ்வான ரோத்தமர்கள் மஹா பலிஷ்டர்களாயினும் அந்தக்கும்பனுடைய பாண மார்க்கத்தில் விழுந்து, ஸமுத்ரம் கரையைக் கடக்கமுடியாதிருப்பதுபோல், அதைத் தாண்டி முன்னே எதிர் கொண்டு போக முடியாதிருந்தனர். வானரர் தலைவனுகிய ஸுக்ரீவன் அவ்வானரர்களெல்லோரும் பாண ஸமூஹங்களால் வருந்துவதைக் கண்டு ப்ராதாவின் குமாரனுகிய அங்கதனைப் பின்படுத்தி, மஹா வேகமுடைய ஸிம்ஹம் தாழ்வரைகளில் திரிகின்ற மஹாபலமுடைய யானையின் மேல் எதிர்ப்பது போல், வேகமாக யுத்தத்தில் கும்பன் மேல் எதிர்த்தனன். மஹா பலமுடைய ஸுக்ரீவன், பெரிய பர்வதங்களையும் மராமரங்களையும் தவவ்ருக்ஷங்களையும் மற்றும் நானுவிதமான பற்பல வ்ருக்ஷங்களையும் பிடுங்கிக் கும்பன் மேல் பொகட்டனன். ஆகாயம் முழுவதும் மறைத்துக்கொண்டு அணுக முடியாத அந்த வ்ருக்ஷஸமூஹத்தைக் கும்பகர்ண குமாரனுகிய கும்பன் கூரான பாணங்களால் சேதித்தனன். கும்பன் பெருங் கோபாவேசமுற்றுத் தீவ்ரனுகிக் குறிதவறுமல் தொடுத்து விடுகிற பாணங்கள் சுற்றிலும் நிரம்பச் சூழ்கையில், அந்த வ்ருக்ஷங்கள் இரும்பாணிகள் நிறைந்த சதக்னிகளென்னும் பயங்கரமான ஆயுதங்கள் போல் ப்ரகாசித்தன. மிகுந்த வீர்ய முடையவனும் மஹாபலனும் செல்வப் பெருக்கனும் வானரர் தலைவனுமான அந்த ஸுக்ரீவன் தான் மழை பெய்தாற்போல் பெய்கிற வ்ருக்ஷ ஸமூஹ மெல்லாம் கும்பனுல் சேதிக்கப்

பட்டிருப்பினும் சிறிதும் வருத்த முறவில்லை. அவன், கும்பன் பாணங்களால் தன்னைப் பிளந்துகொண்டிருப் பினும் அவற்றையெல்லாம் பொறுத்துக்கொண்டு அவ னைக்கிட்டி இந்த்ரதனுஸ்ஸுபோல் ப்ரகாசிக்கின்றதனு ஸ்ஸைப் பிடுங்கி முறித்தனன். ஸுக்ரீவன் அங்ஙனம் சீக்ரமாக அவன் மேல் குதித்துப் பிறர்க்குச்செய்ய முடி யாத கார்யத்தைச் செய்து கோபித்தவனுகிக் கொம்பு முறிந்த யானைபோன்ற கும்பனைப் பார்த்து 'நிகும்பனுக் குத் தமையனே! கும்பா! பாணங்களை வேகமாகத் தொடுத்து விடும்படியான உன் வீர்யம் அற்புதமாயிருக் கின்றது. மற்றும், ராக்ஷஸர்களிடத்தில் உனக்குள்ள வணக்கமும் ப்ரபாவமும் ராவணனுக்குள்ளவைபோலி ருக்கின்றன. நீ ப்ரஹ்லாதனுக்கும் பலிசக்ரவர்த்திக் கும் தேவேந்த்ரனுக்கும் குபேரனுக்கும் வருணனுக்கும் ஒப்பானவன். நீயொருவன் பல வ்யாபாரங்களில் தந்தை யைப்போல் பிறந்தவன். பகைவரை அடக்குந்திறனும் மஹா பாஹுவுமாகிய் நீயொருவன் மாத்ரம் வில்லைப் பிடித்து நிற்கையில், ஜிதேந்த்ரியனை (இந்த்ரியங்களை வென்ற யோகியை) மனவருத்தங்கள் பாதிக்க மாட்டா திருப்பதுபோல், உன்னை தேவதைகளும் அணுகவல்ல ரல்லர், நீ மிகுந்த புத்தியுடையவன். நான் பார்த்துக் கொண்டிருக்கும் பொழுது, யுத்த கார்யங்கள் நிறை வேறும் பொருட்டு உன்பராக்ரமத்தைக் காட்டுவாயாக. உனது பெரிய தகப்பனுகிய ராவணன் வரம் பெற்றிருக் கிற மஹிமையால் தேவதைகளையும் தானவர்களையும் லக்ஷ்யஞ்செய்யாமல் பொறுத்திருக்கின்றனன். உன் தந் தை கும்பகர்ணன் மாத்ரம் சரீர பலத்தினுலேயே தே வாஸுரர்களைத் தடுக்கவல்லவன். நீ இவ்விரண்டு பலங் களாலும் அவர்களைப் பொறுக்கவல்லவன். நீ வில்வித்

தையில் இந்த்ரஜித்தையும், ப்ரதாபத்தில் ராவணனை யும் நிகர்த்திருப்பவன். நீ இப்பொழுது உலகத்தில் பல வீர்யங்களில் ராக்ஷஸர்கள் எல்லோரிலும்மேன்மையுற்ற வன். இந்த்ரனுக்கும் சம்பானுக்கும் நேர்ந்த யுத்தம் போல். உனக்கும் எனக்கும் அற்புதமாய் நடக்கப்போ கிற மஹா யுத்தத்தை இப்பொழுது ஸமஸ்த ப்ராணி களும் காணுமாக. நீ நிகரில்லாத வீரகார்யத்தைச் செய்தனை, அஸ்த்ரஸாமர்த்யத்தையும் காட்டினை. பயங் கரமான பராக்ரமமுடைய வானர வீரர்களையும் விழத் தள்ளினை. வீரனே! பலரோடு போராடி இளைப்புற் றிருக்கின்றவனை வதித்தானென்று பழி விளையுமென்று பயந்து உன்னை நான் இன்னம் வதிக்கவில்லை. மிகுதி யுங் கார்யஞ்செய்து இளைப்புற்றிருக்கின்றனை. சிறிது இளைப்பை ஆற்றிக்கொண்டு. அப்பால் என்பலத்தைக் காண்பாய்' என்றனன். இங்ஙனம் ஸுக்ரீவன் அவம திப்பை உட்கொண்டிருக்கிற வார்த்தையால் கௌரவிக் கையில், அந்தக் கும்பன், நெய்விட்டு ஹோமஞ் செய்யப் பெற்ற அக்னிபோல் ஒளிவளரப் பெற்றனன். அப்பால் கும்பன் ஸுக்ரீவனை இரண்டு கைகளாலும் பிடித்துக் கொண்டனன். அவ்விருவரும் மத்தகஜங்கள் போல் மதசேஷ்டைகளைச் செய்வதும் அடிக்கடி பெருமூச்செறி வதும் ஒருவர்க்கொருவர் தேஹங்களை அழுந்தக்கட் டிப் பிடிப்பதும் ஒருவனை யொருவன் பிடித்திழுப்பது மாகி யுத்தஞ் செய்த ஶ்ரமத்தினால் வாயினின்று புகை யோடுகூடின அக்னிஜ்வாலையைக் கக்கிக்கொண்டிருந் தனர். அவரது பாதங்களின் உறைத்தலால் பூமி அழுங்கிற்று. ஸமுத்ரமும் அலைகள் மேலெழப் பெற்று மிகுதியும் கலக்கமுற்றது; அனந்தரம் ஸுக்ரீவன் கும் பனை மேலே தூக்கி ஸமுத்ரத்தின் அடித்தரையைப் பார்க்கும்படி வேகமாக ஸமுத்ரத்தில் வீசியெறிந்த

னன். அப்பால் ஸமுத்ரத்தில் கும்பன் விழுகையால் அதன் ஜலப்ரவாஹம் விந்த்யமந்தர பர்வதங்கள்போல் மேற்கிளம்பி நாற்புறத்திலும் பெருகத் தொடங்கிற்று. அனந்தரம் கும்பன் எழுந்து ஸுக்ரீவனிடம் வந்துகோபித்து வஜ்ரம் போன்ற வேகமுடைய முஷ்டியினல் அவன் மார்பில் புடைத்தனன். அந்த அடியினல் ஸுக்ரீவனுடைய மார்பில் தோல்மாத்ரம் உரிந்து மிகுதியும் ரக்தம் பெருகிற்று. அவ்வளவேயன்றி, அந்த அடி மிகுந்த வேகமுடையதாயினும் ஸுக்ரீவனுடைய மார்பெலும்பில் பட்டுத் தடைபட்டது. அந்த ஸுக்ரீவனுடைய மார்பில் கும்பனுடைய முஷ்டி உறைத்த வேகத்தினுற் கிளம்பின அக்னி, இந்த்ரன் பர்வதங்களின்சிறைகளை அறுக்கும்பொழுது மேருபர்வதத்தில் வஜ்ராயுதத்தின் உறைத்தலாலுண்டாகும் ஜ்வாலைபோல் அடிக்கடி ஜ்வலித்தது. அப்பொழுது மஹா பலமுடைய அவ்வானரஸிம்ஹன் ஸுக்ரீவன் கும்பனுல் அடிக்கப்பட்டுக் கோபாவேசமுற்று விரல்களை மடக்கி வஜ்ரம் போன்ற பிடியைப் பிடித்தனன். மிகுந்த அர்யமுடைய அந்த ஸுக்ரீவன், ஆயிரங் கிரணங்கள் சூழ்ந்த ஸூர்ய மண்டலம்போல் திகழ்கின்ற அந்த முஷ்டியினுல் கும்பனுடைய மார்பில் அடித்தனன். அப்பொழுது கும்பன் அந்த அடியினுல் மிகுதியும் பீடிக்கப்பட்டு அவயங்களெல்லாம் விலவிலக்கப்பெற்று, ஜ்வாலையில்லாத அக்னி போல் ப்ராணன்களை இழந்து பூமியில் வீழ்ந்தனன். அந்த ராக்ஷஸனுகிய கும்பன் அந்த முஷ்டியின் அடியினுல் அடிக்கப்பட்டுக் கிரணங்கள் விளங்கப்பெற்ற அங்காரகன் திடீலென்று ஆகாயத்தினின்று பூமியில் விழுவது போல், விழுந்தனன். முஷ்டியின் அடி மார்பில் பட்டு முறிந்து பூமியில் வீழ்ந்த கும்பனுடைய உருவம், ருத்ரனுல் தள்ளப் பட்ட

ஸூர்யனுடைய உருவம்போல் மிகுதியும் ஜ்வலித்தது. அங்ஙனம் பயங்கர பராக்ரமனும் வானரஶ்ரேஷ்டனுமாகிய ஸுக்ரீவனால் யுத்தத்தில் கும்பன் அடியுண்டு மாண்டவுடனே, பூமி பர்வதங்களோடும் அரண்யங்களோடும் கிடுகிடுவென்று நடுக்கமுற்றது. ராக்ஷஸர்க்கும் மிகுந்த பயம் உண்டாயிற்று. எழுபத்தாறுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

நிகும்பனை ஹனுமான் கொல்லுதல்.

நிகும்பன், தன் தமையனாகிய கும்பனை ஸுக்ரீவன் முடித்ததைக் கண்டு, கோபத்தினால் தஹிப்பவன்போல், அவ்வானரேந்த்ரனைப் பார்த்தனன். அப்பால் வீரனாகிய நிகும்பன் பயங்கரமாகி யமதண்டம்போல் புலப்படுவதும் ராக்ஷஸர்களின் பயத்தைப் போக்குவதுமாகிய ஓர் பரிகத்தை எடுத்துக்கொண்டனன். அது பல புஷ்பமாலைகளால் அலங்கரிக்கப்பெற்று சந்தன குங்குமாதி வாஸனைகள் பூசப்பெற்ற ஐந்து விரல்களால் இட்ட முத்ரையுடையதும் மேன்மையுற்றதுமாகிப் பர்வத சிகரம்போல் புலப்பட்டுக்கொண்டிருந்தது. மற்றும், பொற்பட்டங்கள் இடப்பெற்று வஜ்ரங்களாலும் பவழங்களாலும் அலங்கரிக்கப்பட்டுத் திகழ்வுற்றிருந்தது. அப்பொழுது மஹா தேஜஸ்வியும் பயங்கர பராக்ரனுமாகிய நிகும்பன் இந்த்ரத்வஜம் போன்ற அந்தப் பரிகத்தைச் சுழற்றி வாயைத் திறந்து ஸிம்ஹநாதஞ் செய்தனன். நிகும்பன் மார்பில் ரத்னமயமான பதக்கத்தையும் தோள்களில் தோள்வளைகளையும் காதுகளில் விசித்ர குண்டலங்களையும் கழுத்தில் விசித்ரமான பூமாலையையும் மற்றும் வேறு ஹாரம்முதலிய ஆபரணங்களையும் கையில் அந்தப் பரிகத்தையும் தரித்து, ஸிம்ஹநாதஞ் செய்துகொண்டு

மின்னலோடும் இந்த்ரதனுஸ்ஸோடும் கூடி கர்ஜிக்கின்ற மேகம்போல் ப்ரகாசித்துக் கொண்டிருந்தனன். மஹா பலமுடைய நிகும்பன் பரிகத்தைச் சுழற்றுகையில், அத னுலுண்டான காற்றின் வேகத்தினுல் ஆவஹம் முத லிய ஸப்த வாயுக்களின் மண்டலம் பிளவுண்டது. மற் றும் அது மஹாத்வனி யுடையதாகிப் புகையில்லாத அக் னிபோல் ஜ்வலித்தது. அந்த நிகும்பன் பரிகத்தைச் சுழற்றுகையில் அதினின்றுண்டான காற்றின் வேகத்தி னுல் சிறந்த கந்தர்வ க்ருஹங்களோடு கூடின அலகா புரமும், ஸமஸ்த தேவபவனங்களோடு கூடின அமரா வதீ நகரமும், அஶ்வினி முதலிய நக்ஷத்ரங்களோடும் சந்த்ரனேடும் புதன் முதலிய க்ரஹங்களோடும் சுக்ரன் முதலிய மஹாக்ரஹங்களோடும் கூடின ஆகாயமும் சலித்து நடுக்கமுற்றது. பரிகத்தினெளியினுலும் ஆப ரண காந்திகளாலும் ஜ்வலிக்கின்ற அந்த நிகும்பனுகிற அக்னியானது வானரர்களுக்கு வளர்ந்தெழுந்த ப்ரளய காலாக்னிபோல் அணுகமுடியாதிருந்தது. அப்பொ ழுது வானரர்களும் ராக்ஷஸர்களும் பயந்து இப்படி அப் படி அசையவும் வல்லமையற்றிருந்தனர். பலிஷ்டனுகிய ஹனுமான் ஒருவன் மாத்ரம் இயற்கையாகவே அகன்ற மார்பை மிகுதியும் வளர்த்திக் காண்பித்துக்கொண்டு அவனுக்கெதிரே வந்து நின்றனன். இரும்புத்தடி போன்ற புஜங்களையுடைய பலிஷ்டனுகிய அந்த நிகும் பன் ஸூர்ய மண்டலம்போல் தகதகவென்று விளங்கு கின்ற அந்தப் பரிகத்தை மஹா பலிஷ்டனை ஹனுமா னுடைய மார்பில் பொகட்டனன். அந்தப் பரிகம் உறுதி யும் அகன்றதுமாகிய ஹனுமானுடைய வக்ஷஸ்தலத்தில் பட்டு நூறு துணுக்கைகளாகச் சிதறிக் கிளம்பி ஆகா யத்தில் நூறு குறைக்கொள்ளிகள் போல் விளங்கி, பூமி யில் வீழ்ந்தது. அந்த ஹனுமான் அவ்விரும்புத்தடியி

னுல் அடிக்கப்பட்டு அந்த அடிக்கு, பூகம்பத்தில் பர்வதம் நடுங்குவதுபோல் மிகுதியும் நடுக்கமுற்றனன். அப்பொழுது மிதமில்லாத பலப்பெருக்குடைய வானரோத்தமனுகிய அந்த ஹனுமான் அங்ஙனம் அடிக்கப்பெற்றுக் கோபித்துத் தன் பல மூள்ளவளவுங்கொண்டு விரல்களை மடக்கிப் பிடிபிடித்தனன். மஹா தேஜஸ்வியும் மிகுந்த வீர்யமுடையவனும் வேகம் நிறைந்தவனும் வாயுவோடொத்த கமன சக்தியுடையவனுமாகிய ஹனுமான் முஷ்டியைத் தூக்கி வேகமாக நிகும்பனது மார்பில் குத்தினன். அந்த அடியினுல் நிகும்பனது மார்பில் தோலுரிந்து ரக்தம் மிதமில்லாமல் பெருகியது. அந்த முஷ்டியினுல் அவன் மார்பில் மின்னல்போல் பளிச்சென்று ஓர் ஜ்வாலை உண்டாயிற்று. அந்த நிகும்பன் அந்த முஷ்டியடிக்கு மிகுதியும் சலித்து அப்பால் சிறிது நேரத்திற்குப் பின்பு தெளிந்து மஹாபலமுடைய ஹனுமானைப் பிடித்துக்கொண்டனன். அப்பொழுது நிகும்பன் யுத்தத்தில் மஹா பலமுடைய ஹனுமான்மேல் எதிர்த்துப் பிடிப்பதைக் கண்டு லங்கையில் வஸிக்கிற ராக்ஷஸர்களெல்லோரும் ஸந்தோஷத்தினுல் பயங்கரமாகக் கூச்சலிட்டனர். அப்பொழுது ஹனுமான் தன்னை நிகும்பன் பிடித்துக்கொண்டுபோயினும் அவனை வஜ்ரம்போன்ற முஷ்டியினுல் புடைத்தனன். அப்பால் வாயுகுமாரனுன ஹனுமான் தன்னை விடுவித்துக்கொண்டு பூமியில் நின்று சீக்ரமாக நிகும்பனை இங்ஙனம் மாள்வித்தனன். வீர்யத்தில் மிகுந்த ஹனுமான் பெருமுயற்சியுடன் அந்த நிகும்பனைத் தரையில் விழத்தள்ளிக் குழக்கிப் பிண்டமாகச் செய்ததுமாத்ரமேயன்றி வேகமாக மேல் கிளம்பி அவன் மார்பில் கபீலென்று குதித்தனன். அனந்தரம் ஹனுமான் இரண்டு கைகளாலும் நிகும்பனது கழுத்

தைப் பிடித்துத் திருப்பி, அவன் தாருணமாகக் கூச்சலிட்டுக் கொண்டிருக்கையில் பயங்கரமான அவனது சிரஸ்ஸைப் பிடுங்கிப் பொகட்டனன். அப்பால் நிகும்பன் இங்ஙனம் ஹனுமானால் இறைச்சலிட்டுக் கொண்டே யுத்தத்தில் முடிவுபெறுகையில், தசரத குமாரனாகிய ராமனும் ராவணகுமாரனாகிய மகராக்ஷனும் மிகுதியும் கோபமுற்று அதிபயங்கரமாக யுத்தஞ் செய்தனர். நிகும்பன் ப்ராணன்களை விட்டவுடனே வானரர்கள் ஸந்தோஷம் அடைந்து ஸிம்ஹநாதஞ் செய்தனர். அதற்குத் திசைகளும் ப்ரதித்வனி யெழப்பெற்றன. பூமியும் நடுக்கமுற்றது. ராக்ஷஸப் படையிலுள்ளவர் அனைவர்க்கும் பயாவேசம் உண்டாயிற்று. எழுபத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

மகராக்ஷன் யுத்தத்திற்கு வருதல்.

ராவணன் நிகும்பன் மாண்டதையும் கும்பன் முடிந்ததையும் கேட்டுச் சிறிதும் பொறுக்கமுடியாமல் நெருப்புப்போல் ஜ்வலித்தனன். ராவணன் கோபமும் சோகமும் மேலெழப்பெற்று, கரனது குமாரனும் அகன்ற கண்களுடையவனுமாகிய மகராக்ஷனைப் பார்த்து, 'புதல்வனே! நீ எனது ஆக்ஞையின்படி ஸேனையைக் கூட்டிக் கொண்டு போவாயாக. போய் ராமனையும் லக்ஷ்மணனையும் அவ்வானரர்களையும் வதித்து வருவாயாக' என்று கட்டளையிட்டனன். கரனது குமாரனாகிய மகராக்ஷன் மஹாசூரனென்று அஹங்கார முற்றிருப்பவனாகையால் ராவணனது ஆஜ்ஞையைக் கேட்டவுடனே ஸந்தோஷித்து நல்லதென்று மொழிந்தனன். அம்மஹாபலன் ராவணனுக்கு ப்ரதக்ஷிணஞ் செய்து நமஸ்கரித்து அவனது

ஆஜ்ஞையின்படி வெளுத்திருக்கின்ற ராஜக்ருஹத்தி னின்று வெளிப்புறப்பட்டனன். மகராக்ஷன் அருகே யிருக்கின்ற ஸேனாதிபதியைப் பார்த்து 'சீக்ரமாக ரதங் கொண்டுவருவாய். ஸேனையையும் சீக்ரமாக வரவழைப் பாய்' என்றனன். அவன் அங்ஙனஞ் சொன்னதைக் கேட்டு, ஸேனாபதியும் உடனே ரதத்தையும் ஸைன்யத் தையும் அவன் ஸமீபத்திற்கு வரவழைத்தனன். மகரா க்ஷன் தன் ரதத்திற்கு ப்ரதக்ஷிணஞ்செய்து அதில் ஆரோஹித்து 'ரதத்தைச் சீக்ரம் நடத்துவாய்' என்று ஸாரதிக்குக் கட்டளை யிட்டனன். அப்பால் மகராக்ஷன் அந்த ராக்ஷஸப் படையிலுள்ளவரனைவரையும் பார்த் து 'ராக்ஷஸர்களே! நீங்களெல்லோரும் என்னெதி ரில் நன்கு யுத்தஞ் செய்வீர்களாக. ராக்ஷஸ ராஜனும் மஹானுபாவனுமாகிய ராவணன், அந்த ராமலக்ஷ் மணர்களிருவரையும் வதிக்கும்படி எனக்குக் கட்டளை யிட்டனன். ராக்ஷஸர்களே! அந்த ராமனையும் லக்ஷ் மணனையும் வானரனான ஸுக்ரீவனையும் மற்ற வானரர் களையும் இப்பொழுது மேலான பாணங்களால் வதித்து விடுகிறேன். இப்பொழுது நான் அவ்விடஞ் சென்று வானரர்களது மஹத்தான ஸைன்யத்தை யெல்லாம் சூலாயுதங்களை விடுத்து, உலர்ந்த கட்டைகளை அக்னி தஹிப்பதுபோல், உருமாய்த்து விடுகிறேன்' என்றனன் ப்லிஷ்டர்களான அந்த ராக்ஷஸர்கள், மகராக்ஷன் அங் ஙனஞ் சொன்னதைக் கேட்டு, எல்லோரும் நானாவித ஆயுதங்களைத் தரித்து யுத்தத்திற்கு வந்தனர். அவர்க ளெல்லோரும் காமரூபிகளாகிக் கோரைகள் விளங் கப் பெற்றுப் பொன்வர்ணமான கண்களுடன் கூடித் தலைமயிர்கள் விரிந்தலையப்பெற்றிருக்கையால் பயங்கரர் களும் மத்தகஜங்கள்போல் கர்ஜித்துக்கொண்டு மஹா சரீரர்களுமாகி மஹா சரீரமுடையவனும் கரனது

குமாரனுமாகிய மகராக்ஷனைச் சுற்றிச் சூழ்ந்து ஸந்தோஷத்தினால் பூமியை நடுங்கச்செய்துகொண்டு யுத்தத்திற்கு நடந்தனர். அப்பால் நாற்புறத்திலும் பலவாயிரம் பேரிவாத்யங்களை முழக்கினர். அனேகமாயிரஞ் சங்குகளை ஊதினர். ராக்ஷஸர்களுடைய ஸிம்ஹநாதங்களும் தோள் தட்டும் த்வனிகளும் மேலெழுந்தன. இவையெல்லாம் பெருந்த்வனியாகிச் செவிப்பட்டன. அனந்தரம் அந்த மகராக்ஷனுடைய ஸாரதியின் கையினின்று உழவுகோல் நழுவிக் கீழ்விழுந்தது. மகராக்ஷனுடைய த்வஜம் திடீலென்று பூமியில் வீழ்ந்தது. அவனது ரதத்தில் கட்டியிருந்த குதிரைகள் பல்வாறு விசித்ர அடிவைப்புக்கள் செய்வதின்றி முதலில் தழதழத்த பாதங்களோடு நடந்து அப்பால் தீனங்களாகிக் கண்களில் நீர் பெருக்கிக் கொண்டுபோயின. பயங்கரனும் துர்ப்புத்தியுமாகிய அந்த மகராக்ஷன் புறப்படும்பொழுது காற்று தூசிகளோடு கூடிப் பருஷமாகவும் பயங்கரமாகவும் வீசிற்று. மேகம் யானை கடா இவற்றின் நிறம்போன்ற நிறமுடையவர்களும் யுத்தங்களில் பல தடவைகளில் நின்று கதைகளாலும் கத்திகளாலும் சேதிக்கப்பட்டுத் தீர்ந்தவர்களும் யுத்த ஸாமர்த்யமுடையவர்களும் 'நான் முன்னே நான் முன்னே' என்று உத்ஸாஹத்துடன் கர்ஜிப்பவர்களும் மிகுந்த வீர்ய முடையவர்களுமாகிய ராக்ஷஸர்களெல்லோரும் அந்த அவசகுனங்களைப் பார்த்தும் பொருள் செய்யாமல் ராமலக்ஷ்மணர்களிருக்குமிடத்திற்குப் போயினர். எழுபத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராமன் மகராக்ஷனை வதித்தல்.

அந்த வானரயூதபதிகளனைவரும், மகராக்ஷன் புறப்பட்டு வருவதைக் கண்டு ஸந்தோஷத்தினால் திடீ லென்று கிளம்பி யுத்தத்திற்கு முயன்று நின்றனர். அனந்தரம், தேவதைகள் தானவர்களோடு யுத்தஞ் செய்வதுபோல், அவ்வானரர்கள் ராக்ஷஸர்களோடு யுத்தஞ் செய்யத் தலைப்படுகையில் அப்பொழுது மயிர்க்கூச்சலை விளைக்கும்படியான மஹாயுத்தம் நடந்தது. அப்பொழுது வானரர்களும் ராக்ஷஸர்களும், வ்ருக்ஷங்களையும் சூலங்களையும் கற்களையும் பரிகங்களையும் ப்ரயோகித்து ஒருவரையொருவர் ஹிம்ஸித்தனர். அத்தருணம் அந்த ராக்ஷஸர்களில் சிலர் ஈட்டி கட்கம் கதை குந்தம் தோமரம் பட்டயம் பிண்டிவாலம் வஜ்ரம் இவ்வாயுதங்களையும் மற்றும் சிலர் பாசம் முத்கரம் தண்டம் இவ்வாயுதங்களையும் நிகாதமென்னுஞ் சில ஆயுத விசேஷங்களையும் கொண்டு வானர வீரர்களோடு யுத்தஞ் செய்தனர். மகராக்ஷனது பாண ஸமூஹங்களால் வானரர்கள் பீடிக்கப்பட்டு மனந் தழதழக்கப்பெற்று எல்லோரும் பயத்தினால் வருந்தினவராகி ஓடினர். அந்த ராக்ஷஸர்கள் வானரர்களெல்லோரும் பயந்தோடுவதைக் கண்டு; ஸந்தோஷத்தினால் ஸிம்ஹநாதங்களைச் செய்தனர். ராக்ஷஸர் ஜயத்தினால் ப்ரகாசித்துக்கொண்டிருந்தனர். அப்பொழுது வானரர்கள் நாற்புறத்திலும் ஓடுவதையும், ராக்ஷஸர்கள் வானரர்களைத் துரத்துவதையுங் கண்டு, ராமன் மழை பெய்வதுபோல் பாணங்களைப் பெய்து அந்த ராக்ஷஸர்களைத் தடுத்தனன். ராக்ஷஸர்கள் ராமனால் தடுக்கப்படுவதைக் கண்டு, மகராக்ஷன் கோபாக்னியால் ஜ்வலித்துக் கொண்டு ராமனைப் பார்த்து 'ராமா! என்னோடு நிற்பாயாக. உனக்கு த்வந்தயுத்தம் கொடுக்கிறேன். தனுஸ்ஸினின்று

கூரான பாணங்களை விடுத்து உன் ப்ராணன்களைப் போக்குகிறேன். அப்பொழுது தண்டகாரண்யத்தில் நீ என் தந்தையை வதித்தாயல்லவா? ஆகையால், மீள வும் என்னெதிரில் யுத்தஞ்செய்ய முயன்று நிற்பதைக் கண்டால் எனக்கு மேன்மேலும் கோபம் வளர்ந்து வரு கின்றது. துர்ப்புத்தியே! ராமா! அக்காலத்தில் உன்னை நான் அந்த தண்டகாரண்யத்தில் பாராது போனேனே யென்று எனது அங்கங்களெல்லாம் மிகுதியும் எரிகின் றன. ராமா! என் பாக்யத்தினால் நீ இங்கு என் கண் ணில் பட்டனை. பசியினால் பீடிக்கப்பட்ட ஸிம்ஹம் மற்ற ம்ருகங்களை விரும்புவதுபோல், இத்தனை நாளாக உன்னை எதிர் பார்த்துக்கொண்டிருந்தனன். இப் பொழுது இதோ என் பாணவேகத்தினால் நீ அடியுண்டு உன்னால் இதுவரையில் அடியுண்டு மாண்ட வீரர்க ளோடு யமபுரிக்குப் போவாய். ராமா! இதற்குப் பல பேச்சுக்கள் பேசி என்ன ப்ரயோஜனம்? நான் சொல்லு வதைக் கேட்பாய். யுத்தரங்கத்தில் ஸமஸ்த லோகத் தவர்களும் உன்னையும் என்னையும் காண்பார்களாக. ராமா! மஹா யுத்தஞ் செய்வதற்கு திவ்யாஸ்த்ரங்களா லாவது கதைகளாலாவது பாஹுக்களாலாவது மற்றும் இதர ஆயுதங்களாலாவது, உனக்கு எதில் பழக்கம் உளதோ அதனாலேயே யுத்தஞ் செய்வாய்' என்றனன். தசரத குமாரனாகிய ராமன் மகராக்ஷன் சொன்னதைக் கேட்டு, அங்ஙனம் மேன்மேலும் வேறுமனே பிதற்று கின்ற அவனைப் பார்த்து உரக்கச் சிரித்துக்கொண் டே 'அடா! ராக்ஷஸனே! உனக்குச் செய்யமுடி யாத பல வார்த்தைகளை ஏன் வீணாகப் பிதற்றுகின் றனை? யுத்தத்தில் பராக்ரமத்தை நிறைவேற்றாமல் வீண் பேச்சின் வலிவினால் ஜயிக்க முடியாது. நா னொருவனே தண்டகாரண்யத்தில் பதினாலாயிரம் ராக்ஷ

ஸர்களேயும் உன் தந்தையையும் த்ரிசிரனேயும் தூஷணனேயும் வதித்தனன். பாபிஷ்டனே! கூரான மூக்கும் நகங்களும் உடைய கழுகுகளும் நரிகளும் காக்கைகளும் இப்பொழுது இதோ உன் மாம்ஸங்களை ஆசை தீரும்படி தின்னப்போகின்றன' என்றனன். ராமன் இங்ஙனம் சொல்லுகையில், கரனது குமாரனுகிய மகராக்ஷன் கோபித்து யுத்தரங்கத்தில் அந்த ராமன் மேல் பாணஸமூஹங்களே ப்ரயோகித்தனன். ராமன் பொற்பிடி இடப்பெற்ற அந்த பாணங்களைத் தன் பாணவர்ஷத்தினுல் பல துண்டுகளாகும்படி துண்டிக்கையில், அவை யெல்லாம் ஒடிந்து பற்பலவாகப் பூமியில் வீழ்ந்தன. அப்பொழுது கரனது குமாரனுகிய மகராக்ஷனும் தசரத புத்ரனுகிய ராமனும் பராக்ரமத்தினுல் ஒருவர்க்கொருவர் மேல் விழுந்து அங்ஙனம் பயங்கரமாக யுத்தம் நடத்தினர். அத்தருணம் யுத்தரங்கத்தில் நாணும் கைத்தலமும் உறைவதனுல் தனுஸ்ஸினின்று பயங்கரமாகக் கிளம்பின பெருங்கோஷமானது இரண்டு மேகங்களின் கர்ஜனம் போல் செவிப்பட்டது. தேவதைகளும் தானவர்களும் கந்தர்வர்களும் கின்னரர்களும் மஹோரகர்களும் மற்றுமுள்ள அனைவரும் அந்த ஆச்சர்யத்தைப் பார்க்க விரும்பி ஆகாயத்தில் வந்து சேர்ந்தனர். அவர்கள் ஒருவருக்கொருவர் அவயவங்களை பாணங்களால் அடிப்பது அவ்வப்பொழுது இருமடங்காக மிகுதியும் வளர்ந்துகொண்டே வந்தது. அவர்கள் யுத்தத்தின் முனையில் ஒருவன் செய்ததற்கு ப்ரதி மற்றெருருவன் செய்வது மாருமல் போராடிக் கொண்டிருந்தனர். மகராக்ஷன் யுத்தத்தில் ராமன் ப்ரயோகித்த பாணங்களைக் கண்டித்து விட்டனன். ராமனும் அந்த ராக்ஷஸன் விடுத்த பாணங்களைப் பலவாறு துண்டித்துக் கொண்டிருந்த

னன். திக்குக்களும் விதிக்குக்களும் பாணஸமூஹங்க ளால் சூழப்பட்டிருந்தன. பூமி முழுவதும் பாணங்க ளால் நாற்புறத்திலும் மறைக்கப்பட்டுச் சிறிதும் புலப் படாதிருந்தது. அனந்தரம் மஹா பாஹுவாகிய ராமன் கோபித்து மகராக்ஷனுடைய தனுஸ்ஸைத் துண்டித்து மீளவும் எட்டுபாணங்களை விடுத்து அவனது ஸாரதியை வதித்தனன். ராமன் பாணங்களால் அவனது ரதத்தை முறித்துக் குதிரைகளையும் கொன்றனன். அப்பால் மக ராக்ஷன் ரதமற்றவனாகித் தரையில் குதித்து நின்றனன். அங்ஙனம் அந்த ராக்ஷஸன் பூமியின்மேல் நின்று ஸமஸ் த பூதங்களுக்கும் பயங்கரமாகி ப்ரளய காலாக்னிபோல் ஜ்வலிக்கின்ற சூலத்தைக் கையில் எடுத்துக் கொண்ட னன். அந்த மகராக்ஷன் கோபத்தினால் அம்மஹா யுத் தத்தில் ஜ்வலிக்கின்ற அம்மஹா சூலத்தைச் சுழற்றி ராமன்மேல் விடுத்தனன். கரனது புதல்வனாகிய மகரா க்ஷனுடைய கையினின்று விடுபட்டு ஜ்வலித்துகொண்டு வருகின்ற அந்தப் பெருஞ் சூலத்தை, ராமன் ஆகாயத்தி லேயே மூன்று பாணங்களால் துண்டித்தனன். நல்ல பொன்னால் பூஷிக்கப்பட்ட அச்சூலம் ராமபாணத்தினால் அடிக்கப்பட்டுப் பல துணுக்கைகளாகப் பிளவுண்டு பெரிய குறைக்கொள்ளிபோல் ஜ்வலித்துக்கொண்டு சித றிப் பூமியில் வீழ்ந்தது. எப்படிப்பட்ட கார்யத்தையும் அனாயாஸமாகச் செய்து முடிக்குந் தன்மையுள்ள ராம னால் அங்ஙனம் அச்சூலம் பாழானது கண்டு, ஆகாயத் திலுள்ள பூதங்கள் 'நல்லது நல்லது' என்று புகழ்ந்தன. மகராக்ஷன் அந்தச் சூலமுங்கூட அங்ஙனம் பாழா னது கண்டு, முஷ்டியை எடுத்து ராமனைப் பார்த்து நில்லு நில்லென்று மொழிந்தனன். அவன் அங்ஙனம் பிடியைப் பிடித்துக்கொண்டு மேல் வருவதைக் கண்டு

ரகுகுலகுமாரனுகிய ராமன் உரக்கச் சிரித்து, உடனே தனுஸ்ஸில்ஆக்னேயாஸ்த்ரத்தைத் தொடுத்து ப்ரயோகித்தனன். அப்பொழுது ராமன் யுத்தத்தில் அந்த ஆக்னேயாஸ்த்ரம் ப்ரயோகிக்கையில், அந்த ராக்ஷஸன் ஹ்ருதயம் பிளக்கப்பெற்றுத் தரையில் விழுந்து மரணம் அடைந்தனன். அப்பொழுது மகராக்ஷன் மாண்டு விழுந்ததைக் கண்டு, ராக்ஷஸர்களெல்லோரும் ராமபாணங்களால் பீடிக்கப்பட்டு லங்காபுரிக்கே ஓடிப்போயினர். அப்பால் தேவதைகள் தசரத குமாரனுகிய ராமனது பாணவேகத்தினுல் அடியுண்டு, வஜ்ராயுதத்தினுல் அடியுண்டு வீழ்ந்த பர்வதம்போல் பூமியில் வீழ்ந்திருக்குங் கரனது குமாரனுன மகராக்ஷனைப்பார்த்து மிகுதியும் ஸந்தோஷ முற்றனர். எழுபத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

இந்த்ரஜித்து மீளவும் யுத்தத்திற்கு வந்து ராமாதிகளை வருந்தச் செய்தலும், ராமன் அவனை வதிக்க உபாயஞ் சிந்தித்தலும்.

யுத்தங்களில் வெற்றிபெறுந் தன்மையுள்ள ராவணன், மகராக்ஷன் மாண்டதைக் கேட்டு, மிகுதியும் கோபாவேசமுற்றுப் பற்களைக் கடகடவென்று கடித்தனன். ராவணன் அங்ஙனங் கோபித்து அப்பொழுதைக்குச் செய்ய வேண்டுவதென்னென்று ஆலோசித்து, அப்பால் மேலும் கோபமுற்றவனுகித் தன் புதல்வனுகிய இந்த்ரஜித்தை யுத்தத்திற்குப் போகும்படி அனுப்ப முயன்று, வீரனே! மஹா வீர்யமுடைய அண்ணன் தம்பிகளான ராம லக்ஷ்மணர்களை வதிப்பாயாக. நீ மாயையால் புலப்படாதவனுகிப் போர் புரியினும் புலப்பட்டுக்கொண்டு போர்புரியினும் எல்லாவகைகளிலும் நீ

மிகுந்த பலமுடையவன். நீ எந்தக் கார்யத்திலும் எதிரில்லாத இந்த்ரனையுங்கூட யுத்தத்தில் ஜயித்தவன். இனி கேவல மனுஷ்யர்களான ராமலக்ஷ்மணர்களை யுத்தத்தில் கண்டும் கொல்லாதிருப்பாயா? கண்டவுடனே கொல்வாய்' என்றனன். ராக்ஷஸர் தலைவனாகிய ராவணன் அங்ஙனஞ் சொல்லுகையில், இந்த்ரஜித்து தந்தையின் ஆஜ்ஞையைக் கைப்பற்றி, யாகங்கள் செய்யுமிடத்திற்குப்போய், அங்கு அக்னியை விதிப்படி ஹோமஞ் செய்தனன். அவ்விந்த்ரஜித்து அங்கு அக்னியை ஹோமஞ்செய்கையில், ராக்ஷஸஸ்த்ரீகள், காலந்தவறாதிருக்கும்பொருட்டு விரைந்து ருத்விக்குகள் தரிக்கவேண்டிய சிவந்த [1] சிரோவஸ்த்ரங்களை அவ்விடத்திற்கு எடுத்துக்கொண்டு வந்தனர். அந்த ஹோமத்தில் தோமரமென்னும் ஆயுதங்களும் நாணலின் இலைகளும் பரிஸ்தரணங்களாகவும், தானிக்கட்டைகள் ஸமித்துக்களாகவும், ருத்விக்குகள் தரிக்கும் தலைப்பாகைகள் சிவப்பு வஸ்த்ரங்களாகவும், ஸ்ருவம் இரும்பினாற் செய்யப்பட்டதுமா யிருந்தன. அந்த இந்த்ரஜித்து நாணற் புற்களையும் தோமர ஆயுதங்களையும் அக்னியைச் சுற்றி நாற்புறத்திலும் பரப்பி ஹோமஞ்செய்யும்பொருட்டு உயிருடன் கூடின கறுத்த மேஷத்தின் (ஆட்டின்) கழுத்தைச் சேதித்தனன். அப்பால் ஒருதரம் ஹோமஞ் செய்தவுடனே அவ்வக்னி அணையாமல் புகையுமில்லாமல் பெரிய ஜ்வாலைகளுடன் எரிந்தது. இங்ஙனம் ஜயத்தை அறிவிக்கிற அடையாளங்களோடு அவ்வக்னி விளங்கியது. அக்னி, உருக்கின பொன்போல் விளக்கமுற்று ப்ரதக்ஷிணமாகச் சுழல்கின்ற ஜ்வாலைகளுடன் ப்ரகாசித்தது. அப்பொழுது அக்னிபுருஷன் உருவத்துடன் மேல் கிளம்பித் தானே அந்த ஹவிஸ்ஸை

1 தலைப்பாகை.

அங்கீகரித்தனன். இங்ஙனம் அவன் அக்னியையேஹாமஞ் செய்து தேவதானவ ராக்ஷஸர்களுக்குத் தர்ப்பணம் நடத்தி, அந்த ஹோமத்தினுல் அந்தர்த்தான சக்தியுடைய (மறையும் சக்தியுடைய) உத்தமமான ரதத்தில் ஏறிக்கொண்டனன். அம்மேலான ரதம், நான்கு குதிரைகள் பூட்டப்பெற்றுக் கூரான பாணங்களால் நிறைந்து நாணேற்றின பெரிய தனுஸ்ஸுடன் கூடி மிகுதியும் ப்ரகாசித்துக்கொண்டிருந்தது. அந்த ரதம் பொன் தகடுகளால் மறைக்கப்பட்டு, ம்ருகம்போலும் சந்த்ரன் போலும் அர்த்த சந்த்ரன் போலும் இயற்றின சித்ரங்களால் அலங்கார முற்றுக் காந்தியால் மிகவும் தகதகவென்று திகழ்வுற்றிருந்தது. இந்த்ரஜித்தின் த்வஜம், நல்ல பொன்னுற் செய்த ஓர் பெரிய வளையத்தோடு கூடி வைடூர்ய மணிகளால் அலங்கரிக்கப்பட்டு ஜ்வலிக்கின்ற அக்னிபோல் ப்ரகாசித்துக்கொண்டிருந்தது. மிகுந்த பலமுடைய அவ்விந்த்ரஜித்து, ஸூர்யன்போல் ப்ரகாசிப்பதும் அந்தர்த்தான சக்தியுடையதுமாகிய அம்மேலான ரதத்தினுலும் ப்ரஹ்மாஸ்த்ரத்தினுலும் பாதுகாக்கப்பட்டு எப்படிப்பட்டவர்க்கும் எதிர்க்க முடியாதவனுயிருந்தனன். யுத்தங்களில் ஜயத்தையே பெறுந் தன்மையுள்ள அவ்விந்த்ரஜித்து நிருதியைத் தேவதையாகவுடைய மந்த்ரங்களால் அக்னியில் ஹோமஞ் செய்து அந்தர்த்தான சக்தியைப் பெற்று லங்கையினின்று புறப்பட்டு 'அரண்யத்தில் பொய்யாக முனிவேஷம் பூண்டு வந்திருக்கிற அந்த ராமலக்ஷ்மணர்களை இதோ யுத்தத்தில் வதித்து யுத்தத்தில் ஜயத்தை ஸம்பாதித்து என் தந்தையான ராவணனுக்குக் கொடுக்கிறேன். இப்பொழுது என் தந்தைக்கு மிகுதியும் ப்ரீதி உண்டாகும் பொருட்டு ராமனையும் லக்ஷ்மணனையுங்கொன்று பூமியில் ஒரு வானரனும் இல்

லாதபடி செய்கிறேன்' என்று மொழிந்து அந்தர்த்தானம் அடைந்தனன். அனந்தரம் யுத்தத்தில் கொடியனாகிய இந்த்ரஜித்து ராவணனது ஆஜ்ஞையைப்பெற்றுக் கோபாவேசமுற்றுக் கூரான பாணங்களோடும் தனுஸ்ஸோடும் யுத்தரங்கத்திற்கு விரைவுடன் வந்து சேர்ந்தனன். மிகுந்த வீர்ய முடையவர்களும் பருத்துயர்ந்த தோள்களும் தலையுமாயிருக்கையால் மூன்று தலைகளையுடைய ஸர்ப்பங்கள் போன்று வானர ஸேனையினிடையினின்று பாணஜாலங்களை ப்ரயோகிக்கின்ற வீரர்களுமான ராமலக்ஷ்மணர்களை இந்த்ரஜித்து கண்ணுற்றனன். அங்ஙனங் கண்டு இவர்களே அந்த ராமலக்ஷ்மணர்களென்று நினைத்து வில்லை நாணேற்றி, வர்ஷா காலத்தில் மேகம் மழை பெய்வதுபோல், பாண தாரைகளை ஓயாமல் பெய்து முழுவதும் நிறைத்தனன். அவன் ரதத்தோடுகூட ஆகாய மார்க்கத்தை அடைந்து கண்ணுக்குப் புலப்படாமல். ராமலக்ஷ்மணர்களைக் கூரான பாணங்களால் வருத்தினன். அவ்விந்த்ரஜித்து வேகமாக விடுகின்ற பாணங்களால் மறைக்கப்பட்ட அந்த ராமலக்ஷ்மணர்களும் தனுஸ்ஸில் பாணங்களைத் தொடுத்துத் தமது திவ்யமான அஸ்த்ர வித்யையைக் காண்பித்தனர். மஹா பலிஷ்டர்களான அந்த ராமலக்ஷ்மணர்கள் பாணஸமூஹங்களால் ஆகாயத்தை மறைத்தாராயினும் ஸூர்யனைப்போன்ற அந்த திவ்யாஸ்த்ரங்களாவது பாணங்களாவது அவ்விந்த்ரஜித்தின் மேல் படவேயில்லை. தைர்யலக்ஷ்மீ விலாஸமுடைய அவ்விந்த்ரஜித்து ஆகாயத்தை மறைக்கும் பொருட்டுப் புகையால் விளையும்படியான இருட்டை உண்டாக்கி முன்னமே பனியினால் இருள் மூடப்பெற்ற திசைகளை யெல்லாம் அடையாளந் தெரியாதபடி மறைத்துவிட்டனன். அவ்விந்த்ரஜித்து அங்ஙனம் எதிரின்றி ஸஞ்சரிக்கும் பொழுது, அவன் பாணம் ப்ரயோகிக்கை

யில் நாணும் கையும் உறைவதாலுண்டான சப்தமாவது தேர்ச்சக்கரத்தினடி யோசையாவது, குதிரைகளின் குளப்படி யோசையாவது சிறிதும் செவிப்படவில்லை; அவனது உருவமும் சிறிதும் புலப்படவில்லை. மஹா பாஹுவாகிய அவ்விந்த்ரஜித்து மஹத்தான மேகங்கள் கனமாக மூடிக்கொள்ளும்பொழுது விளையும் மஹா அந்தகாரம்போன்ற பெரிய இருட்டில் மழை பெய்வதுபோல், கேவலம் இரும்பினுற் செய்யப்பட்ட பாணங்களை அற்புதமாக ப்ரயோகித்தனன். அவ்விந்த்ரஜித்து வரம்பெற்ற பலப்பெருக்கினுல் மிகுதியும் விஞ்சி யுத்தத்தில் கோபித்து ராமனது ஸமஸ்த அவயவங்களையும் ஸூர்யன் போன்ற தீக்ஷ்ணபாணங்களால் பொற்றினன். புருஷ ஶ்ரேஷ்டர்களான அந்த ராமலக்ஷ்மணர்கள், வர்ஷதாரைகளால் (மழைத் தாரைகளால்) பர்வதங்கள்போல், நாராசபாணங்களால் அடியுண்டிருப்பினும் அசையாமல், பொன்பிடி யுடைய கூரான பாணங்களைத் தொடுத்து ப்ரயோகித்தனர். கங்க பக்ஷிகளின் இறகுகள் கட்டப்பெற்ற அந்த பாணங்கள் ஆகாயத்தில் பக்ஷிகள்போல் மிகுந்த வேகத்துடன் இந்த்ரஜித்தின்மேல் பட்டு அவனது மர்மங்களைப் பிளந்து ரத்தம் பட்டு நனைந்து பூமியில் வீழ்ந்தன. அங்ஙனம் புருஷோத்தமர்களான அந்த ராமலக்ஷ்மணர்கள் பாண ஸமூஹங்களால் மிகுதியும் பீடிக்கப்பட்டு, அவ்விந்த்ரஜித்து ப்ரயோகிக்கும் பாணங்களைப் பல பாணங்களால் துண்டித்தனர். அந்த ராமலக்ஷ்மணர்கள், இந்த்ரஜித்து கண்ணுக்குப் புலப்படாமையால், அவன் எவ்விடத்தினின்று தம்மேல் பாணங்களை விடுகின்ருனே அந்தத் திக்கில் உயர்ந்த அஸ்த்ரங்களை ப்ரயோகித்தனர். இந்த்ரஜித்து வெகு வேகத்துடன் பாணங்களைத் தொடுத்து

விடும் அதிரதனுகையால் மாயையைக் கைப்பற்றி ஓரிட த்தில் நிற்காமல் தேருடன் எல்லாத்திசைகளிலும் திரிந் துகொண்டு எதிரிகளின் பாணங்களில் அகப்படாமல் ராமலக்ஷ்மணர்களைக் கூரான பாணங்களால் மிகுதியும் வருந்தச் செய்தனன். வீரர்களான அந்த ராமலக்ஷ்ம ணர்கள், அங்ஙனம் இந்த்ரஜித்து நன்கு நிர்மிக்கப்பட் டுப் பொன்பிடியுடைய பாணங்களைத் தம்மேல் பொற் றுகையில் தேஹம் முழுவதும் ரக்தம் பெருகப்பெற்று நன்கு புஷ்பித்த பலாச வ்ருக்ஷங்கள் போலிருந்தனர். ஆகாயத்தில் மேகங்கள் சூழ்ந்திருக்கும் பொழுது ஸூர்யனுடைய போக்குவரத்துக்களொன்றும் தெரியா திருப்பதுபோல், அவ்விந்த்ரஜித்தின் போக்காவது உரு வமாவது தனுர்ப்பாணங்களாவது மற்ற எதுவுமாவது எவர்க்கும் எள்ளவும் தெரியவில்லை. அப்பொழுது அவ் விந்த்ரஜித்தின் பாணங்களால் அடிக்கப்பட்டு வருந்தி ப்ராணன்களை இழந்து அந்த யுத்தபூமியில் அனேக மாயிரம் வானரர்கள் வீழ்ந்திருந்தனர். அப்பொழுது லக்ஷ்மணன் மாத்ரம் மிகுதியும் கோபித்து அண்ண னைப் பார்த்து 'நான் இப்பொழுது ப்ரஹ்மாஸ்த்ரம் ப்ர யோகித்து ஸமஸ்த ராக்ஷஸர்களையுங் கொன்றுவிடுகி றேன்' என்றனன். அப்பால், ராமன் சுபலக்ஷணங்கள் அமைந்த லக்ஷ்மணனைப் பார்த்து 'ஒருவன் நிமித்த மாக இந்தப் பூமண்டலத்திலுள்ள ராக்ஷஸர்களெல் லோரையும் வதிப்பது உனக்கு யுக்தமன்று; யுத்தஞ் செய்யாமல் வெறுமனேயிருப்பவனையும், யுத்தபயத்தினால் மறைந்திருப்பவனையும், பயத்தினால் கைகுவித்து நிற்பவ னையும், சரணம் அடைந்தவனையும், ஓடுகின்றவனையும், ஏமாறியிருப்பவனையும், நீ எவ்விதத்திலும் வதிக்கலா காது. லக்ஷ்மணா! நீ மஹாபலமுடையவன். இந்த இந்த்ர

ஜித்தை வதிப்பதற்கு வேண்டிய ப்ரயத்னத்தைச் செய்வோம். க்ரூரஸர்ப்பங்கள் போன்ற மஹா வேகமுடைய திவ்யாஸ்த்ரங்களை ப்ரயோகிப்போம். மாயைகளைக் கைப்பற்றி ரதத்துடன் அந்தர்த்தானம் அடைந்திருக்கிற அற்பனாகிய இவ்விந்த்ரஜித்தை வானரர்கள் எவ்விதத்திலாயினும் கண்டு பலத்தினால் பிடித்துக் கொல்ல வல்லவர். இவ்விந்த்ரஜித்து பூமியின் விவரத்தில் (ஆழத்தில்) புகினும், ஸ்வர்க்கத்திற்குப் போயினும், பாதாளத்தில் ப்ரவேசிக்கினும், ஆகாயத்தில் கிளம்பினும், இங்ஙனம் எந்த லோகத்தில் நுழைந்து மறைந்திருப்பினும் என் திவ்யாஸ்த்ரங்களால் தஹிக்கப்பட்டு ப்ராணன்களை விட்டுத் தப்பாமல் பூமியில் விழுவான்' என்றனன். மஹானுபாவனும் புத்தியிற் சிறந்தவனும் ரகுவீரனுமாகிய அந்த ராமன் இங்ஙனஞ் சொல்லி, பயங்கரனும் கொடுஞ்செயலுடையோனுமாகிய அவ்விந்த்ரஜித்தை விரைவில் வதிப்பதற்கு வேண்டிய உபாயத்தை ஆலோசித்துக் கொண்டிருந்தனன். எண்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## இந்த்ரஜித்து ஹனுமான் பார்த்துக் கொண்டிருக்கும்பொழுது மாயாஸீதையைச் சேதித்தல்.

[1] மஹானுபாவனாகிய ராமனுடைய ஸங்கல்பத்தைத் தெரிந்துகொண்டு இந்த்ரஜித்து அந்த யுத்தத்தை விட்டு அவ்விடத்தினின்று திரும்பி லங்கையுள் ப்ரவேசித்தனன். மிகுதியும் ஒளி விளங்கப்பெற்ற அம்மஹா

---

1. இங்கு 'விஜ்ஞாயது மனஸ்தஸ்ய ராவவஸ்ய மஹாத்மந: | ஸந்நிவ்ருத்யாஹவாத்தஸ்மாத் ஸம்விவேஶ புரம்தத:' என்பது மூலம். இங்கு 'விஜ்ஞாய' என்ற இடத்தில் மூன்றாவதக்ஷரமான யகாரம் காயத்ரியின் பத்தொன்பதாவதக்ஷர மாகையால் பத்தொன்பதாவதாயிரம் தொடங்கிற்றென்று தெரிகிறது.

வீரன் அங்ஙனம் போய்க்கொண்டே தனக்குள் கும்பகர்ணாதியான ஸமஸ்த ராக்ஷஸர்களும் மாண்டு போனதை நினைத்துக்கொண்டு கோபத்தினால் கண்கள் சிவக்கப்பெற்று மீளவும் பட்டணத்தினின்று வெளிப்பட்டு யுத்த பூமிக்கு வந்தனன். மஹா வீர்யசாலியும் தேவதைகளுக்குச் சத்ருவும் புலஸ்த்ய வம்சத்திற் பிறந்தவனுமாகிய அவ்விந்த்ரஜித்து ராக்ஷஸப் படைகளால் சூழப்பட்டு லங்கையின் மேற்கு வாசலினின்று வெளிப்பட்டு வந்தனன். அனந்தரம் இந்த்ரஜித்து, வீரர்களும் அண்ணன் தம்பிகளுமான ராமலக்ஷ்மணர்கள் யுத்தத்திற்கு ஸித்தமாக முயன்றிருப்பதை ஆலோசித்து, அப்பொழுது அவர்கள் துக்கத்தினால் மெய்ம்மறந்து யுத்தமுயற்சியைத் துறந்திருக்கும் பொருட்டு, பிறரை மயக்கும் ஸாமர்த்யமாகிய மாயையை வெளியிடத் தொடங்கினன். அனந்தரம் இந்த்ரஜித்து மாயையினால் ஸீதையைப் போல் ஸ்ருஷ்டித்துப் பெரிய ஸைன்யம் சூழ்ந்த ரதத்தில் வைத்து அவளை வதிக்க விரும்பினன். மிகுதியும் துர்ப்புத்தியாகிய அவ்விந்த்ரஜித்து ராமாதிகளனைவரையும் மோசஞ்செய்ய நினைவுகொண்டு அந்த ஸீதையை வானரர்கள் பார்த்துக் கொண்டிருக்கும்பொழுது வதிக்க முயன்று வானரர்களுக்கு எதிர்முகமாகப் போயினன். அங்ஙனம் அவ்விந்த்ரஜித்து லங்கையினின்று வெளிவருவதைக் கண்டு, வானரர்கள் மிகுதியுங் கோபித்து யுத்தஞ்செய்ய விரும்பிக் கற்களைக் கையிலேந்தி எதிர்கொண்டனர். வானரஶ்ரேஷ்டனாகிய ஹனுமான், பெரியதும் அணுகமுடியாததுமான ஓர் பர்வத சிகரத்தைக் கையிலேந்திக்கொண்டு வானரர்களுக்கு முன்னே நடந்தனன். ஹனுமான் இந்த்ரஜித்தின் ரதத்தில் ஸீதையைக் கண்டனன். ராகவனுக்கு ப்ரியையும் மடந்தையர்

மணியுமாகிய அந்த ஸீதை ஆநந்தத்தை இழந்து ஒரே ஜடையாகப் பின்னிக் கொண்டிருக்குந் தலைமயிர்களோடு தீனையாகி உபவாஸங்களால் முகம் இளைத்து எப்பொழுதும் தரித்திருந்த ஒரே வஸ்த்ரமே நலுங்கி அழுக்கடைந்திருக்கப்பெற்று தேஹ ஸம்ஸ்காரஞ்சிறிதும் இல்லாமையால் தூம்பும் தூசியும் படிந்த ஸமஸ்த அவயவங்களு முடையவளாகிப் புலப்பட்டனள். அனந்தரம் அவளைச் சிறிது நேரம் பார்த்து ஸீதையென்றே நிச்சயித்து வருத்த முற்றனன். அவன் அந்த ஜனகராஜன் புதல்வியாகிய ஸீதையைப் பார்த்து ஸ்வல்பகாலமே ஆயிற்ருகையால் அவள் ஸீதையே யென்று நிச்சயிக்குந் திறமையுடையவனுயினன். அங்ஙனம் தீனையாகி அழுக்கடைந்த அங்கங்களோடு ஸீதை அவனது ரதத்திலிருக்கக் கண்டு, ஹநுமான், முகத்தில் கண்ணீர் பெருகப்பெற்றுக் கலங்கி மிகுதியும் துக்கித்தனன். ஹநுமான், அங்ஙனம் துக்கத்தினுல் வருந்தி ஆநந்தமின்றிக் காண்போர்களுக்கு மன இரக்கம் உண்டாகும்படி ஸீதை இந்த்ரஜித்தின் வசம் அகப்பட்டு அவனது ரதத்திலிருக்கக் கண்டு 'இங்ஙனம் இவன் ஸீதையை ரதத்தில் ஏற்றிக் கொண்டு வருவதற்கு என்ன அபிப்பிராயமா யிருக்கும்?' என்று ஆலோசித்துக் கொண்டே அங்குள்ளவரை வினுவினுன். அப்பால் அவன் அவ்வானர ஶ்ரேஷ்டர்களோடு கூடி இந்த்ரஜித்தினருகே போயினன். அங்ஙனம் வானர ஸைன்யம் தன்மேல் வருவதைக் கண்டு கோபாவேசமுற்று உறையினின்று கத்தியை எடுத்து ஸீதையின் சிரஸ்ஸைப் பிடித்துக் கொண்டனன். இந்த்ரஜித்து, மாயையினுல் ரதத்தில் நிர்மிக்கப்பட்டு 'ராமா! ராமா!' என்று கூச்சலிடுகின்ற ஸீதையைப் போன்ற பெண்ணுருவத்தை, அவ்வானரர்கள் அனைவரும் பார்த்துக்கொண்

டிருக்கும் பொழுதே, அடித்தனன். வாயுகுமாரனுகிய ஹனுமான், ஸீதையின் தலைமயிர்களை இந்த்ரஜித்து பிடித்துக் கொண்டதைக் கண்டு, தீனனுகிக் கண்களி னின்று நீரைப் பெருக்கினன். அங்ஙனம் ஸர்வாங்க ஸுந்தரியும் ராமனது அருமையான பட்ட மஹிஷியு மாகிய ஸீதை அங்ஙனம் அவஸ்தைப்படுவதைக் கண்டு ஹனுமான் கோபித்து ராக்ஷஸேந்த்ர குமாரனுகிய இந் த்ரஜித்தைப் பார்த்துப் பருஷ வசனங்களைப் பேசத் தொடங்கி 'அடா துர்ப்புத்தீ! நீ ப்ரஹ்மரிஷி வம்சத்தில் பிறந்தவனுயிருந்தும் ராக்ஷஸ யோனியிற் சேர்ந்தவனு கையால், மஹா பதிவ்ரதையான ஸீதையின் தலைமயிர் களைப் பிடித்தாயல்லவா? இதனுல் நீ தப்பாமல் நாசம் அடைவாய். இப்படிப்பட்ட துர்ப்புத்தி உண்டாயிற்ரு? சீ! இப்படிப்பட்ட பாப நடத்தையுடைய நீ பாழாய் விடு வாயாக. மன இரக்கமில்லாதவனே! துராசாரா! அற்ப னே! அதர்ம விஷயத்தில் பராக்ரமத்தை நிறைவேற்று கின்றனையா? அடே! எப்படிப்பட்ட நீசத்தொழிலையும் அபூஜ்யனே (பூஜைக்கிடமாகாதவனே) செய்வானன்றி மற்ருருவன் செய்யானே! நிர்த்தயனே உனக்கு ஜுகுப்ஸையுங்கூட இல்லையே. 'அபராதஞ் செய்தவ ரிடத்தில் தயைகூடாது' என்கிருயே? இவள், வீட்டை யும் வேலைக்காரர்களையும் விட்டவள். ஆகையால் பந் துக்கள் மூலமாய் எந்த அபராதமுஞ் செய்தவளல்லள்; ராஜ்யத்தையும் ராஜ்ய பரிகரங்களையும் விட்டவள், ஆகையால் ஸேனை மூலமாகவும் எந்த விபரீதமும் செய் தவளல்லள்; ரக்ஷகனுகிய ராமனிடத்தினின்றும் பிரிந்த வள்; ஆகையால் அவன் மூலமாகவும் தப்பு செய்ய அவ காசமில்லை. மற்றும், ஆசாரத்தையே முக்யமாகவுடைய மிதிலாராஜ வம்சத்தில் பிறந்தவள்; ஆகையால் அபரா தத்தின் வடிவம் எப்படிப்பட்டதோ அறியாள். இவ

ளைக் கொல்ல விரும்புகின்றனையே. இதற்கு இவள் உனக்கு என்ன அபராதஞ் செய்தனள்? ஸீதையைக் கொன்று நீ எப்படிப்பட்டவனாயினும் எவ்விதத்திலாயினும் இனி வெகுநேரம் பிழைத்திருக்க மாட்டாய். நீ இப்படிப்பட்ட மஹா பாபகர்மத்தைச் செய்தமைபற்றி வதிக்கத் தகுந்தவனாகி என் கையில் அகப்பட்டுக்கொண்டனை. இனி உயிரோடு தப்பித்துக்கொண்டு போவது ஏது.? அடே! நீ உன் சத்ருவுக்கு மாத்ரமேயன்று, ஸமஸ்த லோகங்களுக்கும் கண்டகனாகையால் ஸமஸ்த லோகங்களுக்கும் நீ வதிக்கத் தகுந்தவனே. நீ இப்பொழுது இந்த லோகத்தில் ஜீவித்திருப்பதை இழந்து ப்ரேதமாகி, இந்தப் பதினான்கு லோகங்களிலும் ஸ்த்ரீஹத்யை செய்தவர்கள் எந்தப் பாபிஷ்ட லோகங்களைப் பெறுவார்களோ, அந்த லோகங்களைப் பெறுவாய்' என்றனன். ஹனுமான் இங்ஙனம் பருஷவசனங்களைப் பேசிக்கொண்டு, யுத்தத்திற்கு வேண்டிய கல் முதலியவற்றைத் தரித்து யுத்தத்திற்கு ஸித்தமாயிருக்கிற வானரர்களோடுகூடி மிகுதியும் கோபம் மேலெழப்பெற்று இந்த்ரஜித்தின் மேல் எதிர்த்தனன். பயங்கரமான வேகமுடைய ராக்ஷஸர்களின் ஸைன்யமானது, அங்ஙனம் மேல் விழுந்து வருகின்ற மஹா வீர்யமுடைய ஹனுமானையும் அவனைச் சேர்ந்த வானர ஸைன்யத்தையும் தடுத்தது. அவ்விந்த்ரஜித்து ஆயிரம் பாணங்களை விடுத்து அவ்வானர ஸேனை முழுவதையும் கலங்கச் செய்து வானர ஸ்ரேஷ்டனாகிய ஹனுமானைப் பார்த்து 'எவளுக்காக, ஸுக்ரீவனும் நீயும் ராமனும் இந்த லங்கைக்கு வந்தீர்களோ, அந்த ஸீதையை இப்பொழுது நீ பார்த்துக் கொண்டிருக்கும்பொழுதே கொன்றுவிடுகிறேன். வானரனே! இந்த ஸீதையை முன்னங்கொன்று,

அப்பால் ராமனையும் லக்ஷ்மணனையும் உன்னையும் ஸுக்ரீவனையும் துர்மார்க்கனுகிய அந்த விபீஷணனையும் வதித்துவிடுகிறேன். குரங்கு! மற்றும், நீ, ஸ்த்ரீகளைக் கொல்லலாகாதென்று மொழிந்தனையே! அதற்குமறுமொழி கூறுகிறேன் கேள். பகைவர்க்கு எது வருத்தத்தை விளைவிக்குமோ, அது எப்படிப்பட்ட தாயினும் அவஶ்யம் செய்யத்தக்கதே. ஆகையால் ஸீதையைக் கொல்லுவது உங்களுக்கு வருத்தம் விளைப்பதாகையால் செய்யத் தகுந்ததே' என்றனன். இந்த்ராஜித்து, ஹனுமானுக்கு இவ்வண்ணம் மொழிந்து, அப்பொழுது ரோதனஞ் செய்கின்ற மாயா ஸீதையைக் கூரிய நுனியுடைய கத்தியைக் கொண்டு தானே துண்டித்தனன்; [1]பருத்த இடையின் பின்புறமுடையவளும் இனியகாட்சியுடையவளும் அப்பொழுதுள்ள துரவஸ்தையால் சோகிக்கத் தகுந்தவளுமாகிய அந்த ஸீதையின் தலைமயிர்

---

1 இந்த்ரஜித்து நிகும்பிலை யென்னும் தேவாலயத்தில் பிறர்க்கு வெல்லமுடியாத அஸ்த்ரங்களைப் பெறுதற்காக ஹோமஞ்செய்ய விரும்பி அதுவரையில் ராமலக்ஷ்மணர்கள் யுத்த ப்ரயத்தனம் அற்றிருக்கும்படி செய்ய மாயையைக் காட்ட முயன்று மாயா ஸீதையை ஏற்படுத்தி, ராமலக்ஷ்மணர்கள் கோபித்திருக்கையால் அவர்களை அணுகுவது வருத்த மாகையால் அவர்களுக்கு அந்த ஸீதையைக் காட்ட நேராமையாலும் ஹனுமான் தவிர மற்றை வானரர்கள் ஸீதையைக் கண்டறியார்களாகையால் அவர்கட்கு ஸீதையைக் காண்பிப்பினும் ஸீதையென்று தெரிந்துகொள்ள மாட்டாராகையாலும் மேற்கு வாசலில் ஹனுமானுக்கு அந்த ஸீதையைக் காட்டிச் சேதித்தனன். இங்ஙனம் மாயாஸீதையைச் சேதித்தமை கண்டு ஹனுமான் போய் இந்த ஸங்கதியை ராமாதிகளுக்கு அறிவிப்பானென்றும், அவர்கள் வருத்தத்தினுல் ஸ்வாதீனமற்று யுத்த ப்ரயத்னம் குறையப் பெற்றிருப்பார்களென்றும், அதனுல் தன் ஹோமம் நிர்விக்னமாக நிறைவேறுமென்றும் இந்த்ரஜித்தின் கருத்து.

களைப் பிடித்துக் கொண்டு யஜ்ஞோபவீதம் இடும் வழியாக வெட்டுகையில், அவள் வெட்டுண்டு பூமியில் விழுந்தனள். அங்ஙனம் அவன் அந்த மாயாஸீதையைத் தானே வதித்து ஹநுமானைப் பார்த்து 'நான் கோபத்தினால் ராமனது மனைவியாகிய இந்த ஸீதையைக் கொன்றேன்; காண்பாய். இந்த ஸீதை என்னவோ துண்டிக்கப்பட்டனள். இனி உங்கள் ப்ரயாஸமெல்லாம் வீணே' என்றனன். அங்ஙனம் அவ்விந்த்ரஜித்து தானே பெரிய கட்கத்தினால் அந்த ஸீதையைத் துண்டித்து ஸந்தோஷம் அடைந்து ரதத்தினின்றே பெருங்கோஷம் உண்டாகும்படி ஸிம்ஹநாதஞ் செய்தனன். அப்பொழுது அருகில் யுத்தத்திற்காக நிற்கின்ற வானரர்கள் எல்லோரும், இந்த்ரஜித்து சுற்றிலும் கோட்டைபோல் சூழ்ந்திருக்கிற ராக்ஷஸர்களின் இடையில் நின்று பெரிதாக வாயைத் திறந்து கோஷமிட, அந்த த்வனியைச்செவியுற்றனர். துர்ப்புத்தியாகிய அவ்விந்த்ரஜித்து அங்ஙனம் ஸீதையை வதித்து மனத்தில் மிகுந்த ஸந்தோஷம் உண்டாகப் பெற்றனன். அங்ஙனம் மிகுந்த ஸந்தோஷத்துடன் வளர்கின்ற அவ்விந்த்ரஜித்தைப் பார்த்து வானரர்கள் மிகவும் வருந்தி, முன்பின் பாராமல் ஓடிப்போகத் தொடங்கினர். எண்பத்தொன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஹநுமான் ஓடும் வானரர்களை திருப்பி ராக்ஷஸர்களை வதித்து ஸீதையின்வதத்தை அறிவிக்கும் பொருட்டு ராமனிடம் போதலும், இந்த்ரஜித்து நிகும்பிலையில் ஹோமஞ் செய்தலும்.

வானர ஸ்ரேஷ்டர்கள், வஜ்ராயுத கோஷம்போல் மிகுதியும் பயங்கரமாக மேலெழுகின்ற இந்த்ரஜித்தின் ஸிம்ஹநாதத்தைக் கேட்டு பயத்தினால் திசைகளையெல்

லாம் பார்த்துக்கொண்டு ஓடிப்போயினர். அனந்தரம் வாயுபுத்ரனான ஹநுமான் அங்ஙனம் திகிலடைந்து முகம் விலவிலக்கப்பெற்று, தீனர்களாகி ஒருவரோடொருவர் பற்றின்றித் தனித்தனியே ஓடிப்போகின்ற அவ்வானரர்களைப் பார்த்து 'வானரர்களே! முகத்தில் வருத்தம் வழியப்பெற்று யுத்தத்தில் உத்ஸாஹத்தைத் துறந்து ஓடிப்போகிறீர்களே! இது வென்? உங்கள் சூரத்தனமெல்லாம் இப்பொழுது எங்குப் போயிற்று? நான் யுத்தத்தில் முன்னே நடக்கிறேன். என்னைப் பின்றொடர்ந்து வருவீர்களாக. இதுவரையில் பல யுத்தங்களில் புகழ் பெற்ற சூரர்கள் யுத்தத்தினின்று பின் வாங்குவது எவ்விதத்திலும் யுக்தமன்று' என்றனன். வாயுகுமாரன் இங்ஙனம் சொல்லுகையில், அவ்வானரர்கள் மனத்தில் ஸந்தோஷம் உண்டாகவும் தேஹம் முழுவதும் மயிர்க்கூச்சல் விளையவும் பெற்றுப் பர்வத சிகரங்களையும் வ்ருக்ஷங்களையும் கையில் கொண்டு யுத்தத்திற்கு முயன்றனர். அனந்தரம் அவ்வானரஸிம்ஹர்கள் கர்ஜித்துக்கொண்டு ராக்ஷஸர்மேல் எதிர்த்துப்போயினர். அம்மஹாயுத்தத்தில் அவர்களெல்லோரும் ஹநுமானைச் சூழ்ந்து பின்றொடர்ந்து நடந்தனர். அந்த ஹநுமான் நாற்புறத்திலும் அக்னிபோல் ஜ்வலிக்கின்ற மேலான வானரர்களால் சூழப்பட்டு ஜ்வாலைகளோடு கூடின அக்னிபோல் சத்ருஸைன்யங்களை தஹித்தனன். ப்ரளயகாலத்தில் ப்ரஜைகளை நாசஞ் செய்கின்ற யமன் போன்ற அம்மஹாகபி ஹநுமான் வானர ஸைன்யங்களால் சூழப்பட்டு ராக்ஷஸர்களோடு யுத்தஞ் செய்தனன். மஹாகபியான அந்த ஹநுமான் ஒரு பக்கத்தில் கோபமும் ஒரு பக்கத்தில் சோகமும் மேலெழப்பெற்று இந்த்ரஜித்தின் ரதத்தின் மேல் ஓர் பெரிய கல்லை எடுத்

துப்போகட்டனன். அப்பொழுது இந்த்ரஜித்தின் ஸாரதி அங்ஙனம் மேல் வருகின்றதும் மிகுதியும் பெரியதுமான அந்தச் சிலையைப் பார்த்தவுடனே, குதிரைகள் தான் தூண்டினபடி தவருமல் மிகுதியும் உட்பட்டிருப்பவையாகையால், அவை பூட்டப்பெற்ற ரதத்தை உடனே குறி தவறும்படி வெகுதூரம் அப்புறத்தில் கொண்டுபோயினன். அந்தப் பெருங்கல்லு, ரதத்திலுள்ள இந்த்ரஜித்தின்மேலாவது அவன் ஸாரதி மேலாவது படாமற் போகையால் வீணுகி பூமியைப் பிளந்து கொண்டு பாதாளத்தில் புகுந்தது. அந்தச் சிலையை ஹநுமான் ப்ரயோகித்தவுடனே ராக்ஷஸப்படையெல்லாம் வருத்தமுற்றது. அனந்தரம் அந்தச் சிலை கீழ் விழுகையில், அதன் கீழ் அகப்பட்டு ராக்ஷஸர் மிகுதியும் நசுங்கிப் பாழாயினர். வானரர்கள் பெருங்கோஷத்துடன் அனேகமாயிரம்பேர் அவ்விந்த்ரஜித்தின் மேல் எதிர்த்தனர். மஹா வீர்யமுடையவரும் பயங்கர பராக்ரமர்களுமாகிய அவ்வானரர்கள், யுத்தத்தில் இந்த்ரஜித்தின்மேல் வ்ருக்ஷங்களையும் பர்வத சிகரங்களையும் ப்ரயோகித்தனர். அப்பொழுது வானரர்கள் வ்ருக்ஷங்களையும் பர்வதங்களையும் பெருமழையாகப் பகைவர் மேல் பெய்வதும் பலவகைக் குரலுடன் கூச்சலிடுவதுமாகி ராக்ஷஸர்களோடு யுத்தஞ் செய்தனர். மஹா வீர்யசாலிகளான அவ்வானரர்கள் தமது பலம் உள்ளளவுங் கொண்டு வ்ருக்ஷங்களால் அடிக்கையில் பயங்கரமான உருவமுடைய ராக்ஷஸர் யுத்தபூமியில் வீழ்ந்து புரண்டனர். அனந்தரம் இந்த்ரஜித்து தன் ஸைன்யமெல்லாம் வானரர்களால் பீடிக்கப்பட்டிருப்பதைக் கண்டு கோபித்து வில்லைப்பிடித்து வானரர்களுக்கெதிரே நடந்தனன். இதுவரையில் பராக்ரமத்தை மிகுதியும் பலவாறு நிறைவேற்றியிருக்கிற அவ்விந்த்ரஜித்து,

தன் ஸைன்யம் சுற்றிலும் சூழ்ந்துவரப் பெற்று பாண ஸமூஹங்களை விடுத்து வானர ஶ்ரேஷ்டர்கள் பலரை யும் வதித்தனன். அவ்விந்த்ரஜித்தைப் பின்றொடர்ந்த ராக்ஷஸர்களும் சூலம் பிடிகத்தி பட்டயம் கூடமுத்கர கம் இவைகளால் தமது பலம் உள்ளவளவும் வானரர் களை அடித்தனர். மஹா பலமுடைய ஹனுமான் அடிப் பாகங்களோடும் கிளைகளோடுங்கூடின வ்ருக்ஷங்களையும் கற்களையுங்கொண்டு, பயங்கர பராக்ரமரான ராக்ஷஸ ரோடு யுத்தஞ் செய்தனன். அந்த ஹனுமான் அங்ஙு னம் பராக்ரமத்தினால் சத்ரு ஸைன்யங்களைத் தடுத்து அப்பால் அந்த வானரர்களைப் பார்த்து, நமக்கு இந்த ஸைன்யத்தை வென்று ஸாதிக்க வேண்டியதொன்று மில்லை. நாமெல்லோரும் ராமனுகு ப்ரியஞ்செய்ய விரும்பி ப்ராணன்களில் ப்ரீதியில்லாமல் அவற்றையும் துறக்க முயன்று, நின்ற நிலையில் நிற்பதின்றிப் பல சேஷ்டைக ளைச் செய்துகொண்டு எவள் நிமித்தமாக யுத்தஞ் செய் கின்றோமோ, அப்படிப்பட்ட அந்த ஜனகராஜன் புதல்வி யாகிய ஸீதை வதிக்கப்பட்டனள். இந்த்ரஜித்து ஸீதை யைக் கொன்ற இந்த வ்ருத்தாந்தத்தை ராமனுக்கும் ஸுக்ரீவனுக்கும் தெரிவித்து, அவர்கள் இதற்கு என்ன பரிஹாரஞ் செய்ய நியமிக்கின்றார்களோ, அதை யே நாம் செய்வோம், அதுவே யுக்தம்' என்றனன். அவ்வானர ஶ்ரேஷ்டன் இங்ஙனஞ்சொல்லி வானரர்க ளெல்லோரையும் யுத்தத்தினின்று திருப்பிப் பகைவர் க்கு எள்ளளவும் பயப்படாதவனாகையால் மெல்ல மெல்ல ஸேனையுடன் திரும்பிப் போயினன். அனந்தரம் துர்ப் புத்தியாகிய அவ்விந்த்ரஜித்து, ஹனுமான் ராமனிருக் குமிடம் போவதைக்கண்டு தானும் ஹோமஞ்செய்ய விரும்பிச் சைத்யத்திலிருக்கின்ற நிகும்பிலை யென்னுந் தேவாலயத்திற்குப் போயினன். இந்த்ரஜித்து நிகும்பி

லேக்குச் சென்று அக்னியில் விதிப்படி ஹோமஞ் செய்த னன். அப்பொழுது யாக பூமியில் இந்த்ரஜித்து அக்னி யில் விதிப்படி மாம்ஸத்தையும் ரக்தத்தையும் ஹோ மஞ் செய்கையில், அவ்வக்னி அந்த ஹவிஸ்ஸைப் பெற் று மிகுதியும் ஜ்வலித்தது. ரக்த ஹோமத்தினால் த்ரு ப்தி அடைவிக்கப்பட்ட அவ்வக்னி எழுந்து மிகுதியும் உஷ்ணமாக எரிகின்ற ஜ்வாலைகள் சூழப்பெற்று ஸந்த் யாகாலத்து ஸூர்யன்போல் புலப்பட்டனன். அனந்த ரம் இந்த்ரஜித்து சாஸ்த்ரங்களிற் சொன்ன விதிகளை யெல்லாம் நன்குணர்ந்தவனாகையால் ராக்ஷஸர்களுக்கு க்ஷேமம் உண்டாகும்பொருட்டு விதிப்படி அக்னியில் ஹவிஸ்ஸை ஹோமஞ் செய்தனன். அப்பொழுது அங் குள்ள ராக்ஷஸ மஹா ஸபையில் சாஸ்த்ரீயங்களையும் அசாஸ்த்ரீயங்களையும் நன்கு உணர்ந்த ராக்ஷஸர் அந்த ஹோமகார்யத்தில் விதிலோபம் சிறிதும் உண் டாகாதபடி பார்த்துக்கொண்டிருந்தனர். எண்பத்தி ரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

இந்த்ரஜித்து ஸீதையை வதித்தானென்று கேள்விப்பட்டு ராமன் துக்கித்தலும் லக்ஷ் மணன் ஸமாதானங்கூறுதலும்.

ராமன் ராக்ஷஸர்களும் வானரர்களும் நடத்துகிற யுத்தத்தில் உண்டான பெருங்கோஷத்தைக் கேட்டு, அப்பொழுது தன்னிடம் வந்த ஜாம்பவானைப் பார்த் து, 'ஸௌம்யனே! ஹனுமான் இப்பொழுது பிறர்க்குச் செய்ய முடியாத கார்யஞ் செய்வதாகத் தெரிகிறது. நிச்சயம். ஏனெனில், அவ்விடத்தில் பயங்கரமாகவும் மிகப் பெரியதாகவும் ஆயுதங்களின் த்வனி செவிப்படு கின்றது. பல்லூகராஜனே! ஆகையால் நீ உன் ஸேனை யுடன்கூடி அவ்விடத்துக்குச் சீக்ரமாகப் போவாய்.

போய், தனியே யுத்தஞ்செய்கின்ற கபிஸ்ரேஷ்டனாகிய ஹனுமானுக்கு விரைவில் ஸஹாயஞ் செய்வாய்' என்றனன். கரடிகளுக்குத் தலைவனாகிய ஜாம்பவான் ராமன் அங்ஙனஞ் சொல்லக்கேட்டுத் தன் ஸைன்யத்தோடுகூடி, ஹனுமானிருக்கும் மேற்கு வாசலுக்குப் போயினன். அனந்தரம் வானரர்கள் யுத்தஞ்செய்து இளைப்புற்று நெடுமூச்செறிந்துகொண்டு தன்னைச் சூழ்ந்திருக்கப்பெற்று வருகின்ற ஹனுமானை, ஜாம்பவான் நடுவழியிலேயே கண்டனன். ஹனுமானும், நீலமேகம்போல் கறுத்து, பயங்கரமான உருவமுடையதுமான அந்த பல்லூக ஸைன்யம் யுத்த முயற்சியுடன் வருவதை வழியில் கண்டு, அதைப் பின்னே திரும்பவேண்டுமென்று மொழிந்து தான் ராமனிடம்போயினன். மிகுந்த புகழுடைய ஹனுமான் வானர ஸைன்யத்தோடுகூட விரைவாக ராமனிடம் போய், வருந்தி அவனைப் பார்த்து, யுத்தத்தில் நாங்கள் போராடிக்கொண்டு எதிரேயிருந்து பார்த்துக்கொண் டிருக்கும்பொழுதே, ராவண புத்ரனாகிய இந்த்ரஜித்து ஸீதையைப் பிடித்துக்கொண்டு வந்து புலம்பி ரோதனஞ் செய்கின்ற அவளைக் கொன்றனன். சத்ருக்களை அழிப்பவனே! அங்ஙனம் ஸீதை வதிக்கப் படுவதைக் கண்டு, நான் மனம் தழதழக்கப்பெற்று மிகுதியும் துக்கமுற்றனன். ஆகையால் ஏதும் தோற்றாதிருக்கின்றது. இந்த ஸங்கதியை உனக்குச் சொல்லும் பொருட்டு இவ்விடம் வந்தேன்' என்றனன். ஹனுமான் அங்ஙனஞ் சொன்னதைக் கேட்டு ராமன் சோகத்தின் மிகுதியால் மூர்ச்சித்து வேரில் அறுப்புண்ட வ்ருக்ஷம் போல் கபீலென்று தரையில் வீழ்ந்தனன். தேவதையைப்போன்ற அந்தராமன் பூமியில் விழுவதைக் கண்டு, வானரோத்தமர்கள் அனைவரும் எல்லாத் திசைகளி

னின்றும் அவனிடத்திற்கு ஓடிவந்தனர். அவர்கள், ஜ்வாலைகள் மேலெழப்பெற்று எரிகின்ற அக்னிபோல், பூமியில் வீழ்ந்திருப்பினும் தேஜஸ்ஸினால் எவர்க்கும் அணுகமுடியாதவனாகிப் பிறரைதஹிப்பவன் போன்ற அந்த ராமனை, மூர்ச்சை தெளியும் பொருட்டு, தாமரையும் நெய்தலும் நிறைந்து நன்மணங்கமழப் பெற்ற ஜலங்களை வேகமாகத் தெளித்து நனைத்தனர். அதன் பிறகு லக்ஷ்மணன் மிகுதியும் வருந்தி அங்ஙனம் கிடந்தப்பியிருக்கின்ற ராமனைத் தனது புஜங்களால் இழுத்து அணைத்து யுக்தியும் ப்ரயோஜனமும் அமைந்த உரைகளைமொழியத் தொடங்கிப், 'பெரியோனே! நீ பித்ரு வசன பரிபாலனம் முதலிய தர்மமார்க்கத்தை உறுதியாக அனுஷ்டிப்பவன்; கைக்குவந்த ராஜ்யத்தையும் போக்கடித்தகைகேயீ தசரதர்களிடத்திலும் சிறிதும்மனக்கலக்கமில்லாதிருக்கையால் இந்த்ரியங்களை வென்றவனென்பதில் ஸந்தேஹமில்லை. இப்படிப்பட்ட தர்மிஷ்டனாகிய உன்னையும், தர்மம் முயற்கொம்புபோல் கேவலம் உலகத்தில் வழங்கி வருவது மாத்ரமேயன்றி வாஸ்தவத்தில் உளதன்றேயாகையால், வ்யஸனங்களினின்று ரக்ஷிக்க முடியாதிருக்கின்றது. அது வாஸ்தவத்தில் உளதாயிருக்கிலன்றோ உன்னை ரக்ஷிக்கும்? இல்லாதது எப்படி ரக்ஷிக்கும்? அப்படியே அதர்மமும் ஸுகங்களைப் போக்கடிக்க வேண்டியதாயினும், அதுவும் இல்லாததேயாகையால் ராவணனது ஸுகங்களைத் தடுக்கமுடியாதிருக்கின்றது. 'தர்மமும் அதர்மமும் இல்லையென்பதற்கு ப்ரமாணம் என்? ப்ரத்யக்ஷமா? அனுமானமா? சப்தமா?' என்று வினவுகையில் அசைவனவும் அசையாதவையுமாகிய பதார்த்தங்கள் எப்படி ப்ரத்யக்ஷமாகத் தெரிகின்றனவோ, அப்படி தர்மமும் அதர்மமும் ப்ரத்யக்ஷமாகத் தெரிபவையன்று. தர்மமாவது அதர்மமாவது ப்ரத்யக்ஷ

ஸித்தமாயின். அது அசையும் பொருளாகவோ அசையாப் பொருளாகவோ புலப்படவேண்டும். அங்ஙனம் புலப்படாமையால் அவை ப்ரத்யக்ஷங்களன்று. அன்றியும் தர்மம் ப்ரத்யக்ஷஸித்தமாயின், உன்னைப்போன்ற தார்மிகனுக்கு ஆபத்தே நேர அவகாசமில்லை. அதர்மமும் அப்படியே உளதாயின் ராவணனைப்போன்ற அதார்மிகனுக்கு ஸுகமே விளைய இடமில்லை. அப்படி இல்லையாகையால் இந்த தர்ம அதர்மங்களிரண்டும் ப்ரத்யக்ஷ ஸித்தங்களென்று உனக்குச் சொல்லமுடியாது. மற்றும் தர்மத்திற்குப் பலன் ஸுகம்; அதர்மத்திற்குப் பலன் வ்யஸனம்; ஆகையால் ஸுகதுக்கங்களாகிற பலன்களைப் பற்றி, தர்ம அதர்மங்களிரண்டும் உண்டென்று அனுமானத்தினல் தெரியவருமல்லவா? அப்பொழுது அதர்மம் உளதாயின், அதர்மிஷ்டனுகிய ராவணன் துக்கத்தை அடையவேண்டும். அப்படியே தர்மம் வாஸ்தவமாக உளதாயின் தர்மிஷ்டனுகிய உனக்கு இங்ஙனம் வ்யஸனம் உண்டாக இடமில்லை. இங்ஙனம் தர்மிஷ்டனுக்கு வ்யஸனமும் அதர்மிஷ்டனுக்கு வ்யஸனமில்லாமையும் ஸம்பவிக்கின்றமையால் ஸுகதுக்கங்களைப்பற்றி தர்ம அதர்மங்கள் உண்டென்று அனுமானத்தினுல் அறிய முடியாது. அதார்மிகனுன ராவணனுக்கு வ்யஸனமில்லாமல் ஸுகம் உண்டாயிருப்பதையும், பரம தார்மிகனுன உனக்கு வ்யஸனம் உண்டாயிருப்பதையுங் கண்டால், தர்மம் அதர்மபலனைக் கொடுப்பதாகவும் அதர்மம் தர்மபலனைக் கொடுப்பதாகவும் புலப்படுகின்றது. இங்ஙனம் தர்ம அதர்மங்கள் தந்தமக்கு விபரீதமான பலன்களைக் கொடுக்கின்றனவாகையால் ஸுகத்தைப் பற்றி தர்மம் உளதென்றும் துக்கத்தைப்பற்றி அதர்மம் உளதென்றும் அனுமானத்தினுல் நிச்சயிக்க முடியாது. மற்றும் தர்மத்தை

அனுஷ்டிப்பதினுல் தர்மபலனுன ஸுகம் உண்டாகுமென்றும், அதர்மத்தை அனுஷ்டிப்பதனுல் அதர்மபலனுன துக்கம் உண்டாகுமென்றும் நினைக்கிருயா? ஸ்ரீராமா! எவர் மிகவும் அதர்மிஷ்டரோ அவர்க்கு அதர்மபலன் உண்டாமென்றும், எவர் மிகுதியும் தர்மிஷ்டரோ அவர்க்கு தர்மபலன் உண்டாமென்றும் உளவாயின், அப்பொழுது தர்மத்தை ஆசரிக்கும் ஜனங்களுக்கு தர்மபலனுன ஸுகம் விளையுமென்றும், அதர்மத்தை ஆசரிப்பவர்க்கு அதர்மபலனுன துக்கம் விளையுமென்றும் ஸித்தமாகின்றது. ஆனுல் அப்படி அனுபவத்தில் புலப்படவில்லை. ஏனென்னில், அதர்மத்திலேயே வர்த்திப்பவர்களுக்குப் பணங்கள் வளர்ந்து ப்ரயோஜனங்கள் கைகூடி ஸுகமும் விளைகின்றது. தர்மத்தில் தவருது நடப்பவர்களுக்கு துக்கம் விளைகின்றது. இங்ஙனம தர்மத்திற்கு ஸுகம் பலனென்றும் அதர்மத்திற்கு துக்கம் பலனென்றும் நியதியில்லாமையால், ஸுகத்தைப்பற்றி தர்மம் உளதென்று அனுமானத்தினுல் அறியமுடியாது. ராமா! இனி, சப்த ப்ரமாணத்தினுல் தர்மமும அதர்மமும் உண்டென்று நிச்சயிக்கலாமென்கிருயோ? அதுவும் இல்லை பாபகர்மஞ் செய்தவர் அதர்மத்தினுல் துக்கம் அடைவார்களென்றும், புண்யகர்மஞ் செய்தவர் தர்மத்தினுல் ஸுகம் அடைவார்களென்றும் சொல்லவேண்டும். பாபகர்மமாகிய அதர்மமும் புண்யகர்மமாகிய தர்மமும் பிறந்து [1]மூன்று க்ஷணங்களே இருப்

1 சப்தம் புத்தி கர்மம் ஆகிய மூன்றும் மூன்று க்ஷணங்களுக்கு மேல் இருக்க மாட்டாவென்று சாஸ்த்ரஞ் சொல்லுகிறது. க்ரியாருபங்களான தர்மாதர்மங்கள் இங்ஙனம் க்ஷணிகங்களாகையால் அவை காலாந்தரத்தில் ஸுக துக்க பலன்களைக் கொடுக்கை நேராது. ஆகையால் அவை ஸுகதுக்கங்களைக் கொடுக்குமென்றும்

பவையாகையால் அவை உடனே நாசம் அடைகின்றன. அப்படி நாசம் அடைந்த அதர்மம் எவரை ஹிம்ஸிக்கும்? நாசம் அடைந்த தர்மம் எவரை ஸுகப்படுத்தும்?' ஆகையால் தர்மாதர்மங்கள் ஸுகதுக்கங்களைக் கொடுக்குமென்று சொல்லும் வேதம் முதலிய சப்தப்ரமாணங்கள் ஸரியல்லவாகையால் அவற்றைக் கொண்டு தர்மாதர்மங்கள் உண்டென்று நம்பமுடியாது. 'புண்ய பாபகர்மங்கள் க்ஷணத்தில் த்வம்ஸமடையினும், அவற்றால் ஆராதிக்கப்பட்ட தேவதையே பலன கொடுக்கிறது' என்கிறாயோ? அந்த தேவதையால் (தெய்வத்தினால்) இப்புருஷன் தான் வருத்தமுறுவதும் ஒருவனை வருத்தமுறச்செய்வது மாயிருப்பானாயின், ஸத் தர்மத்தினால் ஆராதிக்கப்பட்ட அந்த தெய்வமே ஸுகத்தைக் கொடுக்குந்தர்மமும், அஸத்கர்மத்தினால் ப்ரீதியடையாத அந்த தெய்வமே துக்கத்தைக் கொடுக்கும் அதர்மமும் ஆகவேண்டும். அப்பொழுது அந்த தெய்வமே புண்யத்தையும் பாபத்தையும் செய்விக்குமாயின், பாபகர்மத்தின் பலனான துக்கமும் புண்யகர்மத்தின் பலனான ஸுகமும், புண்யபாபங்களைச் செய்வித்த அந்த தெய்வத்தைச் சேருமேயன்றிச் செய்த புருஷனைச் சேரா. அரசன் செய்வித்த கார்யத்தின் பலன் அரசனுக்கேயன்றி ப்ருத்யனுக்கன்று, ஆகையால் தெய்வம் தானே தர்மாதர்மங்களாயிருந்து ஸுகதுக்க பலன்களைக் கொடுக்குமென்பது ஸரியன்று [1] 'புண்ய பாபகர்மங்களால் விளை

---

அந்த ஸுகதுக்க பலன்களைப் பற்றி அவை உண்டென்றும் வேதாதிகள் சொல்லுவது 'கல் மிதக்கிறது என்கிற வார்த்தை போன்றதேயாமென்று கருத்து.

1 ஸ்வதந்த்ரனாகிய மன்னவன் விளையாட்டின் பொருட்டு ஒரு மர்யாதையை ஏற்படுத்தி அதை அனுஸரிப்பவனை ஆதரிப்பதும் உல்லங்கனஞ் செய்பவனைத் தண்டிப்பது மாயிருப்பது போல், ஈஸ்வரனும் தனது ஆஜ்ஞையான ஸ்ருதி ஸ்ம்ருதிகளில் விதித்த கர்மங்

கிற அபூர்வமென்னும் தர்மம் பலனைக் கொடுக்கும்' என்கிறாயோ? சத்ருக்களை யழிப்பவனே! அனுமானத் தினால் அறிய முடியாததும் ப்ரத்யக்ஷமல்லாததும், அக்னி இந்த்ரன் முதலிய தேவதைகளைப்போல் அர்த்தவாத வாக்யத்தினால் ஏற்படாததுமான அபூர்வமென்னும் தர்மத்தினால் எப்படி நன்மையைப் பெறமுடியும்? ஸத்புருஷர்களில் தலைவனே! தர்மமென்னும் வஸ்து உளதாயின், தார்மிகனாகிய உனக்கு அனிஷ்டம் எதுவும் உண்டாகாது. ஆயினும், நீ உன் தர்மத்திற்குப் பலனான ஸுகத்தை அடையாமல் ஸஹிக்க முடியாத

களை அனுஷ்டிப்பவனை அனுக்ரஹிப்பதும் அவற்றை உல்லங்கனஞ் செய்பவனை நிக்ரஹிப்பதுமாயிருக்கின்றனன். ஆகையால் ஈஸ்வரனே தனது ஆஜ்ஞைப்படி நடப்பதாகிய தர்மத்தையும் ஆஜ்ஞையைக் கடப்பதாகிய அதர்மத்தையும் பற்றி ஸுகதுக்கங்களைக் கொடுக்கின்றனன்—என்றால், அவன் அங்ஙனம் அனுக்ரஹிப்பது தனக்காகவோ? பிறர்க்காகவோ? தனக்காகவே யென்னில்—அதனால் அவன் பெறவேண்டிய தொன்றுமில்லாமையால் அது பொருந்தாது. பிறர்க்காகவென்னில்—அப்பொழுது ஒருவனை ப்ரஹ்மாவாகவும் ஒருவனை ஒன்றுமில்லாத பேதையாகவும் படைக்கையால் அவனுக்குப் பக்ஷபாதமும் தயையில்லாமையாகிற நைர்க்ருண்யமும் உண்டென்று சொல்லவேண்டிவரும். ஈஸ்வரன் அவரவர் கர்மத்திற்குத் தகுந்தபடி ஸ்ருஷ்டிக்கிறானாகையால் பக்ஷபாதாதிகள் சொல்ல நேராதென்னில், ஸர்வஜ்ஞனாகிய அவன் நல்ல கர்மங்களில் ஜீவாத்மாக்களை நடத்தாமையால் தயையில்லாமை சொல்லவேண்டி வருகிறது. அனாதியான கர்மப்ரவாஹத்தினால் பூர்வபூர்வமான (முன்முன்புள்ள) கர்மங்களுக்குத் தகுந்தபடி அடிக்கடி நல்லதும் தீயதுமான கர்மங்களில் ஜீவனை நடத்துகிறானென்னில்—அப்பொழுது ஒருவனுக்கு மாறாமல் ஸுகமும் ஒருவனுக்கு மாறாமல் துக்கமும் உண்டாகவேண்டும். அங்ஙனம் நியதி புலப்படவில்லை. ஆகையால் கர்மத்தினால் விளையும் அபூர்வமென்னும் தர்மமே பலனைக் கொடுப்பதாகாதோ வென்னில்—சொல்லுகிறார்.

இப்படிப்பட்ட துக்கத்தை அடைந்தாயாகையால் அந்த தர்மம் உளதென்பது பொருந்தாது. உளதாயின் ஸுகத்தைக் கொடுக்காதா? இல்லாததேயாகவேணும். இங்ஙனம் அந்த அபூர்வமென்னும் தர்மத்திற்கு உன்னிடத்தில் உண்டாகவேண்டிய ஸுகமென்னும் கார்யம் உண்டாகாமையால் அது உண்டென்றே கற்பிக்கலாகாது. 'ஒருபொருளும் அதன் கார்யம் புலப்படாமை மாத்ரத்தினால் இல்லை யென்பதாக நிச்சயிக்கலாகாது. ஏனென்னில், அப்பொழுது இந்த்ரியங்களுக்குப் புலப்படாதவை யெல்லாம் இல்லை யென்னவேண்டிவரும். அங்ஙனம் இல்லை யென்னலாகாதல்லவா? மற்றும், ஒவ்வொரு பொருளுக்கும் ஸஹகாரியும் உண்டு. அந்த ஸஹகாரி கூடாத பக்ஷத்தில் அந்தப் பொருளுக்கு விளையவேண்டிய கார்யம் உண்டாகாது. இங்கு தர்மத்திற்கு ஸஹகாரி பௌருஷம். அந்தப் பௌருஷத்தைச் செய்யாமையால் அந்த தர்மத்தின் கார்யமாகிய ஸுகம் உண்டாகவில்லை' என்கிறாயோ? அப்படி ஸஹாயாபேக்ஷையின்றிக் கார்யஞ் செய்யுந்திறமையற்றதும் ஸஹாயத்தையே அபேக்ஷிப்பதுமாகிய தர்மம் கார்யத்தை விளைவிப்பதில் பௌருஷத்தை அபேக்ஷிக்கிறதாயின், தர்மம் தானே பலன் கொடுக்கு மென்கிற நியதியில்லாமையால், அதையே முக்யமாகப் பணியலாகாதென்று என் அபிப்ராயம். மற்றும், கார்யம் ஸாதிக்கிற விஷயத்தில் பௌருஷத்திற் காட்டில் தர்மம் குறைந்ததாயின், தர்மத்தை முக்யமாகக்கொள்ளாமல் இப்பொழுது தர்மத்தில் எப்படி இருக்கிறாயோ அங்ஙனமே பௌருஷத்திலும் இருக்கலாகும். பரந்தபனே! ஸத்யஞ் சொல்லுவது தர்ம மென்பர்கள். அப்படியாயின் நந்தந்தை உனக்குப் பட்டங் கட்டுகிறேனென்று சொல்லித் தவறினமையால்

ஸத்யத்தைத் தவிர்ந்தனன். ஸமஸ்த கல்யாண குணங் களுக்கும் இருப்பிடமும் மூத்த குமாரனுமாகிய உன்னை ராஜ்யத்தினின்று வனத்திற்குப் போகும்படி அனுப்பினுனுகையால் உன்னிடத்தில் தயையுமற்ற வனுயினன். அவனைக் கட்டிப் பொகட வேண்டியதா யிருந்தது. நியோ பித்ருவசனத்தை தவறுமல் செய் வேனென்று ப்ரதிஜ்ஞை செய்தவன். அந்த ப்ரதிஜ் ஞையின்படி தந்தை முதலிற் சொன்னவாறு பட்டங் கட்டிக்கொண்டு அவனை ஸத்யங் தவருதிருக்கும்படி ஏன் கட்டுப் படுத்தவில்லை? நீ பித்ருவசன பரிபால னஞ் செய்வதாக ப்ரதிஜ்ஞை பண்ணி அதன்படி ஸமஸ்த ப்ரஜைகளின் எதிரில் ராமனுக்குப் பட்டங் கட்டுகிறேனென்று முதலிற்சொன்ன தந்தையின் வசனம் ஸத்யமாகும்படி பரிபாலிக்க வேண்டியதா யிருந்தும் அதை விட்டு அவன் அடவிக்குப் போவென்ன, பின் னிட்ட வசனத்தை மாத்ரம் ஸத்யமாகும்படி காப்பாற் றினையாகையால் ஸத்யத்தையுங் கூடச் சிறிது காப் பாற்றியும் சிறிது காப்பாற்றுமலும் போயினையா கையால் நன்கு பரிபாலனஞ் செய்யாதவனேயாயினை. பரந்தபனே! தர்மமும் அதர்மமும் வாஸ்தவமாக உள்ளவையேயாயினும் தர்மத்தையே அனுஷ்டிக்க வேண்டுமென்றுவது, அதர்மத்தையே அனுஷ்டிக்க வேண்டுமென்றுவது நியதியில்லை. அவ்வப்பொழுதைக் குத் தகுந்தபடி இரண்டையும் அனுஷ்டிக்கலாகும்; எப் படியென்னில், கேவலம் தர்மத்தையே அனுஷ்டிக்க வேண்டுமென்று ஏற்படுமாயின், அப்பொழுது வஜ்ரந் தரித்த சதக்ரதுவான (நூறு யாகங்கள் செய்த) இந்த் ரன், விஶ்வருபனென்னும் முனிவனைக் கொன்று, யாக ஞ்செய்யத்தகாது; கொல்லாமலே யாகத்தை மாத்ரமே செய்திருப்பான். கேவலம்அதர்மத்தையே அனுஷ்டிக் கக்கூடுமாயின் அப்பொழுது நூறுயாகங்கள் செய்த

இந்த்ரன் வஜ்ரந்தரித்து முனிவனைக்கொன்று யாகஞ் செய்யவேண்டியதில்லை. முனிவனைக் கொல்வதுமாத்ரமே செய்திருக்கவேண்டும். இங்ஙனம்[1] க்ஷத்ரிய தர்மத்தில் நிலைநின்ற இந்த்ரன் தர்ம அதர்மங்களிரண்டையும் அனுஷ்டிக்கையால், அரசன் காலத்திற்குத் தகுந்தபடி இரண்டையும் செய்யவேண்டுமென்று ஏற்படுகின்றது. தர்மாதர்மங்களிரண்டையும் அனுஷ்டிக்காமல் ஒவ்வொன்றையே தனித்தனியாக அனுஷ்டித்துக்கொண்டு வருமளவில், அவை அங்ஙனஞ் செய்பவனை நாசஞ்செய்யும். ஆனதுபற்றியே புருஷன் ஒவ்வொன்றையே செய்யவேண்டுமென்னும் நியதியில்லாமல் அந்தந்த ஸமயத்திற்குத் தகுந்தபடி ஸமஸ்த கார்யங்களையும் தர்மத்தோடும் அதர்மத்தோடுங் கலந்தே செய்யவேண்டும். ராமா! மனஇரக்கத்திற்கு இடமானவனே! இங்ஙனம் அந்தந்தக் காலத்திற்குத் தகுந்தபடி மனம் போனவாறு இரண்டையுஞ் செய்வதே தர்மமென்று என் ஸித்தாந்தம். மற்றும், தர்மமே இல்லை என்றனன். அப்படியே இருக்குமாயின் முக்ய மன்றென்றனன். அது அமுக்யமாகவாயினும் உனக்கு நேராது. எப்படி என்னில், தர்மத்திற்கு மூலகாரணம் அர்த்தம். உனக்கு ராஜ்யம் நேர்ந்திருக்கும்பொழுது அதைத் துறந்தாயாகையால் ராஜ்யரூபமான அர்த்தத்தைப் பாழ்செய்துகொண்டனை. மூலமான அர்த்தத்தைப் பாழ்செய்கையில் தர்மம் எங்கிருந்து நேரப்போகிறது? தர்மம் உனக்கு அமுக்யமாகவாயினும் ஸம்பவிக்கவில்லை. பர்வதங்களினின்றே நதிகள் ப்ரவஹிக்கும்; அங்ஙனமே கப்பங்கொடுப்பது முதலிய அந்தக் காரணங்களால் சேர்ந்து க்ரமத்தில்

1 யாந்யேதாநி த்ரீணிந்த்ரோ வருண: பர்ஜந்யோ யம ஈஶாந:, என்று இந்த்ரன் க்ஷத்ரியனென்றமை ஸ்ருதியில் கூறப்பட்டது

வ்ருத்தி அடைந்த அர்த்தத்தினலேயே யஜ்ஞம் தானம் முதலிய ஸமஸ்த கர்மங்களும் நடக்கின்றன. அர்த்தமில்லாமல் தேஜஸ்ஸும் குறையப்பெற்ற புருஷன் எந்தக் கார்யஞ் செய்யினும், அவையெல்லாம் வெயிற்காலத்தில் அற்ப நதிகள் போல் (சிற்ருறுகள் போல்) முதலிலேயே ஒய்ந்து போகின்றன. அர்த்த மில்லாமையால் தர்மம் விளையாமை மாத்ரமே அன்று; தோஷமும் ஸம்பவிக்கும். எப்படியென்னில், பணத்தைப் போக்கடித்துக் கொண்டவன் முன்பு தனமிருக்கும்பொழுது ஸுகமாய் வளர்ந்தவனுகையால் தனம் போனபின்பு வருத்தங்களைப் பொறுக்கமுடியாமல் ஸுகங்களை அநுபவிக்க விரும்பி ஸுகத்திற்கு ஸாதனமான தனத்தை ஸம்பாதிக்கும் பொருட்டுத் திருட்டு முதலிய பாபங்களைச்செய்ய ஆரம்பிக்கின்றனன். அங்ஙனம் செய்கின்றமையால் அவனுக்கு தோஷமும் கூட ஏற்படுகின்றது. எவனுக்குப் பணம் உண்டோ, அவனுக்கே எல்லோரும் நண்பர்களாவார். தரித்ரனை ஸ்னேஹிதர்களுங் கைவிடுவார்கள். எவனுக்குப் பணம் உண்டோ, அவனுக்கே எல்லோரும் பந்துக்களாவார். பணமில்லாதவனை அவனுடைய பந்துக்களும் பொருள் செய்யமாட்டார். எவனுக்குப்பணம் உண்டோ, அவனே ஆண்மையுடையவனுவான். பணமில்லாதவர் பெண்டிர்களே. பணம் எவனுக்குண்டோ அவனே பண்டிதன். பணமில்லாதவன் பண்டிதனுயினும் மூர்க்கனுகவே நினைக்கப்படுவான். எவன் பணமுடையவனே அவனே பராக்ரமசாலி. பணமில்லாதவன் பராக்ரமசாலியாயினும் பயங்காளியாகவே எண்ணப்படுவான். எவனுக்குப் பணம் உளதோ, அவனே புத்தியிற் சிறந்தவன். தரித்ரனுக்குபுத்தி இருப்பினும் சோபிக்காது. பணமுடையவனே நல்ல அத்ருஷ்ட முடையவனுவான். தரித்ரன் துரத்ருஷ்டமுடையவனே. பணமுடையவனே

சிலாதிகுண முடையவன். தரித்ரனுக்கு குணங்கள் இருப்பினும் விளக்கமுறு. பணத்தைத் துறந்தால், இங்ஙனஞ் சொன்ன நட்பு ஸம்பத்து முதலிய குணங்களுக்குப் புறம்பான தோஷங்கள் ஸம்பவிக்குமென்று உனக்கு ஸ்பஷ்டமாகச் சொன்னேன். வீரனே! அப்பொழுது ராஜ்யத்தையும் அதன் மூலமான அர்த்தத்தையும் கைவிட்டனையே! எந்த குணத்தைப் பற்றி? அவற்றை விடும்படி உனக்கு புத்தி ஏன் உண்டாயிற்றோ எனக்குத் தெரியவில்லை. எவனுக்குப் பணம் உண்டோ, அவனுக்கு தர்மகாம ப்ரயோஜனங்களும் மற்றவை யனைத்தும் அனுகூலமாக ஸித்திக்கும். தனமில்லாதவன் நன்மையைப் பெறவிரும்பிப் பணம் ஸம்பாதிக்கும் பொருட்டு எவ்வளவு ப்ரயத்னஞ் செய்யினும் நன்மையைப்பெறுவது சக்யமன்று. ராஜனே! ஸந்தோஷம் காமம் கர்வம் தர்மம் கோபம் சாந்தி தாந்தி ஆகிய இவையெல்லாம் பணமிருக்கும்பொழுதுதான் ப்ரகாசிக்கும். பணம் இருப்பினும் அதைப்பாராட்டாமல் கேவல தர்மத்தை மாத்ரம் அனுஷ்டிப்பவர்க்கு இஹலோக ஸுகம் சிறிதும் ஸம்பவிக்காது. ஐஹிக ஸுகங்களுக்கெல்லாம் அங்ஙனம் ஸாதனமான தனங்கள் மேகம் படர்ந்த அன்று ஸூர்யாதி க்ரஹங்கள் காணுதிருப்பதுபோல், உன்னிடத்தில் காணுதிருக்கின்றன. ஸமஸ்த நன்மைகளுக்கும் ஸாதனமான தனங்களை நீ ஆதரிக்காமற் போயினை. இனி ஸுகம் எப்படி உண்டாகும்? வீரனே! நீ தந்தையின் வார்த்தையில் தவறுமல் நின்று ஊரை விட்டு அடவியில் வாஸஞ்செய்பவனுயினை. இங்ஙனம் பித்ருவசனபரிபாலன மென்னுங்கேவல தர்மத்தையே அவலம்பித்து, அர்த்தத்திற்கு ஹேதுவான ராஜ்யத்தைத் துறந்தமையால், உனக்குப்ராணன்களை காட்டி

லும் மிகுதியும் ப்ரியமான உன் மனைவியை ராவண னென்னும் ராக்ஷஸன் பறித்துக்கொண்டு போயினன். 'இப்படி ஆய்விட்டது, இனிச்செய்ய வேண்டியதென்?" என்கிறாயோ? வீரனே! அங்ஙனம் நீ ராஜ்யத்தைப் பாராட்டாமையால் இந்த்ரஜித்து மூலமாய் வந்த இந்த மஹா துக்கத்தை நான் ப்ரதீகாரஞ்செய்து போக்கடிக்கின்றனன். ஆகையால், ராமனே! எழுந்திருப்பாயாக. புருஷஸ்ரேஷ்டனே! முழந்தாள் வரையிலும் நீண்ட பாஹுதண்டங்களுடையவனே! வ்ரதத்தில் ஊக்கமுடையவனே! எழுந்திருப்பாய். மிகுந்த புத்தியுடைய உன்னைப்பரமாத்மாவென்று அறியாதிருக்கின்றனை யேன்? ஆகையால் சோகிக்கவேண்டிய காரணமில்லை. நிர்த்தோஷனே? உனக்குட்பட்டு உனக்கு ப்ரியஞ்செய்வதற்கே பிறந்திருக்கிற நான் இப்போது ஸீதையின் வதத்தைக் கேட்டு உனக்கு வருத்த முண்டானதற்குக் கோபித்து இதோ குதிரைகளோடும் யானைகளோடும் ரதங்களோடும் ராக்ஷஸர் தலைவனான ராவணனோடுங் கூடின இந்த லங்காபுரத்தை பாணங்களால் பாழ் செய்கிறேன்; காண்பாய்' என்றனன். எண்பத்து மூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

{ விபீஷணன் ராமனை ஆஸ்வாஸப்படுத்தி இந்த்ரஜித்தை வதிக்கும் பொருட்டு லக்ஷ்மணனை அனுப்பவேண்டுதல். }

லக்ஷ்மணன் தமையனிடத்தில் வாத்ஸல்ய முடையவனாகையால் அங்ஙனம் ராமனை ஆஸ்வாஸப்படுத்திக் கொண்டிருக்கையில், விபீஷணன் ஸேனைகளைத் தந்தமது கார்யங்களைச் செய்யும்படி ஏற்பாடு செய்து, நானாவித ஆயுதங்களைத் தரித்த வீரர்களும் கறுத்த மைக்குவியல்போல புலப்படுகின்றவருமாகிய நான்கு மந்த்ரிக

வால் சூழப்பட்டு யானைகளால் சூழப்பட்ட யூதபதியான யானைபோல் வந்தனன். அவன் வந்து, மஹானுபாவனை ய ராமன் துக்கத்தினால் மெய்ம்மறந்திருப்பதையும், வானரர்களெல்லோரும் கண்ணீர் பெருக்கினால் கண் கலங்கப்பெற்றிருப்பதையுங் கண்டனன். அப்பால் விபீஷணன், இக்ஷ்வாகு வம்சத்திற்கெல்லாம் ஆநந்தம் விளைப்பவனும் மஹானுபாவனுமாகிய ராமன் துக்கத்தினால் மோஹித்து லக்ஷ்மணனுடைய துடைமேல் படுத்திருக்கக் கண்டனன். அவ்விபீஷணன், ராமன் சோகத்தினால் புலம்பிக்கொண்டு வெட்கித்திருப்பதைக் கண்டு, மனத்திற்குள் துக்கத்தினால் தைன்யமுற்று 'இது வென்? எல்லோரும் துக்கித்திருக்கின்றனர்' என்று வினவினன். லக்ஷ்மணன் விபீஷணனுடைய முகத்தையும் ஸுக்ரீவனையும் அவ்வானரர்களையும் பார்த்துக் கண்ணீர் பெருக்கிக்கொண்டு சுருக்கமாக 'ஸௌம்யனே! ராமன், இப்பொழுது இந்த்ரஜித்து ஸீதையை வதித்தானென்று ஹனுமான் சொல்லக் கேட்டு துக்கத்தைப் பொறுக்கமுடியாமல்மூர்ச்சை அடைந்தான்' என்றனன். லக்ஷ்மணன் அங்ஙனம் பாதி சொல்லக் கேட்டு, விபீஷணன், ஸங்கதியெல்லாம் தனக்குத் தெரிந்திருக்கையால் அவன் சொல்லுவதைத் தடுத்து 'மனுஷ்யர்களுக்கு இந்த்ரனே! ஹனுமான் அப்பொழுது வாஸ்தவமென்று நினைத்துச் சொன்ன வார்த்தை எள்ளளவும் யுக்தமன்றென்று எனக்குத் தோன்றுகின்றது; ஸமுத்ரத்தை உலர்த்துவது எப்படி அஸாத்யமோ, அங்ஙனம் ஸீதையை வதித்தானென்பது எவ்விதத்திலும் ஸரியன்று. மஹாபாஹோ! துர்ப்புத்தியாகிய ராவணனுடைய அபிப்ராயம் எனக்குத் தெரியும். ஸீதையைக் குறித்து அவன் எள்ளளவும் வதிக்கும்படியான கார்யத்தைச் செய்யவேமாட்டான்.

கான் ஹிதத்தை விரும்பி ஸீதையை ராமனுக்குக் கொடுப்பாயென்று எவ்வளவு வேண்டிக் கொள்ளினும், ராவணன் அந்த வார்த்தையைக் கேட்கவேயில்லை. அங்ஙனம் ஸீதையை விடுதற்கே ஸம்மதிக்காதவன் வதிக்க ஸம்மதிப்பானு? ஸாமோபாயத்தினுலாவது தானத்தினுலாவது பேதத்தினுலாவது அவனை மற்ெறுருவன் பார்க்கவுங்கூட ஸாத்யமன்று. இனி தண்டோபாயத்தினுல் பார்க்கமுடியாதென்று சொல்லவேண்டுமோ? மற்ற எந்த மாயோபாயத்தினுலும் பார்க்கமுடியாதே. ஆகையால் ஸீதையை இந்த்ரஜித்து கொண்டுவந்து எங்ஙனம் வதிப்பான்? அவ்விந்த்ரஜித்து வானரர்களை [1] மோசஞ் செய்து நிகும்பிலையென்னும் தேவாலயத்திற்குப் போயிருக்கின்றனன். அவன் அங்கு ஹோமஞ்செய்யப்போகின்றனன். இந்த்ரஜித்து நிகும்பிலையில் விக்னமில்லாமல் ஹோமஞ்செய்து திரும்பி வருவானுயின், தேவதைகளும் தானவர்களும் ஒரு பக்கத்தில் எதிர்த்து வரினும் அவர்க்கு யுத்தத்தில் அவனை ஜயிக்க ஸாத்யமன்று. அவ்விந்த்ரஜித்து நிகும்பிலையில் தான் ஹோமஞ் செய்யும் பொழுது வானரர்கள் தன்மேல் தலைப்பட்டுப் பராக்ர

1 இந்த்ரஜித்து வானரர்களை என் மோசஞ் செய்ய விரும்பினுனென்னில்— அப்பொழுது ராவணனுக்காக யுத்தஞ் செய்யத்தகுந்த வீரன் எவனும் லங்கையில் இல்லை. ஆகையால் தான் ஹோமகார்யத்தில் கால் தாழ்ந்திருக்கும் பொழுது வானரர்களை அடக்கும்படியான வீரர்களில்லாமையால் வானரர்கள் மேல்விழுகையில் ஹோமம் தடைபட்டு இடையில் விச்சின்னமாய்விடும். அது விச்சின்னமாயின் ப்ரஹ்மவரத்தின்படி தனக்கு நாசம் உண்டாகும். ஆகையால் தன் ஹோமகார்யம் நிறைவேறும் வரையில் ராமாதிகளனைவரும் துக்கத்தினுல் ஸ்வாதீனமற்று யுத்தத்தில் உத்ஸாஹமில்லாதிருக்கும் பொருட்டு மாயாஸீதையை வதித்து அவர்களை மோசஞ் செய்ததாக விபீஷணன் சொல்லுகிருனென்று தெரிகின்றது.

மத்தைக் காட்டுவார்களாயின் தனக்கு விக்னமாகு மென்று நினைத்து, அங்ஙனம் விக்னஞ்செய்யா திருக்கு மாறு அவர்களை வஞ்சிப்பவனாகி இம்மாயையை ப்ரயோகித்தானன்றி வேறில்லை. ஆகையால் அந்த ஹோமவ்யாபாரம் நிறைவேறுவதற்கு முன்னமே அந்தநிகும்பிலைக்கு ஸைன்யங்களோடு போவோம். புருஷஶ்ரேஷ்டனே! இது வீண் ப்ரமமே. இதனால் வருத்தம் உண்டாயிற்று. இதைத் துறப்பாயாக. நீ இங்ஙனம் சோகத்தினால் வருந்துவதைக் கண்டு, நமது ஸைன்யம் முழுவதும் துக்கத்தினால் இளைக்கின்றது. தைர்யம் மிகப்பெற்று மனங்குளிர்ந்து இங்கேயே இருப்பாயாக. எம்மோடும் ஸேனாபதிகளான வானர வீரர்களோடுங் கூட்டி லக்ஷ்மணனை அனுப்புவாயாக. இந்தப் புருஷஶ்ரேஷ்டனாகிய லக்ஷ்மணன் கூரான பாணங்களை விடுத்து அவ்விந்த்ரஜித்து ஹோமகார்யத்தைத் துறக்கும்படி செய்து யுத்தத்திற்கு வரவழைப்பான். அப்பால் ப்ரஹ்மாவின் வரத்தின்படி அவன் வதிக்கத் தகுந்தவனாவான். நன்கு தீட்டப்படுகையால் மிகுதியுங் கூராகிப் பக்ஷிகளின் சிறைகளிலுள்ள இறகுகள் கட்டப்பெற்றிருக்கையால் மிகுந்த வேகமுடையவைகளுமான இந்த லக்ஷ்மணனுடைய கொடிய பாணங்கள், கழுகுமுதலிய கொடிய பக்ஷிகள்போல் அவ்விந்த்ரஜித்தின் ரக்தத்தைப் பானஞ்செய்யப் போகின்றன. நீண்ட புஜதண்டங்களை யுடையவனே! முன்பு நமுசியைவதிக்கும் பொருட்டு இந்த்ரன் வஜ்ராயுதத்தை ப்ரயோகிப்பதுபோல், இப்பொழுது, இவ்விந்த்ரஜித்தை வதிக்கும் பொருட்டு சுபலக்ஷணங்களமைந்த லக்ஷ்மணனை அனுப்புவாயாக. மனிதர்களுக்கு இந்த்ரனே! பகைவனை வதிக்கும் விஷயத்தில் இப்பொழுது சிறிதும் காலவிளம்பஞ் செய்யலாகாது. ஆகையால் நீ மஹேந்த்-

ரன்போல் இந்த தேவசத்ருவாகிய இந்த்ரஜித்தை வதிக்கும் பொருட்டு லக்ஷ்மணனுக்கு ஆஜ்ஞை யிடுவாயாக. ராக்ஷஸோத்தமனாகிய அவ்விந்த்ரஜித்து செய்யும்ஹோமகார்யம் நிறைவேறுமாயின், அவன் யுத்தத்தில் தேவாதிகளுக்கும் புலப்படாதவனாவான். அவன் அந்த ஹோமகார்யத்தை நிறைவேற்றி யுத்தத்திற்கு வருவானாயின், தேவதைகளுக்கும் மிகுதியும் ப்ராண ஸந்தேஹத்தை விளைவிப்பான்' என்றனன். எண்பத்து நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

**ராமன் விபீஷணாதிகளுடன் லக்ஷ்மணனை நிகும்பிலைக்கு அனுப்புதல்.**

ராமன் விபீஷணன் சொன்னதைக் கேட்டும், சோகத்தினால் மிகுதியும் வருந்தியிருக்கையால் அவன் சொன்ன வார்த்தையை மனத்தில் நன்றாக ஏந்திக்கொள்ளவில்லை. அனந்தரம் சத்ருபட்டணங்களை அழிக்குந் தீரனாகிய ராமன் சிறிது நேரம் கழித்து, தைர்யத்தை அவலம்பித்து வானரர்களுக் கெதிரில் தனக்கருகில் உட்கார்ந்திருக்கும் விபீஷணனைப் பார்த்து 'ராக்ஷஸபதீ! விபீஷணா! நீ இப்பொழுது சொன்ன வார்த்தையை நான் நன்றாகச் செவியுற்றிலனாகையால் மீளவும் அதைக்கேட்க விரும்புகிறேன். நீ சொல்ல விரும்பினதை மீளவும் சொல்லுவாயாக' என்றனன். ராமன் அங்ஙனஞ் சொன்னதைக் கேட்டு, வார்த்தைகளில் பண்டிதனாகிய அவ்விபீஷணன் தான் முன்பு சொன்னதையே மீளவும் சொல்லத் தொடங்கி 'மஹாபாஹோ! வீரனே! நீ ஸேனாபாகங்களை எங்ஙனம் ஏற்படுத்தும்படி நியமித்தனையோ, அவ்வண்ணமே அவற்றை யெல்லாம் நியமித்தவுடனே

செய்தாய்விட்டது அந்த ஸைன்யங்களை யெல்லாம் நாற்புறத்திலும் தனித்தனியே இருக்கும்படி பகுத்து ஏற்படுத்தினன். அந்தந்தப் பிரிவினைகளில் க்ரமப்படி யூதபதிகளாக எவரெவர்களை ஏற்படுத்தவேண்டுமோ அவர்களை ஏற்படுத்தியாய்விட்டது. பெரும்புகழனே! மற்றும், நான் விண்ணப்பஞ் செய்யவேண்டியது ஒன்றுண்டு; அதைக் கேட்பாயாக. நீ காரணமில்லாமல் இங்ஙனம் பரிதபித்துக் கொண்டிருக்கையால் எங்களுடைய மனமும் பரிதபிக்கின்றது. இப்பொழுது உன் துக்கத்திற்குக் காரணம் பொய்யே யாகையால் அதற்காக இங்ஙனம் சோகிப்பதையும் பரிதபிப்பதையுந் துறப்பாயாக. வீரனே! நீ இங்ஙனம் சிந்தையில் ஆழ்ந்திருத்தல் சத்ருக்களுக்கு ஸந்தோஷத்தை வளர்க்குமாகையால் அதைத் துறப்பாயாக. நீ ஸந்தோஷத்தை ஏற்றுக்கொண்டு யுத்தப்ரயத்னஞ் செய்வாயாக. ரகுகுலகுமாரனே! உனக்கு ஸீதையைப் பெறவேண்டுமென்றும் ராக்ஷஸர்களை வதிக்கவேண்டுமென்றும் விருப்பம் உளதாயின், நான் ஹிதமான வார்த்தை சொல்லுகிறேன்; கேட்பாயாக. இந்த லக்ஷ்மணன் நிகும்பிலைக்குப் போய் அங்கு யுத்தத்தில் இந்த்ரஜித்தைக் கொல்லும் பொருட்டுப் பெரிய ஸைன்யத்தோடு நன்கு வெளிப்படுவானாக. பல யுத்தங்களில் வெற்றி பெற்றுத் தீர்ந்த மேலான வில்லாளியாகிய லக்ஷ்மணன், குண்டாக வளைந்திருக்கிற தனுஸ்ஸினின்று க்ருஷ்ணஸர்ப்ப விஷம்போன்ற கூரான பாணங்களால் இந்த்ரஜித்தைக் கொல்வானாக. வீரனாகிய அவ்விந்த்ரஜித்து தவஞ்செய்து ப்ரஹ்ம தேவன் வரங்கொடுக்கப் பெற்று ஹோமத்தின் மூலமாய் ப்ரஹ்மசிரஸ்ஸென்னும் மஹா அஸ்த்ரத்தையும் நினைத்தபடி செல்லும்படியான ரதத்தையும் அத்தகைய குதிரைகளையும் பெற்ற

ஸன். அவ்விந்த்ரஜித்து, இப்பொழுது ஸைன்யங்களோடுகூட நிகும்பிலையைச் சேர்ந்திருக்கிறானும். ஆகையால் அவன் ஹோமகார்யத்தை முடித்து நிகும்பிலையினின்று எழுந்து வருவானாயின் நாமெல்லோரும் மாண்டு போனோமென்றே அறிவாயாக. மஹாபாஹோ! ஸமஸ்த லோகங்களுக்கும் நாதனாகிய ப்ரஹ்மதேவன் இந்த்ரஜித்துக்கு 'நீ நிகும்பிலையில் ஹோமத்திற்கு முயன்று, ஹோமம் பூர்த்தி செய்யாமலும் நிகும்பிலையென்னும் ஆலமரத்தின் கீழ் சேராமலும் இருக்கும்பொழுது எந்தப் பகைவன் உன்னை எதிர்கொண்டு, நீ ஆயுதம் ஏந்தித் தன்னை வதிக்கத் தலைப்படுகையில், உன்னை ஹிம்ஸிப்பானோ; அவன் இந்த்ரசத்ருவாகிய உன்னை வதிப்பான். மற்றெவனும் உன்னை வதிக்க வல்லனல்லன்' என்று வரங்கொடுத்தனன். ராமா! இவ்வண்ணம் இந்த்ரஜித்தினுடைய ஹோமத்திற்கு விக்னஞ்செய்பவனே புத்தியிற் சிறந்த அவ்விந்த்ரஜித்தை வதிப்பவனாவானென்று ப்ரஹ்மதேவன் ஏற்படுத்தினன். ஆகையால், மஹா பலமுடையவனே! இப்பொழுது அவ்விந்த்ரஜித்தை வதிக்கும் பொருட்டு எங்களில் ஒருவனுக்கு ஆஜ்ஞை யிடுவாயாக. இந்த்ரஜித்து மாண்டு போவானாயின், ராவணனும் அவனுடைய நண்பர்களும் மாண்டார்களென்றே நினைப்பாயாக' என்றனன். ராமன் விபீஷணன் சொன்னதுகேட்டு, அவனைப் பார்த்து 'உண்மையான பராக்ரமமுடையவனே! பயங்கரனான அவ்விந்த்ரஜித்து செய்யும் மாயையின் மஹிமை எனக்குத் தெரியும். அவன் ப்ரஹ்மாஸ்த்ரமும் உணர்ந்தவன்; மிகுதியும் ப்ராஜ்ஞன்; மஹாமாயாவி; நல்ல பலசாலி, யுத்தத்தில் வருணனோடு கூடி தேவதைகள் வரினும் அவர்களை மூர்ச்சிக்கச் செய்வான். பெரும் புகழனே! அவன் ரதத்தில் ஏறிக்கொண்டு ஆகாயத்தில் திரிந்து

கொண்டிருக்கையில், மேகங்கள் சூழ்ந்திருக்கும்பொழுது ஸூர்யகதி அறிய முடியாதாப்போல், அவனுடைய போக்கை அறியமுடியாது' என்றனன். ராமன் துர்ப்புத்தியும் தன் சத்ருவுமாகிய இந்த்ரஜித்தின் மயாபலத்தை அறிந்துகொண்டு, பலயுத்தங்களில் புகழ் பெற்ற லக்ஷ்மணனைப் பார்த்து 'லக்ஷ்மணா! நீ வானரராஜனாகிய ஸுக்ரீவனுக்குள்ள ஸமஸ்த ஸைன்யத்தையும் அழைத்துக்கொண்டு, ஹனுமான் முதலிய ஸேனாதிபதிகளோடும் பல்லூகபதியான ஜாம்பவானோடுங் கூடப்போய், மாயாவியும் பலிஷ்டனும் அந்த ராக்ஷஸகுமாரனுமாகிய இந்த்ரஜித்தை வதிப்பாயாக. இவ் விபீஷணன் மஹானுபாவன்; ராக்ஷஸனாகையால் மாயாதந்த்ரங்களை அறிந்தவன்; விசேஷித்து அந்த நிகும்பிலை என்னும் ப்ரதேசத்தை அறிந்தவன். இப்படிப்பட்ட இவனும் மந்த்ரிகளோடு உன்னைப் பின்றொடர்ந்து வருவான்' என்றனன். ராமன் சொன்ன வார்த்தையைக் கேட்டவுடனே மிகுதியும் அற்புத பராக்ரமனான லக்ஷ்மணனும் விபீஷணனும் மேலான தனுஸ்ஸுக்களை ஏந்திக்கெண்டனர். லக்ஷ்மணன் யுத்தத்திற்கு முயன்று கவசந்தரித்துக் கத்தியைப் பிடித்து ஸ்வர்ணத்தினால் அலங்கரிக்கப்பட்ட தனுஸ்ஸையும் பாணங்களையும் எடுத்துக்கொண்டு யுத்த உத்ஸாஹத்துடன் ராமனது பாதங்களைப் பிடித்துக்கொண்டு வணங்கி, அவனைப் பார்த்து 'இப்பொழுது என் தனுஸ்ஸினின்று புறப்படும் பாணங்கள் இந்த்ரஜித்தின் தேஹத்தைப் பிளந்து கொண்டு, தாமரைக் குளங்களில் ஹம்ஸங்கள் பாய்வதுபோல், லங்காபுரம் முழுவதும் பாயப்போகின்றன. இப்பொழுதே என் பாணங்கள் வில்லின் நாணினின்று விடுபட்டு, பயங்கரனான அவனது சரீரத்தைப் பிளந்து அவனை ஹிம்ஸிக்கப் போகின்றன'

என்றனன். அந்த லக்ஷ்மணன் யுத்தோத்ஸாஹத்தினால் மிகுதியும் ஒளி விளங்கப் பெற்று அண்ணனெதிரில் இவ்வண்ணம்மொழிந்து, இந்த்ரஜித்தையும் நிகும்பிலையிலுள்ள ராக்ஷஸர்களையும் வதிக்க விரும்பி விரைந்து சென்றனன். லக்ஷ்மணன் அங்ஙனம் தனது அண்ணனுடைய பாதங்களில் நமஸ்கரித்து ப்ரதக்ஷிணஞ் செய்து, ராவணகுமாரனால் பாதுகாக்கப்பட்ட அந்த நிகும்பிலையென்னும் சைத்ய வ்ருக்ஷத்திற்குப் போயினன். ப்ரதாபசாலியாகிய அந்த ராஜகுமாரன்ராமனது மங்களாசிர் வசனங்களைப் பெற்று, விபீஷணனோடு வேகமாகப் போயினன். அப்பொழுது ஹனுமான் அனேகமாயிரம் வானரர்களால் சூழ்ப்பட்டவனாகவும், விபீஷணன் மந்த்ரிகளோடு கூடவும் லக்ஷ்மணனைப் பின் சென்றனர். அந்த லக்ஷ்மணன் மிகுதியும் பெரிய வானரஸைன்யம் மிகுந்த வேகத்துடன் தன்னைச் சூழ்ந்து வரப் பெற்றுப்போய்க் கொண்டே, வழியில் தன்னைப் பின்றொடர முயன்று ஸித்தமாயிருக்கின்ற பல்லூகஸைன்யத்தைக் கண்டனன். நண்பர்களுக்கு ஸந்தோஷம் விளைப்பவனாகிய அந்த லக்ஷ்மணன் வெகு தூரம் வழிநடந்து சென்று, பின்பு தூரத்தில் வ்யூஹந் தீர்க்கப் பெற்றிருக்கிற ராக்ஷஸ ஸைன்யத்தைக் கண்டனன். பகைவரை உருமாய்க்கவல்லவனும் ப்ரதாபசாலியும் ராஜபுத்ரனுமாகிய அந்த லக்ஷ்மணன் கையில் வில்லைத் தரித்து, ப்ரஹ்மதேவன் வரங்கொடுத்த ப்ரகாரம் நிகும்பிலையிற் சேருவதற்கு முன்னமே யுத்தஞ்செய்தால் மாண்டு போவானென்னும் சூழ்க்கை அறிந்து அதற்குத் தகுந்த மாயஞ் செய்த இந்த்ரஜித்தை ஜயிக்கும் பொருட்டு ஸந்நாஹமுடையவனாகி விபீஷணனோடும் வீரனாகிய அங்கதனோடும் வாயு குமாரனான ஹனுமானோடுங் கூடியிருந்தனன். பலவகையாகப் புலப்படுவதும் நிர்மலமான ஆயு

தகாந்திகளால் விளங்குவதும் த்வஜங்கள் நிறைந்து மஹாரதங்கள் சூழ்ந்து மிகுதியும் பயங்கரமாகி அபாரவேக முடையதும் காரிருள்போல் மிகவும் கறுத்திருப்பதுமாகிய அந்தச் சத்ரு ஸைன்யத்தில் லக்ஷ்மணன் புகுந்தனன். எண்பத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

லக்ஷ்மணன், நிகும்பிலைக்குக் காவலிருக்கும் ராக்ஷஸர்படையை த்வம்ஸஞ்செய்வதாகக் கேட்டு இந்த்ரஜித்து ஹோமம் முடிவதற்கு முன்னமே யுத்தத்திற்குப் புறப்படுதல்.

அனந்தரம், அப்படிப்பட்ட தசையாயிருக்கையில், ராவணன் தம்பியாகிய விபீஷணன் லக்ஷ்மணனைப் பார்த்துப் பிறர்க்குக் கெடுதியை விளைவிப்பதும் தமக்குக் கார்யத்தை நிறைவேற்றுவதுமாகிய வசனத்தைச் சொல்லத்தொடங்கி 'இதோ மேகம்போல் கறுத்து ராக்ஷஸப்படை புலப்படுகின்றதே! இதை இந்த்ரஜித்தின் யாகம் முடிவதற்கு முன்னமே வானரர்கள் வ்ருக்ஷம் முதலிய ஆயுதங்களைக் கொண்டு ஹதஞ் செய்வார்களாக. லக்ஷ்மணா! நீ இந்தப் பெரும்ஸைன்யத்தைப் பிளக்கத்தொடங்குவாயாக. இதைப் பிளப்பாயாயின், ராக்ஷஸ ராஜனது குமாரனாகிய இந்த்ரஜித்து கண்ணுக்குப் புலப்படுவான். இந்த்ரஜித்தைக் கொல்லவந்தவனாகையால், நீ இந்த்ரஜித்து செய்யுங் கார்யம் நிறைவேறுவதற்கு முன்னமே, இந்த்ரனுடைய வஜ்ரம்போன்ற பாணங்களை ப்ரயோகித்து அந்த ஸேனையைப் பாழ் செய்வாயாக. வீரனே! துர்ப்புத்தியும் மாயாவியும் அதர்மிஷ்டனும் கொடுந்தொழிலனும் ஸமஸ்த லோகங்களுக்கும் பயம் விளைப்பவனுமாகிய இவ்விந்த்ரஜித்தை வதிப்பாயாக'- என்றனன். அந்த லக்ஷ்மணன் நண்பர் மொழியும் வார்த்தையின்

ஸாரத்தை அறியும் மேலான லக்ஷணமுடையவனுகை யால், விபீஷணன் சொன்னதைக் கேட்டு, அங்ஙனமே ராக்ஷஸேஸ்வரனுடைய புத்ரனுகிய இந்த்ரஜித்தின் மேல் பாணவர்ஷத்தை அளவில்லாமல் பெய்தனன். வ்ருக்ஷங்களையும் பர்வதங்களையும் நகங்களையுமே ஆயுதமாகக் கொண்டு போராடுந்தன்மையுடைய பல்லூகர்களும் வானரர்களும் ஒன்றுகூடி, அங்ஙனம் வ்யூஹங்கட்டியிருக்கிற அந்த ராக்ஷஸ ஸேனையின்மேல் எதிர்த்தோடினர். ராக்ஷஸர்களும் கூரான பாணம் கத்தி சக்தி தோமரம் இவைகளை ஏந்திக்கொண்டு வானர ஸைன்யங்களைக் கொல்ல விரும்பி ஸித்தமாயிருந்தனர். அப்பொழுது வானரர்களுக்கும் ராக்ஷஸர்களுக்கும் விளைந்த அந்தத் துமுலயுத்தத்தினுல் லங்காபுரம்முழுவதும் ப்ரதித்வனி உண்டாகப் பெற்றது. அப்பொழுது ஒருவர்மேல் ஒருவர் ப்ரயோகித்த நானுவித உருவமுடைய ஆயுதங்களும் கூரான பாணங்களும் வ்ருக்ஷங்களும், எறிவதற்கு மேல் தூக்கப்பட்டிருக்கிற பயங்கரமான பர்வத சிகரங்களும் நிறைந்து ஆகாயத்தை மறைத்தது. அந்த ராக்ஷஸர்கள் விகாரமான முகங்களோடும் புஜங்களோடும் கூடி வானரர்களின் மேல் ஆயுதங்களை எறிந்து மஹத்தான பயத்தை விளைவித்தனர். அங்ஙனமே வானரர்களும் கிளைகளோடு கூடின வ்ருக்ஷங்களாலும் பர்வத சிகரங்களாலும் ராக்ஷஸோத்தமர்களை அடித்து வதித்தனர். மஹா சரீரர்களும் மஹா பலிஷ்டர்களுமாகிய கரடி வீரர்களும் குரங்கு வீரர்களும் ராக்ஷஸர்களைப்பலவாறு வதித்துக்கொண்டிருக்கையில் ராக்ஷஸர்களுக்கு மிகுதியும் பயம் உண்டாயிற்று. அப்பால் ஒருவராலும் பரிபவிக்க முடியாத இந்த்ரஜித்து, தன் ஸைன்யம் சத்ருக்களால் பீடிக்கப்பட்டு வருத்தமுற்றிருப்பதைக் கேட்டு, அந்த

ஹோமம் நிறைவேறுவதற்கு முன்னமே நியமத்தினின்று எழுந்திருந்தனன். இந்த்ரஜித்து கோபித்து, இடை வெளியின்றிப் படர்ந்து அந்தகாரம் போலிருக்கிற வ்ருக்ஷ ஸமூஹத்தினின்று ராக்ஷஸர்களுடன் வெளிப்பட்டு, ஆயுதங்களோடு கூடி முன்னமே குதிரைகள் பூட்டப்பெற்றிருக்கும் ரதத்தின்மேல் ஏறிக்கொண்டனன். இந்த்ரஜித்து பயங்கரமான வில்லைக் கையிலேந்தி வர்ஷாகாலத்து மேகம்போன்ற மேனியின் நிறமுடையவனுகிக் கோபித்து முகமும் கண்களும் சிவக்கப்பெற்று லோகநாசஞ் செய்யும் ம்ருத்யுவைப்போல் ப்ரகாசித்தனன். அவ்விந்த்ரஜித்து ரதத்திலேறுவதைக் கண்டவுடனே, பயங்கரமான வேகமுடையவராகி லக்ஷ்மணனேடு யுத்தஞ்செய்ய ஸித்தமாயிருந்தும் ராக்ஷஸ ஸைன்யமெல்லாம் அவனைச் சுற்றிலும் சூழ்ந்து நின்றது. அந்த ஸமயத்தில் பர்வதம் போன்ற உருவமுடையவனும் பகைவரை அடக்குந் தீரனுமாகிய ஹனுமான் மிகுதியும் அணுகமுடியாத ஓர் பெரிய வ்ருக்ஷத்தைப் பிடுங்கி அதனுல் அந்த ராக்ஷஸஸைன்யத்தை ப்ரளய காலாக்னிபோல் தஹித்து மற்றும் பல வ்ருக்ஷங்களால் அந்த ஸைன்யத்தை மூர்ச்சிக்கும்படி செய்தனன். அங்ஙனம் வாயுகுமாரனுகிய ஹனுமான் வேகத்துடன் ராக்ஷஸப்படைகளை உருமாய்த்துக் கொண்டிருக்கக் கண்டு, அநேகமாயிரம் ராக்ஷஸர் அவனைச் சூழ்ந்து கொண்டனர். ராக்ஷஸர்கள் பர்வதாகாரனுன ஹனுமானைச் சுற்றிச் சூழ்ந்து, கூரான சூலங்களைத் தரித்தவர் சூலங்களாலும், கத்தியைப் பிடித்தவர் கத்திகளாலும், ஈட்டியைக் கொண்டவர் ஈட்டிகளாலும், பட்டயம் பிடித்தவர் பட்டயங்களாலும், மற்றும் இரும்புத் தடிகளையும் கதைகளையும் கூராகி அழகான காட்சியுடைய சக்ராயுதங்களையும் சதக்னியென்

னும் பேருடைய பற்பல ஆயுதங்களையும் இரும்புலக்கை களையும் பயங்கரமான கண்டக்கோடாலிகளையும் பிண்டி வாலங்களையும் வஜ்ரம்போல் கடினமான முஷ்டிகளையும் இடிபோன்ற உள்ளங்கைகளையும் ஆயுதமாகக் கொண்டவர் அந்தந்த ஆயுதங்களாலும் அடித்து ஹிம்ஸித்தனர். ஹநுமான் மிகுதியும் கோபித்து அவர்களனைவரோடும் மஹா யுத்தஞ்செய்தனன். பர்வதம்போன்ற உருவமுடையவனும் பகைவரை உருமாய்க்க வல்லவனும் வாயு குமாரனும் கபிஸ்ரேஷ்டனுமாகிய ஹநுமான் ராக்ஷஸர்களை உருமாய்த்துக் கொண்டிருக்கையில், இந்த்ரஜித்து அதைக் கண்டனன். அவ்விந்த்ரஜித்து ஸாரதியைப் பார்த்து, 'இனி இவ்வானரனை உபேக்ஷித்தால், இவன் நமது ராக்ஷஸர்களையெல்லாம் உருமாய்த்து விடுவான். ஆகையால் இவனிருக்குமிடம் போவாயாக' என்று ஆஜ்ஞாபித்தனன். அவன் அங்ஙனஞ் சொல்லுகையில், ஸாரதி ரதத்தை ஒட்டி அதிலுட்கார்ந்திருக்கிற இந்த்ரஜித்தை ஹநுமானிருக்குமிடங்கொண்டு போய்ச் சேர்த்தனன். பிறர்க்கு வெல்ல முடியாத அவ்விந்த்ரஜித்து ஹநுமானை அடுத்து சிரஸ்ஸில் பாணங்களையும் கத்திகளையும் பட்டயங்களையும் கண்டக்கோடாலிகளையும் பெய்தனன். ஹநுமான் பயங்கரமான அந்த ஆயுதங்களெல்லாவற்றையும் பொறுத்து மிகுந்த கோபாவேசத்துடன் 'துர்ப்புத்தீ! நீ ராவணனுடைய புதல்வனல்லவா? நீ பயங்காளியல்லாமல் சூரனுயிருப்பாயாயின், யுத்தஞ்செய்வாய். வாயு குமாரனுகிய ஹநுமானுடைய எதிரில் வந்து மீளவும் பிழைத்துப் போகவல்லனல்லை. துர்ப்புத்தி யுடையவனே! நீ என்னேடு த்வந்த்வ யுத்தஞ் செய்வாயாயின், பாணங்களை விடுத்து பாஹுக்களால் என்னுடன் போராடுவாய், காண்போம். அப்பொழுது அந்த த்வந்

த்வ யுத்தத்தில் என் வேகத்தைப் பொறுப்பாயாயின், அடா! நீ ராக்ஷஸோத்தமனே' என்றனன். விபீஷணன், லக்ஷ்மணனுக்கு, 'இந்த்ரஜித்து வில்லை ஏந்திக்கொண்டு ஹனுமானைக் கொல்ல முயன்றிருக்கிறான்' என்று தெரிவித்து, மீளவும் அந்த லக்ஷ்மணனைப் பார்த்து, 'தேவேக்த்ரனையும் ஜயித்து ராவணன் வயிற்றில் பிறந்து புகழ்பெற்றவனாகிய இவ்விந்த்ரஜித்து ரதத்தில் ஏறிக்கொண்டு ஹனுமானைக்கொல்லவிரும்புகின்றனன். ஆகையால் உபேக்ஷிக்கவேண்டாம். லக்ஷ்மணா! நிகரில்லாத நானாவித உருவங்களை யுடையவைகளும் சத்ருக்களின் மர்மங்களைப் பிளக்கவல்லவைகளும் ப்ராணன்களைமுடிப்பவைகளும் பயங்கரமுமான பாணங்களை ப்ரயோகித்து இவ்விந்த்ரஜித்தை வதிப்பாயாக' என்றனன். இங்ஙனம் சத்ருக்களுக்கு பயங்கரனான விபீஷணன் சொல்லுகையில், அப்பொழுது மஹானுபாவனாகிய லக்ஷ்மணன், பர்வதம்போன்ற உருவமுடையவனும் பயங்கரமான பலமுடையவனும் ஸிம்ஹநாதஞ் செய்கின்றவனும் ரதத்தின் மேல் ஏறிக்கொண்டு யுத்தத்திற்கு ஸித்தமாய் வந்திருப்பவனுமாகிய அவ்விந்த்ரஜித்தைக் கண்டவனாயினன். எண்பத்தாறுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

விபீஷணன் லக்ஷ்மணனுக்கு இந்த்ரஜித்தின்ஹோமஸ்தானத்தை காண்பித்து அவன் அவ்விடம் போய்ச்சேருவதற்கு முன்னமே அவனை வதிக்கவேண்டுமென்ற கூறுதலும், இந்த்ரஜித்து தன் மர்மங்களை லக்ஷ்மணனுக்குச் சொல்லுவதைக் கண்டு விபீஷணனைப் பழித்தலும், விபீஷணன் அவனுக்கு மறுமொழி கூறுதலும்.

அந்த விபீஷணன் லக்ஷ்மணனுக்கு இங்ஙனஞ் சொல்லி, இனி இந்த்ரஜித்து மாண்டுபோவானென்று

ஸந்தோஷமுற்று, தனுஸ்ஸைப் பிடித்திருக்கிற லக்ஷ்மணனை அழைத்துக்கொண்டு வேகமாகப் போயினன். விபீஷணன் அங்ஙனம் கொஞ்சதூரம் போய், ஓர் பெரிய வனத்தில் நுழைந்து அங்கு இந்த்ரஜித்து ஹோமஞ்செய்யும் இடத்தை லக்ஷ்மணனுக்குக் காண்பித்தனன். மஹா தேஜஸ்வியாகிய ராவணானுஜன் (விபீஷணன்) மேகம்போல் கறுத்து பயங்கரமாகப் புலப்படுகின்ற நிகும்பலை யென்னும் பேருடைய ஆலமரத்தைக் காண்பித்து அவனை நோக்கி 'பலிஷ்டனும் ராவணனது புதல்வனுமாகிய இந்த்ரஜித்து இவ்விடத்தில் தான் பூதங்களுக்கு பலி கொடுத்து அதன் பிறகு யுத்தத்திற்கு வருவான். அனந்தரம் அந்த ராக்ஷஸன் ஸமஸ்த பூதங்களுக்கும் புலப்படாதவனாகி யுத்தத்தில் சத்ருக்களை வதிப்பான். மேலான பாணங்களால் கட்டவுங் கட்டுவான். அவ்விந்த்ரஜித்து ஆலமரத்தின் கீழ் வருவானாயின் பின்பு தேர் குதிரை ஸாரதிகளோடு கண்ணுக்குப் புலப்படாதவனாவான். ஆகையால் ஆலமரத்தை அடைவதற்கு முன்னமே அம்மஹாபலனை, ரதத்தோடும் குதிரைகளோடும் ஸாரதியோடும் கூரான பாணங்களை விடுத்து முடிப்பாயாக' என்றனன். மஹா தேஜஸ்வியாகிய அந்த லக்ஷ்மணன் நண்பர்களுக்கு ஸந்தோஷம் விளைப்பவனாகையால், நண்பனாகிய விபீஷணன் வார்த்தையைக் கேட்டு, அப்படியே ஆகட்டுமென்று மொழிந்து, அந்த ஆலமரத்தினருகில் விசித்ரமான தனுஸ்ஸை ஒலிப்பித்துக்கொண்டு யுத்தத்திற்காக நின்றிருந்தனன். அனந்தரம் மஹாபலமுடைய ராவண புத்ரன் (இந்த்ரஜித்து) கவசம் அணிந்து, வில்லைப் பிடித்து, அக்னிபோல் ஜ்வலிக்கின்ற ரதத்தோடும் த்வஜத்தோடுங்கூடி லக்ஷ்மணனுக்குப் புலப்பட்டனன். மஹா தேஜஸ்வியாகிய லக்ஷ்மணன், அதுவரையில்

தோல்வியென்பது அறியாதவனும் புலஸ்த்ய வம்சத்தில் பிறந்தவனுமாகிய இந்த்ரஜித்தைப் பார்த்து 'உன்னை யுத்தத்திற்கு அழைக்கின்றேன். எனக்கு, மாயை செய்யாமல் ஸரியான யுத்தங் கொடுப்பாயாக' என்றனன். லக்ஷ்மணன் இங்ஙனம் சொல்லுகையில், மஹாதேஜஸ்வியும் திடமான மனமுடையவனுமாகிய அவ்விந்த்ரஜித்து, அங்கு விபீஷணன் இருப்பதைக் கண்டு, அவனைக் குறித்துப் பருஷ வசனங்களை மொழியத்தொடங்கி 'விபீஷணா! நீஇங்கேயே பிறந்து வளர்ந்தவன்; மற்றும். என் தந்தைக்கு நேரே கூடப் பிறந்தவன்; எனக்குச் சிற்றப்பன். இப்படிப்பட்ட நீ பிள்ளையாகிய என் விஷயத்தில் எங்ஙனம் த்ரோஹஞ் செய்கின்றனை? ராக்ஷஸனுகப் பிறந்தும் ஸஜாதீயனென்று பாராது போயினை. துர்ப்புத்தீ! தர்ம தூஷணா! உனக்கு பந்துத்வமாவது ஸ்னேஹமாவது குலமாவது உடன் பிறந்தமையாவது தர்மமாவது ப்ரமாணமன்று. அவற்றின் கட்டுக்கு உட்படாமற்போயினை. துர்ப்புத்தீ! நீ உன் பந்து ஜனத்தைத் துறந்து பிறனுக்கு தாஸனுயினை. ஆகையால் உன் கதி பந்துக்களுக்கு மன இரக்கம் விளைக்கின்றது. ஸத்புருஷர்களுக்கு நீ நிந்திக்கத் தகுந்தவனுயினை. பந்துக்களினிடையில் இருக்கை எங்கே? நீயாகவே பிறரை அடுத்திருக்கை எங்கே? இவ்விரண்டுக்கும் எவ்வளவோ வாசி உண்டு. உன் புத்தி அற்பமாகையால் அந்த வாசி உனக்குத்தெரியவில்லை. 'நான் அடுத்த பிறர் அற்பர்களன்றுகையால் எனக்கு அற்பத்தனமில்லை' என்கிறுயோ? பிறர் குணமுடையவரேயாயினும் இருக்கட்டும்; தம்முடையவர் குணஹீனர்களேயாயினும் இருக்கட்டும். எப்படியாயினும் குணஹீனர்களான தம்முடையவரே மேல். எப்பொழுதும் பிறன் பிறனேயன்றித் தம்முடையவனுக மாட்டான். எவன் தன் பக்ஷத்தில் சேர்ந்தவனைத்



3062. லக்ஷ்மணன் நிகும்பிலையில் ஹோமஞ் செய்கின்ற இந்த்ரஜித்தின்மேல் பாணம் ப்ரயோகித்தல்.

துறந்து பிறன் பக்ஷத்தை அடுப்பானோ, அவன் தன் பக்ஷத்திலுள்ளவர் அனைவரும் முடிந்த பின்பு அந்தப் பர பக்ஷத்தினாலேயே தானும் ஹதனாவான். ராக்ஷஸனே! ராவணன் தம்பீ! என் ஹோமம் விக்னமடையும்படி லக்ஷ்மணனை ஆலமரத்தின் கீழ் கொண்டு போய்ச்சேர்த்தனையே! இப்படிப்பட்ட தயையில்லாமை உனக்கு மாத்ரமேயன்றி மற்றெவனுக்கும் உண்டாகாது. பந்துவினிடத்தில் நீ யொருவனே இங்ஙனம் கடினமாகச் செய்யத் துணிந்தாயன்றி மற்றொரு பந்துவும் துணிந்து இங்ஙனஞ் செய்ய வல்லனாகமாட்டான்' என்றனன். தனது தமையன் பிள்ளையாகிய இந்த்ரஜித்து இங்ஙனஞ் சொல்லக் கேட்டு, விபீஷணன், 'ராக்ஷஸ ராஜகுமாரனே! துஷ்டா! ராக்ஷஸனே! நீ என் ஸ்வபாவம் தெரிந்தும் தெரியாதவன் போல், ஏன் இப்படி பிதற்றுகின்றனை. நான் உனக்குச் சிற்றப்பனாகையால் பெரியோனாயிருப்பது பற்றி, நீ என்னை இங்ஙனம் பருஷமாகப் பேசலாகாது. நான் கொடுஞ்செயலுடைய ராக்ஷஸ குலத்தில பிறந்தவனாயினும், என் ஸ்வபாவம் ராக்ஷஸர்களைப்போல் கொடிதாயிருப்பதன்று; நல்லதே. சீலமென்கிற இந்த என் குணம் ஸத்புருஷர்களுக்கு முக்யமானது. அந்த சீலத்தையே சொல்லுகிறேன்: க்ரூரமான கார்யத்தையும் பிறனை ஹிம்ஸிப்பதையும் அதர்மத்தையும் செய்ய எனக்கு விருப்பம் உண்டாகிறதில்லை. இப்படி என் சீலம் வேறுபட்டதாகையால் உங்களைத் துறந்தேன். இது தோஷமென்பாயாயின், இந்த தோஷம் ராவணனிடத்திலும் உள்ளதே. ராவணனது சீலம் வேறுபடாதிருக்குமாயின் ப்ராதாவான அவன் 'சீ போ' என்று தன் ப்ராதாவை எங்ஙனம் துரத்துவான்? தன் சீலம் வேறுபட்டது பற்றியேயல்ல

வா என்னை இங்ஙனம் செய்தனன்? மற்றும், ராவணனை நான் துறந்தமைக்குக் காரணங்களைச் சொல்லுகிறேன் கேட்பாயாக. தர்மத்தைத் துறந்த சீலமுடையவனும் பாபத்தையே செய்ய வேண்டுமென்று கிச்சயித்திருப்பவனுமாகிய புருஷனுடைய ஸஹவாஸத்தினால் தனக்கும் பாபம் உண்டாகும். யோக்யனாயிருப்பவன் கையிற் சுற்றின ஸர்ப்பத்தை உதறி விடுவதுபோல், அந்த துர்மார்க்கனைத் துறந்து ஸுகம் பெறவேண்டும். ஹிம்ஸை பிறர் தனத்தைப் பறித்தல் பரதாரங்களைப் புணர்தல் ஆகிய இந்த துராசாரங்களுடையவனை, எரியும் க்ருஹத்தைத் துறப்பதுபோல் உடனே உதறிவிடவேண்டுமென்று பெரியோர்கள் சொல்லுவர். பரதனங்களை அபஹரித்தலும் பரஸ்த்ரீகளைப் புணர்தலும், நண்பரிடத்தில் மிகுந்த ஸந்தேஹமும் ஆகிய இம்மூன்று தோஷங்கள் புருஷனை நாசஞ் செய்பவை. 'தோஷங்களால் ராவணன் விடத்தகுந்தவனாயின், வம்சம் வித்யை முதலிய குணங்களால் ஏன் அடுக்கத்தகுந்தவனல்லன்?'' என்கிறாயோ, மஹர்ஷிகளைக் கோரமாக ஹிம்ஸித்தலும் ஸமஸ்த தேவதைகளோடும் கலஹம் வைத்துக்கொள்ளுதலும் கர்வமும் நீடித்த கோபமும் அழியாதவைரமும் பிறர்நன்மையில் த்வேஷமுடையவனாயிருத்தலும் ஆகிய இந்த தோஷங்கள் ஐச்வர்யத்தையும் ஜீவிதத்தையும் நாசஞ் செய்பவை; மற்றும், மேகங்கள் பெரிய பர்வதங்களையும் மறைப்பதுபோல், எப்படிப்பட்ட மஹாகுணங்களையும் மறைத்துவிடுகின்றன. உன் தந்தையும் என் தமையனுமாகிய ராவணன் இப்படிப்பட்ட தோஷங்களோடு கூடினவனாகையால் அவனை நான் கைவிட்டனன். ராக்ஷஸா! இனி சீக்ரத்திலேயே இவ்விலங்கையும் இதிலுள்ள ராக்ஷஸர்களும் இருக்கமாட்டார்கள். மிகுந்த கர்வமுடையவனும் பாலனும் (அறியாதவனும்)

துஷ்டனுமாகிய நீயும் இருக்கமாட்டாய். உன் தந்தையும் இருக்கமாட்டான். நீ ம்ருத்யுவின் பாசத்தில் அகப்பட்டுக் கொண்டிருக்கின்றனை. என்னை என்னென்ன சொல்லவேண்டுமென்று விருப்பமோ அங்ஙனமெல்லாம் சொல்லுவாயாக. உனக்கு இதோ மரணமாகிற ஆபத்து ஸமீபித்திருக்கையில், என்னை வீணுகப் பழிப்பதனுல் ப்ரயோஜனம் என்ன? பழித்துச் சாவதேயன்றி ஸாதிப்பதொன்றுமில்லையல்லவா? ராக்ஷஸாதமா! இனி உனக்கு ஆலமரத்தின் கீழ்வருவது ஸாத்யமன்று. ககுத்ஸ்த வம்சத்திற் பிறந்த ராம லக்ஷ்மணர்களை இங்ஙனம் பரிபவித்தாயாகையால், இனி உனக்குப் பிழைப்பும் கிடைப்பதரிதே. மனிதர்களுக்கு காதனுகிய லக்ஷ்மணனேடு யுத்தஞ் செய்வாயாக. மாண்டு போய் யமலோகத்தில் யமதூதர்களான தேவதைகள் ஆஜ்ஞாபிக்குங் கார்யங்களைச் செய்துகொண்டிருப்பாய். நீ முயன்ற பலத்தையெல்லாம் காட்டுவாயாக. உனக்குள்ள ஸமஸ்த ஆயுதங்களையும் ஸமஸ்த பாணங்களையும் ப்ரயோகித்துச் செலவழிப்பாயாக. நீ ஏது செய்யினும், இப்பொழுது லக்ஷ்மணனுடைய பாணங்களில் பட்டு நீயும் உன்ஸைன்யமும் எவ்விதத்திலும் ப்ராணன்களைத் தப்பித்துக் கொண்டுபோக முடியாது' என்றனன். எண்பத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

{ லக்ஷ்மணனும் இந்த்ரஜித்தும் வீரப் பேச்சுக்களைப்பேசி ஒருவருக்கொருவர் பாண ப்ரயோகஞ் செய்தல். }

இந்த்ரஜித்து, விபீஷணனுடைய வசனங்களைக் கேட்டு மிகுதியும் கோபாவேசமுற்றுக் கத்தி முதலிய ஆயுதங்களை ஏந்திக்கொண்டு, நன்கு அலங்கரிக்கப்பட்

டதும் குதிரைகள் பூட்டப்பெற்றதுமாகிய மஹத்தான ரதத்தில் ப்ரளயகாலத்து யமன்போல் புலப்படுவோனுகி, மிக நீளமும் மிக விசாலமும் மஹாவேகமும் மிக உறுதியும் அமைந்து பயங்கரமுமான தனுஸ்ஸையும் பகைவரை முடிக்கும்படியான கூருள்ள பாணங்களையும் எடுத்துக்கொண்டு வேகத்துடன் எதிர்முகமாகப் போய் விபீஷணனைப் பார்த்துப் பருஷவசனங்களைப் பேசினன். ரதத்தின்மேலேறி நன்கு அலங்கரித்துக்கொண்டிருக்கும் மஹாபலனும் மேலான வில்லாளியுமாகிய அவ்விந்த்ரஜித்து, தனது தேஜஸ்ஸினுலேயே அலங்கரிக்கப்பட்டவனுகிப் பகைவரை ஒருமாய்க்க முயன்று பொன்வர்ணம் அமைந்த [1] ஹனுமானுடைய தோள் மேல் உட்கார்ந்து உதய பர்வதத்தின் மேலிருக்கும் ஸூர்யன்போல் ஜ்வலிக்கின்ற ராமானுஜனை (ராமன் தம்பியான லக்ஷ்மணனை) க்கண்டனன். இந்த்ரஜித்து பரபரப்புடன் லக்ஷ்மணனையும் விபீஷணனையும் அவ்வானரப் புலிகளையும் பார்த்து 'இனி என் பராக்ரமத்தைக் காண்பீர்களாக. இப்பொழுது, யுத்தத்தில் ஆகாயத்தினின்று பெய்யும் மழைபோன்றதும் எப்படிப்பட்டவர்க்கும் அணுகமுடியாததுமான என் பாணவர்ஷத்தைத் தடுப்பீர்கள்; பார்ப்போம். இப்பொழுது, என் பாணங்கள் இந்த என் மஹாதனுஸ்ஸினின்று விடுபட்டு, பஞ்சுக்குவியலை அக்னி தஹிப்பதுபோல், அனுயாஸமாக, உங்கள் சரீரங்களைக் கொளுத்தப்போகின்றன. இப்பொழுது உங்களெல்லோரையும் கூரான பாணங்களாலும் சூலங்களாலும் சக்தி ஆயுதங்களாலும் யஷ்டிகளாலும தோமரங்களாலும் உங்கள் சரீ

1 இதனால் ஹனுமான் முன்பு ராக்ஷஸர்களோடு யுத்தஞ்செய்து இந்த்ரஜித்து வந்தவுடனே லக்ஷ்மணனைத் தோளில் ஏற்றிக்கொண்டானென்று தெரிகிறது.

ரங்களைப் பிளந்து யமலோகத்திற்கு அனுப்புகிறேன். நான் மிகுந்த ஹஸ்தலாகவமுடையவனுகையால் யுத்தத்தில் பாணவர்ஷத்தைப் பெய்வதும் மேகம்போல் கர்ஜிப்பதுமாயிருக்கையில், என்னெதிரில் எவன் நிற்கவல்லவன்? முன்பு ராத்ரியுத்தத்தில் உங்களிருவரையும் உங்களுடன் வந்தவர்களையும், நான் வஜ்ரத்தையும் இடியையும் நிகர்த்தபாணங்களால் மூர்ச்சித்து பூமியில் விழும்படி செய்தனன். சினந்த காலஸர்ப்பம்போன்ற என்னுடன் மீளவும் யுத்தஞ் செய்ய வந்தனையே! ஆகையால் நீ அந்த ராத்ரி யுத்தத்தை மறந்துபோயினையோ? அல்லது உனக்கு மரணகாலமே ஸமீபித்ததோ? என்று நினைக்கிறேன்' என்றனன். ராக்ஷஸஸ்ரேஷ்டனுகிய அவ்விந்த்ரஜித்து இங்ஙனம் உரக்க மொழிந்த வார்த்தையைக் கேட்டு, லக்ஷ்மணன் முகத்தில் சிறிதும் பயக்குறி உண்டாகப்பெருமல் கோபித்து அவனை நோக்கி 'ராக்ஷஸா! நீ எங்களை யமன் வீட்டிற்கனுப்புவது முதலிய உன்னுற் செய்யமுடியாத கார்யங்களை வாய் வார்த்தையால் செய்து முடித்தனையன்றிக் கார்யத்தினுல் செய்து நிறைவேற்ற வல்லனல்லை. எவன் வீண்பேச்சு பேசாமல் கார்யங்களைச் செய்து நிறைவேற்றுவானே, அவனே புத்தியிற் சிறந்தவனன்றி நீ யன்று. நீ துர்ப்புத்தியே. துஷ்டபுத்தி! நீ எல்லாவகையினும் ப்ரயோஜனமற்றவன். எங்களை ஜயிப்பது எப்படிப்பட்டவனுக்கும் ஸாத்யமன்று. இப்படிப்பட்ட நீ அப்படிப்பட்ட எங்களை ஜயிக்கும் விஷயத்தில் கையிலாகாதவனுயினும் ஜயிக்கிறேனென்று வெறும் வார்த்தையை மாத்ரஞ் சொல்லி அவ்வளவில் ப்ரயோஜனங் கைகூடப்பெற்றதாக நினைக்கின்றனை. 'என் பராக்ரமத்தை முன் பார்த்ததில்லையோ' என்கிருயா? அப்பொழுது ராத்ரி யுத்தத்தில் நீ எங்களுக்குப் புலப்படாமல் மறைந்திருந்து யுத்தஞ் செய்தனையே! அது திருடர் செய்யும் பத்

ததியேயன்றி வீரர்கள் ஆசரிக்கும் மார்க்கமன்று. ராக்ஷஸா! நான் உன் பாணங்களுக்குக் குறியாக உன்னெதிரில் நின்றிருப்பது போலவே நீயும் இப்பொழுது உனக்குள்ள பராக்ரமத்தை முழுவதும் காட்டுவாயாக. வீண்வார்த்தைகளால் உன்னை நீயே புகழ்ந்துகொள்கின்றனை யேன்?'' என்றனன். பல யுத்தங்களில் வெற்றி பெற்றிருக்கும் மஹாபலனுகிய இந்த்ரஜித்து லக்ஷ்மணன் அங்ஙனஞ் சொன்னதைக் கேட்டு, பயங்கரமான வில்லை இழுத்துக் கூரான பாணங்களைத் தொடுத்துவிடுத்தனன். மஹாவேகமுடையவைகளும் ஸர்ப்பவிஷம் போல் கோரமாயிருப்பவைகளுமான அந்த பாணங்கள் ப்ரயோகிக்கப்பட்டுப் பெருமூச்சு விடுகின்ற ஸர்ப்பங்கள்போல் சென்று லக்ஷ்மணனுடைய தேஹத்தில் பட்டு பூமியில் வீழ்ந்தன. யுத்தத்தில் மிகுந்த வேகமுடையவனும் ராவணபுத்ரனுமாகிய இந்த்ரஜித்து சுபலக்ஷணங்கள் அமைந்த லக்ஷ்மணனை மிகுதியும் மஹாவேகமுடைய பாணங்களால் பீடித்தனன். ஸ்ரீமானுகிய அந்த லக்ஷ்மணன் அவயவங்கள் முழுவதும் பாணங்கள் பொற்றப்பெற்று ரக்தத்தில் நனைந்து, புகையில்லாத அக்னிபோல் ப்ரகாசித்தனன். இந்த்ரஜித்து தான் செய்த கார்யத்தைப் பார்த்து அது லக்ஷ்மணனை ஹிம்ஸித்து ஸபலமானதை அறிந்து, மிகுதியும் உரத்த கோஷம் உண்டாகும்படி ஸிம்ஹநாதஞ் செய்து, அவனைப் பார்த்து 'லக்ஷ்மணு! இறகுகள் கட்டப்பெற்றுக் கூரான நுனிகளும் அமைந்து ப்ராணன்களை முடிக்கும்படியான பாணங்கள் என் தனுஸ்ஸினின்று விடுபட்டு இப்பொழுது உன் ப்ராணன்களைப் பறிக்கப்போகின்றன. இப்பொழுது என்னுல் அடிக்கப்பட்டு ப்ராணன்களை இழந்து மாண்டு விழுந்த உன் தேஹத்தின்

மேல் நரிக்கூட்டங்களும் பருந்துக் கூட்டங்களும் கழுகுக் கூட்டங்களும் விழப்போகின்றன. மிகுதியும் துர்ப்புத்தி யாகிய ராமன், க்ஷத்ரியாதமனும் பூஜைக்கிடயாகாதவ னும் தனக்கு பக்தனும் உடன் தோன்றலுமாகிய நீ இதோ என்னால் அடிக்கப்பட்டு மாண்டிருப்பதைக் காண்பான். லக்ஷ்மணா! நான் உன்னை வதிக்கையில், கவசம் முறிந்து வில்லும் ஒடிந்து தலையும் போய் பூமி யில் விழுந்திருக்கிற உனது முண்டத்தை இப்பொழுது ராமன் காண்பான்' என்றனன். இங்ஙனம் இந்த்ர ஜித்து,பரபரப்புடன் பருஷவசனங்களைப் பேசிக்கொண் டிருப்பது கண்டு, லக்ஷ்மணன் யுக்தி அமைந்ததும் அர்த்தமுடையதுமான வாக்யங்களை அவனைப் பார் த்து மொழியத் தொடங்கி 'துர்ப்புத்தீ! ராக்ஷஸா! உன் வாய்பதட்டத்தைத் துறப்பாயாக. வாயால் வீண்பேசு வது வேண்டாம். நீ பயங்கரமான கார்யங்களைச் செய் தவனேயன்றி இப்பொழுது அதை வாயால் சொல் லுவதில் பயன்யாது? பாஹுபலத்தினால் கார்யத் தை நன்கு நிறைவேற்றி அதை ஸாதிப்பாயாக. ராக்ஷஸனே! கார்யஞ்செய்து காண்பிக்காமல், வீணாக உன்னை நீயே புகழ்ந்துகொள்வதனால் என்ன உப யோகம்? நான் நீ பிதற்றினது நிஜமென்று நம்பும்படி யான கார்யத்தைச் செய்து காட்டுவாயாக, புருஷா தமா! நான் பருஷம் பேசாமலே சிறிதாயினும் பழிக் காமலும் தன்னைத் தான் புகழ்ந்து கொள்ளாமலும் உன்னை இப்பொழுது வதித்துவிடுகிறேன், காண்பாய்' என்றனன். இங்ஙனம் மொழிந்து, லக்ஷ்மணன் தீக்ஷ் ணங்களும் மஹா வேகமுடையவைகளுமான ஐந்துபா ணங்களை வில்லில் தொடுத்துக் காதுவரையிலும் இழு த்து இந்த்ரஜித்தினுடைய மார்பில் ப்ரயோகித் தனன். நல்ல இறகுகள் கட்டப்பெற்றிருக்கையால் மஹாவேகமுடைய அந்த பாணங்கள் ஸர்ப்பங்கள்

போல் ஜ்வலித்து அந்த ராக்ஷஸனுடைய மார்பில் ஸூர்ய கிரணங்கள்போல் ப்ரகாசித்தன. அங்ஙனம் அந்த லக்ஷ்மணன் பாணங்களை விடுத்து அடிக்கையில், இந்த்ரஜித்து அடியுண்டு, கோபித்து மூன்று பாணங் களை எடுத்துக் குறிதவருதபடி நன்ருக இழுத்து ப்ர யோகித்து லக்ஷ்மணனை அடித்தனன். அப்பொழுது அங்ஙனம் நரஸ்ரேஷ்டனுகிய லக்ஷ்மணனும் ராக்ஷஸ ஸ்ரேஷ்டனுகிய இந்த்ரஜித்தும் ஒருவரையொருவர் ஜயிக்கவிரும்பித் துமுலமாக நடத்தும் த்வந்த்வயுத்தம் பயங்கரமாயிருந்தது. அவ்விருவரும் பலிஷ்டர்கள்; இருவரும் ஸஹஜமான பராக்ரமமுடையவர்; இருவரும் நன்கு பராக்ரமத்தை நிறைவேற்றுபவர்; இருவரும் ஸம ஸ்த அஸ்த்ரங்களிலும் கைதீர்ந்தவர்; இருவரும் எப்ப டிப்பட்டவர்க்கும் ஜயிக்கமுடியாதவர்; நிகரில்லாத பல மும் தேஜஸ்ஸூம் உடையவர். அப்பொழுது யுத்தத் தில் எப்படிப்பட்டவர்க்கும் எதிரிடமுடியாத மஹானு பாவர்களான அவ்விருவரும் சிறிதும் பயம் அடையா மல், வ்ருத்ராஸுரனும் தேவேந்த்ரனும்போல், ஸிம் ஹங்களை நிகர்த்துப் போராடினர். நரஸிம்ஹனும் ரா க்ஷஸ ஸ்ரேஷ்டனுமாகிய அவ்விருவரும் பின்வாங்காமல் நின்று பல பாணஸமூஹங்களை ஒருவர்மேலொருவர் ப்ர யோகித்துக்கொண்டு மிகுந்த ஸந்தோஷத்துடன் யுத் தஞ் செய்தனர். மனிதர்களில் சிறந்த லக்ஷ்மணனும் ராக்ஷஸர்களில் சிறந்த இந்த்ரஜித்தும் மிகுந்த ஸந்தோ ஷத்துடன் தனுஸ்ஸையும் பாணங்களையும் தரித்து ஒருவரையொருவர் ஜயிக்கவிரும்பி, மேகம் அபாரமாக மழை பெய்வதுபோல், ஒருவர்மேலொருவர் மிகுதியும் பாண ஸமூஹங்களை ப்ரயோகித்தனர். யுத்தத்தில் கைதீர்ந்தவர்களும் கொடிய பாணங்களையும் கத்திகளை

யும் கூருள்ள மற்ற ஆயுதங்களையும் தரித்திருப்பவரும் மஹா பலிஷ்டருமாகிய இந்த்ரஜித்து லக்ஷ்மணன் இருவரும் மஹாயுத்தத்தில் மிகுதியும் வளர்ந்து, சம்பராஸுரனும் தேவேந்த்ரனும்போல், மிகவும் பயங்கரமாக ஒருவரை யொருவர் அடித்துக்கொண்டு யுத்தஞ்செய்தனர். எண்பத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

இந்த்ரஜித்தும் லக்ஷ்மணனும் பாணங்களை ப்ரயோகித்து ஒருவருக்கொருவர் கவசங்களைப் பிளந்து மஹாயுத்தஞ் செய்தல்.

அப்பால் பகைவரைத் தபிக்கச்செய்யும் லக்ஷ்மணன், கோபித்து க்ருஷ்ண ஸர்ப்பம்போல் நெடுமூச்செறிந்துகொண்டு ஒருபாணத்தை வில்லில் தொடுத்து இந்த்ரஜித்தின்மேல் ப்ரயோகித்தனன். இந்த்ரஜித்து லக்ஷ்மணனுடைய நாணொலி கம்பீரமாயிருக்கக் கேட்டு, முகநிறம் மாறப்பெற்று லக்ஷ்மணனை உற்றுப் பார்த்தனன். ராவணபுத்ரனாகிய அந்த ராக்ஷஸன் முகம் விலவிலக்கப்பெற்றமை கண்டு, விபீஷணன் யுத்தத்தில் முயன்றிருக்கிற லக்ஷ்மணனைப் பார்த்து 'மஹாபாஹோ! இந்த்ரஜித்தினிடத்திலுள்ள முகநிறமாற்றம் முதலிய நிமித்தங்களைக் கண்டால் இவன் தோல்வி அடைந்தானென்று நிஸ்ஸந்தேஹமாகத் தெரிகின்றது. ஆகையால் இவனைக் கொல்வதற்கு விரைவாயாக' என்றனன். அதன் பிறகு லக்ஷ்மணன், அக்னி ஜ்வாலைகள்போல் ஜ்வலிப்பவைகளும் மஹாவிஷமுடைய ஸர்ப்பங்கள் போல் கொடியவைகளும் கூராயிருப்பவையுமான பாணங்களை வில்லில் தொடுத்து இந்த்ரஜித்தின் மேல் ப்ரயோகித்தனன். இந்த்ரனுடைய வஜ்ராயுதம்போல் கடினமாகப் பாயுந்தன்மையுள்ள பாணங்களை ப்ரயோ

இத்து லக்ஷ்மணன் ஹிம்ஸிக்கையில், இந்த்ரஜித்து வருந்தி இந்த்ரியங்களெல்லாம கலங்கப் பெற்றுச் சிறிது நேரம் மூர்ச்சித்திருந்தனன். வீரனாகிய அவ்விந்த்ர ஜித்து முஹூர்த்தகாலங் கழித்து இந்த்ரியங்கள் மீளவும் தெளியப் பெற்றுத் தன்னெதிரில் யுத்தத்திற்கு நின்றிருக்கும் வீரனாகிய தசரத குமாரனைக் கண்டனன். அவ்விந்த்ரஜித்து கோபத்தினால் கண்கள் சிவக்கப் பெற்று லக்ஷ்மணன் மேல் எதிர்த்து அவனைக் கிட்டி மீளவும் பருஷமாகப் பேசத்தொடங்கி 'நீயும் உன் அண் ணனும் பாணபாசங்களால் கட்டுண்டிருந்தீர்களே' அந்த முதல் யுத்தத்தில் உங்களைக் கட்டின என் பராக்ரமத்தை மறந்தாயா என்? அப்பொழுது பூமி யில் வீழ்ந்து புரண்டுகொண்டிருந்தனையே? முன்பு முதல் யுத்தத்தில் உங்களிருவரையும் உங்கள் பரிவாரத் தையும் வஜ்ராயுதம் போன்ற பாணங்களால் தெளிவற் றுக் கீழ் விழுந்து புரளும்படி செய்தேனல்லவா? அந்த என்பராக்ரமத்தை அறிந்தும் நீ என்னை எதிர்க்கவிரும் புவதைக்கண்டால், நீ முன்பு அனுபவித்த தோல்வியை மறந்தா யென்றாவது யமலோகத்திற்குப் போக விரும்பு கின்றனை யென்றாவது ஸ்பஷ்டமாகத்தோற்றுகிறது. நீ முதல் யுத்தத்தில் என்பராக்ரமத்தைப் பாராதிருப்பாயா யின், இப்பொழுது உனக்குக் காட்டுகிறேன். இப்பொழுது பின்வாங்காமல் நிற்பாய்' என்றனன். இந்த்ரஜித்து, இங்ஙனஞ் சொல்லி ஏழு பாணங்களால் லக்ஷ்மணனையும், கூரிய நுனியுடைய மேலான பத்து பாணங்க ளால் ஹனுமானையும் அடித்தனன். அப்பால் மிகுந்த வீர்யமுடைய இந்த்ரஜித்து, லக்ஷ்மணாதிகளிடத்தி லுள்ள கோபத்தைக் காட்டிலும் விபீஷணனிடத் தில் கோபம் இருமடங்கதிகமாகப் பெற்றிருக்கை யால் பரபரப்பும் இருமடங்கதிகமாகப் பெற்றுக்

காது வரையிலும் இழுத்துக் குறி தவருதபடி நூறு பாணங்களைப் பெய்து அவ்விபீஷணனை அடித்தனன். அப்பொழுது இந்த்ரஜித்து செய்த கார்யத்தைப்பார்த்துப் புருஷஸ்ரேஷ்டனுகிய அந்த லக்ஷ்மணன் அதைப் பொருள் செய்யாமல் பெரியசிரிப்புச் சிரித்து 'இது கார்யத்திற்குச் சிறிதேனும் உபயோகப்படாது' என்று மொழிந்து கொண்டே பயங்கரமான பாணங்களை எடுத்து இந்த்ரஜித்தின்மேல் ப்ரயோகித்தனன். லக்ஷ்மணன் யுத்தத்தில் கோபாவேச முற்று பயத்தினுலுண்டாகும் முகவிகாரஞ் சிறிதுமின்றி உத்ஸாஹத்துடன் இந்த்ரஜித்தைப் பார்த்து 'ராக்ஷஸனே! உன் பாணங்கள் சிறிதும் ஸாரமில்லாதவை யாகையால் மிகவும் லேசாகி வருத்தப்படுத்தாமல் ஸுகமாயிருக்கின்றன. சூரர்கள் யுத்தத்திற்கு வந்து எங்கும் இவ்வளவு அற்பமாக அடிக்கமாட்டார்கள். யுத்தத்தில் ஜயத்தை விரும்புஞ் சூரர்களோ என்னில்-இவ்விதமாக யுத்தஞ் செய்யமாட்டார்கள்' என்று அவனைப்பார்த்து மொழிந்துகொண்டே அவன்மேல் பாணவர்ஷங்களைப் பெய்தனன். பொன்னுல் அலங்காரஞ் செய்யப்பெற்ற அவ்விந்த்ரஜித்தின்கவசம் லக்ஷ்மணனுடைய பாணங்களால் துணுக்கைகளாகி, ஆகாயத்தினின்று நக்ஷத்ரங்கள் விழுவதுபோல், ரதத்தின்மேல் சிதறி விழுந்தன. அன்னனம் யுத்தத்தில் கவசம் முறிந்து சரீரம் முழுவதும் புண்பட்டு நாராச பாணங்கள் பொற்றப் பெற்றிருக்கையால், வீரனுகிய அவ்விந்த்ரஜித்து வ்ருக்ஷங்கள் நிரம்பவும் முளைக்கப்பெற்ற பர்வதம்போல் புலப்பட்டனன். அனந்தரம் பயங்கர பராக்ரமனுகிய இந்த்ரஜித்து யுத்தத்தில் மிகுதியும் கோபமுற்று வீரனுகிய லக்ஷ்மணன் மேல் ஆயிரம் பாணங்களை ப்ரயோகித்து ஹிம்ஸித்தனன். பெரியதும் திவ்யமுமான லக்ஷ்மணனுடைய கவச

மும்முறிந்தது. அங்ஙனம் அவ்விருவரும் ஒருவர் செய்த தற்கு மற்றொருவர் ப்ரதி செய்துகொண்டு ஒருவர்மேல் ஒருவர் எதிர்த்தனர். அவ்விருவரும் ஸமஸ்த அவயவங் களும் பாணங்களால் பிளவுண்டு தேஹம் முழுவதும் ரக்தம் பெருகப் பெற்று, அடிக்கடி நெடுமூச்செறிந்து கொண்டு துமுலமாக யுத்தஞ் செய்தனர். மஹானுபா வர்களான அவ்விரண்டு வீரர்களும் யுத்தகார்யங்களில் பண்டிதராகையால் வெகு நேரம் ஒருவரை யொருவர் கூரான பாணங்களால் அடித்துக்கொண்டிருந்தனர். அப்பொழுது பயங்கர பராக்ரமர்களான அவ்விருவரும் ஒருவரையொருவர் ஜயிக்க முயன்று ஒருவர்க்கொருவர் பாணங்களால் தேஹம் முழுவதும் நிரம்பப்பெற்று ஒரு வர்க்கொருவர் கவசங்களையும் த்வஜங்களையும் துண் டித்து மலையருவிகள் ஜலத்தைப் பெருக்குவதுபோல் உஷ்ணமான ரக்தத்தைப் பெருக்கிக்கொண்டிருந்தனர். ஆகாயத்தில் ப்ரளயகாலத்து நீலமேகங்கள் விடாமழை பெய்வதுபோல், அவ்விருவரும் பயங்கரமான கோஷத் துடன் ஒருவர்மேல் ஒருவர் பயங்கரமான பாணவர்ஷங் களைப் பெய்பவராகி இங்ஙனம் போராடிக்கொண்டிருக் கையில் வெகு காலம் கடந்ததேயன்றி அவ்விருவர்க் கும் பின் வாங்குதலாவது இளைப்பாவது சிறிதும் உண் டாகவில்லை. அஸ்த்ரங்களை அறிந்தவர்களில் சிறந்தவ ரான அவ்விருவரும் அடிக்கடி ஒருவர்மேலொருவர் திவ்யாஸ்த்ரங்களை ப்ரயோகித்து நானாவித பாணங் களை ஆகாயம் முழுவதும் நிரம்பப் பரப்பினர். லக்ஷ்ம ணனும் இந்த்ரஜித்தும் ஏமாறுதலின்றிச் சீக்ரமாகவும் விசித்ரமாகவும் நன்றாகவும் ஒருவர்மேல் ஒருவர் பா ணங்களை ப்ரயோகித்துக்கொண்டு பயங்கரமான த்வ ந்த்வயுத்தஞ் செய்தனர். அவ்விருவருடைய நாண் சப் தங்கள் ஜனங்களை நடுநடுங்கச் செய்துகொண்டு இடி

விழுந்தாற்போல் பயங்கரமாகி வேறு வேருக உரக்கச் செவிப்பட்டன. அப்பொழுது அவ்விருவரும் மஹா யுத்தஞ் செய்துகொண்டிருக்கையில், ஆகாயத்திலகர்ஜிப்பவைகளும் மிகுதியும் பயங்கரமுமான இரண்டு மேகங்களின் கோஷம்போன்ற பெருந்த்வனி உண்டாயிற்று. ஜயம் பெறவேண்டுமென்று உறுதியான முயற்சியுடன் யுத்தஞ் செய்கின்ற பெரும்புகழரான அம்மஹா பலரிருவரும் பொற்பிடியுடைய பாணங்களால் தேஹம் முழுவதும் புண்பட்டிருக்கையால், மிகுதியும் ரக்தத்தைப் பெருக்கினர். பொற்பிடியுடைய அந்த பாணங்கள் யுத்தத்தில் அவ்விருவருடைய சரீரங்களிலும் புகுந்து ரக்தத்தால் நனைந்து வெளிப்பட்டு பூமியில் ப்ரவேசித்தன. அவ்விருவரும் ப்ரயோகித்த பாணங்களில் வேறு சில பாணங்கள் ஆகாயத்தில் பாய்ந்து செல்லும் பொழுது மிகுதியுங் கூரானபாணங்களால் உறைக்கப் பட்டன. மற்றுஞ் சிலபாணங்கள் வேறு பாணங்கள் பலவற்றையும் முறிப்பதும் சேதிப்பதுஞ் செய்தன. அந்த யுத்தம் பயங்காமாயிருந்தது. அதில் அவ்விருவரும் ப்ரயோகிக்கிற பாணஸமூஹம், யாகத்தில் ஜ்வலிக்கின்ற கார்ஹபத்யம் ஆஹவனீய மென்கிற அக்னிகளோடு கூடின தர்ப்பஸமூஹம்போல் திகழ்ந்தது. அம்மஹானுபாவர்களுடைய தேஹங்கள் மிகுதியும் புண்பட்டிருக்கையால், வனத்தில் சிவந்த புஷ்பங்கள் நிறைந்து இலைகளே இல்லாதிருக்கும் இலவு பலாசு என்கிற இரண்டு வ்ருக்ஷங்கள்போல் ப்ரகாசித்தனர். இந்த்ரஜித்தும் லக்ஷ்மணனும் ஒருவரையொருவர் வதிக்க விருப்பமுற்று அடிக்கடி பயங்கரமாக த்வந்த்வயுத்தஞ் செய்தனர். யுத்தத்தில் லக்ஷ்மணன் இந்த்ரஜித்தையும் இந்த்ரஜித்து லக்ஷ்மணனையுமாக இப்படி ஒருவரை யொருவர்

அடித்துக்கொண்டு எவ்வளவு போராடினும், சிறிதும் இளைப்புறவில்லை. மிகுந்த வேகமுடையவர்களும் மஹா வீர்யசாலிகளுமான அவ்விருவரும் பாண ஸமூஹங்கள் தேஹத்தில் பொற்றப்பெற்றிருக்கையால் வ்ருக்ஷங்கள் முளைக்கப் பெற்ற பர்வதங்கள்போல் ப்ரகாசித்தனர். மிகுதியும் பாணங்களால் சூழப்பட்டு ரக்தம் பெருகி நனைந்திருக்கிற அவ்வீரர்களின் ஸமஸ்த அவயவங்களும் ஜ்வலிக்கின்ற அக்னிபோல் ப்ரகாசித்தன. அப்பால் அவ்விருவரும் அங்ஙனமே வெகுநேரம் போராடிக்கொண்டிருந்தனர். ஆனல் அவர்க்கு யுத்தத்தின் மேல் வெறுப்பாவது இளைப்பாவது சிறிதும் உண்டாகவில்லை. அனந்தரம் மஹா தேஜஸ்வியாகிய விபீஷணன் யுத்தத்தின் முனைகளில் எவராலும் தோல்வியடையாத லக்ஷ்மணனுக்கு யுத்தத்தினலுண்டாகும் ஶ்ரமத்தைப் போக்க நினைத்து அவனுக்கு ப்ரியத்தையும் ஹிதத்தையும் விளைப்பவனுகிய யுத்தரங்கத்தில் முன்னே வந்து நின்றனன். எண்பத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

விபீஷணன் இந்த்ரஜித்தின் பரிவாரங்களை கொல்லும்படி வானரர்களை உத்ஸாஹப்படுத்துதலும், லக்ஷ்மணன் இந்த்ரஜித்தின் ஸாரதியையும் குதிரைகளையும் முடித்தலும்.

பலிஷ்டனும் சூரனுமாகிய விபீஷணன், மதித்த யானைகள்போல், ஒருவரோடொருவர் யுத்தஞ் செய்யத் தலைப்பட்டு[1] ஒருவரையொருவர் ஜயிக்க விரும்பிப்போர் புரிகின்ற இவ்விருவரையும் முதலில் பார்க்க விரும்பி அவர்களைப் பார்த்த பின்பு, தானும் யுத்தஞ் செய்யும் பொருட்டு யுத்தபூமியின் முன்பாகத்தில்வந்துநின்றனன்.

1 விபீஷணன் முதலில் தானே யுத்தஞ் செய்ய முயன்றும், அவர்களில் எவன் மிகுந்த பலமுடையவனென்று தெரிந்துகொள்ள

அப்பால் அந்த விபீஷணன் யுத்தரங்கத்தில் நின்று அப்பொழுது ஓர் பெரிய வில்லை எடுத்துக்கொண்டு உரக்க நாணை இழுத்து ராக்ஷஸர்களின்மேல் மேலான பாணங்களைப்ரயோகித்தனன். அந்த பாணங்கள் அக்னிபோல் ஜ்வலித்துக் குறிதவருமல் ராக்ஷஸர்மேல்பட்டு இடிகள் பெரும் பர்வதங்களைப் பிளப்பதுபோல், அவர்களைப் பிளந்தன. ராக்ஷஸோத்தமர்களான அவ்விபீஷணனுடைய மந்த்ரிகளும் யுத்தத்தில் சூலங்களாலும் கத்திகளாலும் பட்டயங்களாலும் வீரர்களான ராக்ஷஸர்களைக் கண்டித்தனர். அப்பொழுது விபீஷணன் தன்மந்த்ரிகளான அந்த ராக்ஷஸர்களால் சூழப்பெற்று,மதித்த யானைக்குட்டிகளினிடையி லிருக்கின்ற மத்தகஜம் போல் ப்ரகாசித்தனன். அனந்தரம் ராக்ஷஸஶ்ரேஷ்டனுகிய விபீஷணன் அந்தந்த ஸமயங்களுக்கு இன்னின்னது யுக்தமென்று அறிந்தவனுகையால் ராக்ஷஸர்களோடு யுத்தஞ் செய்ய விரும்புகின்ற வானரர்களை மேன்மேலும் உத்ஸாஹப் படுத்த முயன்று அப்பொழுதைக்குத் தகுந்தபடி அவர்களை நோக்கி 'வானரஶ்ரேஷ்டர்களே! ராக்ஷஸேந்த்ரனுகிய ராவணனுக்கு இவனெருவனே பரமகதியாயிருக்கின்றனன். ராவணனுடைய ஸைன்யமெல்லாம் போய் இவனெருவனே மிகுந்திருக்கின்றனன். நீங்கள் ஏன் வெறுமனே நின்றிருக்கிறீர்கள். பாபிஷ்டனுகிய இந்த ராக்ஷஸன் யுத்தத்தில் மாண்டு போகையில், பின்பு ராவணனெருவன் தவிரமற்றை அவன் பலமெல்லாம் மாண்டாற்போலவே. வீரனுகிய ப்ரஹஸ்தன் மஹா பலமுடைய

---

விரும்பி வெறுமனே இருந்தானென்றும், பின்பு அவர்கள் பலத்தில் ஒத்திருப்பதைக் கண்டு தான் ராமனுக்குக் கிஞ்சித்கரிக்க (ஏதேனுமொன்றைச் செய்ய) விரும்பி இப்பொழுது யுத்தத்திற்கு முயன்றானென்றும் உணர்க.

கிரும்பன் கும்பகர்ணன் கும்பன் தூம்ராக்ஷனென்னும் ராக்ஷஸஸ்ரேஷ்டன் ஜம்புமாலி மஹாமாலி தீக்ஷ்ணவே கன் அசனிப்ரபன் ஸுப்தக்னன் யஜ்ஞகோபன் வஜ்ர தம் ஷ்ட்ரன் ஸம்ஹ்ராதி விகடன் நிக்னன் தபனன் தமன் ப்ரகஸன் ப்ரஜங்கன் ஜங்கன் எவர்க்கும் எதிர்க்க முடியாத அக்னிகேது மஹா வீர்யமுடைய ரஸ்மிகேது வித்யுஜ்ஜிஹ்வன் த்விஜிஹ்வன் ஸூர்யசத்ருவென்னும் ராக்ஷஸோத்தமன் அகம்பனன் ஸுபார்ஸ்வன் சக்ரமாலி யென்னும் ராக்ஷஸவீரன் கம்பனன் பலிஷ்டர்களான தேவாந்தக நராந்தகர்கள் ஆகிய இவர்களெல்லோரும் கொல்லப்பட்டனர். நீங்கள் மஹாபலிஷ்டர்களான இந்த ராக்ஷஸோத்தமர்கள் பலரையும் கொன்று, ஸமுத்ரத் தைக் கைகளால் நீந்திக் கடந்தீர்கள். இனி இந்த்ரஜித் தைக் கொல்வது உங்களுக்குக் குளப்படி போன்றதே. அதையும் தாண்டிவிடுவீர்களாக.வானரர்களே!பலத்தி னல் கொழுத்திருந்த ராக்ஷஸர்களெல்லோரும் எதிர்த் து வந்து உங்களால் கொல்லப்பட்டனர். இவ்விந்த்ர ஜித்து ஒருவன் மாத்ரமே மிகுதி. இவ்வளவு மாத்ரமே உங்களுக்கு ஜயிக்கவேண்டி யிருக்கின்றது. நான் ராம னதுகார்யத்திற்காக தயையைத் துறந்து ப்ராதாவின் புதல்வனுயினும் இந்த்ரஜித்தை வதித்து விடுவேன். ஆனால் சிற்றய்யனுகிய எனக்குப் புதல்வனுன அவனை நானே வதிப்பது யுக்தமன்று நான் இந்த்ரஜித்தை வதிக்கவிரும்பி முயன்றவுடனே கண்ணீர்வந்து என் கண்களை மறைக்கின்றது. ஆகையால் அவனை மஹா பாஹுவாகிய இந்த லக்ஷ்மணனே முடித்துவிடுவான். வானரர்களே! நீங்களெல்லோரும் ஒன்றுகூடி, இவ் விந்த்ரஜித்துக்கு ஸஹாயஞ்செய்ய முயன்று இவருனகி லிருக்கும் ராக்ஷஸர்களை வதிப்பீர்களாக' என்றனன்.

இங்ஙனம் மஹாயஶஸ்வியாகிய அவ்விபீஷணன் உத்ஸாஹப்படுத்துகையில், வானரோத்தமர்கள் ஸந்தோஷம் அடைந்து வால்களை அசைத்தனர். அனந்தரம், அந்த வானரஸிம்ஹர்கள் அவ்வுத்ஸாஹத்தினுல் அடிக்கடி ஸிம்ஹநாதங்களைச் செய்துகொண்டு, மேகங்களைப் பார்த்து மயில்கள் கேகாவென்னும் சப்தங்களைச் செய்வதுபோல், ஸந்தோஷத்தை அடக்கமுடியாமல் நாநுவிதசப்தங்களைச் செய்தனர். ஜாம்பவான் தன் ஸைன்யங்களெல்லாம் சூழப்பெற்றுச் சிலைகளால் ராக்ஷஸர்களை அடித்து நகங்களாலும் தந்தங்களாலும் அவர்களை ஹிம்ஸித்தனன். மஹாபலிஷ்டர்களான அந்த ராக்ஷஸர், அங்ஙனம் அடித்துக்கொண்டிருக்கிற பல்லூக பதியான ஜாம்பவானை, பயமின்றி அனேகவித ஆயுதங்களைக்கொண்டு சுற்றிலும் தடுத்தனர். அந்த ராக்ஷஸர்கள் அப்பொழுது யுத்தத்தில் ராக்ஷஸ ஸைன்யத்தை வதித்துக்கொண்டிருக்கிற ஜாம்பவானை, பாணங்களாலும் கூரான கோடாலிகளாலும் பட்டயங்களாலும் யஷ்டிகளாலும் தோமரங்களாலும் அடித்தனர். வானரர்களுக்கும் ராக்ஷஸர்களுக்கும் நடந்த அந்தத் துமுலயுத்தம், கோபாவேசங்கொண்ட தேவஸுரர்களின் யுத்தம்போல் பெருங்கோஷம் உண்டாகப்பெற்று மிகவும் பயங்கரமாயிருந்தது. [1] வீர்யசாலியாகிய ஹனுமானும் மிகுதியும் கோபித்து ஓர் ஸாலவ்ருக்ஷத்தைப் பிடுங்கிக்கொண்டு அனேகமாயிரம் ராக்ஷஸர்கள்மேல் விழுந்து ஹிம்ஸித்தனன். இந்த்ரஜித்து சிற்றய்யனுக்கு மிகுதியும் மேலான யுத்தங்கொடுத்து மீளவும் சத்ருவீரர்களை உருமாய்க்கவல்ல லக்ஷ்மண

---

[1] இங்கு ஹனுமான் யுத்தஞ் செய்தானென்கையால் ஹனுமான் தோளிலிருந்த லக்ஷ்மணன் அவனது ஶ்ரமந் தீரும்பொருட்டுச் சிறிது நேரம் இறங்கியிருந்தானென்று தெரிகிறது.

னையே எதிர்த்துப்போயினன். அப்பொழுது அந்த யுத்தத்தில் வீரர்களும் நன்கு யுத்தஞ் செய்வதில் ஸுப்ரஸித்தர்களுமான அவ்விருவரும் பாணவர்ஷங்களைப் பெய்துகொண்டு ஒருவரை யொருவர் ஹிம்ஸித்தனர். மஹா பலிஷ்டர்களும் மிகுந்த வேகமுடையவருமாகிய அவ்விருவரும் வர்ஷருதுவில் சந்த்ர ஸூர்யர்கள் மேகங்களால் மறைந்திருந் திருப்பதுபோல், பாண ஸமூஹங்களால் அடிக்கடி மறைந்திருந்தனர். அங்கு அவ்விருவரும் போர் புரியும்பொழுது அவரது ஹஸ்த லாகவத்தினால், அம்பறுத் தூணியினின்று பாணங்களை எடுப்பதாவது, வில்லில் பாணத்தைத்தொடுப்பதாவது வில்லை இடம் வலங்களில் மாற்றிப் பிடித்துக்கொள்வதாவது, பாணங்களைத் தொடுத்து விடுவதாவது, காது வரையிலும் நாணை இழுப்பதாவது, ஆலீடம் முதலிய நிலைகளில் நிற்பதாவது, வில்லையும் நாணையும் முட்டியால் பிடித்தலாவது, குறி தவறாமல் விடுதலாவது எதுவும் எள்ளளவும் புலப்படவில்லை. தனுஸ்ஸினின்று வேகத்துடன் புறப்படுகின்ற பாணஸமூஹங்கள் ஆகாயம் முழுவதும் மறைப்பதனால் பாணங்கள் தவிர மற்றை எந்த வஸ்துவும் புலப்படவில்லை. அப்பொழுது லக்ஷ்மணன் இந்த்ரஜித்தையும் இந்தரஜித்து லக்ஷ்மணனையும் அடுத்துப் போர் புரியும்பொழுது இவன் அவனை வெல்லுவனென்றாவது, அவன் இவனை வெல்லுவனென்றாவது நிச்சயிக்க முடியாதிருந்தது. அவ்விருவரும் வேகமாக ஒருவர்மேலொருவர் விடுத்த பாணங்கள் ஆகாயத்தில் சிறிதும் இடமில்லாதபடி நிரம்புகையில், அது இருள் மூடினாற்போலிருந்தது. அந்தணம் அவ்விருவரும் கூரான பாணங்கள் பலவாயிரங்களை விடுத்துக்கொண்டிருக்கையால். திக்குக்களும் விதிக்குக்களும் பாணங்களால் நிறைந்தவையாயின.

ஸமஸ்தமும் ஸூர்யன் அஸ்தமிக்கும்பொழுது இருளால் மூடப்படுவதுபோல், ஒன்றும் தெரியாமல் இருளால் மூடப்பட்டு மிகுதியும் பயங்கரமாயிருந்தது. அப்பொழுது ரக்தப்ரவாஹங்கள் பெரிய நதிகள்போல் அனேகமாயிரம் ப்ரவஹித்தன. மாம்ஸத்தை ஆஹாரமாகவுடைய பயங்கரமான ஜந்துக்கள் தாருணமாகக் கூச்சலிட்டன. அப்பொழுது பயத்தினுல் காற்றும் வீசாதிருந்தது. நெருப்பு எரியவில்லை. மஹரிஷிகள் திகிலடைந்து 'உலகங்களுக்கு மங்களம் உண்டாகுமாக' என்று மொழிந்தனர். முன்பு யுத்தம் பார்க்க அவ்விடம் வந்திருந்த கந்தர்வர்களும் சாரணர்களும் மிகவும் பயங்கரமான அந்த யுத்தத்தைப் பார்க்கமுடியாமல் பயந்து வேறிடத்திற்குப் போயினர். அனந்தரம் லக்ஷ்மணன், ராக்ஷஸ ஶ்ரேஷ்டனுகிய இந்த்ரஜித்தின் பொன்பூஷணமுடைய கறுத்த குதிரைகள் நான்கையும் நான்கு பாணங்களால் அடித்தனன். பிறகு ஸ்ரீமானுகிய லக்ஷ்மணன், கூராயிருப்பதும் இறகுகள் கட்டப்பெற்றதும் மேலான ஒளியுடன் விளங்குவதும் வெளுத்திருப்பதுமாகிய வேறொரு பல்ல பாணத்தை எடுத்துக் காதுவரையிலும் இழுத்து, இந்த்ரனுடைய வஜ்ராயுதம்போன்று உள்ளங்கை யொலியினுல் சப்திப்பதும் இடிபோன்றதுமான அந்த பாணத்தினுல் தனக்குள்ள லாகவம் தோற்றும்படி ரதத்தை விசித்ரமாக நடத்துந் திறமையுடைய இந்த்ரஜித்தின் ஸாரதியினுடைய தலையை அவனது சரீரத்தினின்று அறுத்துத் தள்ளினன். ஸாரதி மாண்டுபோகையில் மஹாதேஜஸ்வியும் மந்தோதரியின் குமாரனுமாகிய இந்த்ரஜித்து தானே தேரையும் ஓட்டிக்கொண்டு வில்லைப் பிடித்து யுத்தஞ் செய்வதுமாயிருந்தனன். அந்த யுத்தத்தில் அங்ஙனம் இந்த்ரஜித்து தானொருவனே தேரை ஓட்

டிக்கொண்டு வில்லைப்பிடித்து யுததஞ் செய்துகொண்டு மிருக்கிற ஸாமர்த்யத்தைக் கண்டு எல்லோரும் ஆச் சர்யமுற்றனர். லக்ஷ்மணன், இந்த்ரஜித்தின் ஹஸ்தங் கள் குதிரையோட்டும் வ்யாபாரத்தில் ஊற்றமுற்றிருக் கும்பொழுது அவனைக் கூரான பாணங்களால் அடித் தனன். அவன் வில்லைப் பிடிக்கும் ஸமயத்தில் அவ னது குதிரைகளை பாணங்களால் அடித்தனன். லக்ஷ் மணன் பகைவனிடத்தில் ஸமயம் பார்த்து பாணப்ர யோகஞ் செய்வதில் மிகவும் சீக்ரமான லாகவமுடைய வனாகையால், அங்ஙனம் அந்த ரந்த்ரங்களைப் பார்த் துக் கண்டுபிடித்து ரதத்தில் நின்று உலாவுகின்ற இந் த்ரஜித்தை, பயமற்றவனாகி பாணஸமூஹங்களால் பீடித் தனன். இந்த்ரஜித்து, யுத்தத்தில் தன் ஸாரதி ஹதனா னதையும், தான் குதிரைகளை நடத்தும் ஸமயம்பார்த்து லக்ஷ்மணன் தன்னை ஹிம்ஸிப்பதையும் கண்டு, யுத்த கர்வத்தை இழந்து வருத்தமுற்றவனாயினன். வானர யூதபதிகள் இந்த்ரஜித்தின் முகம் வருத்தமுற்றிருப் பதைக் கண்டு மிகுதியும் ஸந்தோஷமுற்று லக்ஷ்மண னைக் கொண்டாடினர். அப்பால், ப்ரமாதி சரபன் ரப ஸன் கந்தமாதனன் என்னும் வானரோத்தமர்கள் நால்வரும் இந்த்ரஜித்தின் ஆடம்பரத்தைப் பொறுக்க முடியாமல் தமது வீர்ய வேகத்தைக் காட்டத்தொடங் கினர். மிகுந்த வீர்யமுடையவர்களும் பயங்கர பராக்ர மர்களுமான அவ்வானரவீரர்கள் நால்வரும், இந்த்ர ஜித்தின் ரதத்தில் பூட்டின மேலான குதிரைகள் நான்கின்மேலும் மிகவேகத்துடன் கிளம்பிப்பாய்ந்தனர். பர்வதம்போன்ற உருவமுடைய அவ்வானர வீரர்கள் மேல் விழுந்தவுடனே, அந்த அஶ்வங்கள் பொறுக்கமுடி யாமல் முகங்களினின்று சிவந்தரக்தத்தைக் கக்கின. அந்தக் குதிரைகள் அங்ஙனம் வருந்தி அவயவங்கள்

முறியப்பெற்று ப்ராணன்களை இழந்து பூமியில் வீழ்ந்தன. அவ்வானரவீரர்கள் இந்த்ரஜித்தின் குதிரைகளை ஹதஞ்செய்து அவனது மஹாரதத்தையும் முறித்துப் பாழ்செய்து மீளவும் வேகத்துடன் கிளம்பிவந்து லக்ஷ்மணனது பக்கத்தில் நின்றனர். அவ்விந்த்ரஜித்து, குதிரைகள் செத்து ஸாரதியும் மாண்ட அந்த வெறும்தேரினின்று பூமியில் இறங்கி பாணவர்ஷங்களைப் பெய்துகொண்டு லக்ஷ்மணன்மேல் எதிர்த்தனன். அனந்தரம் மஹேந்த்ரனுக்கொப்பான லக்ஷ்மணன் யுத்தத்தில் தன்மேல் கூரான பல பாணங்களை ப்ரயோகித்துக்கொண்டு கால்நடையாகவே அணுகிவருகின்ற அவ்விந்த்ரஜித்தை மிகுதியுங் கூருடைய மேலான பாணங்களையும் மற்றும் வேறுபான ஸமூஹங்களையும் ப்ரயோகித்துத் தடுத்தனன். தொண்ணூறுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

இந்த்ரஜித்து வேறு ரதத்தில் ஏறிக்கொண்டுவர லக்ஷ்மணன் அவனது ஸாரதியைக் கொல்லுதலும், விபீஷணன் இந்த்ரஜித்தின் குதிரைகளைக் கொல்லுதலும், இந்த்ரஜித்து லக்ஷ்மணனால் மாண்டுபோதலும்.

மஹா தேஜஸ்வியாகிய இந்த்ரஜித்து அங்ஙனம் குதிரைகள் மாளப்பெற்று ரதத்தினின்று இறங்கிப் பூமியில் நின்று மிகுதியும் கோபமுற்றுத் தேஜஸ்ஸினால் மிகவும் ஜ்வலித்துக்கொண்டிருந்தனன். வில்லாளிகளான அவ்விருவரும் பாணங்களால் ஒருவரையொருவர் மிகுதியும் வதிக்க விரும்பி, அடவியில் யானைகள் போல் வெற்றியின்பொருட்டு ஒருவரையொருவர் எதிர்த்தனர். ராக்ஷஸர்களும் யுத்தத்தில் நாற்புறத்திலும் உலாவிக்கொண்டு ஒருவரையொருவர் வதிப்பவராகித் தந்தமது அதிபதியைச் சிறிதும் விடாமல் போராடிக்

கொண்டிருந்தனர். அதன் பிறகு இந்த்ரஜித்து அந்த ராக்ஷஸர்களனைவர்க்கும் ஸந்தோஷம் விளைத்துக் கொண்டு அவர்களைப் புகழ்ந்து தானும் மனமகிழ்ச்சி கொண்டு 'ராக்ஷஸோத்தமர்களே! இந்தத் திசைகளை யெல்லாம் இருள் கனமாக மூடிக்கொண்டிருக்கிறது. ஆகையால் இப்பொழுது தன்னுடையவனென்றாவது பிறனுடையவனென்றாவது பேதம்தெரியாதிருக்கின்றது. நீங்கள் இவ்வானரர்களை, நான் இங்கிருந்து புறப்பட்டுப் போகும் ஸங்கதி தெரியாதிருக்கும்படி ஏமாற்றும் பொருட்டு தைர்யத்துடன் நின்று யுத்தஞ் செய்துகொண் டிருப்பீர்களாக. நான் இதற்குள் தேரிலேறிக்கொண்டு யுத்தத்திற்கு வருகிறேன். நான் பட்டணத்திற்குள் போகையில், துர்ப்புத்திகளான இந்த வானரர்கள் யுத்தஞ் செய்து நான் போகும்பொழுது தடுக்காதிருக்கும்படி நீங்கள் செய்யவேண்டும்' என்றனன். பகைவரை அடக்குந் திறமையுடைய இந்த்ரஜித்து, தன்ஸைன்யங்களுக்கு அங்ஙனஞ் சொல்லி வானரர்களை வஞ்சித்து ரதங் கொண்டு வரும்பொருட்டு லங்கைக்குப் போயினன். யுத்தங்களில் வெற்றிபெறுந் தன்மையுடைய மஹாதேஜஸ்வாகிய அவ்விந்த்ரஜித்து, அழகியதாகி ஸ்வர்ணாலங்காரங்களால் விளக்கமுற்று அநேகமாயிரம் ப்ராஸாயுதங்களாலும் கட்கங்களாலும் நிறைந்து உத்தம அஶ்வங்கள் பூட்டின ரதத்தை, அஶ்வ லக்ஷணங்களை அறிந்து தனக்கு ஹிதஞ் சொல்பவனுமாகிய ஸாரதி ஓட்டிக் கொண்டு வருகையில், தன் தேஜஸ்ஸினால் அதை அலங்கரிப்பவனுமாகி ஆரோஹித்தனன். மந்தோதரியின்புதல்வனாகிய இந்த்ரஜித்து, ம்ருத்யுவின் வசத்தினால் தூண்டப்பட்டு, மேலான ராக்ஷஸஸமூஹங்களோடுகூடி லங்காநகரத்தினின்று வேகமாகப் புறப்பட்டனன். சத்ரு

வீரர்களை உருமாய்க்குந் திறமையுடைய அவ்விந்த்ரஜித் துவேகமுடைய குதிரைகள் பூட்டப்பெற்ற ரதத்தில் ஏறிக்கொண்டு பட்டணத்தினின்று புறப்பட்டு லக்ஷ்மணனையும் விபீஷணனையும் எதிர்த்துப் போயினன். அனந்தரம் லக்ஷ்மணனும் மஹா வீர்யசாலிகளான வானரர்களும் விபீஷணனும், யுத்த பூமியில் இருந்தாற் போலவே இருந்து தம்மை மோசஞ்செய்துபோய் ரதத்திலேறிக்கொண்டு வந்த அவ்விந்த்ரஜித்தைப் பார்த்து, அந்த புத்திசாலியின் லாகவத்திற்கு மிகுதியும் ஆச்சர்யம் அடைந்தனர். இந்த்ரஜித்து மிகுதியும் கோபாவேசமுற்று, யுத்தத்தில் பாணஸமூஹங்களைப் பரப்பி வானரர்களை நூறு நூறாகவும் ஆயிரமாயிரமாகவும் விழத்தள்ளினன். யுத்தங்களில் ஜயசீலனாகிய இந்த்ரஜித்து கோபாவேசத்துடன் மிகுந்த லாகவத்தைக்கைப் பற்றி பாணங்களை ஓயாமல் தொடுத்து விடுகையால் தனுஸ்ஸு குண்டாக வளைந்திருக்கப்பெற்று வானரர்களை வதிக்கத்தொடங்கினன். பயங்கரபராக்ரமர்களான அவ்வானரர்கள், அங்ஙனம் இந்த்ரஜித்து பாணங்களால் தம்மை வதித்துக்கொண்டிருக்கையில் பொறுக்கமுடியாமல், ப்ரஜைகள் ப்ரஜாபதியான ப்ரஹ்மதேவனைச் சரணமடைவதுபோல், தமது நாதனாகிய லக்ஷ்மணனைச் சரணம் அடைந்தனர். பிறகு லக்ஷ்மணன் யுத்தத்தில் கோபாவேசத்தினால் ஜ்வலித்துத் தான் ஹஸ்தலாகவத்தைக் காட்டிக்கொண்டு இந்த்ரஜித்தின் கையிலுள்ள தனுஸ்ஸைத் துண்டித்தனன். இந்திரஜித்து வேகமாக வேறுதனுஸ்ஸை எடுத்து நாணேற்றுகையில், அதையும் லக்ஷ்மணன் மூன்று பாணங்களால் சேதித்தனன். பிறகு லக்ஷ்மணன் அங்ஙனம் தனுஸ்ஸை அறுத்து மற்றும் அவ்விந்த்ரஜித்தின் மார்பில் ஸர்ப்ப விஷம்போல் ப்ராணாந்த கரங்களான (ப்ராணன்களை

முடிக்கும் படியான) ஐந்து பாணங்களை ப்ரயோகித்து ஹிம்ஸித்தனன். அந்த பாணங்கள் லக்ஷ்மணனுடைய பெரிய தனுஸ்ஸினின்றும் புறப்பட்டு அவனது சரீரத்தைப் பிளந்து ரக்தத்தில் நனைந்து சிவந்த ஸரப்பங்கள்போல் பூமியில் விழுந்தன. அவ்விந்த்ரஜித்து லக்ஷ்மணனுடைய பாணங்களால் கவசம் முறியப்பெற்று வாயினின்று குருதியைக் கக்கிக்கொண்டு, திடமான நாணுடையதும் நல்ல வலிவுடையதுமான மற்றொரு மேலான வில்லை எடுத்துக் கொண்டனன். அவ்விந்த்ரஜித்து மிகுதியும் லாகவத்தை ஏற்றுக்கொண்டு, தேவேந்த்ரன் மழை பெய்வதுபோல், லக்ஷ்மணன்மேல் பாணவர்ஷங்களைப் பெய்தனன். சத்ருக்களை அடக்குந் திறமையுடைய அந்த லக்ஷ்மணன், எப்படிபட்டவர்க்கும் அணுகமுடியாத அவ்விந்த்ரஜித்தின் பாண வர்ஷத்தைச் சிறிதும் தழதழப்பின்றி பாணங்களால் தடுத்தனன். அப்பொழுது மஹா தேஜஸ்வியும் ரகுகுல குமாரனுமாகிய லக்ஷ்மணன் தழதழப்பின்றி இந்த்ரஜித்துக்குத் தன்பராக்ரமத்தைக் காண்பித்தனன். அது மிகுதியும் அற்புதமாயிருந்தது. அப்பால் லக்ஷ்மணன் யுத்தத்தில் மிகுதியும் கோபாவேச முற்றுத் தனக்கு அஸ்த்ர ப்ரயோகத்திலுள்ள வேகத்தைக் காண்பித்துக்கொண்டு, அந்த ராக்ஷஸர்களெல்லோரையும் ஒவ்வொருவனையும் மும்மூன்று பாணங்களால் அடித்து, இந்த்ரஜித்தையும் பலபாணங்களால் அடித்து வருந்தச் செய்தனன். அந்தராக்ஷஸன், அங்ஙனம் பலிஷ்டனும் சத்ருக்களை அழிப்பவனுமாகிய லக்ஷ்மணனால் மிகுதியும்பாணங்கள் பொறற்றப்பெற்றுக் கோபாவேசத்துடன் லக்ஷ்மணன்மேல் சிறிதும் இடமில்லாதபடி பலபாணங்களை ப்ரயோகித்தனன். லக்ஷ்மணன் அந்த பாணங்கள் தன்மேல் படுவதற்கு முன்னமே இடையிலேயே அவற்றைக்

கூரான பாணங்களால் கண்டித்தனன். அவ்வளவே யன்றி தர்மஸ்வபாவனும் ரதிகர்களில் சிறந்தவனுமாகிய லக்ஷ்மணன் யுத்தத்தில் வளைந்த கணுக்களையுடையபல்ல பாணத்தினால், ரதிகனாகிய இந்த்ரஜித்தின் ஸாரதியினுடைய சிரஸ்ஸையும் அறுத்துத் தள்ளினன். அந்த யுத்தத்தில் ஸாரதி மாண்டுபோயினும் இந்த்ரஜித்தின் ரதத்தில் பூட்டினகுதிரைகள் [1]அப்யாஸத்தின் மிகுதியால் சிறிதும் கலக்கமடையாமல் மண்டல நடைகளில் ரதத்தை இழுத்துக்கொண்டு உலாவின. அதுபார்க்க மிகவும் ஆச்சர்யமாயிருந்தது. திடமான பராக்ரமமுடைய லக்ஷ்மணன்யுத்தத்தில் கோபாவேசமுற்று, பயமுறும்படி இந்த்ரஜித்தின் குதிரைகளை பாணங்களால் அடித்தனன். பலிஷ்டனாகிய இந்த்ரஜித்து லக்ஷ்மணன் செய்த அந்தக் கார்யத்தைப்பொறுக்கமுடியால்,கோபித்திருக்கும் லக்ஷ்மணனைப் பத்து பாணங்களால் அடித்தனன். வஜ்ராயுதத்தை நிகர்த்தவைகளும் ஸர்ப்பவிஷம் போன்றவைகளுமான இந்த்ரஜித்தின் பாணங்கள். பொன்வர்ணமுடைய லக்ஷ்மணனது கவசத்தில் பட்டுமுறிந்து நாசம் அடைந்தன. ராவண புத்ரனாகிய இந்த்ரஜித்து, லக்ஷ்மணன் பிளக்க முடியாத கவசம் அணிந்திருக்கிறானென்று தெரிந்து மிகுதியுங் கோபித்துத் தனக்கு பாணப்ரயோகஞ் செய்வதிலுள்ள வேகத்தைக் காண்பித்துக்கொண்டு, நல்ல பிடியுடைய மூன்று பாணங்களால் லக்ஷ்மணனை நெற்றியில் அடித்தனன். யுத்தத்தில் மிக விருப்பமுடைய லக்ஷ்மணன் நெற்றியில் மூன்று பாணங்கள் பொற்றுக் கொண்டிருக்கையால், யுத்தத்தில், மூன்று சிகரங்களையுடைய பர்வதம்போல் புலப்பட்டனன். அங்ஙனம் இந்த்ரஜித்து மஹாயுத்தத்தில் பாணங்களால் பீடிக்கையில்,

1. அப்யாஸம்—பழக்கம்.

லக்ஷ்மணன் வேகமாக வில்லை இழுத்து, அழகான குண்டலங்கள் அமைந்த இந்த்ரஜித்தின் முகத்தில் ஐந்து பாணங்களை ப்ரயோகித்தனன். சூரர்களும் மஹா பலிஷ்டர்களும் பயங்கர பராக்ரமர்களுமான லக்ஷ்மணனும் இந்த்ரஜித்தும், நல்ல வலிவுடைய தனுஸ்ஸுக்களை ஏந்தி; அலரியிலை முதலியவற்றின் உருவம் போன்ற உருவமுடைய பலவித முனைகள் அமைந்த பாணங்களால் ஒருவரையொருவர் ஹிம்ஸித்தனர். யுத்தத்தில் சூரர்களான லக்ஷ்மணனும் இந்த்ரஜித்துமாகிய இருவரும் ஸமஸ்த அவயவங்களும் ரக்தத்தில்நன்கு நனையப்பெற்று மிகுதியும் புஷ்பித்த பலாசவ்ருக்ஷங்கள்போல் ப்ரகாசித்தனர். அவ்விருவரும் வில்லைத்தரித்து ஜயத்தில் மனத்தை நிறுத்தி ஒருவரையொருவர் எதிர்த்து அவயவங்கள் முழுவதிலும் பயங்கரமான பாணங்களை ப்ரயோகித்தனர். அனந்தரம் இந்த்ரஜித்து கோபம் இருமடங்கு அதிகமாகப்பெற்று விபீஷணனது அழகான முகத்தில் மூன்று பாணங்களை நாட்டினன். அன்றியும் அவன் ராக்ஷஸேந்த்ரனாகிய விபீஷணனை மூன்று பாணங்களால் அடித்து, அவ்வானர வீரர்களனைவரையும் ஒவ்வொருவனை ஒவ்வொரு பாணத்தினால் அடித்தனன். மஹா தேஜஸ்வியாகிய விபீஷணன் அவ்விந்த்ரஜித்தின்மேல் மிகுதியும் கோபித்து மிகுதியும் துர்ப்புத்தியாகிய அவனது குதிரைகளைக் கதையால் அடித்தனன். மஹாதேஜஸ்வியாகிய அவ்விந்த்ரஜித்து குதிரைகள் செத்து ஸாரதியும் மாண்டு வெறும் புறமான அந்த ரதத்தினின்றும் பூமியில் குதித்துரதத்திலுள்ள சக்தியென்கிற ஆயுதத்தை எடுத்துச் சிற்றய்யன்மேல் ப்ரயோகித்தனன். ஸௌமித்ரைக்கு ஆநந்தத்தை வளரச்செய்பவனாகிய லக்ஷ்மணன் அந்தசக்தி விபீஷணன்மேல் வருவதைக்கண்டு இடையிலேயே கூரான பாணங்களால் சேதிக்கையில்,

அது பத்துத் துணுக்கைகளாகித் தரையில் வீழ்ந்தது. விபீஷணன் திடமான தனுஸ்ஸை ஏந்திக் கோபாவேச முற்று, ரதமற்றிருக்கிற அவ்விந்த்ரஜித்தின் மார்பில் வஜ்ரம்போல் கடின ஸ்பர்ஶமுடைய ஐந்து பாணங்களை ப்ரயோகித்தனன். பொன் பிடியுடையவைகளும் குறி தவறுமற் பாய்பவைகளுமான அந்த பாணங்கள் அவன் தேஹத்தைப் பிளந்து ரக்தத்தில் நனைந்து சிவந்து, சிவந்த பெரிய ஸர்ப்பங்கள்போல் விளங்கின. மஹா பலமுடைய அவ்விந்த்ரஜித்து மிகுதியும் கோபமுற்று. யமன் கொடுத்த மேலான பாணத்தை ராக்ஷஸர் நடுவில் எடுத்துக் கொண்டனன். மஹா தேஜஸ்வியும் பயங்கர பராக்ரமனுமாகிய லக்ஷ்மணன், அங்ஙனம் இந்த்ரஜித்து அந்தப் பெரிய பாணந் தொடுப்பதைக் கண்டு தானும் மற்றொரு பாணத்தை எடுத்துக் கொண்டனன். குபேரன், வரப்போகிற வ்ருத்தாந்தத்தை புத்தியால் ஊஹித்து, அவனது ஸ்வப்னத்தில் தானே இந்த பாணத்தைக் கொடுத்திருந்தனன். ஆகையால் அது எப்படிப்பட்டவர்க்கும் ஜயிக்க முடியாதது. தேவாஸுரர்களோடு கூடி தேவேந்த்ரன் வரினும் அதன் ஸ்பர்ஶத்தைப் பொறுக்கமுடியாது. அவ்விருவரும் உலக்கைகள் போன்ற தமது பாஹுக்களால் அம்மேலான தனுஸ்ஸுக்களைக் காது வரையிலும் பலமுள்ளளவும் இழுக்கும்பொழுது க்ரௌஞ்சப் பறவைகள் போல் சப்தித்தன. அவ்வீரர்கள் இருவரும் மேலான தனுஸ்ஸில் அந்தச் சிறந்த பாணங்களைத் தொடுத்து இழுக்கையில் அவ்விரண்டும் ஒளிப்பெருக்கினால் மிகுதியும் ஜ்வலித்தன. அந்த பாணங்களிரண்டும் தனுஸ்ஸுக்களினின்று விடுபட்டவுடனே ஆகாயத்தை விளங்கச்செய்து ஒன்றுக்கொன்று நுனியால் நுனியை அடித்து மிகுதியும் உறைந்துகொண்டன. பயங்கரமான அவ்

விரண்டு பாணங்களும் ஒன்றோடொன்று உரக்க உறையும்பொழுதுண்டான அக்னியானது புகையும் பொரிகளும் கிளம்பப்பெற்று மிகவும் பயங்கரமாயிருந்தது. அந்த பாணங்கள் இரண்டும் ஆகாயத்தில் மஹா க்ரஹங்கள்போல் ஒன்றின்மேல் ஒன்று பாய்ந்து நூறு சுக்கலாக முறிந்து பூமியில் வீழ்ந்தன; மிகுதியும் ரோஷமுற்றிருக்கிற அந்த லக்ஷ்மணனும் இந்த்ரஜித்தும் அப்பொழுது தமது பாணங்கள் யுத்தத்தில் அடிபட்டமை கண்டு இருவரும் வெட்கமுற்றனர். லக்ஷ்மணன் மிகுதியும் பரபரப்புற்று வாருணாஸ்த்ரத்தை எடுத்துக்கொண்டனன். யுத்தத்தில் பின்வாங்காத இந்த்ரஜித்தும் அந்த யுத்தத்தில் ரௌத்ராஸ்த்ரத்தை ப்ரயோகிக்கையில், அதனால் மிகுதியும் அற்புதமான அவ்வாருணாஸ்த்ரம் ஹதமாயிற்று. அனந்தரம் யுத்தங்களில் வெற்றிபெறுந்தன்மையுள்ள மஹா தேஜஸ்வியாகிய அவ்விந்த்ரஜித்து கோபாவேசமுற்று உலகத்தை ஸம்ஹரிப்பவன் போன்று, ஜ்வலிக்கின்ற ஆக்னேயாஸ்த்ரத்தை ப்ரயோகித்தனன். அதை வீரனாகிய லக்ஷ்மணன் ஸௌர்யாஸ்த்ரத்தினால் தடுத்தனன். இந்த்ரஜித்து தனது அஸ்த்ரம் தடைபட்டமை கண்டு கோபத்தினால் உடம்பு தெரியாமல் தன் சத்ருவை நாசஞ் செய்ய முயன்று, கோரமான ஆஸுராஸ்த்ரத்தை தொடுத்து ப்ரயோகித்தனன். அந்த ஆஸுராஸ்த்ரத்தை ப்ரயோகித்ததனால் இந்த்ரஜித்தின் தனுஸ்ஸினின்று தகதகவென்று ஜ்வலிக்கின்ற கூடமுத்கரங்களும் சூலங்களும் முஸுண்டிகளென்னும் முஸலங்களும் கதைகளும் கட்கங்களும் கண்டக் கோடாலிகளும் வெளிப்புறப்பட்டன. தேஜஸ்வியாகிய லக்ஷ்மணன், யுத்தத்தில் பயங்கரமாயிருப்பதும் ஸமஸ்த ப்ராணிகளுக்கும் தடுக்கமுடியாததும் ஸமஸ்த சத்ருக்களையும் உருமாய்ப்பதுமாகிய அந்த ஆஸுராஸ்த்ரத்

தைக் கண்டு, அதை மாஹேஸ்வராஸ்த்ரத்தினல் தடுத்தனன். அப்பால் அவ்விருவருடைய யுத்தம் மிகுதியும் வளர்ந்து ஆச்சர்யமாயிருந்தது. அப்பொழுது ஆகாயத்திலுள்ள ஸமஸ்த பூதங்களும் லக்ஷ்மணனைச் சுற்றிக் கொண்டன. அப்பொழுது வானரர்களும் ராக்ஷஸர்களும் பயங்கரமான சப்தத்துடன் தாருணமாகயுத்தஞ் செய்துகொண்டிருக்கையில், பற்பல பூதங்களும் சூழ்ந்து வியப்புடன் பார்த்துக் கொண்டிருக்கையில், அந்த யுத்தம் மிகுதியும் விளங்கியது. அப்பொழுது மஹர்ஷிகளும் பித்ருக்களும் தேவதைகளும் கந்தர்வர்களும் கருடர்களும் உரகர்களும் தேவேந்த்ரனை முன்னிட்டுக்கொண்டு அந்த யுத்தத்தில் லக்ஷ்மணனுக்குக் கெடுதி உண்டாகாதிருக்கும்படி 'ஜய ஜய' என்பது முதலிய ஆசீர்வாதங்களால் ரக்ஷித்துக் கொண்டிருந்தனர். அனந்தரம் ராமன் தம்பியாகிய லக்ஷ்மணன், அக்னியைப்போல் உஷ்ணமான ஸ்பர்ஶமுடையதும் இந்த்ரஜித்தை முடிப்பதுமாகிய ஓர் மேலான பாணத்தை எடுத்து வில்லில் தொடுத்தனன். அவ்வஸ்த்ரம் நல்ல இறகுகள் கட்டப்பெற்று உருண்ட உருவமுடையதாகி அழகிய கணுக்களும் அமைந்து நல்ல சீர்திருத்தமும் பொருந்தி ஸ்வர்ணத்தினல் சித்ரஞ் செய்யப்பெற்று எப்படிப்பட்ட சரீரத்தையும் பிளந்து ப்ராணன்களைத் தொலைக்க வல்லதுமாயிருந்தது. அது தடுக்கவும் பொறுக்கவும் முடியாததும் ராக்ஷஸர்களுக்கு பயத்தை விளைவிப்பதும் கொடிய ஸர்ப்பம் போன்றதும் தேவ ஸமூஹத்தினல் மிகுதியும் பூஜிக்கப்பட்டதுமாயிருப்பது. மற்றும், முன்பு தேவாஸுர யுத்தத்தில் மஹா தேஜஸ்வியும் ஸமர்த்தனும் மஹா வீர்யசாலியும் பச்சைக் குதிரைகள் அமைந்தவனுமாகிய தேவேந்த்ரன் தானவர்களை அந்த அஸ்த்ரத்தினல் ஜயித்தனன். இங்ஙனம் தோல்வி அடையாத

அம்மேலான பாணத்தை ஐந்த்ராஸ்த்ர மந்த்ரத்தினுல் அபிமந்த்ரித்து வீரனும் புருஷஸ்ரேஷ்டனுமாகிய லக்ஷ்மணன் தன் பெரிய தனுஸ்ஸில் தொடுத்தனன். லக்ஷ்மணன் அங்ஙனம் சத்ருக்களைப் பிளக்கும்படியான திவ்யபாணத்தைத் தொடுத்து, ப்ரளயகாலத்தில் உலகங்களை அழிக்கும் யமன்போல், நாணை யேற்றிப் பிறர்க்கு அணுக முடியாத மேலான தனுஸ்ஸை வளைத்து இழுத்தனன். வீர்யலக்ஷ்மீ விலாஸம் பொருந்தின லக்ஷ்மணன் பாணத்தை மேலான தனுஸ்ஸில் தொடுத்துக் காது வரையிலும் இழுத்துத் தன் கார்யம் நிறைவேறும்படி :—

'யர்மாத்மா ஸத்யஸந்யஶ்ச ராமோ தாஶரயிர் யதி ।
பௌருஷேசாப்ரதித்வந்த்வஸ் ஶரைநம் ஜஹி ராவணிம்'

'பாணமே! தசரத குமாரனுகிய ராமன், தர்மஸ்வபாவனும் ஸத்யஸந்தனும் பௌருஷத்தில் எதிரில்லாதவனுமாயின்.நீ இவ்விந்த்ரஜித்தை வதிப்பாயாக' என்றனன்.யுத்தத்தில் வீரனும் சத்ருவீரர்களை அழிப்பவனும் வீர்யலக்ஷ்மீ விலாஸத்தினுல் வளர்ந்தவனுமாகிய லக்ஷ்மணன் அந்த பாணத்தைக் குறித்து இங்ஙனஞ் சொல்லிக் குறி தவருமல் பாயும்படியான அந்த பாணத்தைக் காது வரையிலும் இழுத்து ஐந்த்ராஸ்த்ர மந்த்ரத்தினுல் அபிமந்த்ரித்து இந்த்ரஜித்தின் மேல் ப்ரயோகித்தனன். அம்மஹா பாணம், தலைப்பாகையோடு கூடியதும் மிகுந்த சோபையுடையதும் குண்டலங்கள் தள தளவென்று ஜ்வலிக்கப்பெற்றதுமா யிருக்கிற இந்த்ரஜித்தின் சிரஸ்ஸைத் துண்டித்து அவன் தேஹத்தினின்று பூமியில் விழத்தள்ளியது. பொன்னிறம் திகழ்கின்ற இந்த்ரஜித்தின் பெரிய சிரஸ்ஸு அவனது சரீரத்தினின்று விடுபட்டு ரக்தத்தில் நனைந்து பூமியில் விழுந்து புலப்பட்டது. ராவணகுமாரனுகிய இந்த்ரஜித்து, கவசத்



3092. லக்ஷ்மணன் இந்த்ரஜித்தை வதித்தல்.

தோடும் தலைப்பாகையோடும் தனுஸ்ஸோடும் த்வம்ஸம் அடைந்து ஹதனாகி வேகமாகப் பூமியில் வீழ்ந்தனன். அப்பொழுது விபீஷணனும் வானரர்களனைவரும் அவ்விந்த்ரஜித்து ஹதனானவுடனே, வ்ருத்ராஸுரன் மாண்டபொழுது தேவதைகள்போல், ஸந்தோஷத்தினால் இரைச்சலிட்டனர். அனந்தரம் ஆகாயத்தில் தேவதைகளும் மஹானுபாவர்களான ரிஷிகளும் கந்தர்வர்களும் அப்ஸரஸ்ஸுக்களும் ஸந்தோஷமுற்று நாற்புறத்திலும் கோஷமிட்டனர். அவ்விந்த்ரஜித்து மாண்டதை அறிந்து ஜயசீலர்களான வானரர்கள் ராக்ஷஸர்களைப்பிடித்து ஹிம்ஸிக்கையில், அந்த ராக்ஷஸர்களின் மஹா ஸைன்யமானது பொறுக்கமுடியாமல் திசைகளைப் பற்றி ஓடிப்போயிற்று. வானரர்கள் பிடித்துத் துரத்துவதும் வதிப்பதுமாயிருக்கையில், அந்த ராக்ஷஸர்கள் பொறுக்கமுடியாமல் ப்ரஜ்ஞை யில்லாமல் ஆயுதங்களை உதறி லங்கைக்கு எதிர்முகமாக ஓடிப்போயினர். ராக்ஷஸர்களெல்லோரும் பயந்து பட்டயங்களையும் கத்திகளையும் கண்டக் கோடாலிகளையும் மற்றும் பல ஆயுதங்களையும் துறந்து பலவாறு பரவி நூறு நூறாகத் திசைகளைப்பற்றி ஓடிப்போயினர். அங்ஙனம் வானரர்களால் பீடிக்கப்பட்டு திகிலடைந்து சில ராக்ஷஸர் லங்கைக்குப் போயினர். சிலர் ஸமுத்ரத்தில் வீழ்ந்தனர் மற்றுஞ் சிலர் மலைகளில் மறைந்தனர். இந்த்ரஜித்து ஹதனாகி யுத்த பூமியில் விழுந்ததைக் கண்டவுடன் ஆயிரமாயிரமாயிருந்த ராக்ஷஸர்களில் ஒருவனாயினும் புலப்படவில்லை. எல்லோரும் ஓடிப்போயினர். ஸூர்யன் அஸ்தமித்த பின்பு கிரணங்கள் நிற்காமல் மறைவது போல். அவ்விந்த்ரஜித்து ஹதனானவுடனே ராக்ஷஸர்களெல்லோரும் நாற்றிசைகளுக்கும் ஓடிப்போயினர். மஹாதேஜஸ்வியாகிய அவ்விந்த்ரஜித்து

சிறிது நேரம் அவயவங்களை உதறிக்கொண்டிருந்து, உடனே ப்ராணன்களை இழந்தவனாகி, கிரணங்களில்லாத ஸூர்யன்போலும், அணைந்த அக்னிபோலும், ஒளியற்றவனாயினன். ராக்ஷஸராஜனது புதல்வனாகிய இந்த்ரஜித்து முடிந்தவுடனே உலகத்தில் பற்பல பீடைகளும் ஒடுங்கின. அனிஷ்டங்களெல்லாம் நாசம் அடைந்தன. ஸூர்யன் நன்றாக வெயில் காய்ந்தனன். பாபகர்மாவான அவ்விந்த்ரஜித்து மாண்டவுடனே பகவானான தேவேந்த்ரனும் ஸமஸ்த தேவதோத்தமர்களும் ஸந்தோஷம் அடைந்தனர். ஆகாயத்தில் தேவதுந்துபி வாத்யங்களின் த்வனி செவிப்பட்டது. மற்றும் அப்ஸரஸ்த்ரீகளின் நர்த்தனங்களும் மஹானுபாவர்களானகந்தர்வர்களின் கானத்வனிகளும் மேலெழுந்தன. கொடுஞ்செயலுடைய ராக்ஷஸனாகிய அவ்விந்த்ரஜித்து மாண்டவுடனே தேவதைகள் புஷ்பவர்ஷங்களைப் பெய்து லக்ஷ்மணனைப் புகழ்ந்தனர். அப்பொழுது அது அற்புதமாயிருந்தது. ஜலமெல்லாம் தெளிந்தது. திசைகளெல்லாம் தெளிவு பெற்றன. தைத்யர்களும் தானவர்களும் மயிர்க்கூச்சலடைந்தனர். ஸமஸ்த லோகங்களுக்கும் பயம் விளைத்துக்கொண்டிருந்த அவ்விந்த்ரஜித்து முடிந்தவுடனே தேவதைகளும் கந்தர்வர்களும் தானவர்களும் ஒன்று சேர்ந்து 'இனி ப்ராஹ்மணர்கள் திகிலின்றி மனக்கலக்கமற்று ஸுகமாக விலாஸமுற்றிருப்பார்களாக' என்றனர். அனந்தரம் வானர யூதபதிகள், நிகரில்லாத பலமுடைய அந்த ராக்ஷஸஸ்ரேஷ்டன் யுத்தத்தில் ஹதனானதைக் கண்டு மிகுதியும் ஸந்தோஷமுற்று லக்ஷ்மணனைக் கொண்டாடினர். விபீஷணனும் ஹனுமானும் பல்லூகபதியான ஜாம்பவானும் வெற்றி உண்டானதற்கு மிகுதியும் ஸந்தோஷித்து லக்ஷ்மணனைத் துதிசெய்தனர். வானரர் தமது

கருத்து நிறைவேறினதற்கு ஸந்தோஷமுற்று ஸிம்ஹ நாதங்களைச் செய்துகொண்டு பலவாறு இரைச்சலிடு வதும் கர்ஜிப்பதுமாகி லக்ஷ்மணனைச் சூழ்ந்து பணிந் திருந்தனர். அப்பொழுது வானரர்கள் ஸந்தோஷத்தை அடக்கமுடியாமல் வால்களை உதறியடிப்பதும் தோள் களைத் தட்டுவதுமாகி 'லக்ஷ்மணன் எல்லோரிலும் மே லாய் விளங்குகின்றனன்' என்று எல்லோரும் கேட்கும் படி இரைச்சலிட்டனர். வானரர்கள் மனத்தில் ஸந்தோ ஷம் வளரப்பெற்று ஒருவரை யொருவர் கட்டியணைத்து லக்ஷ்மணனைக் குறித்துப் பலவாறு ராகவனைப்பற்றின கதைகளைச் சொல்லிக்கொண்டிருந்தனர். தேவதைகள் இந்த்ரஜித்து ஹதனானனென்று சாரணாதிகளின் மூல மாக முதலில் கேட்டு மிகுதியும் மனத்தில் ஸந்தோஷ மடைந்து, உடனே இந்த்ரஜித்து வதிப்பது அஸாத்ய மாகையால் அது அபத்தமாயிருக்குமோ என்று நினைத்து அந்த யுத்தபூமிக்கு நேரில் போய், ஸமஸ்த லோகங்களுக்கும் ப்ரீதிக்கிடமான நண்பனாகிய லக்ஷ் மணன் மிகுதியும் செய்யமுடியாததும் ஸமஸ்த லோகங் களுக்கும் ப்ராண ப்ரதிஷ்டையை விளைப்பதுமாகிய இந்த்ரஜித் வதத்தை நடத்தினானென்று ப்ரத்யக்ஷமாக அறிந்து வியப்புற்றவராயினர். தொண்ணூற்றொன்று வது ஸர்க்கம் முற்றிற்று.

---

லக்ஷ்மணாதிகள் ராமனிடம் போதலும், ராமன் அவர்களை ஸ்லாகித்தலும், ஸுஷேணன் லக்ஷ்மணாதிகளை விசல்யர்களாகச் செய்தலும்

ஸுபலக்ஷணங்கள் அமைந்த அவயவங்களெல் லாம் ரக்தத்தில் நனைந்திருக்கிற லக்ஷ்மணன் யுத்தத் தில் இந்த்ரனையும் வென்ற மஹாவீரனாகிய இந்த்ரஜித் தை ஜயித்து ஸந்தோஷமுற்றனன். அனந்தரம் மஹா வீர்யசாலியும் மஹா தேஜஸ்வியுமாகிய லக்ஷ்மணன்

ஜாம்பவானையும் ஹநுமானையும் மற்றும் அந்தந்த வானரர்களையும் கூட்டமாக அழைத்துக்கொண்டு யுத்தஞ் செய்த ஓய்ச்சலால் விபீஷணனையும் ஹநுமானையும் ஊன்றிக்கொண்டு யுத்தபூமியினின்று ராம ஸுக்ரீவர்களிருக்கு மிடத்திற்குச் சீக்ரமாகப் போயினன். அனந்தரம் லக்ஷ்மணன் ராமனுக்கு ப்ரதக்ஷிணஞ் செய்து நமஸ்கரித்து இந்த்ரனிடம் ப்ருஹஸ்பதி இருப்பதுபோல் ஸ்வாதீனமற்றிருக்குந் தன்மையை நிறைவேற்றிக்கொண்டு அண்ணனது ஸமீபத்தில் நின்றிருந்தனன். அப்பொழுது வீரனாகிய லக்ஷ்மணன் ராமனிடம் வந்து, பக்திஸங்கோசாதிகளால் எழுத்துக்கள் அவ்யக்தமாயிருக்கப் பெற்ற உரைகளால் அம்மஹாநுபாவனுக்கு பயங்கரமான இந்த்ரஜித்தின் வதத்தை மொழிந்தனன். அப்பொழுது வீரனாகிய விபீஷணன் ஸந்தோஷமுற்று 'இந்த்ரஜித்து வதிக்கப்பட்டானன்றி அவனுடைய சிரஸ்ஸை மாத்ரம் மஹாநுபாவனாகிய லக்ஷ்மணன் சேதித்தனன்' என்று விண்ணப்பஞ் செய்தனன். மஹாவீர்யமுடைய ராமன், லக்ஷ்மணன் இந்த்ரஜித்தை வதித்தானென்னும் இவ்வார்த்தையைக் கேட்டவுடனே நிகரில்லாத ஸந்தோஷம் அடைந்து லக்ஷ்மணனைப் பார்த்து 'லக்ஷ்மணா! நல்லது நல்லது நீசெய்த யுத்தகார்யத்திற்கு ஸந்தோஷித்தேன். பெரிய கார்யத்தைச் செய்து முடித்தனை. ஏனென்னில் இந்த்ரஜித்து மாண்டமையால் நாம் இனி ராவணனையுங்கூட வதித்து ஜயம் பெற்றாற் போலவே யென்று நிச்சயிப்பாயாக' என்றனன். மஹா வீர்யமுடைய ராமன் வீர்யலக்ஷ்மீ விலாஸம் வளரப்பெற்ற லக்ஷ்மணனை உச்சிமோந்து, அவன் வெட்கமுற்று, ஒதுங்குவதைக் கண்டு ஸ்னேஹத்தினால் பலவந்தமாக மடிமேல் உட்காரவைத்துக்கொள்ள இழுத்து மடியில்

உட்காரவைத்துக்கொண்டு தம்பியை ஸ்னேஹம் வழியப்பெற்ற பார்வைகளால் அடிக்கடி பார்த்துக் கொண்டிருந்தனன். அப்பொழுது புருஷஶ்ரேஷ்டனாகிய ராமன், அங்ஙனம் லக்ஷ்மணன் சல்யங்களால் பீடிக் கப்பட்டு தேஹம் முழுவதும் புண்ணாகிப் பெருமூச் செறிந்து கொண்டிருப்பதைக் கண்டு துக்கத்தினால் பரிதபித்துத் தானும் நிரம்ப நெடுமூச்செறிந்து, தம் பியை உச்சிமோந்து அந்தப் புண்களின் பாதையைப் போக்கும்பொருட்டு விரைவுடன் அவனது மேனி முழுவதும் நன்றாகத் தடவி ஆஶ்வாஸப்படுத்தி அவனை பார்த்து 'நீ பிறர்க்குச் செய்யமுடியாத கார்யங்களை யுஞ் செய்பவன். ஆகையால் நீ இப்படிப்பட்ட வீரகார் யத்தைச் செய்து எனக்கு மிகுதியும் மங்களத்தைச் செய்தனை. புதல்வன் மாண்டுபோனா னாகையால், இப்பொழுது ராவணனையும் யுத்தத்தில் ஹதனானாற் போலவே நினைக்கின்றனன். இதுவரையில் எவ்வளவு மஹாவீரர்களை வதிக்கினும் ஜயம் உண்டானதாகத் தோற்றவில்லை. துர்ப்புத்தியும் நமது சத்ருவுமாகிய அவ்விந்த்ரஜித்து ஹதனானமையால் இப்பொழுதே நான் வெற்றி பெற்றவனாயினன். வீரனே! நீ யுத்தத்தில் இந்த்ரஜித்தை வதித்தாயாகையால் க்ரூரனாகிய ராவண னுடைய வலதுபுஜத்தைச் சேதித்தாற்போலவே. இது என்பாக்யமே ஏனெனில், அவனே இந்த ராவணனுக்கு மேலான அவலம்பம். விபீஷணனும் ஹனுமானும் யுத் தத்தில் பெரிய பராக்ரமகார்யஙகளைச் செய்தனர். இங் ஙனம் மூன்று அஹோராத்ரங்களில் மஹாப்ரயாஸத் தினால் வீரனாகிய இந்த்ரஜித்து முடிக்கப்பட்டனன். இப்பொழுது எனக்குச் சத்ருக்களெல்லாம் தீர்ந்தாற் போல் செய்தனை. ராவணன் ஒருவன் இருக்கிறானன்றி அவனும் பிள்ளை முடிந்ததைக் கேட்டுப் பெரியஸைன் யத்தைக் கூட்டிக்கொண்டு யுத்தத்திற்குப் புறப்பட்டு

வருவான். புதல்வன் மாண்டதைக் கேட்டுப் பரிதபித்துக்கொண்டு ஜயிக்கமுடியாத ராக்ஷஸர் தலைவனாகிய ராவணன் யுத்தத்திற்கு வெளிப்பட்டு வந்தவுடனே, பெரிய ஸைன்யத்துடன் அவனை வதித்துவிடுகிறேன். லக்ஷ்மணா! நாதனாகிய நீ யுத்தத்தில் இந்த்ரஜித்தை வதித்தமையால், இனி எனக்கு ஸீதையையும் பூமியையும் பெறுவது சிறிதும் வருத்தமன்று' என்றனன். ரகுகுல குமாரனாகிய அந்த ராமன் தம்பியை அங்ஙனம் ஆஶ்வாஸப்படுத்தி அணைத்துக் கொண்டு ஸந்தோஷத்துடன் ஸுஷேணனை அழைத்து நீ சிகித்ஸையில் மிகுதியும் அறிவுடையவன் நண்பரிடத்தில் மிகுதியும் ப்ரீதியுடைய இந்த லக்ஷ்மணன் தேஹம் முழுவதும் சல்யங்கள் பொற்றப்பெற்று வருந்துகின்றனன். இவன் இந்த வருத்தம் தீர்ந்து ஸுகமா யிருக்கும்படி நீ சிகித்ஸை செய்வாயாக. சீக்ரமாக லக்ஷ்மணனுக்கும் விபீஷணனுக்கும் சரீரத்திலுள்ள சல்யங்கள் தீரும்படி விடுவிப்பாயாக. மற்றும், சூரர்களும் வ்ருக்ஷங்களைக் கொண்டு போராடுபவருமாகிய பல்லூகவானரர்களின் ஸைன்யத்தில் எவரெவர் யுத்தத்தில் ப்ராணங்கள் பொற்றித் துளைக்கப் பற்றுப் புண்பட்டிருக்கின்றனரோ, அவர்களெல்லோர்க்கும் சீக்ரத்தில் நீ இப்பொழுது ப்ரயத்னப்பட்டு ஸுகம் விளைப்பாயாக' என்றனன். ராமன் இங்ஙனம் சொன்னவுடனே மஹானுபாவனும் யூதபதியுமாகிய அந்த ஸுஷேணன் லக்ஷ்மணனுக்கு மூக்கில் ஓர் பெரிய ஓஷதியை வைத்து வாஸனை காண்பித்தனன். அந்த லக்ஷ்மணன் அம்மூலிகையின் வாஸனை பார்த்தவுடனே அவன் சரீரத்தில் பொற்றுக்கொண்டிருந்த சல்யங்களெல்லாம் தொலைந்து வேதனையும் தீர்ந்து வ்ரணங்களும் உலர்ந்து போயின. அனந்தரம் ஸுஷேணன் ராமனது ஆஜ்ஞையின்படி விபீஷணன்

முதலிய நண்பர்களுக்கும் மற்றை வானரர்களுக்கும் அப்பொழுது சிகித்ஸைசெய்தனன். அனந்தரம் லக்ஷ்மணன் ஒருக்ஷணத்திற்குள் சல்யங்களெல்லாம் விடப்பெற்று பாதையும் தீர்ந்து தன்னிலைமை பெற்று எப்பொழுதும்போல் ஸந்தோஷமாயிருந்தனன். அப்பொழுது ராமனும் வானரர் தலைவனான ஸுக்ரீவனும் விபீஷணனும் பல்லூக பதியான ஜாம்பவானும் மற்றும் ஸைன்யத்திலுள்ளவரனைவரும், லக்ஷ்மணன் வருத்தந்தீர்ந்து ஸுகமாயெழுந்ததைக் கண்டு வெகுநேரம் அதைப்பற்றியே ஸந்தோஷப்பட்டுக்கொண்டிருந்தனர். மஹானுபாவனாகிய ராமன், பிறர்க்குச்செய்ய முடியாத இந்த்ரஜித்தின் வதஞ்செய்த லக்ஷ்மணனை மிகுதியும் பூஜித்தனன். வானர யூதபதிகளும் யுத்தத்தில் இந்த்ரஜித்து முடிந்ததைக்கேட்டு ஸந்தோஷம் அடைந்தனர். தொண்ணூற்றிரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராவணன் இந்த்ரஜித்து முடிந்ததைக்கேட்டுப் புலம்புதலும், ஸீதையை ஹிம்ஸிக்க முயன்ற ராவணனை ஸுபார்ஸ்வனென்னும் மந்த்ரி தடுத்தலும்.

அனந்தரம், ராவணனுடைய க்ருஹத்திலேயே இருந்து அவனுக்கு ஸஹாயமாயிருக்கும் மந்த்ரிகள், இந்த்ரஜித்து மாண்டானென்று தாமே நேரில் தெரிந்துகொண்டு மனவருத்தத்துடன் போய் ராவணனுக்குச் சொல்பவராகி, 'மஹாராஜனே! மஹா தேஜஸ்வியாகிய உன் புதல்வனை இந்த்ரஜித்தை, யுத்தத்தில் நாங்கள்எல்லோரும் பார்த்துக்கொண்டிருக்கும் பொழுதே லக்ஷ்மணன் விபீஷண ஸஹாயத்தினால் வதித்தனன். யுத்தத்தில் அபஜயத்தையே அறியாதசூரனாகிய இந்த்ரஜித்துங்கூட, அப்படிப்பட்ட சூரனாகிய லக்ஷ்மணனை எதிர்த்து

மாண்டுபோயின. தேவேந்த்ரனையும் ஜயித்த சூரனுகிய உன் புதல்வன் பாணங்களால் லக்ஷ்மணனை வருந்தச்செய்து யுத்தத்தில் மூடிந்தவர் பெறும்படியான உத்தம லோகங்களை அடைந்தான்' என்றனர். அந்த ராவணன் யுத்தத்தில் தன் புத்ரனுகிய இந்த்ரஜித்து ஹதனுனென்று மிகப்பயங்கரமும் மிக மன இரக்கம் விளைப்பதும் தாருணமுமாகிய வார்த்தையைக் கேட்டவுடனே பெருமூர்ச்சை யடைந்தனன். ராக்ஷஸஸ்ரேஷ்டனுகிய ராவணன் வெகு நேரங் கழித்துத் தெளிவு பெற்றுப் புத்ரசோகத்தினுல் பீடிக்கப்பட்டு, தீனனுகி இந்த்ரியங்கள் கலங்கப்பெற்று 'ஆ! ராக்ஷஸப் படையில் ப்ரமுகனே! என்னருமைக் குமார! மஹா ரதா! நீ தேவேந்த்ரனையுங்கூட ஜயித்துக் கடைசியில் மனுஷ்யனுகிய லக்ஷ்மணன் கையில் எப்படி அகப்பட்டுக்கொண்டனை? என்னப்பனே! நீ கோபமுறுவாயாயின், காலனையும், அந்தகனையும், மந்தர பர்வதத்தின் சிகரத்தையாயினும் பிளந்து விடுவாயே! இனி யுத்தத்தில் லக்ஷ்மணனைப் பிளக்கச் சொல்ல வேண்டுமோ? மஹா பாஹு! நீ இப்பொழுது மரணம் அடைந்து யமனுடன் சேர்ந்தாயாகையால் அந்த யமன் எனக்கு இப்பொழுது மிகுதியும் வேண்டியவனுயினன். இப்படி யுத்தத்தில் மரணமடைதல் பெரிய சூரர்களுக்கும் நேரும்படியான பத்ததியே. மனிதர்களுக்கு மாத்ரமே அன்று; ஸமஸ்த தேவக்கூட்டங்களுக்கும் இதுவே மார்க்கம். யுத்தத்தில் மரணம் அடைதல், சூரர்களனைவரும் விரும்புவதும் புகழ்விளைப்பது மாகையால் நீ இங்ஙனம் ஹதனுனயென்று எனக்குச் சோகம் இல்லை. இவ்வளவேயன்று, எவன் தன் ப்ரபுவுக்காக மரணம் அடைவானே, அவன் ஸ்வர்க்கத்தை அடைவான். ஆகையால் ஸ்வாமி கார்யத்தின் பொருட்டு ஹதனுகி ஸ்வர்க்கம் அடைந்தாயாகை

யாலும் உன்னைக் குறித்துச் சோகிக்கவேண்டிய அவஸ்யமில்லை. இனி இப்பொழுது ஸமஸ்த தேவதைகளும் திக்பாலகர்களும் ரிஷிகளும், இந்த்ரஜித்து ஹதனானென்று கேள்விப்பட்டு நிர்ப்பயராகி ஸுகமாய் உறங்குவார்கள். இப்பொழுது மூன்று லோகங்களும் அரண்யங்களோடு கூடின ஸமஸ்த பூமண்டலமும் ஓர் இந்த்ரஜித்து இல்லாமையால் எனக்குச் சூன்யமாகத் தோற்றுகின்றன. இனி, இந்த்ரஜித்தின் வதத்தைக் கேட்டு வருந்தி அந்தப்புரத்தில் ரோதனஞ் செய்யும் ராக்ஷஸ கன்யகைகளின் துக்கத்வனிகளை, பர்வத குஹைகளில் யூதபதியின் வதத்திற்கு வருந்தும் பெண்யானைகளின் துக்க த்வனிகளைப்போல் கேட்கப்போகின்றனன். சத்ருக்களைத் தபிக்கச் செய்பவனே! நீ இளவரசு பட்டத்தையும் லங்கையையும் ராக்ஷஸர்களையும் அன்னையையும் என்னையும் பார்யையையும் ஆகிய எங்களெல்லோரையும் துறந்து எங்குப் போயினை? வீரனே! நான் யமபுரிக்குப் போனல் நீயன்றோ எனக்கு ப்ரேத கார்யங்களைச் செய்யவேண்டியவன்? அப்படியல்லாமல் விபரீதமாக உனக்கு நான் செய்யும்படி செய்தனையே! இதுவரையில் என் மனத்திற்குக் கண்டகங்களை யெல்லாம் போக்கடித்துக்கொண்டிருந்த நீ, இப்பொழுது ஸுக்ரீவனும் லக்ஷ்மணனும் எனக்குமனச்சல்யம்போல் பிழைத்திருக்கையில், அந்தச் சல்யத்தை எடுக்காமலே எங்களையெல்லாம்விட்டு எங்குப் போயினை?" என்று புலம்பினன். ராக்ஷஸராஜனுகிய ராவணன் இவ்வண்ணம் புலம்பிக்கொண்டு வருந்திப் புத்ரன் மரணம் அடைந்த வ்யஸனத்தினல் மிகுதியும் கோபாவேஸமுற்றன். இயற்கையாகவே உஷ்ணமான கிரணங்களையுடைய ஸூர்யனை, வெய்யிற் காலத்தில் கிரணங்கள் மிகவும் உஷ்ணமாகச் செய்வதுபோல், இயற்கையாகவே கோபிஷ்டனுகிய ராவ

ணனே, புத்ர மரணத்தினுலுண்டான பலவகை மனவரு த்தங்கள் மிகுதியும் கோபமுடையவனுகச் செய்தன. அப்பொழுது ராவணன் பத்து முகங்களிலும் நெற்றியில் புருவநெரிப்புகள் ஒன்றின்மேலொன்று வரிசையாக உண் டாகப் பெற்று ப்ரளயகாலத்தில் முதலைகள் மேலெழப் பெற்றபேரலைகள் நிறைந்த ஸமுத்ரம்போல் ப்ரகாசித்த னன். ராவணன் பெருங்கோபாவேசமுற் றிருக்கையில், அவனது முகத்தினின்று, முன்பு வ்ருத்ராஸுரனுடைய முகத்தினின்று கிளம்பினுற்போல், ஒளியுடன் ஜ்வலிப்ப தும் புகையோடுகூடினதுமாகிய அக்னி வெளிப்பட்டது. புத்ரவதத்தினுல் பரிதபிக்கின்ற சூரனுகிய அந்த ராவண ன், கோபத்திற்குட்பட்டு புத்தியால் செய்யவேண்டிய கார்யம் இன்னதென்று ஆலோசித்து ஸீதையை வதிக் கும்படி நிச்சயித்துங்கொண்டனன். இயற்கையாகவே சிவந்திருக்கிற ராவணனுடைய கண்கள், அப்பொழுது கோபாக்னியால் மிகுதியும் சிவந்துபயங்கரமாகி ஜ்வலித் துக்கொண்டிருந்தன. ஸ்வபாவத்தினுலேயே ஜ்வலித்துக் கொண்டிருப்பதாகிய அந்த ராவணனுடைய உருவம், அப்பொழுது கோபாக்னி நிறைந்திருக்கையால் மிகுதி யும் பயங்கரமாகி, கோபாவேசமுற்று ருத்ரனுடைய உரு வம் போல் அணுகமுடியாதிருந்தது. கோபித்துக்கொ ண்டிருக்கிற அவனுடைய கண்களினின்று, எரிகின்ற வி ளக்குக்களினின்று ஜ்வாலைகளுடன் எண்ணெய்த்துளி கள்விழுவதுபோல் நெருப்புப் பொரிகளோடுகூடின கண் ணீர்கள் பெருகின. அவன் பற்களைக் கடிக்கும்பொழுது அந்தப் படபட சப்தமானது, பலிஷ்டர்களான ராக்ஷ ஸர்கள் பெரிய யந்த்ரத்தைச் சுழற்றும்போதுண்டாகும் த்வனிபோல் செவிப்பட்டுக்கொண்டிருந்தது. மிகுதியும் கோபித்து ப்ரளய காலாக்னிபோல் புலப்படுகின்ற அந்த

ராவணன் எந்தெந்தத்திக்கைக் காண்பானே, அந்தந் தத் திக்கிலுள்ள ராக்ஷஸர்கள் பயந்து அவனெதிரில் படாமல் ஸ்தம்பாதிகளின் மறைவில் மறைந்திருந்தனர். அங்ஙனம் கோபித்து ப்ரளயகாலதில் சராசரங்களை ஸம்ஹாரஞ் செய்ய விரும்புகின்ற அந்தகன்போல் பயங் கரமான உருவத்துடன் எல்லாத் திசைகளேயும் உற்றுப் பார்க்கின்ற அந்த ராவணனிடம் ராக்ஷஸர்கள் எவரும் பயத்தினுல் போகவில்லை. அனந்தரம் ராக்ஷஸாதிபதி யான ராவணன் மிகுதியும் கோபித்து, யுத்தத்தில் பயந் திருக்கின்ற ராக்ஷஸர்களை யுத்தத்தில் திடமாக மூட்டும் பொருட்டு அவர்களினிடையில் அனேகமாயிரம் ஸம் வத்ஸரங்கள் பிறர்க்குச் செய்யமுடியாத பெருந்தவத் தைச்செய்து இடை யிடையில் தவம் முடியும்படியான அந்தந்தக் காலங்களில் பலதடவைகளில்ப்ரஹ்மதேவனை ஸந்தோஷப் படுத்தினன். அந்தத் தவப்பெருக்கினுலும் மற்றும் ப்ரஹ்மதேவனுடைய அனுக்ரஹத்தினுலும் எனக்குளப்பொழுதும்தேவதைகளிடத்திலாவது அஸு ரர்களிடத்திலாவது சிறிதும் பயம் இல்லை. ஏனென்னில், எனக்கு ப்ரஹ்மதேவன் கொடுத்ததும் ஸூர்யன்போல் தகதகவென்று ஜ்வலிப்பதுமான கவசம் தேவாஸுரர்க ளோடு யுத்தஞ்செய்யும் பொழுது வஜ்ராயுதம் தன் சக்தி முழுவதையும் நிறைவேற்றிக்காட்டினும் சிறிதும் பிளவுருது. இப்பொழுது நான் அந்தக் கவசத்தைத் தரி த்து ரதத்தின்மேலேறி யுத்தத்திற்குப் போகையில், இங்கு யுத்தத்தில் என்னை எவன் எதிர்ப்பவன்? ஸா க்ஷாத் தேவேந்த்ரனுங்கூட யுத்தத்தில் என்னை எதிர்க்க வல்லனல்லன். முன்பு தேவாஸுரர்களோடு யுத் தஞ் செய்யும்பொழுது ப்ரஹ்மதேவன் அருள் புரிந்து எனக்கு பாணத்தோடு கூடின பெரிய தனுஸ்ஸைக்

கொடுத்தானே, பயங்கரமான அந்த தனுஸ்ஸை இப்பொழுது ராமலக்ஷ்மணர்களை வதிக்கும் பொருட்டுப் பல வாத்ய கோஷங்களுடன் எடுத்துக்கொண்டு வருவீர்களாக' என்றனன். சூரனாகிய அந்த ராவணன் புத்ரன் மாண்டதனால் மிகுதியும் பரிதபித்துக் கோபத்திற்காளாகி புத்தியில் ஆலோசித்து ஸீதையை வதிக்க வேண்டுமென்று முயற்சி கொண்டனன். கோபத்தினால் கண்கள் சிவக்கப்பெற்று, மிகுதியும் பயங்கரமான ஸ்வபாவமும் அதிபயங்கரமான உருவமுடைய அந்த ராவணன் தீனனாகித் தன்னெதிரில் தீனஸ்வரத்துடனிருக்கின்ற ராக்ஷஸர்களெல்லோரையும் பார்த்து 'என் அருமைக்குமாரனாகிய இந்த்ரஜித்து வானரர்களை வஞ்சிக்கும் பொருட்டு மாயையால் எதையோ ஒன்றை ஸீதையாகச் செய்து வதித்து அந்தப் பொய்யையே 'இதுவே ஸீதை' என்று வானரர்களுக்குக் காட்டினன். அவன் பொய்யாகச் செய்ததை நான் நிஜமாகவே செய்து விடுகிறேன். இங்ஙனஞ் செய்வதே என் மதிக்கு இஷ்டம். அந்தப் பாழாய்ப்போன ராஜ குமாரனையே அனுஸரித்து அவனிடத்தில் மனப்பற்றுடைய ஸீதையை இப்பொழுதே கொன்று விடுகிறேன்' என்றனன். ராவணன் இங்ஙனம் மந்த்ரிகளைப் பார்த்து மொழிந்து சீக்ரமாகக் கத்தியைத் தொட்டனன். அந்த ராவணன் புத்ரசோகத்தினால் மனது மிகுதியும் தத்தளிக்கப்பெற்றுப் பெருங்கோபாவேசமுற்று, பூமாலை யிடப்பெற்றதும் நிர்மலமாகி ஆகாயம்போல் விளங்குவதுமாகியகத்தியை எடுத்துக்கொண்டு பார்யைகளும் மந்த்ரிகளும் சூழ்ந்து வரப்பெற்று வேகமாக ஸீதையிருக்குமிடத்திற்கு உடனே போயினன். ராக்ஷஸர்கள் ராவணன் போய்க்கொண்டிருப்பதைக் கண்டு, ஸிம்ஹநாதஞ்செய்து, அவன் மிகுதியுங் கோபித்திருப்பதை அறிந்து இனி நமக்கு ஜயம் உண்டாகுமென்று ஸந்தோஷத்தினால்

ஒருவரை யொருவர் கட்டி யணைத்து ஒருவர்க்கொரு வர் 'இப்பொழுது அந்த அண்ணனும் தம்பியுமான ராமலக்ஷ்மணர்களிருவரும் ராவணனுடைய இப்படிப் பட்ட பயங்கரமான ஆகாரத்தைப் பார்த்து பயப்படு வார்கள். முன்பு இவன் கோபித்து லோகபாலர்கள் நால்வரையும் வென்றானல்லவா? மற்றும், அநேக யுத்தங் களில் வேறு பல சத்ருக்களையும் முடித்தானல்லவா? ராமலக்ஷ்மணர்கள் இவனுக்கு எவ்வளவு? மற்றும், ராவணன் மூன்று லோகங்களிலு முள்ள ஶ்ரேஷ்டமான வஸ்துக்களைக் கொண்டுவந்து அநுபவிக்கின்றனன். பராக்ரமத்திலாவது பலத்திலாவது இவனுக்கு நிகரான வன் பூலோகத்தில் எங்குமே இல்லை' என்று கோச கோச வென்று சொல்லிக்கொண்டனர். அந்த ராக்ஷ ஸர்கள் அங்ஙனம் ஒருவர்க்கொருவர் சொல்லிக்கொண் டிருக்கும் பொழுதே, ராவணன் கோபாவேசத்தினால் மெய்ம்மறந்து அசோக வனத்திலுள்ள ஸீதையைக் குறித்து வேகமாகப் போயினன். அங்ஙனம் மிகுதியும் கோபித்திருக்கின்ற ராவணன், தன் ஹிதத்தை விரும் பும் நண்பர்கள் வேண்டாமென்று எவ்வளவு தடுத்த போதிலும் நிற்காமல், ஆகாயத்தில் அங்காரகன் கோ பித்து ரோஹிணியின் மேல் எதிர்த்துப் போவதுபோல்' ஸீதையைக் குறித்துப் போயினன். ராக்ஷஸஸ்த்ரீகள் காவலிருக்கப்பெற்று எத்தகைய தோஷமுமில்லாத மிதி லாதிபதியின் புதல்வியாகிய ஸீதையும், கோபித்துப் பெரிய கத்தியை எடுத்துக்கொண்டு ராவணன் வருவ தைக் கண்டனள். ஜனகராஜன் புதல்வியாகிய ஸீதை, அங்ஙனம் கட்கத்தை ஏந்தி, ஸ்னேஹிதர்கள் வேண் டாமென்று தடுக்கிலும் நிற்காமல் தன்மேல் எதிர்த்து வருகின்ற ராவணனைப் பார்த்து பயந்து துக்காவே சத்தினால் புலம்பிக்கொண்டு 'துர்ப்புத்தியாகிய இந்த

ராவணன் கோபித்து என்மேல் எதிர்த்து ஓடிவருகின்றனன்; ஆகையால் இவன் நாதனோடு கூடின என்னை, அநாதையைப்போல் வதிக்கப்போகின்றனன். இவன், பர்த்தாவையே அனுஸரித்திருக்கிற என்னை 'எனக்குப் பார்யை ஆவாய்; என்னோடு ரமிப்பாய்' என்று பலவாறு தூண்டினன். ஆயினும், நான் மாட்டேனென்று பரிஷ்காரமாக இவனை நிராகரித்து விட்டனன். நான் அங்கீகரிக்காமையால் இவன் நிராசனுகிக் கோபமும் மோகமும் மிகுதியும் மேலெழப்பெற்று என்னை வதிக்கமுயன்று வந்தனன். இது நிச்சயம். அல்லது, இவன் இந்தக் கத்தியுடன் வருவதைக் கண்டால் புருஷஸ்ரேஷ்டர்களும் அண்ணன் தம்பிகளுமான அந்த ராமலக்ஷ்மணர்களை என் நிமித்தமாக இந்த அபூஜ்யன் இப்பொழுது யுத்தத்தில் இந்தக் கத்தியால் முடித்து இவ்விடம் வருகின்றனே என்னவோ? ஐயோ! என் நிமித்தமாக அந்த ராஜகுமாரர்களுக்கு இப்படி நாசம் உண்டாயிற்றே! இப்படிப்பட்ட பாபிஷ்டையா! சீ! பாழாய்ப்போவேனாக. அல்லது அதி க்ரூரனும் பாபஞ் செய்வதில் பின்வாங்காதவனுமாகிய ராவணன் புத்ரசோகத்தினால் இளைப்புற்றிருக்கையால் ராமலக்ஷ்மணர்களை வதிக்கமுடியாமல் என்னை வதிக்கப் போகிறானே என்னவோ? ஆலோசனையற்றவளாகையால் நான் அப்பொழுது ஹனுமான் மொழிந்த வார்த்தையையாயினும் கேளாது போயினன். எவ்வித நிந்தைக்கும் இடமல்லாத நான், அந்த ஸமயத்திலேயே ஹனுமானுடைய தோளின்மேல் உட்கார்ந்து போயிருப்பேனாயின், ப்ரியனுடைய மடியைச் சேர்ந்திருப்பேனாகையால் இப்பொழுது இங்ஙனம் துக்கப்படாதிருப்பேனல்லவா? ராமலக்ஷ்மணர்கள், வாஸ்தவமாக இவனால் வதிக்கப்பட்டிருப்பார்களாயின், கௌஸல்யா

சென்று மிகுதியும் வருந்தி ஒரு புதல்வனைப்பெற்ற கௌஸல்யை, அந்த ஒரு புதல்வனும் யுத்தத்தில் ஹதனென்று கேள்விப்பட்டவுடனே, அவளுடைய ஹ்ருதயம் தப்பாமல் வெடித்துப் போமென்று நினைக்கின்றனன். அந்தக் கௌஸல்யை, ராமனைப்பெற்ற அருமையையும், அவனை பால்யத்தில் வளர்த்த அருமையையும், அவன் யௌவனத்தில் வளர்ந்த அழகையும், தர்மகார்யங்களுக்குத் தகுந்த அவன் ஸ்வபாவத்தையும் ரோதனஞ் செய்து கொண்டே நினைந்து நைவாள். அவள் பிள்ளை மரணம் அடைந்தானென்பதை அறிந்து மூர்ச்சித்து உடனே அவனுக்கு ச்ராத்தஞ் செய்து ப்ரபஞ்சத்தில் ஆசையைத் துறந்து அக்னியிலாவது குதித்து விடுவாள்; அல்லது ஜலத்திலாவது விழுவாள். இது நிச்சயம். சீ! அந்தக் கூனி மந்தரை பாழாய்ப் போவாளாக. பாபங்களுக்குப் பின்வாங்காமல் முயன்றிருக்கிற அந்த துஷ்டையாலன்றோ கௌஸல்யைக்கு இப்படிப்பட்ட துக்கம் ஸம்பவித்தது. அவள் பாழாய் விடுவாளாக' என்று புலம்பினள். இங்ஙனம் புலம்பிக் கொண்டு, சந்த்ரனைப் பிரிந்து அங்காரகன் வசம் அகப்பட்ட ரோஹிணிபோல் மிகுதியும் மனஇரக்கத்திற்கிடமான ஸீதையைப் பார்த்து, இதற்குள் ராவணனது மந்த்ரியும் புத்தியிற் சிறந்தவனும் பரிசுத்தனும் மேதாவியுமாகிய ஸுபார்ஸ்வனென்னும் ராக்ஷஸன், மந்த்ரிகள் வேண்டாமென்று தடுத்துக் கொண்டேயிருக்கையில் நிற்காமல் போகின்ற ராக்ஷஸேஸ்வரனாகிய ராவணனைப் பார்த்து 'ராவண! நீ ஸாக்ஷாத் குபேரனுடைய தம்பி; மஹாகுலத்தில் பிறந்தவன். இப்படிப்பட்ட நீ, தர்மத்தைத் துறந்து கேவலம் கோபத்திற்குட்பட்டு ஸீதையை எங்ஙனம் வதிக்க விரும்புவாய்? வீரனே! ராக்ஷஸாதிபதீ! வேதங்களை ஓதி வித்யைகளையெல்லாம்

உணர்ந்து வ்ரதஸ்னானஞ் செய்தவனல்லவா? வேதங்களில் விதிக்கப்பட்ட கர்மங்களை எப்பொழுதும் தவறாமல் ஆசரிப்பவன். அப்படிப்பட்ட உனக்கு ஸ்த்ரீயை வதிக்க வேண்டுமென்கிற எண்ணமாயினும் எப்படி உண்டாயிற்று? ராஜனே! ஸீதையோ மிகுதியும் ரூபவதி. இப்படிப்பட்ட பெண்மணியைக் கொல்லாமலே நிறுத்திக் கொள்ளும் விதத்தைக் காண்பாய். இந்தக் கோபத்தை நீ எங்களோடுகூடச் சென்று ராமனிடத்திலேயே காட்டுவாயாக. [1] நீ இன்றைத்தினம் க்ருஷ்ணபக்ஷ சதுர்த்தசியிலேயே யுத்தத்திற்கு ப்ரயாண

---

1 இங்கு 'அபியுத்யாநம் த்வமத்யைவ, க்ருஷ்ணபக்ஷசதுர்த்தசீம்। க்ருத்வா நிர்யாஹ்யமாவாஸ்யாம் விஜயாய பலைர்வ்ருத:' என்பது மூலம். சதுர்த்தசியினன்று ப்ரயாண ஸந்நாஹஞ் செய்யென்கையால் கீழ் பதின் மூன்று தினங்கள் யுத்தம் நடந்ததென்று தெரிகின்றது. எப்படியென்னில்— 'ததோ உஸ்தமகமத்ஸூர்ய: ஸந்த்யயா ப்ரதிரஞ்ஜித:। பூர்ணசந்த்ரப்ரகாசா ச க்ஷபா ஸமபிவர்த்ததே' என்கையால் ஸுவேலபர்வதத்திலேறின ராத்ரி பூர்ணிமையென்று ஏற்படுகிறது. பின்பு க்ருஷ்ணபக்ஷ ப்ரதமையினன்று யுத்தாரம்பம். அன்றைத்தினம் ராத்ரியே நாகபாசபந்தமும் அதினின்று விடுபடுதலும். த்விதீயையினன்று வஜ்ரதம்ஷ்ட்ரவதம். சதுர்த்தியினன்று அகம்பனவதம். பஞ்சமியினன்று ராவண மகுடபங்கம். ஸப்தமியினன்று கும்பகர்ணவதம். அஷ்டமியினன்று அதிகாயாதிவதம். நவமியினன்று மீளவும் இந்த்ரஜித்யுத்தம். அன்று ராத்ரியே கும்ப நிகும்பாதிவதம். தசமியினன்று மகராக்ஷவதம் ஏகாதசி த்வாதசி த்ரயோதசிகளில் இந்த்ரஜித்வதமென்று தெரிகிறது. இங்ஙனம் சிலர் வாஸ்தவத்தில்— நவமியினன்று யுத்தாரம்பமாகையால் நவமி தசமி இரண்டு தினங்களில் ராவணனும் இந்த்ரஜித்தும் மூலபலமும் தவிர மற்ற ராக்ஷஸர்களனைவரும் வதமடைந்தனர். ஏகாதசி த்வாதசி த்ரயோதசி இந்த நாட்களில் இந்த்ரஜித்வதம். ஆகையால் சதுர்த்தசியினன்று யுத்தத்தின் பொருட்டு ஸந்நாஹஞ் செய்வாயென்பது பொருந்துகின்றது.

ஸங்காஹஞ் செய்து நாளை அமாவாஸ்யையில் ஸமஸ்த பலங்களும் சூழப்பெற்று ஜயம் பெறுதற்காகப் புறப்படு வாயாக. நீ சூரன், மிகுந்த புத்தியுடையவன், மஹாரதன். நானாவித கட்கம் முதலிய ஆயுதங்களைக் கொண்டு மேலான ரதத்தின்மேல் ஏறித் தசரத குமாரனாகிய ராமனை வதித்து ஸீதாதேவியைப் பெறுவாய். இப்படி இல்லாமல் வெறுமனே ஸீதையை வதிப்பதில் ப்ரயோஜனம் என்?'' என்றனன். துர்ப்புத்தியும் சிறந்த வீர்யமுடையவனுமாகிய ராவணன், ஸ்னேஹிதனாகிய ஸுபார்ஸ்வன் மொழிந்த வார்த்தையைக் கேட்டு, 'இது மிகுதியும் தர்மத்தினின்று நழுவாதது' என்று அங்கீகரித்து க்ருஹத்திற்குப் போயினன். அதன் பிறகு அவன் நண்பர்களால் சூழப்பட்டு மீளவும் ஸபாமண்டபத்திற்கு வந்தனன். தொண்ணூற்று மூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

{மூலபலயுத்தமும், ராமன் அதை நிர்மூலமாகச் செய்தலும்.}

ராக்ஷஸர் தலைவனாகிய அந்த ராவணன் ஸபாமண்டபத்தில் ப்ரவேசித்து தீனனாகி மிகுதியும் மனவருத்தமுற்றுக் கோபித்த ஸிம்ஹம்போல் பெருமூச்செறிந்து கொண்டு மேலான ஸிம்ஹாஸனத்தில் உட்கார்ந்தனன். மஹாபலமுடைய அந்த ராவணன் புத்ரசோகத்தினால் இளைப்புற்றிருப்பது பற்றித் தன் ஸேனாத்யக்ஷர்களுக்கு நல்வார்த்தை சொல்லும் பொருட்டு அவர்களெல்லோரையும் பார்த்துக் கைகூப்பிக்கொண்டு, நீங்களெல்லோரும் ஸமஸ்தமான யானைகள் குதிரைகள் ரதக்கூட்டங்கள் காலாட்கள் முதலிய ஸைன்யங்களோடுகூடி யுத்தத்திற்குப் புறப்படுவீர்களாக. நீங்கள் ராமனொருவனை யுத்தத்தில் தகைந்து வர்ஷாகாலத்தில் மேகங்

கள் மழை பெய்வதுபோல் பாணவர்ஷங்களைப் பெய்து அவனை வதிக்கவேண்டும். அல்லது உங்களால் ராம னைக் கொல்லமுடியாதபக்ஷத்தில் இன்று மஹத்தான யுத்தஞ் செய்து நீங்கள் கூரான பாணங்களால் அவன் சரீரத்தைப் பிளப்பீர்களாயின், அம்மனம் பலம் குறை யப் பெற்றிருக்கிற அந்த ராமனை, நாளைத்தினம் உலகங் களெல்லாம் பார்த்துக்கொண்டிருக்கையில் நான் வதி த்து விடுகிறேன்' என்றனன். அந்த ராக்ஷஸர்கள் ராக்ஷஸேஸ்வரனாகிய ராவணன் மொழிந்த அவ்வார்த் தையைக் கேட்டு அப்படியேயென்று அங்கீகரித்து; வேகமுடைய ரதங்களில் ஆரோஹித்து நானாவித ஸைன்யங்கள் மிகுதியும் சூழ்ந்து வரப்பெற்றுப் புறப்பட் டனர். அந்த ராக்ஷஸர்களெல்லோரும் சரீரங்களை முடிக்கவல்ல இரும்புத்தடி பட்டயம் பாணம் கத்தி கோடாலி ஆகிய இவைகளை வானரர்களின்மேல் ப்ரயோ கித்தனர். வானரர்களும் ராக்ஷஸர்களின்மேல் வ்ரு க்ஷங்களையும் பர்வதங்களையும் ப்ரயோகித்தனர். அங் ஙனம் ராக்ஷஸர்களுக்கும் வானரர்களுக்கும் ஸூர்யோ தயம்முதல் அம்மஹாயுத்தம் பயங்கரமாகித் துமுலமாக நடந்தது. அப்பொழுது அந்த வானரர்களும் ராக்ஷ ஸர்களும் யுத்தத்தில் ஒருவர்மேலொருவர் விசித் ரமான கதைகளையும் ஈட்டிகளையும் கத்திகளையும் கண் டக்கோடாலிகளையும் கற்களையும் வ்ருக்ஷங்களையும் ப்ர யோகித்து ஒருவரையொருவர் அடித்தனர். இவ்வண் ணம் ராக்ஷஸர்களுக்கும் வானரர்களுக்கும் மஹத்தான யுத்தம் நடக்கையில், அதில் மிகுதியும் அதிகமாகக் கிளம்பின தூளானது ரக்த ப்ரவாஹங்களால் அடங் கிற்று. அப்பொழுது ரக்தவெள்ளம் நிறைந்த நதிகள் வஹித்தன. அதில் இங்குமங்கும் யானைகளும் தேர்க ளும் கரைகளாகவும் குதிரைகள் மத்ஸ்யங்களாகவும் த்வ

ஜங்கள் வெள்ளத்தில் அடித்துக்கொண்டுவரும் வ்ரு க்ஷங்களாகவும் சரீரங்கள் தெப்பங்களாகவும் புலப்பட் டன. அனந்தரம் அந்த வானரர்களெல்லோரும் ரக்தப் ரவாஹத்தில் நனைந்தவராகி யுத்தத்தில் ராக்ஷஸர்களின் த்வஜங்களையும் கவசங்களையும் ரதங்களையும் குதிரை களையும் பலவித ஆயுதங்களையும் கிளப்பிக் கிளம்பி முறித்துப் போகட்டனர். வானரர்கள் ராக்ஷஸர்களின் தலைமயிர்களையும் காதுகளையும் நெற்றிகளையும் மூக்கு களையும் கூரானபற்களால் கடித்தும் நகங்களால்பீறியும் அறுத்துப் பொகட்டனர். நன்றாகப் பழுத்திருக்கிற வ்ரு க்ஷத்தைப் பலபக்ஷிகள் எதிர்த்தோடுவதுபோல், யுத் தத்தில் ஒவ்வொரு ராக்ஷஸனையும் மிகுந்த வலிவுடைய நூறு நூறு வானரர்கள் எதிர்த்துப்போராடினர். பர் வதம்போன்ற உருவமுடைய ராக்ஷஸர்களும் அங்ஙனம் பயங்கரர்களான வானரர்களைப் பெரிய கதைகளால் அடித்தும் ஈட்டிகளால் குத்தியும் கத்திகளால் வெட்டி யும் கோடாலிகளால் பிளந்தும் ஹிம்ஸித்தனர். ராக்ஷ ஸர்கள் அங்ஙனம் வதித்துக்கொண்டிருக்கையில் வானர ஸேனையானது பொறுக்கமுடியாமல் ஸமஸ்தலோகங் களுக்கும் ரக்ஷகனும் தசரதகுமாரனுமாகிய ராமனைச் சரணம் அடைந்தது. அனந்தரம் மஹாதேஜஸ்வியும் மிகுந்த வீர்யமுடையவனுமாகிய ராமன் வில்லைப் பிடித் துக்கொண்டு ராக்ஷஸஸேனையில் புகுந்து பாணங்களைப் பெய்தனன். அப்பொழுது ராமன் ராக்ஷஸஸைன்யத் தில் புகுந்தவுடனே மஹாபயங்கரனாகி பாணங்களாகிற அக்னியால் தஹிக்கையில், க்ரீஷ்மருதுவில் ஆகாயத் தில் மேகங்கள் ஸூர்யனை அணுகமுடியாதிருப்பது போல், அந்த ராக்ஷஸர்கள் ராமனை அணுகமுடியா திருந்தனர். யுத்தத்தில் ராமன் மஹா பயங்கரங்களும் பிறர்க்குச் செய்யமுடியாதவைகளுமான கார்யங்களைச்

செய்து கொண்டிருக்கையில், அவனுடைய ஹஸ்தலா கவத்தின் மிகுதியால் அந்தக் கார்யங்களைச் செய்து முடித்தபின்பு கண்டார்களே யன்றிச் செய்துகொண் டிருக்கும் பொழுது காணவல்லராகவில்லை. அவனு டைய கார்யங்களைப் பாராது போனமாத்ரமே அன்று; அரண்யத்தில் பெருங்காற்று வீசும்பொழுது கிளை கள் அசைவது மரங்கள் முறிவது முதலிய அதன் கார்யங்கள் புலப்படுமேயேன்றி அந்தக் காற்றுப் புலப் படாததுபோல், ராமன் ராக்ஷஸஸேனையில் புகுந்து பாணங்களை ப்ரயோகித்துக்கொண்டிருக்கையில், ராக்ஷ ஸர்களுக்கு அவனுடைய ஸஞ்சார லாகவத்தினால் பெ ரும் ஸைன்யம் பறக்தோவது மஹாரதங்கள் முறிவது முதலிய அவன் கார்யங்கள் புலப்பட்டனவேயன்றிக்கார் யங்களைச் செய்கின்ற அவன் என்னவோ எள்ளளவும் புலப்படவேயில்லை. ராமன், அந்த ஸைன்யத்தை பாணங் களால் துண்டிப்பதும் எரிப்பதும் துண்டு துண்டாகச் சேதிப்பதும் மார்பில் பாணங்களை நாட்டுவதுமாயிருக் கையில், ராக்ஷஸர்கள் அவ்வவ்வகையில் வருந்துகின்ற ஸைன்யத்தைக் கண்டார்களேயன்றிச் சீக்ரமாகக் கார் யங்களைச் செய்யுந் தன்மையுடைய அந்த ராமனை எள்ள ளவும் காணவல்லராகவில்லை. ப்ராணிகள், பஞ்சபூதஸ்வ ரூபமாகிய சரீரத்திலிருக்கிற ஜீவாத்மாவை, அவன் சப் தாதி விஷயங்களை அனுபவிப்பதைப் பற்றி உள னென்று அனுமானத்தினால் தெரிந்து கொள்கையே யன்றி, ப்ரத்யக்ஷமாகப் பார்க்க முடியாததுபோல், அந்த ராக்ஷஸர்கள், ராமன் தமது சரீரங்களை அடித் துக்கொண்டிருக்கையில் அந்த அடிகளைப்பற்றிராமனை அனுமானித்தார்களேயன்றி அவனைக் கண்ணாரக் கண் டவரல்லர். ராமன் மிகுந்த வேகத்துடன் இங்குமங்கும்

ராக்ஷஸ ஸைன்யங்களில் ஸஞ்சரித்து வதித்துக்கொண் டிருக்கையில், அவன் மின்னல்போல் எங்குப் புலப்படு வானோ அவ்விடத்திலிருக்கும் ராக்ஷஸனை ராமனாக ப்ர மித்து 'இவன்தான் ராமன் யானைகளை வதிக்கின்றனன். இதோ மஹாரதங்களை முறிக்கின்றனன். இதோகூரான பாணங்களால் காலாட்களையும்குதிரைகளையும் வதிக்கின் றனன்' என்று இரைச்சலிட்டுக்கொண்டு அந்த ராக்ஷ ஸர்கள் ராமனிருந்த இடத்திலிருக்கும் ஒற்றுமையைக் கொண்டு ஒருவரையொருவர் ராமனாகப் ரமித்துக்கோ பித்தவராகித் தம்மையே ஒருவர்க்கொருவர் வதித்துக் கொண்டிருந்தனர். [1] இந்த ராக்ஷஸர்கள் மஹாஸ்வ

---

[1]ராமன் காந்தர்வாஸ்த்ரத்தினால் சத்ருக்களுக்கு மதிமயக்கத்தை விளை வித்து வதித்தானென்று கருத்தன்று. அப்படியாயின் அவனுக்கும் இந்த்ரஜித்துக்கும் பேதமென்? காந்தர்வாஸ்த்ரத்தினால் மதிமயக்கச் செய்தானென்னில்--அவ்வஸ்த்ரம் ப்ரயோகிக்கும்பொழுது ராக்ஷஸர் அதன் வேகாதிசயத்தினால் அதை ப்ரயோகித்தவன் தம்முடையவனோ பிறனோ என்று பேதம் அறியமுடியாமல் மதிமயக்கப்பெற்றார்களென் று கருத்து. ஆகையால் மதிமயக்கப் பெறுதலாவது—வேகத்தினால் அறியமுடியாதிருத்தல். ராமன் மிகுந்த வேகத்துடன் உலாவும்படி யான லாகவத்தைப்பற்றி, அவன் எங்குப் புலப்படுவானோ அங்கேயே அந்த க்ஷணத்தில் புலப்படாமல் வேறோரிடத்தில் உலாவிக் கொண்டி ருக்கையால் அதேக்ஷணத்தில் அவனைக்குறித்து விடுத்த பாணங்கள் அவ்விடத்திலுள்ள தம்முடையவர்களையே ஹிம்ஸிப்பவையாயின. இங்ஙனம் அஸ்த்ரம் ப்ரயோகிக்கிற வேகாதிசயத்தினாலும் ராமன் ஸஞ் சரிக்கிற லாகவாதிசயத்தினாலும் ராக்ஷஸர்கள் இவனவனென்றும் இங்கங்கென்றும் தெரிந்து கொள்ளமுடியாமல் மோஹித்து ஒருவரை யொருவர் அடித்துக்கொண்டிருந்தார்களேயன்றி அஸ்த்ரத்தினால் தம்மில் ஒவ்வொருவரும் ராமனாகத் தோன்றலால் மோஹித்து அடித் துக்கொண்டார்களல்லர். ராமனைக் கண்டு பிடிக்க ராக்ஷஸர்கள் நாலுத் திசைகளிலும் கண்விட்டுப் பார்க்கையில் அவன்வேகாதிசயத்தினால்ஆங்

பாவமுடைய ராமனல் மேலான காந்தர்வாஸ்த்ரந் தொடுத்து விடப்பெற்று மோஹித்துத் தமது ஸைன்யத்தை எரித்துக் கொண்டிருக்கும் ராமனைக் காண வல்லராகவில்லை. அந்தராக்ஷஸர்கள் பயத்தின் மிகுதியால் யுத்தத்தில் ராமனொருவனையே அனேகமாயிரம் ராமர்களாக்ப் பார்த்தனர். மீளவும் அம்மஹாயுத்தத்தில்அவனை ஒருவனேயாகவும் பார்த்தனர். மஹானுபாவனுகிய ராமன் மண்டலாகாரமான கதிவிசேஷங்களில் திரியும்பொழுது அவனுடைய தனுஸ்ஸின் ஸ்வர்ணமயமான நுனியுங்கூடச் சுழன்றுகொண்டிருக்கையில் கிருகிருவென்று சுழற்றப்பட்ட குறைக்கொள்ளியின் வட்டம்போல் ஒரே ரேகையாகப் புலப்பட்டுக்கொண்டிருந்ததேயன்றி, ராமன் என்னவோ புலப்படவேயில்லை. அப்பொழுது தன்னைச் சுற்றிலும் மண்டலாகாரமாகச் சுழித்துக்கொண்டிருக்கிற தனுஸ்ஸுடன்கூடி யுத்தத்தில் ராக்ஷஸர்களைவதித்துக்கொண்டிருக்கும் ராமன் ப்ரஜைகளுக்கு ஸுதர்சன சக்ரம்போல் புலப்பட்டனன். வளைந்த வில்லுடன்கூடின

---

காங்குப் புலப்படுகையால் ஒருவனே பலவாறும் அவர்க்குத் தோற்றினனென்ற தெரிகிறது. ஆனதுபற்றியே ராமனைச் சீக்ரகாரியென்றது. தனுஸ்ஸின் நுனியைச் சக்ரம்போல் சுழலுங் கொள்ளிக்கட்டையாகவும் ராமனைச் சக்ரமாகவும் சொன்னமை பாணப்ரயோகஞ் செய்வதினாலுண்டான த்வரையைப்பற்றியே. ஆனதுபற்றியே ஸுக்ரீவாதிகள், தான் அஸ்த்ரம் ப்ரயோகிக்கும் லாகவத்தை மாயாபலமாகச் சங்கிப்பார்களோ என்னவோவென்ற ராமன் 'இது அஸ்த்ர ப்ரயோகஞ் செய்யும் ஸாமர்த்யத்தினல் விளைந்ததேயன்றி அஸ்த்ர பலத்தினாலுண்டானதன்று' என்றுஞ் சொல்லினன். ஆகையால் இங்கு அஸ்த்ரத்தினல் மோஹிக்கையாவது—அதன் வேகத்தினல் ப்ரயோகித்தவனைக் கண்டுபிடிக்க முடியாதிருத்தலே. அஸ்த்ரத்தின் கார்யம் தஹிக்கைமாத்ரமே. அதை ப்ரயோகித்த லாகவமே மோஹத்திற்குக் காரணம்.

ராமனுகிற அந்த ஸுதர்ஶன சக்ரத்திற்கு ராமனது சரீரமே நாபி; பிறரை வருந்தச் செய்கின்ற அவனுடைய பலமே ஜ்வாலை: அவன் ஒரு தடவையில் ஆயிர மாயிரமாய்த் தொடுத்துவிடும் பாணங்களே இலைகள்; வளைந்திருக்கிற தனுஸ்ஸே அதைச் சுற்றியிருக்குங் கட்டு; நாணும் உள்ளங்கையும் உறைவதா லுண்டாகுங் கோஷமே அதன் கோஷம்; பராக்ரமமே அதற்கு இரிசு; ராமனுடைய சரீரகாந்தியே அதன் ப்ரபை; திவ்யாஸ்த்ரங்களின் மஹிமையே அதைச்சுற்றி ஓரங்களிலிருக்குங் கூர்மை; இப்படிப்பட்ட அந்த ராமனுகிற ஸுதர்ஶன சக்ரமானது ராக்ஷஸர்களை ஓயாமல் வதித்துக்கொண்டிருந்தது. [1] வாயுவேகமொத்த வேகமுடைய ரதங்கள் ஏழுகோடியே இருபத்தொன்பது லக்ஷங்களும், மிகுந்த பலம் அமைந்த யானைகள் பதின்மூன்றுகோடியே பன்னிரண்டு லக்ஷத்து இருபதினுயிரங்களும், குதிரைக்காரர்களோடுகூடின குதிரைகள் பத்துக்கோடியே இருபது லக்ஷத்து அறுபதினுயிரங்களும், காலாட்கள் நூற்று நாற்பத்தைந்துகோடியே எண்பது லக்ஷங்களும் அடங்கின காமரூபிகளான ராக்ஷஸர்களின் இந்தச் சதுரங்க பலத்தை ராமன் அக்னிஜ்வாலைபோன்ற பாணங்களால் மூன்றேமுக்கால் நாழிகைக்குள் ஒருவனே ஹதஞ் செய்தனன். அனந்தரம் மிகுந்த ராக்ஷஸர்கள் குதிரைகள் சாகவும் ரதங்கள் முறியவும் பெற்று உத்ஸாஹத்தை இழந்து த்வஜங்கள் தூள் தூளாகி லங்காபுரத்திற்குப் போயினர். மிகுதியும் மஹானுபாவனுகிய அந்த ராமனுடைய யுத்தரங்கமானது யானைகளும்குதிரைகளும் காலாட்களும் மாண்டுவிழப் பெற்றுக் கோபமுற்றிக்கும் ருத்ரனுடைய க்ரீடாஸ்தானமாகிய ஶ்மஶான வாடிகைபோல்

[1] இங்கு 'அனீகம் தஶஸாஹஸ்ரம் ரதானாம் வாதரம்ஹஸாம்| அஷ்டாதஶஸஹஸ்ராணி குஞ்ஜராணாம் தரஸ்விநாம்| சதுர்தச ஸஹஸ்.

பயங்கரமாயிருந்தது. அப்பால் தேவதைகளும் கந்தர்வர்களும் ஸித்தர்களும் மஹர்ஷிகளும், ராமன் செய்த அம்மஹாகார்யத்தை 'நல்லது நல்லது' என்று கொண்டாடினர். அப்பொழுது தர்மஸ்வபாவனுகிய ராமன் தன் அருகிலிருக்கும் ஸுக்ரீவனையும் விபீஷணனையும் ஹனுமானையும் ஜாம்பவானையும் வானரோத்தமனுகிய மைந்தனையும் த்விவிதனையும் பார்த்து 'இங்ஙனம் மூலபலத்தையெல்லாம் க்ஷணத்திற்குள் முடித்தமை மாயையினு

---

ராணி ஸாரோஹாணாம் ச வாஜிநாம்| பூர்ணேஷுதஸஹஸ்ரே த்வேராக்ஷஸாநாம் படிதிநாம்' என்பது மூலம்.

அனீகமாவது 'ஏகேபைகரதா த்ர்யஸ்வா பத்தி: பஞ்சபதாதிகா|பத்த்யங்கைஸ்த்ரி கு்ணைஸ் ஸர்வை: க்ரமாதாவியாபயோத்தரம்| ஸேனாமுகம் குல்மகணௌ வாஹிநீ ப்ருதநா சமூ:' (ஒருயானையும் ஒருரதமும் மூன்று குதிரைகளும் ஐந்துகாலாட்களும் உடையது பத்தி யெனப்படும். பத்து உருக்களுடையது பத்தியென்பதாம். மூன்று பத்திகள் ஸேனாமுகம். மூன்றுஸேனாமுகங்கள் குல்மம். மூன்று குல்மங்கள் கணம். மூன்று கணங்கள் வாஹினி. மூன்று வாஹினிகள்ப்ருதனை. மூன்று ப்ருதனைகள் சமூ. இங்குச் சமூவையே அனீகமென்றது. அதாவது—ஏழாயிரத்து இருநூற்றுத் தொண்ணூறு உருக்களையுடைய ஸேனை அனீகமாம். அத்தகைய அனீகங்கள் பதினுயிரம், அதாவது—ஏழுகோடியே இருபத்தொன்பதுலக்ஷம் உருக்களென்பர்.

இந்தக் கணக்கின்படி பதினுயிரம் அனீகக் கணக்குடைய ரதங்களாவன ஏழுகோடிய இருபத்தொன்பது லக்ஷங்கள். பதினெண்ணுயிரம் அனீகக் கணக்குடைய யானைகளாவன—பதின்மூன்று கோடியே பன்னிரண்டு லக்ஷத்து இருபதினுயிரங்கள். இருநூறுயிரம் அனீகக் கணக்குடைய காலாட்களாவன—நூற்று நாற்பத்தைந்து கோடியே எண்பது லக்ஷங்களென்றும் தெரிகிறது.

1 இங்கு 'ஏதத³ஸ்த்ரப³லம் தி³வ்யம் மம வா த்ர்யம்ப³கஸ்ய வா' என்பது மூலம். இங்ஙனம் க்ஷணப்பொழுதில் கணக்கில்லாத ராக்ஷஸர்களை வதித்தமை மாயையாலன்று, அஸ்த்ரம் ப்ரயோகிக்கும்

லன்று. இது அஸ்த்ரங்களை ப்ரயோகிக்கும் சக்தியாலே யே ஆயிற்று. இப்படிப்பட்ட சக்தி எனக்கும் ஸம்ஹார காலத்தில் சிவனுக்கும் மாத்ரமே உளதன்றி மற்றெவ னுக்கும் உண்டாகாது' என்றனன். அப்பொழுது தேவேந்த்ரனைப் போன்று திவ்யாஸ்த்ரங்களிலும் மற்ற ஆயுதங்களிலும் கைதீர்ந்திருக்கிற மஹானுபாவனாகிய ராமன் அந்த ராக்ஷஸ ஸைன்யத்தை ஹதஞ் செய்த மைக்கு தேவதைகளெல்லோரும் மிகுதியும் ஸந்தோஷ முற்றுக் கூட்டங்கூடி அவனை மிகவும் ஸ்தோத்ரஞ் செய்தனர். தொண்ணூற்று நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராக்ஷஸ ஸ்த்ரீகளின் புலம்பல்.

பலவாயிரம் குதிரைவீரர்களோடு கூடின குதிரை களையும் அத்தகைய கஜங்களையும் த்வஜங்களால் அலங் கரிக்கப்பட்டு அக்னிபோல் ஜ்வலிக்கின்ற ஸ்வர்ணமயமா ன அனேகமாயிரம் தேர்களையும், சூரர்களும் கதைகளை யும் பரிகங்களையுங்கொண்டு சண்டைசெய்பவரும் ரதங் களின் மேலுள்ள பொன்மயமான டக்கயங்களின் காந்தி களால் சித்ரநிறம்பொருந்தின கறுத்தமேனியுடையவரும் காமரூபிகளுமாகிய பலவாயிரம் ராக்ஷஸர்களையும், ரா வணன் எவ்வெவ்வளவு அனுப்பினனோ அவ்வளவையும் ராமன் எத்தகைய கார்யங்களையும் அனாயாஸமாகச்செய் யுந்திறமையுடையவனாகையால் சிறிதும் வருத்தமின்றி

---

சக்தி லாகவத்தினலென்று கருத்து. கேவல அஸ்த்ரத்திற்கு அந்தச சக்தி கிடையாது. அப்படியாயின, 'காந்தர்வேண காந்தர்வம்' என்று ராவணாதிகளுக்கும் காந்தர்வாஸ்த்ரம் உண்டாகையால் அந்தச் சக்தியும் உண்டாக வேண்டுமல்லவா அது இல்லையாகையால் கேவல அஸ்த்ர சக்தியே யாகாமல் அஸ்த்ரம் ப்ரயோகிக்கும் சக்தியே யென்று தெரிகிறது.

ஸ்வர்ண அலங்காரத்துடன் விளங்குங்கூரான பாணங்களால் வதித்துப் பொகட்டனன். யுத்தத்தினின்று தப்பித்துக்கொண்டு ஓடிப்போனவர்களும் லங்கையி லிருப்பவர்களுமாகிய மிகுந்த ராக்ஷஸர்கள் அனைவரும் அங்ஙனம் ராமனால் மூலபலம் வதிக்கப்பட்டு முடிந்தமையைக் கண்டும் கேட்டும், ராக்ஷஸ ஸ்த்ரீகளோடுகூடி தீனர்களாகிச் சிந்தையில் மூழ்கினர். யுத்தத்தில் ராமனால் பர்த்தாவும் புத்ரர்களும் பந்துக்களும் மாண்டுவிழப் பெற்ற ராக்ஷஸ ஸ்த்ரீகள் ஒருவரையொருவர் கட்டிக் கொண்டு துக்கத்தினால் வருந்தி இங்ஙனம் புலம்பினர். 'சூர்ப்பணகை வயது சென்றவள்; விகாரமான உருவமுடையவள்; அவளது வயிறு தொங்கிக்கொண்டிருக்கும். இவள் அரண்யத்தில் வடிவங்கொண்ட மன்மதன்போல் மிகவும் அழகனும் மிகுந்த மென்மை யுடையவனும் மஹாபலிஷ்டனும் ஸமஸ்த ப்ராணிகளுக்கும் ஹிதஞ் செய்பவனுமாகிய ராமனிடம் எப்படிபோயினள்? ஸமஸ்த லோகங்களுக்கும் நிந்திக்கத் தகுந்தவளும் குரூபிணியுமாகிய அந்தச் சூர்ப்பணகை அப்படிப்பட்ட ராமனைப் பார்த்து மோஹித்தாளாம்! சூர்ப்பணகைக்கு நல்லகுணம் ஒன்றுமே இல்லை. ராமனே ஸமஸ்த குணங்களும் அமைந்தவன். இவள் விகாரமுக முடையவளும் நிறம் மாறினவளுமாயிருப்பவள். ராமனே ஸௌந்தரமான முகமும் மிகுந்த ஒளியும் அமைந்தவன். இவள் ராக்ஷஸி; அவன் மனுஷ்யஸ்ரேஷ்டன். இப்படிப்பட்டவள் அப்படிப்பட்ட ராமனை எங்ஙனம் விருப்புற்றனள்? கிழத்தன்மையால் சதைகள் சுருங்கி மடியப்பெற்றவளும் தலைமயிர்கள் நரைத்து ராமனுக்கு எவ்வகையிலும் தகாதவளுமாகிய அந்தச் சூர்ப்பணகை, நாம் எல்லோரும் துர்ப்பாக்யமுடையவராகையால் கரதூஷணர்களும் மற்றுமுள்ள ஸமஸ்த ராக்ஷஸர்களும் நாசம் அடைவதற்காகமிகு

தியும் பரிஹாஸத்திற்கு இடமும் ஸமஸ்த லோகங்களா லும் நிந்திக்கப்படுவதும் செய்யக்கூடாததுமான கார்ய த்தைச் செய்தனள். அதாவது ராமனை எதிர்த்துப் பரிபவிக்கையே. அவள் நிமித்தமாக ராவணன் ராம னேடு இந்த மஹா வைரத்தை வைத்துக்கொண்டனன். ராவணன் தன்வததத்திற்காகவே அந்த ஸீதையைக் கொ ண்டுவந்து பலிஷ்டனுகிய ராமனேடு தீராத பகையை ஏறிட்டுக்கொண்டானன்றி ஜனக ராஜன் புதல்வியாகிய அந்த ஸீதை என்னவோ இந்த ராவணனுக்கு வசப்படு பவளன்று. முன்பு ஸீதையை அபஹரிக்க வேண்டின அந்த விராதனென்னும் ராக்ஷஸனை ராமனொருவனே வதித்தமை கண்ட நமக்கு அந்த விராதனை வதித்தமை யே ராமன் தன் விரோதிகளை யெல்லாம் பறக்கடிப்பா னென்பதற்குப் போதுமான த்ருஷ்டாந்தம். ராமன் ஜனஸ்தானத்தில் பயங்கர பராக்ரமர்களான பதினலா யிரம் ராக்ஷஸர்களை அக்னிஜ்வாலை போன்ற பாணங்க ளால் வதித்தனன். அதுவும் அவன் பகைவரை யெல் லாம் உருமாய்ப்பானென்பதற்குப் போதுமான த்ருஷ் டாந்தமே. ராமன் யுத்தத்தில் ஸூர்யன்போன்ற பாணங்களால் கரனையும் தூஷணனையும் த்ரிசிரனையும் வதித்தனன். ராமனே ஜயிப்பானென்பதற்கு இந்த ஒரு த்ருஷ்டாந்தமே போதும். மற்றும், ரக்தமே ஆஹார மாகப்பெற்றுக் கோபத்தினல் பயங்கரமாக இரைச்சலி டுபவனும் யோஜனையளவு நீண்ட புஜங்களுடையவனுமா கிய கபந்தனையுங்கூட ராமன் வதித்தனன். ராமனே ஜயிப்பானென்பதற்கு அந்த ஒரு த்ருஷ்டாந்தமே போ தும். மஹா பலனும் மேருபர்வதம் போன்றவனும் தே வேந்த்ரனது குமாரனுமாகிய வாலியையும் ராமன் வதித் தனன். ராமன் ஜயிப்பானென்பதற்கு அந்த நிதர்ஶ னமே போதும். மனக்களிப்பற்று விருப்பம் நிறைவேறு

மென்கிற ஆசையும் தொலையப்பெற்று ருச்யமூக பர்வதத்தில் மறைந்திருந்த ஸுக்ரீவனையுங்கூட ராமன் வானர ராஜ்யத்திற்கு அதிபதியாகச் செய்தனன். ராமன் ஜயிப்பானென்பதற்கு அந்த ஒருத்ருஷ்டாந்தமே போதும். விபீஷணன் சொன்ன வார்த்தை தர்மார்த்தங்களிரண்டையும் விளைவிப்பது; ஸமஸ்த ராக்ஷஸர்களுக்கும் ஹிதத்தைக் கைகூடுவிப்பது, யுக்திகள் அமைந்தது. அப்படிப்பட்ட வார்த்தையும் மோஹாவேசத்தினுல் ராவணனுக்கு இஷ்டப்படாமற் போயிற்று. குபேரன் தம்பியாகிய ராவணன் விபீஷணன் சொன்னபடி செய்திருப்பானுயின், இந்த லங்காபுரமெல்லாம் ஸ்மசானம்போல் பிணங்கள் நிறைந்து இங்ஙனம் துக்கத்வனிகளோடு கூடினதாகாதிருக்கும். ராமனுல் மஹா பலனுகிய கும்பகர்ணன் மாண்டதையும், லக்ஷ்மணனுல் எப்படிப்பட்டவர்க்கும் எதிர்க்கமுடியாத அதிகாயன் மாண்டுபோனதையும், அருமைக் குமாரனுகிய இந்த்ரஜித்து மாண்டதையும் கேட்டும் இன்னம் ராவணனுக்கு ராமன் மஹிமை தெரியாதிருக்கின்றதே' என்றனர். 'யுத்தத்தில் என் புதல்வன் மாண்டுபோயினனே! எனது உடன் தோன்றல் முடிந்தனனே! என் கணவன் உயிர் மாய்ந்தனனே!' என்று லங்காபுரத்தில் ராக்ஷஸக்ருஹங்கள் தோறும் ரோதன த்வனிகள் செவிப்பட்டுக் கொண்டிருந்தன. மற்றும், அவர் 'சூரனுகிய ராமன் ரதங்களையும் குதிரைகளையும் யானைகளையும் ஒட்டைகளையும் காலாட்களையும் லக்ஷம் லக்ஷமாக யுத்தத்தில் வதித்தனன். ருத்ரனே விஷ்ணுவோ, தேவேந்த்ரனே, அல்லது யமனே,ராக உருவத்துடன் நம்முடையவர்களை வதித்தானே யன்றிக் கேவல மனுஷ்யனுகிய ராமனே வதித்தானென்பது பொருந்தாது. மஹா வீரர்களான நம்முடையவரெல்லோரும் ராமனுல் அடியுண்டு மாண்டு

போகையால் நாம் பிழைப்பதில் ஆசையைத் துறந்து இந்த பயத்திற்கு முடிவு காணுமல் அநாதைகளாகிப் புலம்பிக்கொண்டிருக்கின்றனம். சூரனுகிய ராவணன் ப்ரஹ்மாவினிடம் பெற்ற பெரிய வரமஹிமையால் கண் தெரியாமல் தனக்கு இப்பொழுது ராமனுல் நேரப்போ கிற மிகவும் கோரமான மஹாபயத்தை அறியாதிருக் கின்றனன். தேவதைகளாவது கந்தர்வர்களாவது பிசா சர்களாவது ராக்ஷஸர்களாவது யுத்தத்தில் ராமன் வசம் அகப்பட்டவனை ரக்ஷிக்கவல்லரல்லர். ராவண னுக்கு ஒவ்வொரு யுத்தத்திலும் உத்பாதங்கள் புலப்படு கின்றன. இன்னமும் உத்பாதங்கள் தோன்றி ராமனுல் ராவணன் மாண்டுபோவதை அறிவிக்கப்போகின்றன. ப்ரஹ்மதேவன் ராவணனுடைய தவத்திற்கு ஸந்தோ ஷப்பட்டு அவனுக்கு தேவதைகளாலும் தானவர்களா லும் ராக்ஷஸர்களாலும் பயமில்லையென்று வரங்கொ டுத்தனன். அப்பொழுது ராவணன் மனுஷ்யர்களால் பயமில்லாமையை வேண்டவில்லை. ஆகையால் இப்பொ ழுது ராவணனுக்கும் ராக்ஷஸர்களுக்கும் மனுஷ்யர் களால் ப்ராணன்களைப் போக்குவதும் கோரமுமான இந்த பயம் நேரிட்டது. இதற்கு ஸந்தேஹமே இல்லை. தேவதைகள், ப்ரஹ்மதேவன் வரங்கொடுத்தமையால் பலிஷ்டனுகிய ராவணன் மிகுதியும் பிடித்துக் கொண் டிருக்கையில் பொறுக்கமுடியாமல் ப்ரஹ்மதேவனைக் குறித்து மிகுதியும் உக்ரமான தவஞ்செய்தனர். மஹா னுபாவனுகிய ப்ரஹ்மதேவன் ஸந்தோஷம் அடைந்து தேவதைகளுக்கு மேன்மை உண்டாகும்பொருட்டு அவர் களெல்லோரையும் பார்த்து மிகுதியும் பொருளடக்க முடைய இவ்வசனத்தை மொழியத்தொடங்கி, 'இது முதல் ஸமஸ்த ராக்ஷஸர்களும் அவர்களுடன் சேர்ந்த தானவர்களும் எப்பொழுதும் மூன்று லோகங்களிலும்

உங்களில் எவர்க்கும் வருத்தம் விளைக்காமல் என்றும் பயந்து ஸஞ்சரிப்பார்கள்' என்று ஸமாதானஞ் சொல்லினன். தேவேந்த்ரன் முதலிய தேவதைகள் ப்ரஹ்ம தேவனது ஸமாதானத்தினல் த்ருப்தி அடைந்து எல்லோரும் ஒன்று சேர்ந்து வ்ருஷபத்வஜனும் த்ரிபுரஸம்ஹாரகனுமாகிய சிவபெருமானை ப்ரார்த்தித்து அருள் புரியச் செய்துகொண்டனர். சிவனும் அருள் புரிந்து தேவதைகளைப் பார்த்து 'ராக்ஷஸர்களெல்லோர்க்கும் நாசம் விளைக்கவல்ல ஓர் பெண்மணி பிறக்கப்போகின்றனள். அவளால் உங்களுக்கு ஹிதம் உண்டாகும்' என்று மொழிந்தனன். ராக்ஷஸர்களை நாசஞ் செய்யும் பொருட்டு தேவதைகள் அனுப்பின இந்த ஸீதை, முன்பு தேவதைகள் அம்ருத பானஞ்செய்த பின்பு பசி தானவர்களை உருமாய்த்தாற்போல், ராவணனோடு கூட நம்மெல்லோரையும் பக்ஷிக்கப் போகின்றனள். அபநீதியில் கால் தாழ்ந்தவனும் துர்ப் புத்தியனுமாகிய ராவணன் செய்த கெட்ட கார்யத்தினல் இங்ஙனம் பெருந் துக்கத்தோடு கூட இந்த பயங்கரமான நாசம் எல்லோர்க்கும் நேரிட்டது. ப்ரளயகாலத்தில் யமன் கையில் அகப்பட்ட ப்ரஜைகளுக்குப்போல், ராமன் கையில் அகப்பட்ட நமக்குச் சரணங்கொடுத்து ரக்ஷிப்பவன் உலகத்தில் எவனும் புலப்படவில்லை. வனத்தில் காட்டுத்தீயின் ஜ்வாலைகள் சூழப்பெற்ற யானைப்பேடுகள்போல் மஹத்தான இவ்விபத்தில் அகப்பட்டுக் கொண்டிருக்கிற நமக்கு ரக்ஷகன் எவனுமே இல்லை. புலஸ்த்ய மஹர்ஷியின் பேரனும் மஹானுபாவனுமாகிய அந்த விபீஷணன், எவனல் பயம்விளையுமென்று தோற்றிற்றோ, அப்படிப்பட்ட ராமனையே சரணம் அடைந்தானகையால் தகுந்த கார்யமே செய்தான்' என்று புலம்

பினர். அப்பொழுது இவ்வண்ணம் [1] ராக்ஷஸ ஸ்த்ரீகளனைவரும் ஒருவரையொருவர் கைகளால் அணைத்துக்கொண்டு மிகுதியும் பயத்தினால் பீடிக்கப்பட்டு தீனைகளாகி துக்கித்துக் கொண்டு மிகவும் தாருணமாயிருக்கும்படி உரக்கக் கூச்சலிட்டு ரோதனஞ் செய்தனர். தொண்ணூற்றைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராவணன் யுத்தத்திற்கு வந்து வானரர்களோடு யுத்தஞ் செய்தல்.

அங்ஙனம் லங்காபுரத்தில் வீடுகள் தோறும் ராக்ஷஸஸ்த்ரீகள் வருந்தி மனஇரக்கம் உண்டாகும்படி செய்யும் ரோதனத்வனி ராவணனுக்குச் செவிப்பட்டது. அந்த ராவணன் தீர்க்கமாகப் பெருமூச்செறிந்து சிறிது நேரம் ஒன்றும் தோன்றுமல் சிந்தையில் ஆழ்ந்திருந்து, உடனே கோபாவேசத்தினால் பயங்கரமான உருவமுடையவனாயினன். அந்த ராக்ஷஸேஶ்வரன் பற்களால் உதட்டைக் கடித்துக் கோபத்தினால் கண்கள் மிகுதியும் சிவக்கப்பெற்று ப்ரளயகாலாக்னி போல் வளர்ந்து ராக்ஷஸர்க்குங்கூடக் கண்ணெடுத்துப் பார்க்கமுடியாமல் புலப்பட்டுக்கொண்டு மனத்தில் பயம் உண்டாகப்பெற்றிருக்கையால் தடைபட்டுத்தெளிவாயிராதபடி பேசுகின்றவரும் அருகேயிருப்பவருமாகிய [2] மஹோதரன் மஹா பார்ஶ்வன் விரூபாக்ஷன்

---

1 இங்கு ராக்ஷஸ நாசத்திற்காக ப்ரஹ்மாதிகள் வரங்கொடுத்தது முதலிய வ்ருத்தாந்தங்களை மந்தோதரி அறிஞரான பெரியோர்களிடத்திலும் இந்த ராக்ஷஸஸ்த்ரீகள் அவளிடத்திலும் கேட்டிருப்பார்களென்று தெரிகிறது.

2 இம்மஹோதரனும் இம்மஹா பார்ஸ்வனும் ராவணனுடைய மந்த்ரிகள். முன்பு யுத்தத்தில் அடிபுண்ட மஹோதர மஹாபார்ஸ்வர்கள் மத்தனென்றும் ப்ரமத்தனென்றும் வேறு பேருடையவரான ராவணன் தம்பிகள்.

என்கிற ராக்ஷஸர்களைப் பார்த்து, கண்களால் தஹிப்பவன் போன்று 'சீக்ரமாக யுத்தத்திற்குப் புறப்படும்படி ஸைன்யங்களுக்கு ஆஜ்ஞை யிடுவீர்களாக, என்றனன். அந்த ராவணன் சொன்னவார்த்தையைக்கேட்டு அந்த ராக்ஷஸர்கள் பயத்தினால் பீடிக்கப்பட்டு ராஜனது கட்டளையின்படி மிகுந்த மனவூக்கத்துடன் ராக்ஷஸர்களை யுத்தத்திற்கு வரும்படி தூண்டினர். பயங்கரமான காட்சியுடைய அந்த ராக்ஷஸர்களும் அப்படியே யென்று மங்களாசீர்வாதங்களைச் செய்வித்துக்கொண்டு எல்லோரும் யுத்த பூமிக்கு எதிர்முகமாகப் போயினர். அந்த ராக்ஷஸர்களெல்லோரும் ந்யாயத்தின்படி ராவணனுக்கு நமஸ்காராதிகளைச் செய்து ப்ரபுவின் ஜயத்தை விரும்பிக் கைகூப்பிக்கொண்டு நின்றனர். அப்பால் ராவணன் மிகுதியும் கோபாவேச முற்றுப் பகைவரைப் பொருள் செய்யாத பெருஞ் சிரிப்புச் சிரித்து மஹோதரன் மஹாபார்ஶ்வன் விரூபாக்ஷன் ஆகிய இவர்களைப் பார்த்து 'இப்பொழுது என் தனுஸ்ஸினின்று ப்ரளய காலஸூர்யன்போல் பயங்கரமான பாணங்களை ப்ரயோகித்து ராமனையும் லக்ஷ்மணனையும் யமபுரிக்கு அனுப்புகிறேன். நான் இப்பொழுது யுத்தத்தில் பகைவரையெல்லாம் வதித்து, இதற்கு முன் அவர்களால் கரன் கும்பகர்ணன் ப்ரஹஸ்தன் இந்த்ரஜித்து ஆகிய இவர்கள் வதிக்கப்பட்டமைக்கு ப்ரதீகாரஞ் செய்கின்றனன். என் பாணஸமூஹங்களாகிற மேகங்கள் சூழ்ந்து கொள்கையில் திசைகளும் நதிகளும் ஸமுத்ரங்களும் வெளிச்சமில்லாமல் இருள்மூடப்பெற்றிருக்கப் போகின்றன. இப்பொழுது தனுஸ்ஸினின்று இறகுகள் கட்டப்பெற்ற மேலான பாணங்களை அபாரமாக ப்ரயோகித்து அந்த வானரஸைன்யங்களைக் கூட்டங்கூட்டமாக

உருமாய்த்துவிட்டு வருகின்றனன். இப்பொழுது ரத மென்கிற காற்றுவேகத்தினல் தனுஸ்ஸென்னும் ஸமுத் ரத்தினின்று கிளப்பப்பட்ட பாணங்களென்னும் பேர லைகளால் வர்னர ஸைன்யங்களைப் பாழ்செய்து விடுகி றேன். சிறிது மலர்ந்த தாமரையுடைய தடாகத்தை மதித்தயானைகள் கலக்குவதுபோல், கொஞ்சம் மலர்ந்த தாமரைபோன்ற முகமும் தாமரைத்தாதை நிகர்த்த நிறமும் அமைந்த அவ்வானர ஸைன்யங்களைக் கலக்கி விடுகிறேன் இப்பொழுது வானர யூதபதிகள் அடியுண்டு வீழ்ந்து பாணம் பொற்றுக்கொண்டிருக்கையால் தண் டுகளோடு கூடின தாமரை மலர்கள் போன்ற முகங்க ளால் யுத்தபூமி முழுவதையும் அலங்கரிக்கப் போகின் றனர். (இப்பொழுது யுத்தபூமிமுழுவதும் வானர யூத பதிகளின் முகங்கள் பாணம் பொற்றுக்கொண்டு வீழ்ந் திருக்கப்பெற்றுத் தண்டுகளோடுகூடின தாமரை மலர் கள் நிறைந்திருப்பதுபோல் அழகாயிருக்கப் போகின் றது.) யுத்தத்தில் ப்ரசண்டராகி வ்ருக்ஷங்களைக் கொ ண்டு யுத்தஞ் செய்யும் வானரர்களை இப்பொழுது ஒவ் வொரு பாணத்தைத் தொடுத்து நூறு நூறுபேராக யுத்தத்தில் வதித்து விடுகிறேன். யுத்தத்தில் எவளெவ ளுக்கு பர்த்தாக்களும் ப்ராதாக்களும் புத்ரர்களும் மாண்டார்களோ, அப்படிப்பட்ட ராக்ஷஸ ஸ்த்ரீகள னைவர்க்கும், இப்பொழுது சத்ருக்களை வதித்துக் கண் ணீரைத் துடைக்கின்றனன். இப்பொழுது வானரர்கள் என் பாணங்களால் பிளக்கப்பட்டு ப்ராணன்களை இழந்து நாற்புறத்திலும் சிதறி விழுந்து பூமிமுழுவதை யும் மறைக்கையில், தரையைப் பார்ப்பது மிக வருத்தமாயிருக்கப் போகின்றது. (இப்பொழுது என் பாணங்களால் வானரர்களைப் பிளந்து ப்ராணன் களைத் தொலைத்து நாற்புறங்களிலும் சிதறி விழச்

செய்து அவரது சரீரங்களால் யுத்தபூமி முழுவதையும் மறையச்செய்து தரையைக் காண மிக வருத்தமாயிருக்கும்படி செய்யப்போகின்றனன்). இப்பொழுது நரிகளுக்கும் கழுகுகளுக்கும் மற்றும் மாம்ஸத்தை ஆஹாரமாகவுடைய மற்ற ஜந்துக்களுக்கும் என் பாணங்களால் சத்ருக்களின் மாம்ஸங்களைக் கொடுத்து த்ருப்தியை விளைவிக்கப் போகின்றனன். சீக்ரமாக என் ரதத்தை அலங்கரிப்பீர்களாக. வேகமாக என் தனுஸ்ஸைக் கொண்டுவருவீர்களாக. மற்றும், இப்பொழுது மிகுந்திருக்கும் ராக்ஷஸர்கள் எல்லோரும் என்னைப் பின்றொடர்ந்து வருவார்களாக' என்றனன். மஹாபார்ஶ்வன், ராவணன் மொழிந்த வார்த்தையைக்கேட்டு, அங்கிருக்கும் ஸேனுத்யக்ஷர்களைப் பார்த்து 'ஸைன்யத்தை வேகமாக ஸித்தப் படுத்துங்கள்' என்று ஆஜ்ஞாபித்தனன். மஹா பலிஷ்டர்களான அந்த ஸேனுத்யக்ஷர்கள் யாவரும் லங்காபுரியில் வீடுகள்தோறும் நுழைந்து ராக்ஷஸர்களை அழைத்து, அடிக்கடி அழைப்பினும் அவர்கள் விரைந்து வாராமையால் கோபித்தவராகி வீதிகள்தோறும் அழைத்துக்கொண்டு திரிந்தனர். அனந்தரம் முஹூர்த்தகாலத்தில் பயங்கரமான முகமுடைய ராக்ஷஸர்கள் ஸிம்ஹநாதங்களைச் செய்துகொண்டு கத்திகளையும் பட்டயங்களையும் சூலாயுதங்களையும் கதைகளையும் உலக்கைகளையும் ஹலமென்கிற ஓர்வகை ஆயுதங்களையும்கூரிய நுனியுடைய சக்தியென்னும் ஆயுதங்களையும் பெரிய சம்மட்டிகளையும் யஷ்டிகளையும் நிர்மலமான சக்ரங்களையும் கூரான கோடாலிகளையும் பிண்டிவாலங்களையும் சதக்னிகளையும் மற்றும் மேலான வேறு ஆயுதங்களையும் கைகளில் ஏந்திக்கொண்டு காண்போர்க்கு பயங்கரமான காட்சியுடையவராகி வேகமாகப்

புறப்பட்டுவந்தனர். அனந்தரம் ராவணனது ஆஜ்ஞை யின்படி ஸேனாத்யக்ஷன் எட்டுக் குதிரைகள், பூட்டப் பெற்றதும் ஸாரதியோடு கூடினதுமான ரதத்தைச் சீக்ரமாகக் கொண்டுவந்தனன். பயங்கரனான ராவணன் அந்த ரதத்தைத் தனது தேஜஸ்ஸினால் விளங்கச் செய்துகொண்டு அதில் ஆரோஹித்தனன். அப்பால் ராவணன் பல ராக்ஷஸர்களால் சூழப்பட்டு பலத்தின் மிகுதியால் பூமியைப் பிளப்பவன்போல் வேகமாகப் புறப்பட்டனன். அப்பொழுது மஹாபார்ஶ்வனும் மஹோதரனும் துர்த்தர்ஷனும் விரூபாக்ஷனும் ராவணனிடம் அநுமதிபெற்று ரதங்களில் ஏறிக்கொண்டனர். அவர்கள் ஸந்தோஷமுற்று பூமியைப் பிளப்பவர்போல் பெருங் கோஷத்துடன் பயங்கரமாக ஸிம்ஹநாதஞ் செய்துகொண்டு ஜயத்தை விரும்பிப் புறப்பட்டனர். அனந்தரம் மஹா தேஜஸ்வியாகிய ராவணன் ராக்ஷஸ ஸைன்யங்களால்சூழப்பட்டு வில்லை ஏந்தி ப்ரளயகாலத்தில் ப்ரஜைகளை ஸம்ஹரிக்கிற யமன்போல் புலப்பட்டுக்கொண்டு யுத்தத்திற்குப் புறப்பட்டனன். அதன்பிறகு அம்மஹாரதன் வேகமுடைய குதிரைகள் பூட்டப்பெற்ற ரதத்தில் ஆரோஹித்து, ராம லக்ஷ்மணர்களிருவருமிருக்கும்படியான வடக்கு வாசலுக்குப் போயினன். அப்பொழுது ஸூர்யன் காந்தியற்றவனாயினன். திசைகளெல்லாம் இருள்மூடப்பெற்றன. பயங்கரமான பக்ஷிகள் இரைச்சலிட்டன. பூமியும் நடுக்கமுற்றது. மேகம் ரக்தத்தைப் பெய்தது. குதிரைகள் வழியில் தடுக்கி விழுந்தன. த்வஜத்தின் நுனியில் கழுகு குதித்தது. நரிகள் அமங்களமாக ஊளையிட்டன. ராவணனுக்கு இடக்கண் துடித்தது; இடக்கை நடுங்கிற்று; முகம் நிறம் மாறப்பெற்றது; கண்டத்வனியும் சிறிது குறைந்தது. அந்த வடக்கு

வாசல்வழியாக ராவணன் யுத்தத்திற்குப் புறப்படும் பொழுது யுத்தத்தில் அவனுக்கு மரணத்தை அறிவிக் கும்படியான இந்த அவசகுனங்கள் உண்டாயின. இடி விழுந்தாற்போல் பெருங்கோஷத்துடன் ஆகாயத்தி னின்று குறைக்கொள்ளி விழுந்தது. அமங்களமான கழுகுகள் கூச்சலிடுகையில், காகங்களும் சேர்ந்து இரைச்சலிட்டன. ராவணன் ம்ருத்யுவினுல் தூண்டப் பட்டிருப்பதுபற்றி இங்ஙனம் நேர்ந்த இந்த அவசகுன ங்களைப் பொருள் செய்யாமல் மோஹத்தினுல் மரணம் அடைவதற்குப் புறப்பட்டனன். மஹாபலமுடைய அந் தராக்ஷஸர்களின் ரதகோஷத்தைக் கேட்டு வானரஸே னையும் யுத்தஞ் செய்ய எதிர்முகமாய் நின்றது. அந்த வானரர்களும் ராக்ஷஸர்களும் ஒருவரை யொருவர் ஜயிக்க விரும்பிக் கோபாவேசமுற்றுப் பொருமையால் ஒருவரை யொருவர் யுத்தத்திற்கு அழைத்துத் துமு லமாக யுத்தஞ் செய்தனர். அப்பொழுது ராவணன் கோ பித்து வானரஸேனையில் நுழைந்து பொன்னுல் அலங் கரிக்கப்பட்டு விளங்கும் பாணங்களை விடுத்துப் பெரிய யுத்தஞ் செய்தனன். ராவணன் அப்பொழுது சில வான ரர்களைத் தலையறுத்தனன்; சிலரை ஹ்ருதயத்தில் அடி த்துப்பிளந்தனன்; சிலர்காதுகளைக்கிழித்துவிட்டனன். ராவணனுடைய பாணங்களால் சிலர் மூச்சுவிடாதிருக் கும்படி அடிக்கப்பட்டனர். சிலர் பக்கத்தில் பிளவுண் டனர். சிலர் தலை முறியப் பெற்றனர். சிலர்க்குக் கண்கள் போயின. ராவணன் ரதத்தின்மேலிருந்து யுத்தத்தில் கோபத்தினுல் கண்களை மலர்த்திக் கிருகிருவென்று சுழற்றிக் கொண்டு எங்கெங்குப் போவானே அந்தந்த இடங்களெல்லாவற்றிலும் வானரஸ்ரேஷ்டர்கள் அவனு டைய பாணவேகத்தைப் பொறுக்கமுடியாமல் ஓடிப் போயினர். தொண்ணூற்றொருவது ஸர்க்கம் முற்றிற்று.

ஸுக்ரீவன் விரூபாக்ஷனை வதித்தல்

அப்பொழுது அங்ஙனம் ராவணனுடைய பாணங்களால் சரீரம் பிளக்கப்பெற்றுச் சிதறி வீழ்ந்திருக்கின்ற வானரர்களால் அந்த யுத்தபூமி முழுவதும் நிரம்பிற்று. விட்டில்கள் எரிகின்ற அக்னியைப் பொறுக்க முடியாதிருப்பதுபோல், அந்த வானரர்கள் நிகரில்லாத வீரனாகிய ராவணனுடைய ஸஹிக்க முடியாத பாண வேகத்தைப் பொறுக்க வல்லமையற்றிருந்தனர். அந்த வானரர்கள் கூரான பாணங்களால் பீடிக்கப்பட்டுப் பொறுக்கமுடியாமல், அக்னிஜ்வாலையில் அகப்பட்டு தஹிக்கப்படுகின்ற யானைகள்போல், கூச்சலிட்டுக் கொண்டு ஓடிப்போயினர். காற்று மஹாமேகங்களைப் பறக்கடிப்பதுபோல், அந்த யுத்தத்தில் ராவணன் வானரஸைன்யங்களை பாணங்களால் ஹிம்ஸித்துக்கொண்டே போயினன். அப்பொழுது ராக்ஷஸர் தலைவனாகிய ராவணன் இங்ஙனம் பலம் உள்ளவளவும் வானரர்களை ஹிம்ஸித்து அப்பால் மிகவேகத்துடன் யுத்தத்தில் ராமனைக் கிட்டினன். அங்ஙனம் வானரர்கள் யுத்தத்தில் தோல்வி அடைந்து பறந்தோடுவதைக்கண்டு, ஸுக்ரீவன் குல்மத்தில் ஸுஷேணனை நியமித்து, எல்லோரும் ஆச்சர்யப்படும்படி யுத்தஞ்செய்ய மனங்கொண்டனன். வீரனாகிய அந்த ஸுக்ரீவன் பல பராக்ரமங்களில் தனக்கு நிகரான ஸுஷேணனை ஸேனையில் காத்திருக்கும்படி நியமித்து வ்ருக்ஷத்தைக் கையில் ஏந்திக்கொண்டு சத்ருக்களை எதிர்த்துப் போயினன். வானரர் தலைவனான ஸுக்ரீவன் அங்ஙனம் புறப்படுகையில் பெரும்பெரிய யூதபதிகளான வானரவீரர்கள் தாமே அவனுக்கு யுத்தக்கருவிகளை உதவிசெய்யும் பொருட்டுப் பெரிய பர்வதங்களையும் பலவகையான பெரிய வ்ருக்ஷங்

களையும் பிடுங்கி எல்லோரும் அவன் பக்கத்திலும் பின் புறத்திலும் கொண்டுபோயினர். பெருமையுடையோ னன அந்த ஸுக்ரீவன் யுத்தத்தில் பெருங் கோஷத் துடன் கர்ஜித்துக்கொண்டு பலவகை ராக்ஷஸர்கள் பல ரையும் முடித்து உடனே மேன்மையுடைய வேறு சில ராக்ஷஸர்மேல் எதிர்த்துப்போயினன். பெருஞ் சரீர முடைய அவ்வானரேஸ்வரன் ஸுக்ரீவன் ப்ரளயகாலத் தில் காற்று மிகுதியும் உயர்ந்த வ்ருக்ஷங்களை முறித்து விழத்தள்ளுவதுபோல், பெரிய ராக்ஷஸர்களை ஹிம் ஸித்து முடித்தனன். அரண்யத்தில் மேகம் பக்ஷிஸ மூஹங்களின்மேல் கல்மழை பெய்வதுபோல்,ஸுக்ரீவன் ராக்ஷஸப்படையின்மேல் பர்வதங்களை மழைபெய்வது போல் பொழிந்தனன். கபிராஜனுகிய அந்த ஸுக்ரீவன் பெய்த பர்வதவர்ஷங்களால் ராக்ஷஸர்கள் தலை சுக்கல் சுக்கலாக முறியப்பெற்று வஜ்ரத்தினுல் பிளக்கப்பட்ட பர்வதங்கள் போல் தரையில் வீழ்ந்தனர். அப்பால் ரா க்ஷஸர்களெல்லோரும் அங்ஙனம் ஸுக்ரீவனுல் நாற்புற த்திலும் தோல்வி அடைந்து ஹிம்ஸிக்கப்பட்டு விழுவ தும் இரைச்சலிடுவதுமாகி மிகுதியும் க்ஷீணிப்பதைக் கண்டும், பிறர்க்குப் பரிபவிக்க முடியாத விருபாக்ஷன் வில்லை ஏந்திக்கொண்டு தன்பேரை உரைத்து ரதத்தி னின்று குதித்து ஓர் யானையின் கழுத்தில் ஏறிக் கொண்டனன். மஹாரதனுகிய அந்த விருபாக்ஷன் அம்மத்தகஜத்தின்மேல் ஏறிக்கொண்டு பயங்கரமான கோஷத்துடன் ஸிம்ஹநாதஞ் செய்பவனுகி வான ரர்களின்மேல் எதிர்த்தனன். அந்த விருபாக்ஷன் வானரஸைன்யத்தின் முன்னே இருக்கிற ஸுக்ரீவன் மேல் பயங்கரமான பாணங்களை ப்ரயோகித்து பயத்தி னுல் ஓடுகின்ற ராக்ஷஸர்களுக்கு பயத்தைத் தீர்த்து ஸந்தோஷத்தை விளைவித்தனன். கபிராஜனுன ஸுக்ரீ

வன் அங்ஙனம் விரூபாக்ஷனுடைய கூரான பாணங்களால் ஹிம்ஸிக்கப்பட்டு மிகுதியும் கோபித்து அவனை வதிக்கும்படி மனங்கொண்டனன். அனந்தரம் சூரனான ஸுக்ரீவன், நன்கு போராடுந் திறமையுடையவனாகையால் ஒரு வ்ருக்ஷத்தைப் பிடுங்கிக்கொண்டு விரூபாக்ஷன்மேல் எதிர்த்து, அந்த வ்ருக்ஷத்தினால் அவன் ஏறிக்கொண்டிருக்கிற மஹா கஜத்தின் முகத்தில் அடித்தனன். அம்மஹா கஜம் ஸுக்ரீவனால் அடிக்கப்பட்டு வில்லளவு தூரம் பின்னுக்கு ஓடிப்போய் வீறிட்டுக்கொண்டு வீழ்ந்தது. அனந்தரம் வீர்யசாலியாகிய அந்த விரூபாக்ஷன் கீழ் விழுந்த யானையினின்று சீக்ரமாக இறங்கிக் கத்தியையும் எருதின் தோலால் இயற்றின கேடயத்தையுங்கொண்டு சத்ருவுக்கு எதிர்முகனாகச் சென்று, அசையாமல் நின்றிருக்கிற ஸுக்ரீவன் மேல், அவனை விரட்டுபவன்போல், விரைந்து அடியிட்டுச் சென்றனன். அந்த ஸுக்ரீவன் விரூபாக்ஷன்மேல் கோபித்து, மேகம்போல் விசாலமாயிருக்கின்ற ஓர் பெருஞ் சிலையை எடுத்து அந்த ராக்ஷஸன்மேல் எறிந்தனன். அப்பொழுது மிகுதியும் பராக்ரமசாலியான அவ்விரூபாக்ஷன் அப்பெருஞ்சிலை மேல் விழவருவதைக் கண்டு தப்பித்துக்கொள்ளும் பொருட்டுப் பக்கத்தில் ஒதுங்கிக் கத்தியினால் ஸுக்ரீவனை அடித்தனன். அங்ஙனம் பலிஷ்டனாகிய அந்த ராக்ஷஸன் கத்தியால் அடிக்க அடியுண்டு வீரனான ஸுக்ரீவன் சிறிதுநேரம் மூர்ச்சை அடைந்தாற்போல் தழதழப்புற்றிருந்தனன். அனந்தரம் அம்மஹா யுத்தத்தில் உடனே எழுந்து வேகமாக விரல்களை மடக்கிப் பிடிபிடித்து விரூபாக்ஷனுடைய மார்பில் குத்தினன். விரூபாக்ஷன் அங்ஙனம் ஸைன்யத்தின் முன்பு முஷ்டியால் அடிக்கப்பட்டு மிகுதியும் கோபித்து அந்தக் கத்தியினால் ஸுக்ரீவனுடைய கவசம் தூள் தூளாகும்படி அடித்தனன்.

ஸுக்ரீவன் அந்த அடிக்குக் கால்களைச் சாய்த்துக் கொண்டு தரையில் வீழ்ந்தனன். அங்ஙனம் விழுந்த அந்த ஸுக்ரீவன் உடனே எழுந்து வஜ்ரம் போன்ற உள்ளங்கையினால் பெருங்கோஷம் உண்டாகும்படி விரு பாக்ஷனை அடிக்கப் போயினன். ஸுக்ரீவன் முயன்ற உள்ளங்கையறையை, அவ்விரூபாக்ஷன் தனது ஸாமர்த்யத்தினால் தப்பித்துக்கொண்டு அந்த ஸுக்ரீவனது மார்பில் முஷ்டியால் அடித்தனன். அனந்தரம் வானரர் தலைவனான ஸுக்ரீவன் தன் அறையைத் தப்பித்துக் கொண்டு தன்னையும் அடித்தமை கண்டு மிகுதியும் கோபித்து அவ்விரூபாக்ஷன் ஏமாறியிருக்கும் ஸமயம் பார்த்தனன். பிறகு ஸுக்ரீவன் கோபத்துடன் அவ்வி ரூபாக்ஷனுடைய நெற்றியெலும்பின்மேல் தனது பெரிய உள்ளங்கையால் அறைந்தனன். இந்த்ரனுடைய வஜ்ராயுதம்போன்ற அந்த உள்ளங்கையறை பட்டு அவ்விரு பாக்ஷன், அருவியினின்று ஜலம் பெருகுவதுபோல் நவத்வாரங்களினின்றும் ரக்தம் பெருகப்பெற்று ரக்தத்தில் நனைந்து பூமியில் வீழ்ந்தனன். அங்ஙனம் கோபத்தினால் கண்களைச் சுழற்றிக்கொண்டு வாயில் நுரை வழியப் பெற்று ரக்தத்தில் நனைந்து இயற்கையாகவே விகாரமான கண்கள் அப்பொழுது விழி வெளிவருகையால் மிகுதியும் விகாரமாகி வீழ்ந்திருக்கிற அவ்விரூபா க்ஷனை வானரர்களும் ராக்ஷஸர்களும் கண்டனர். அங்ஙனம் தமது சத்ருவாகிய அவ்விரூபாக்ஷன் வேதனையால் மேற்கிளம்பிக் கிளம்பி விழுவதும் இப்படியும் அப்படியும் புரளுவதுமாகி ரக்தத்தில் மிதந்து கொண்டு கேட்போர்க்கு மன இரக்கம் உண்டாகும்படி கூவிக் கொண்டிருக்க வானரர்கள் கண்டனர். அங்ஙனம் மஹா பலமுடைய இந்த வானரராக்ஷஸர்களின் ஸைன்

யங்களாகிற ஸமுத்ரங்கள் இரண்டும் யுத்தத்தில் ஒன்றேடொன்று எதிர்த்து, கரையைக் கடந்து வந்து ஒன்றேடொன்று மோதிக்கொள்கின்ற இரண்டு மஹா ஸமுத்ரங்கள்போல் மிகுதியும் பயங்கரமாக இரைச்ச லிட்டன. வானரராஜனை ஸுக்ரீவன் மஹா பலமுடைய அவ்விரூபாக்ஷனை நாசஞ் செய்தமை கண்டு, வானரஸைன்யங்கள் ஸந்தோஷத்தினுலும், ராக்ஷஸப் படைகள் கோபதுக்கங்களாலும், கரை புரண்டு வந்த கங்கா ப்ரவாஹங்கள் போல், பொங்கி வளர்ந்தன. தொண்ணூற்றேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஸுக்ரீவன் மஹோதரனைக் கொல்லுதல்.

அம்மஹாயுத்தத்தில் வானர ராக்ஷஸ ஸைன்யங்களிரண்டும் ஒன்றையொன்று ஹதஞ் செய்கையில், பெரிய வெயிற் காலத்தில் குளங்கள் நீர் குறையப் பெறுவது போல், அவை வேகமாக க்ஷீணிக்கத் தொடங்கின. ராக்ஷஸாதிபதியான, ராவணன் அங்ஙனம் தன் ஸைன்யம் ஹதமாகி விரூபாக்ஷனும் மாண்டதைப்பற்றிக் கோபம் இருமடங்கு வளரப்பெற்றனன். அவன் தன் ஸைன்யம் வானரர்களால் வதிக்கப்பட்டு மிகுதியும் க்ஷீணிப்பதைக் கண்டு, அங்ஙனம் யுத்தத்தில் தனக்கு தெய்வம் விபரீதமாயிருப்பதை ஆராய்ந்து, மிகுதியும் வருந்தி, அருகே யிருக்கின்றவனும் சத்ருக்களை அழிப்பவனுமாகிய மஹோதரனைப் பார்த்து 'வீரனே! மஹா பாஹுவே! இப்படிப்பட்ட ஸங்கடகாலத்தில் உன்னொருவனை நம்பியே நான் ஜயிப்பேனென்னும் ஆசை உண்டாகப் பெற்றிருக்கின்றனன். ஆகையால் இப்பொழுது சத்ருஸைன்யத்தைக் கொன்று பராக்கிரமத்தைக்காட்டுவாயாக. உன் ப்ரபுவின் சோற்றைத் தின்ற ருணந் தீர்த்துக்கொள்வதற்கு இதுவே தகுந்த ஸமயம்.

ஆகையால் நன்கு போராடுவாயாக' என்றனன். ராவணன் இங்ஙனஞ் சொல்லுகையில் ராக்ஷஸ ஸ்ரேஷ்டனாகிய மஹோதரன் அப்படியே ஆகட்டுமென்று, விட்டில்பூச்சி அக்னியில் குதிப்பதுபோல், பகைவரது ஸைன்யத்தில் புகுந்தனன். அனந்தரம் மஹாபலிஷ்டனும் மிகுந்த தேஜஸ்ஸுடையவனுமாகிய அம்மஹோதரன் ப்ரபுவினுடைய வசனத்தைச் சிரஸாவஹித்துத் தன் வீர்யத்தினால் தூண்டப்பட்டவனாகி வானரர்களோடு யுத்தஞ்செய்தனன். மஹாபலிஷ்டர்களான வானரர்களும் பெருப் பெரிய கற்களைக்கொண்டு பயங்கரமான ராக்ஷஸஸேனையில் புகுந்து ராக்ஷஸர்களை வதித்தனர். அந்த மஹா யுத்தத்தில் மஹோதரனும் மிகுந்த கோபாவேசமுற்று ஸ்வர்ணத்தினால் அலங்கரிக்கப்பட்ட பாணங்களை ப்ரயோகித்து வானரர்களின் கால் கைகளையும் துடைகளையும் துண்டித்தனன். அப்பால் அவ்வானரர்கள் அனைவரும் ராக்ஷஸர்களால் மிகுதியும் பீடிக்கப்பட்டுச் சிலர் பத்துத் திசைகளையும் பற்றி ஓடிப் போயினர். சிலர் ஸுக்ரீவனை அடைந்தனர். அங்ஙனம் வானர மஹாஸேனை மிகுதியும் தோல்வி அடைந்து ஓடுவதைக் கண்டு, ஸமீபத்திலிருக்கிற ஸுக்ரீவன் மஹோதரன்மேல் எதிர்த்துப்போயினன். மஹாதேஜஸ்வியும் வானரேஸ்வரனுமாகிய அந்த ஸுக்ரீவன் அந்த ராக்ஷஸனை வதிக்கும்பொருட்டுப் பர்வதம்போல் பெரியதும் பயங்கரமுமாயிருக்கிற ஓர் சிலையை எடுத்து அவன்மேல் பொகட்டனன். மஹோதரன் அங்ஙனம் தன்மேல் வேகமாக வருகின்ற அந்தச் சிலையைப் பார்த்துச் சிறிதும் பரபரப்பின்றி, அணுகமுடியாத அந்தச் சிலையைக் கூரான பாணங்களால் பிளந்தனன். அந்தச்சிலை அவ்வரக்கனுடைய பாணங்களால் ஆயிரஞ் சுக்கலாகத் துண்டிக்கப்பட்டுச் சிதறி, ஆகாயத்தில்

கூட்டங்கூடியிருக்கும் கழுகுகள் நாற்புறத்திலும் சிதறி நிலத்தில் விழுவதுபோல், பூமியில் வீழ்ந்தது: ஸுக்ரீவன் தான் ப்ரயோகித்த சிலே அங்ஙனம் தூளானமை கண்டு கோபாவேசமுற்று யுத்தத்தின் நுனியில் ஓர் வ்ருக்ஷத்தைப் பிடுங்கி அந்த ராக்ஷஸன் மேல் பொகட்டனன். பகைவரது பட்டணங்களை ஜயிக்கும் சூரனாகிய அம்மஹோதரன் பாணங்களால் அந்த வ்ருக்ஷத்தையும் பிளந்துவிட்டனன். அங்ஙனம் வ்ருக்ஷமுங்கூட வீணுகையில், அந்த ஸுக்ரீவன், கோபித்து ஓர் பரிகம் தரையில விழுந்திருக்கக் கண்டனன். ஸுக்ரீவன், தளதளவென்று விளங்குகின்ற அந்தப்பரிகத்தை எடுத்துக்கொண்டு தன் ஹஸ்தலாகவத்தை அம்மஹோதரனுக்குக் காண்பிப்பவனாகி அதைக் கிருகிருவென்று சுழற்றி அதன் நுனியால் அவனுடைய மேலான குதிரைகளை வேகமாக விழத்தள்ளினன். அனந்தரம் வீரனாகிய அம்மஹோதரன் குதிரை பாழாகப்பெற்ற அம்மஹாரதத்தினின்று பூமியில் குதித்து மிகுதியும் கோபித்தவனாகிக் கதையைக் கையில் கொண்டனன். அவ்வீரர்களிருவரும்ஜ்வலிக்கின்ற கதையையும் பரிகத்தையும் கையில் சுழற்றிக்கொண் டிருக்கையால் மின்னலோடு கூடின மேகங்கள்போன்று கர்ஜித்துக்கொண்டு யுத்தத்தில் மதித்த வ்ருஷபங்களை நிகர்த்து ஒருவனை யொருவன் ஸமீபித்து யுத்தஞ் செய்தனர். அப்பால் மஹோதரன் கோபித்து ஸூர்யனோடொத்த ஒளியுடையதாகி ஜ்வலிக்கின்ற தன் கதையை ஸுக்ரீவன் மேல் ப்ரயோகித்தனன். அம்மஹாயுத்தத்தில் மஹாபலிஷ்டனும் வானரேஸ்வரனுமாகிய அந்த ஸுக்ரீவன், மிகுதியும் பயங்கரமான மஹோதரனுடைய கதை தன்மேல் வருவதைக் கண்டு, கோபத்தினால் கண்கள் சிவக்கப்

பெற்றுப் பரிகத்தை எடுத்து அதனால் அந்தக் கதையை அடித்தனன். அந்தப் பரிகமும் கதையும் ஒன்றோடொன்று மோதி முறிந்து பூமியில் வீழ்ந்தன. அனந்தரம் மஹாதேஜஸ்வியாகிய ஸுக்ரீவன் முழுவதும் பொன்னால் அலங்கரிக்கப்பட்டு விளங்குவதும் பயங்கரமுமாகிய ஓர் இரும்புலக்கை பூமியிலிருக்கக் கண்டு, அதை எடுத்துக்கொண்டனன். அந்த ஸுக்ரீவன் அவ்வுலக்கையை எடுத்து மஹோதரன்மேல் பொகட்டனன். மஹோதரனும் மற்றொரு கதையை எறிந்தனன். அவ்விரண்டும் ஒன்றோடொன்றுறைந்து முறிந்து பூமியில் வீழ்ந்தன. அப்பால் ஆயுதங்களெல்லாம் முறிந்துபோகையில், தேஜஸ்ஸும் பலமும் விளங்க அவ்விருவரும் எரிகின்ற அக்னிபோல் ஜ்வலித்துக்கொண்டு முஷ்டிகளால் யுத்தஞ்செய்யத் தொடங்கினர். அப்பொழுது, யுத்தத்தில் பராஜயத்தை (தோல்வியை) அறியாதவர்களும் சத்ருக்களை அடக்கும் வீரர்களுமாகிய அவ்விருவரும் ஒருவரை யொருவர் அடிப்பதும், அடிக்கடி ஸிம்ஹநாதஞ் செய்வதும், உள்ளங்கைகளால் ஒருவரையொருவர் அறைந்து இருவரும் கீழே விழுவதும், உடனே சீக்ரமாகஎழுந்திருப்பதும், ஒருவரையொருவர்மீளவும் அடிப்பதும், புஜங்களால் ஒருவரையொருவர் தூக்கியெறிவதுமாகி இவ்வனம் அவ்வீரர்களிருவரும் ஓயாமல் பாஹுயுத்தஞ் செய்து இளைப்புற்றவராயினர். அனந்தரம் மஹா வேகமுடைய ராக்ஷஸன் மஹோதரன் ஸமீபத்தில் தரையில் வீழ்ந்திருக்கிற ஓர் கேடயத்தையும் கத்தியையும் எடுத்துக்கொண்டனன். மஹோதரனைக் காட்டிலும் மிகுந்த வேகமுடைய வானரஸ்ரேஷ்டனான ஸுக்ரீவனும் அங்ஙனமே தரையில் வீழ்ந்திருந்த மற்றொரு கத்தியையும் கேடயத்தையும் எடுத்துக்கொண்

டனன். ஆயுதவித்தையில் பண்டிதர்களான அவ்விருவரும் கட்கங்களை எடுத்துக்கொண்டு யுத்தத்தில் ஸந்தோஷமுற்று ரோஷத்தினால் சரீரம் நிரம்பப்பெற்று கர்ஜித்துக் கொண்டு ஒருவர்மேல் ஒருவர் எதிர்த்தனர். அவ்விருவரும் ஒருவர்மேல் ஒருவர் கோபாவேச முற்று ஒருவரை ஒருவர் வெல்ல விரும்பி விரைந்த நடையுடன் இடமும் வலமுமாக மண்டல கதிகளில் திரிந்து போராடினர். சூரனும் மஹாவேகனுமாகிய அம்மஹோதரன் பராக்ரமத்தினால் கர்வமுற்றிருப்பவனேயன்றி ஸூக்ஷ்மபுத்தியனன்றாகையால் கத்திகுறிதவறி ஸுக்ரீவன் கையிலிருக்குங் கேடயத்தில் படும்படி போகட்டனன். அப்பால் மஹோதரன் கேடயத்தில் பாய்ந்திருக்குங் கத்தியை இழுத்துக்கொண்டிருக்கையில், இவ்வளவில் கபிகுஞ்ஜரனான ஸுக்ரீவன் தலைப்பாகையோடு கூடிக் குண்டலங்களால் அலங்கரிக்கப்பட்ட அவனது சிரஸ்ஸைப் பறித்தனன். அங்ஙனம் மஹோதரன் தலையறுப்புண்டு தரையில் விழுந்தமை கண்டு, ராவணனது ஸைன்யம் அங்கு நிற்காமல் ஓடிப்போயிற்று. ஸுக்ரீவன் மஹோதரனைக் கொன்று வானரர்களும் தானுமாக ஸிம்ஹநாதஞ் செய்தனன். ராவணன் அதற்குக் கோபமுற்றனன். ராமன் மிகுதியும் ஸந்தோஷமுற்று ப்ரகாசித்தனன். அப்பால் ராக்ஷஸர்களெல்லோரும் மனத்தில் களிப்பற்று முகத்தில் வருத்தம் வழியவும் பயத்தினால் மனம் குதிராமல் தழதழக்கவும் பெற்று ஓடிப்போயினர். மஹா பர்வதத்தின் சிறிது பாகத்தை இடித்துத் தள்ளினாற்போல், அம்மஹோதரனைத் தரையில் விழத்தள்ளி, ஸூர்யகுமாரனான ஸுக்ரீவன் அவ்வானர ஸைன்யத்தில் ஸூர்யன் தனது கிரணங்களால் எதிர்க்க முடியாதவனாகி விளங்குவதுபோல், தானும் எதிர்க்க முடியாதவனாகி ஜய

லக்ஷ்மியால் மிகுதியும் ப்ரகாசித்தனன் அப்பால், மஹா னுபாவனும் வானரர் தலைவனுமான ஸுக்ரீவன் யுத்த த்தின் முனையில் ஜயம் பெற்று, ஆகாயத்தில் தேவதை களும் யக்ஷர்களும் ஸித்தர்களும் பூமியில் ஸமஸ்த பூ தங்களும் கூட்டங்கூடி மிகுந்த ஸந்தோஷ ஆவேசத் துடன் புகழப்பெற்று விளங்கினன். தொண்ணூற் றெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

{ராவணனுடைய மந்த்ரியான மஹா பார்ஸ்வனை அங்கதன் கொல்லுதல்.}

ஸுக்ரீவனால் மஹோதரன் மாண்டதைக்கண்டு, உடனே மஹா பலமுடைய மஹாபார்ஸ்வன் கோபத்தி னால் கண்கள் சிவக்கப்பெற்று, பயங்கரமான அங்கத னது ஸைன்யத்தில் புகுந்து பாணங்களால் கலக்கிவிட் டனன். காற்று பழத்தைக் காம்பினின்று விழத்தள் ளுவதுபோல், அம்மஹா பார்ஸ்வன் மேலான வானர வீரர்களின் தலைகளைச் சரீரங்களினின்று பாணங்களால் விழத்தள்ளினன். அந்த ராக்ஷஸன் மிகுதியும் கோ பித்துச் சில வானரர்களின் புஜங்களையும், சில வானரர் களின் பக்கங்களையும் பாணங்களால் பிளந்தனன். அங் ஙனம் மஹா பார்ஸ்வனுடைய பாண ஸமூஹங்களால் பீடிக்கப்பட்ட அவ்வானரர்க ளெல்லோரும் பொறுக்க முடியாமல், வருத்தத்தினால் யுத்தத்தில் விமுகராகி மூர்ச்சை யுற்றவராயினர். மஹா பாஹுவாகிய அங் கதன் தன் ஸைன்யம் அந்த ராக்ஷஸனால் வருந்தி பயந் திருப்பதைக் கண்டு, ஸமுத்ரம் பர்வகாலத்தில் வளர் வதுபோல், வேகத்தைக் காட்டத்தொடங்கினன். வான ரஸ்ரேஷ்டனாகிய அங்கதன் பொன்கட்டு இடப்பெற்றி ருக்கையால் ஸூர்யகிரணம்போல் ஜ்வலிக்கின்ற இரும் புத்தடியை எடுத்துக்கொண்டு யுத்தத்தில் மஹா பார்ஸ்வன்மேல் விழும்படி வீசி யெறிந்தனன். துர்ப்

புத்தியாகிய அம்மஹாபார்ஸ்வன் அந்த அடிக்கு ஸாரதியும் தானும் தெளிவற்று மூர்ச்சித்தவனாகி ரதத்தினின்று பூமியில் வீழ்ந்தனன். மஹா பலிஷ்டனும் மைக்குவியல்போல் கறுத்த மேனியுடையவனும் மிகுந்த வீர்யசாலியும் மஹா தேஜஸ்வியுமான கவாக்ஷனும் ஜாம்பவானும், மேகம்போல் பரந்து கறுத்திருக்கின்ற தமது பல்லூகஸைன்யத்தினின்று புறப்பட்டுக் கோபாவேசத்துடன் பர்வத சிகரம் போன்றதும் அகன்றதுமான ஓர் பெரிய சிலையை எடுத்துக்கொண்டுவந்து வேகமாக மஹாபார்ஸ்வனது குதிரைகளைக் கொன்று அவனது ரதத்தையும் முறித்துவிட்டனர். மஹாபலனாகிய மஹாபார்ஸ்வன் சிறிது நேரங்கழித்துத் தெளிவுபெற்று அவ்வங்கதன் மேல் பல பாணங்களை ப்ரயோகித்து அவனை மிகுதியும் வருந்தச் செய்தனன். அம்மஹா பார்ஸ்வன், பல்லூகபதியான ஜாம்பவானுடைய மார்பில் மூன்று பாணங்களையும் கவாக்ஷன்மேல் பல பாணங்களையும் எய்து ஹிம்ஸித்தனன். அங்ஙனம் ஜாம்பவானும் கவாக்ஷனும் பாணங்களால் பீடிக்கப்பட்டிருப்பதைக் கண்டு, அங்கதன் கோபாவேசமுற்று பயங்கரமான பரிகத்தைக் கையில் எடுத்துக்கொண்டனன். வேகமுடையவனும் வாலியின் குமாரனுமாகிய அங்கதன் மிகுதியும் கோபமுற்று மஹாபார்ஸ்வனை வதிக்கும் பொருட்டு, அவன் தூரத்திலிருக்கையால், பொற்கட்டுக்களால் ஸூர்யகிரணம்போல் ப்ரகாசிக்கின்ற அவ்விரும்புத்தடியைப் பிடித்து இரண்டு கைகளாலும் கிருகிருவென்று சுழற்றி அவன்மேல் விழும்படி வீசியெறிந்தனன். பலிஷ்டனாகிய அங்கதன் அங்ஙனம் பலமுள்ளவளவும் வீசி யெறிகையில், அந்த இரும்புத்தடி, மஹாபார்ஸ்வன்மேல் நன்றாகப் பாய்ந்து, அவன் கையினின்று பாணத்தோடு கூடின, தனுஸ்ஸையும், அவன்

சிரஸ்ஸினின்று தலைப்பாகையையும் விழத்தள்ளியது. ப்ரதாப சாலியான அங்கதன் அவனை வேகமாகக் கிட்டிக்கோபமுற்றுக் குண்டலங்கள் விளங்கப்பெற்ற அவனது கர்ணமூலத்தில் (காதடியில்) உள்ளங்கையால் அறைந்தனன். மஹா வேகமுடையவனும் மிகுந்த காந்தியுடையவனுமாகிய அம்மஹா பார்ஶ்வன் கோபித்து மிகுதியும் பெரியதான ஓர் கண்டக்கோடாலியை ஒரு கையால் எடுத்தனன். அது தினந்தோறும் எண்ணெய் தடவப் பெற்றிருக்கையால் அழுக்கின்றி நிர்மலமாகிப் பர்வதத்தின் உறுதியான பாகம்போல் மிகுதியும் கடினமாயிருந்தது. அங்ஙனம் மிகுந்த கோபாவேச முற்றிருக்கிற மஹாபார்ஶ்வன் அந்தக் கோடாலியை அங்கதன் மேல் எறிந்தனன். அம்மஹா பார்ஶ்வன் அங்கதனுடைய அகன்ற இடத்தோளின்மேல் அந்தக் கோடாலியை வலிமையுடன் வீசியெறிகையில், அவன் கோபித்து லாகவத்தினால் அந்தக் கோடாலியை விடுவித்துக்கொண்டனன். அவ்வங்கதன் தன் தந்தையைப் போன்ற பராக்ரமசாலியும் சூரனுமாகையால் மிகுதியும் கோபித்து வஜ்ராயுதம்போல் கடினமான முஷ்டியைப் பிடித்துச் சுழற்றினன். அவ்வங்கதன் அந்தந்த இடங்களை அறிந்தவனாகையால் மஹா பார்ஶ்வனுடைய மார்பில் ஹ்ருதயத்திற்கு நேராக, இந்த்ரனுடைய வஜ்ராயுதம்போன்ற முஷ்டியால் அடித்தனன். அம்மஹா யுத்தத்தில் அவ்வங்கதனுடைய முஷ்டியடிக்கு மஹாபார்ஶ்வனென்னும் ராக்ஷஸனுடைய ஹ்ருதயம் திடிலென்று வெடிக்கையில், அவன் ப்ராணன்களை இழந்து பூமியில் வீழ்ந்தனன். அம்மஹாபார்ஶ்வன் பூமியில் விழுந்தவுடனே அந்த ராக்ஷஸப்படை முழுவதும் மிகுதியும் கலங்கிப் பறந்தது. அப்பொழுது யுத்தத்தில் ராவணனுக்கு மிகுதியும் கோபம் உண்டாயிற்று. அந்த ஸம

யத்தில் வானரகள் மிகுதியும் ஸந்தோஷம் அடைந்து லங்கையின்மண்டபங்களின்மேல் நிர்மிக்கப்பட்ட க்ருஹங் களும் பட்டணத்து வாசற்படிகளும் பிளவுறுமோ என் னும்படி உரக்க ஸிம்ஹநாதஞ் செய்தனர். அங்ஙனமே தேவேந்த்ரனும் தேவதைகளும் ஸந்தோஷத்தினுல் பெருங்கோஷமிட்டனர். அனந்தரம் இந்த்ரனுக்குச் சத்ருவாகிய ராக்ஷஸர் தலைவன் ராவணன், அங்ஙனம் தேவதைகளும் வானரர்களும் செய்த பெருங்கோஷத் தைக் கேட்டுக் கோபமுற்று மீளவும் யுத்தத்திற்கு எதிர்முகனுகி நின்றனன். தொண்ணூற்றென்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராமராவண யுத்தாரம்பம்.

ராவணன் அம்மஹாயுத்தத்தில் மஹாபலமுடைய வீரனுகிய விரூபாக்ஷன் மாண்டதையும், பின்பு மஹோ தரனும் மஹாபார்ஶ்வனும் உயிர்மாய்ந்ததையும் கண்டு, மிகுதியும் கோபாவேச முற்றனன். அந்த ராவணன் ஸாரதியைப்பார்த்து ரதத்தை நடத்தச்சொல்லி, அவ னுடன் 'நான் இதோ இப்பொழுது ராம லக்ஷ்மணர் களைக் கொன்று, இதுவரையில் மாண்ட மந்த்ரிகளுக் கும் தகையப்பட்ட லங்காபுரத்திற்கும் உள்ள துக்கத் தைப் போக்கடிக்கிறேன். ஸீதை யென்னும் புஷ்பத்தை யுடையதும் பலத்தைக்கொடுப்பதும், ஸுக்ரீவன் ஜாம் பவான் குமுதன் நலன் மைந்தன் த்விவிதன் அங்கதன் கந்தமாதனன் ஹனுமான் ஸுஷேணன் ஆகிய இவர் களும் மற்றுமுள்ள வானர யூதபதிகள் அனைவரும் கிளைகளாகப் பெற்றதுமாகிய ராமனென்னும் வ்ருக்ஷத் தை இப்பொழுது யுத்தத்தில் துண்டித்து விடுகிறேன்' என்றனன். அதிரதர்களனைவரிலும் பெரியோனுகிய அந்த ராவணன் ரதத்தின் கோஷத்தினுல் பத்து

திக்குக்களையும் ஒலிக்கச் செய்து கொண்டு சீக்ரமாக ராமன்மேல் எதிர்த்துப் போயினன். பூமிமுழுவதும், அந்த ரதத்தின் மஹா த்வனியால் நிறைந்து, நதிகளோடும் பர்வத அரண்யங்களோடும் யானை பன்றி முதலிய ம்ருகங்களோடுங்கூடி நடுக்க முற்றது. அந்த ராவணன் மிக பயங்கரமும் மிகவும் கூரியதுமான தாமஸாஸ்த்ரத்தை ப்ரயோகிக்கையில், வானரர்களெல்லோரும் அந்த அஸ்த்ரத்தினுல் கொளுத்தப் பட்டு நாற்புறத்திலும் வீழத் தொடங்கினர். அவ்வஸ்த்ரம் ப்ரஹ்மதேவன் தானே நிர்மித்ததாகையால், வானரர்கள் அதைப்பொறுத்து நிற்க முடியாமல் தோல்வியடைந்து ஓடுகையில், அதனுல் அப்பொழுது பயங்கரமான தூள் கிளம்பிற்று. அங்ஙனம் அவ்வானர ஸைன்யங்கள் பலவும்ராவணனுடைய மேலான பாணங்களால் ஆயிரமாயிரமாய்த் தோல்வி அடைவதைக் கண்டு, ராமன்யுத்தத்திற்கு ஸந்நாஹமுற்றனன். ராக்ஷஸ ஸ்ரேஷ்டனுன ராவணன் அங்ஙனம் ஓடத்துரத்தி உடனே, என்றும் தோல்வியறியாத ராமன், லக்ஷ்மணனேடு கூடி, உபேந்த்ரனேடு கூடின இந்த்ரன்போன்று பெரியதனுஸ்ஸைக் கையில்ஏந்திக்கொண்டுஆகாயத்தோடுறைபவன் போல புலப்படுவோனுகித் தாமரை யிதழ்போன்ற கண்களும்நீண்டபாஹு தண்டங்களும்விளங்கப்பெற்றுவந்து நிற்கக் கண்டனன். அனந்தரம் மஹாதேஜஸ்வியாகிய ராமன் லக்ஷ்மணனும் தானுமாக, யுத்தத்தில் வானரர்கள் தோல்வியடைவதையும் ராவணன் தன்மேல் எதிர்த்துவருவதையுங் கண்டு, வெகுகாலம் கழித்து இவனேடு யுத்தஞ் செய்ய நேர்ந்ததே யென்று ஸந்தோஷமுற்று தனுஸ்ஸை இடையில் பிடித்துக்கொண்டு, உடனே மிகுந்த வேகத்துடனும் பெருங்கோஷத்துடனும் அம்

மேலான தனுஸ்ஸை நாணேற்றி பூமியைப் பிளப்பவன் போல் ஒலிப்பித்தனன். அப்பொழுது ராவணன் ப்ர யோகித்த பாணஸமூஹங்கள் பொற்றப்பெற்று அவ்வா னரர்கள்பலரும்,ராமன்நாணேற்றியிழுக்கும்த்வனியைக் கேட்டமாத்ரத்தில்பலராக்ஷஸர்களும்வீழ்ந்தனர். அந்த ராவணன், ராஜகுமாரர்களான அந்த ராமலக்ஷ்மணர் களின் பாணமார்க்கத்தை அடைந்து நிற்கும்பொழுது, அமாவாஸ்யையினன்று சந்த்ர ஸூர்யர்களினருகிலிருக் கும் ராஹுவைப்போல் தோற்றினன். லக்ஷ்மணன் முதலில் தான் அந்த ராவணனோடு யுத்தஞ் செய்ய விரும்ப வில்லை. இழுத்து அக்னி ஜ்வாலைகள்போன்ற பாணங்களை ப்ரயோகித்தனன். லக்ஷ்மணன் தனுஸ் ஸைக் கொண்டு அந்த பாணங்களை ப்ரயோகித்தவுட னே, மஹா தேஜஸ்வியாகிய ராவணன் அவற்றை ஆகா யத்திலேயே பாணங்களை விடுத்து வாரித்தனன். (தடுத் தனன்.) ராவணன் தனது ஹஸ்தலாகவத்தைக் காட் டிக்கொண்டு லக்ஷ்மணனது பாணங்களில் ஒரு பாணத்திற்கு ஒருபாணத்தையும் மூன்றுக்கு மூன்றை யும் பத்துக்குப் பத்தையும் தொடுத்து இங்ஙனம் அவன் பாணங்களெல்லாவற்றையும் பதில் பாணங்களை விடுத்துக் கண்டித்தனன். அனந்தரம், யுத்தங்களில் ஜயசீலனாகிய ராவணன், லக்ஷ்மணனுடைய பாணங்கள் ஒன்றும் தன்மேல் படாமையால் அவனைப் பொருள் செய்யாமல் கடந்து பர்வதம்போல் திடமாக நின்றிருக் கும் ராமனைக் கிட்டினன். ராவணன் அங்ஙனம் ராம னைக் கிட்டிக் கோபத்தினால் கண்கள் சிவக்கப்பெற்று ராமன் மேல் பாண வர்ஷத்தைப் பெய்தனன். அப்பால் ராமன் ராவணனுடைய தனுஸ்ஸினி ன்று ஜலதாரைகள்போல் இடைவீடின்றி வேகமாக பாணங்கள் வருவதைக் கண்டு, தான் வேகமாக பல்ல

ப்ராணங்களை எடுத்தனன். அப்பால், ராமன், ஜ்வலிக்கின்றவைகளும் கோபித்த ஸர்ப்பம் போன்றவைகளும் மஹா பயங்கரங்களுமான அந்த பாணஸமூஹங்களைக் கூரான பல்ல பாணங்களால் துண்டித்தனன். அப்பொழுது ராமன் ராவணன்மேலும், ராவணன் ராமன்மேலுமாக ஒருவர்க்கொருவர் பலவகைக் கூரான பாணங்களை வேகமாகப் பெய்தனர். எங்கும் தடைபடாத அவ்விருவரும், ஒருவர்க்கொருவர் பாண வேகங்களைத் தடுப்பவராகி வெகுநேரம் இடமும் வலமுமான மண்டல கதிகளில் திரிந்துகொண்டே யுத்தஞ் செய்தனர். அங்ஙனம் அவ்விருவரும், யமனும் அவனை அடிக்கும்படியான ருத்ரனும்போல், பயங்கரர்களாகி பாணங்களை ப்ரயோகித்துப் போராடிக் கொண்டிருப்பதைக் கண்டு, ஸமஸ்த பூதங்களும் ஒரே ஸமயத்தில் திகிலடைந்தன. வர்ஷாகாலத்தில் மின்னல் வரிசைகளோடுகூடின மேகங்கள் இடைவெளியின்றி நிரம்புவதுபோல் அப்பொழுது ஆகாயத்தில் நானுவித பாணங்கள் முழுவதும் நிரம்பியிருந்தன. ஆகாயத்தில் பாணங்கள் மழைபோல் நிறைந்து இடையிலஃடயில் வெளியாயிருக்கையால்சாளரங்கள் நிர்மிக்கப்பட்டாற்போலிருந்தன. ஸூர்யன் அஸ்தமித்த பின்பு, மஹாமேகம் கிளம்பி தாரை தாரையாகப் பெய்து மிகவும் இருள் மூடச் செய்வதுபோல், அவ்விருவரும், மிகுந்த வேகமுடையவைகளும் கூராயிருப்பவைகளும் கழுகின் இறகுகள் கட்டப்பெற்றிருக்கையால் நல்ல இறகுடையவைகளும் மிகுதியும் கூரான நுனியமைந்தவைகளுமான பாணங்களை இடைவெளியின்றிப்ரயோகித்து யுத்தபூமி முழுவதும் காடாந்தகாரம் நிறைந்து பயங்கரமாயிருக்கும்படி செய்தனர். அப்பொழுது அவ்விருவரும் ஒருவரையொருவர் வதிக்க விருப்பமுற்று

வ்ருத்ராஸுரனும் இந்த்ரனும்போல் பயங்கரமாக யுத்தஞ் செய்தனர். அந்த யுத்தம் எப்படிப்பட்டவர்க்கும் அணுகமுடியாததும் இப்படி அப்படியென்று சிந்திக்க முடியாததுமாயிருந்தது. அவ்விருவரும் நல்லவில்லாளிகள்; இருவரும் ஸமஸ்த ஆயுதங்களிலும் வல்லவர்; இருவரும் அஸ்த்ரங்களை அறிந்தவர்களில் மேலானவர். ஆகையால் இருவரும் யுத்தத்தில் ஸமானமாக விஹரித்தனர் (விளையாடினர்). அவ்விருவரும் எங்கெங்கு எந்தெந்த மண்டல கதிகளில் திரிவார்களோ, அந்தந்த இடங்களினின்று அந்தந்த கதிகளால், ஸமுத்ரத்தினின்று காற்று வேகத்தினால் அலைகள் கிளம்புவதுபோல் பாணபரம்பரைகள் புறப்பட்டுக்கொண்டிருந்தன. அனந்தரம் லோகராவணனான (உலகங்களை அழப்படுத்துந்தன்மையனான) ராவணன் பாணந்தொடுப்பதில் தவறாமல் கையை நிறுத்தி ராமனது நெற்றியில் நாராச பாணங்களின் வரிசையை விடுத்தனன். பயங்கரமான ராவண தனுஸ்ஸினின்று விடுபட்டுக் கருநெய்தலின் இதழ்நிறமுடைய அந்த பாணவரிசையை ராமன் நெற்றியில்தாங்கிச் சிறிதும் வருத்தமுறாதிருந்தனன். அப்பால் மஹா தேஜஸ்வியும் மிகுந்த வீர்யமுடையவனுமாகிய ராமன் ரௌத்ராஸ்த்ர மந்த்ரத்தை ஜபித்து அந்த அஸ்த்ரத்தினால் விளையக்கூடியபல பாணங்களை எடுத்துக்கோபத்துடன் தனுஸ்ஸை இழுத்து ராவணன்மேல் ப்ரயோகித்தனன். அந்தபாணங்கள் மஹாமேகம்போன்ற ராவணனுடைய அபேத்யமான (பிளக்கமுடியாத)கவசத்தில்பட்டு அந்தக் கவசத்தின் வலிமையால் அப்பொழுது அவனுக்குச் சிறிதும் வருத்தம் விளைக்கவில்லை. அனந்தரம் யுத்தத்தில் ஸமஸ்த அஸ்த்ரங்களிலும் ஸமர்த்தனாகிய ராமன் மீளவும் ரதத்திலிருக்கும் ராவணனுடைய நெற்றியில் பெரிய அஸ்த்ரமந்த்ரத்தினால் அபிமந்த்ரித்து

பாணங்களை ப்ரயோகித்தனன். அம்மஹாஸ்த்ரத்தினுல் தோன்றிய பாணங்க்ள் ராவணனுடைய பாணங்களைப் பிளந்து ராவணனுல் தடுக்கப்பட்டு, மிகுதியும் கோபித்துப் பெருமூச்செறிகின்ற ஐந்து தலை நாகங்கள் போல் பூமியை அடைந்தன. ராவணன் ராமன் ப்ரயோகித்த அந்த அஸ்த்ரத்தைத் தடுத்துக் கோபாவேசமுற்று மிகுதியும்பயங்கரமான ஆஸுராஸ்த்ரத்தை ப்ரயோகித்தனன். அந்த ஆஸுராஸ்த்ரத்தினின்று ஸிம்ஹம் புலி கங்கம் காகம் கழுகு பருந்து நரி செந்நாய் இவற்றின் முகம்போன்ற முகமுடையவைகளும் மற்றும் பலவகைப்பட்டவைகளும் வாயைத் திறந்துகொண்டு பயங்கரமான ஐந்துதலைப் பாம்புகள் போன்ற உருவமுடையவைகளுமான கூருள்ள பாணங்களும் மற்றும் பல பாணங்களும் புறப்பட்டன. மஹா தேஜஸ்வியும் மாயாவியுமான அந்த ராவணன் கோபித்து ஸர்ப்பம் போல் மூச்செறிந்துகொண்டு அந்தஆஸுராஸ்த்ரத்தின் மாஹாத்ம்யத்தினுல், கழுதை பன்றி நாய் கோழி மகரமீன் இவற்றின் முகமுடையவைகளும் ஸாதாரண ஸர்ப்பத்தின் முகமுடையவைகளுமான வேறு பாணங்களையும் மற்றும் சில கூரான பாணங்களையும் ராமன் மேல் ப்ரயோகித்தனன். அக்னிபோல் ப்ரகாசிக்கின்ற ராமன் அங்ஙனம் அந்த ஆஸுராஸ்த்ரத்தினுல் சூழப்பட்டு மிகுதியும் உத்ஸாஹம் மேலெழப்பெற்று ஆக்னேயாஸ்த்ரத்தை ப்ரயோகித்தனன். அந்த ஆக்னேயாஸ்த்ரத்தின் ப்ரபாவத்தினுல் நெருப்பெரிகின்ற முகமுடையவைகளும் ஸூர்யன் சந்த்ரன் அர்த்த சந்த்ரன் தூமகேது க்ரஹநக்ஷத்ரங்கள் ஆகிய இவற்றோடொத்த முகமுடையவைகளும் பெரிய குறைக்கொள்ளியோடு கூடின முகமுடையவைகளும் மின்னலின் ஜ்வாலை

போன்றவைகளுமான பாணங்களும் மற்றும் வேறுவகை யாயுள்ள கூரான பாணங்களும் புறப்பட்டன. ராவண னுடைய ஆஸுராஸ்த்ரத்தினுலுண்டானபயங்கரமான பாணங்கள் ராமனுடைய ஆக்னேயாஸ்த்ரம் பட்டவுட னே அடியுண்டு ஆகாயத்திலேயே ஆயிரஞ் சுக்கலாகி உருமாய்ந்தன. எப்படிப்பட்ட கார்யத்தையும் விரைவில் செய்பவனுன ராமன் அப்பொழுது அந்த ஆஸுராஸ் த்ரத்தைத் தடுப்பது கண்டு, உடனே காமரூபிகளான ஸுக்ரீவாதிகளும் மற்றுமுள்ள வானரவீரர்களனை வரும் ராமனைச் சுற்றிக்கொண்டு ஸந்தோஷத்தினுல் இரைச்சலிட்டனர். அப்பொழுது அம்மஹாயுத்தத்தில் ராமன் ராவணன் கையால் ப்ரயோகிக்கப்பட்ட அந்த ஆஸுராஸ்த்ரத்தைத் தடுத்து ஸந்தோஷம் அடைந் தனன். வானரஶ்ரேஷ்டர்களும் ஸந்தோஷம் அடைந் து உரக்கக் கூச்சலிட்டனர். நூறுவது ஸர்க்கம் முற்றிற்று.



{ ராவணன், லக்ஷ்மணன்மேல் சக்த்யாயுதம் ப்ரயோகித்தல். }

ராக்ஷஸ ராஜனுகிய ராவணன் அந்தஆஸுராஸ்த் ரம் வீணுனமை கண்டு, கோபம் இருமடங்கதிகமாகப் பெற்றுமற்றெரு அஸ்த்ரத்தைப்ரயோகித்தனன். மஹா தேஜஸ்வியாகிய ராவணன், மயனுல் நிர்மிக்கப்பட்டதும் ருத்ரனைதேவதையாகவுடையதும் பயங்கரமுமாகிய மற் றெரு அஸ்த்ரத்தை ராமன்மேல் ப்ரயோகிக்கத் தொ டங்கினன். அனந்தரம் அவனுடைய தனுஸ்ஸினின்று ஜ்வலிக்கின்றவைகளும் வஜ்ராயுதம் போன்ற வலிமை யுடையவைகளுமான சூலங்களும் கதைகளும் முஸலங் களும்புறப்பட்டன. ப்ரளயகாலத்தில்பெருங்காற்றுக்கள் வீசுவதுபோல், கூரான பலவகை இரும்புத்தடிகளும்

கபடபாசங்களும் ஜ்வலிக்கின்ற வஜ்ராயுதங்களும் பயங்கரமாகிப் பெருவேகத்துடன் புறப்பட்டன. செல்வப்பெருக்கனும் பெருங்காந்தியுடையவனும் திவ்யாஸ்த்ரங்களை அறிந்தவர்களனைவரிலும் மேன்மையுற்றவனுமாகிய ராமன் பெருமை பொருந்தின காந்தர்வாஸ்த்ரத்தினால் அந்த ரௌத்ராஸ்த்ரத்தை அடித்தனன். மஹானுபாவனாகிய ராமன் அந்த ரௌத்ராஸ்த்ரத்தை ஹதஞ்செய்கையில், ராவணன் கோபத்தினால் கண்கள் சிவக்கப்பெற்று ஸௌராஸ்த்ரத்தை ப்ரயோகித்தனன். அனந்தரம் பயங்கரமான வேகமுடையவனும் புத்தியிற் சிறந்தவனுமாகிய ராவணனுடைய தனுஸ்ஸினின்று தகதகவென்று விளங்குகின்ற பெருப்பெரிய சக்ராயுதங்கள் வெளிப்பட்டன. ஜ்வலிக்கின்றவைகளும் சந்த்ரஸூர்யக்ரஹங்களோடொத்த உருவமுடையவைகளுமான அந்தபாணங்கள் இங்குமங்கும் வ்யாபித்துக்கொண்டிருக்கையில், சந்த்ரஸூர்யர்களும் மற்ற க்ரஹங்களும் கீழ்விழும் ஸமயத்திற்போல், அவற்றின் தேஜஸ்ஸினால் ஆகாயமும் திசைகளும் ப்ரகாசித்தன. அந்த ராமன் ஸேனாமுகத்தில் நின்று அந்த ராவணன் ப்ரயோகித்த அந்தச் சக்ராயுதங்களையும் சித்ரமான மற்ற ஆயுதங்களையும் பாணஸமூஹங்களை விடுத்துக் கண்டித்தனன். ராக்ஷஸேஸ்வரனான ராவணன் அந்த ஸௌராஸ்த்ரமும் பயன்படாதுபோனமை கண்டு, ராமனுடைய மர்மஸ்தானங்களெல்லாவற்றிலும் பத்து பாணங்களை விடுத்து ஹிம்ஸித்தனன். ராவணன் தன்னுடைய மஹா தனுஸ்ஸினின்றுப்ரயோகித்தபாணங்கள் பொற்றுக்கொள்ளினும் ராமன் மஹாதேஜஸ்வியாகையால் சிறிதும் சலிக்கவில்லை. அனந்தரம் யுத்தங்களில் ஜயம் பெறுகின்ற ராமன் மிகுதியும் கோபமுற்று ராவணனுடைய அவயவங்களெல்லாவற்றிலும் பல பாணங்களை ப்ரயோகித்து

ஹிம்ஸித்தனன். இதற்குள் ராமனுக்குத் தம்பியும் சத்ருவீரர்களை உருமாய்ப்பவனும் பலிஷ்டனுமாகிய லக்ஷ்மணன் ஏழு பாணங்களை எடுத்துக்கொண்டனன். மஹாதேஜஸ்வியான லக்ஷ்மணன் மஹாவேகமுடைய அந்த பாணங்களால் மனுஷ்யன் தலையுடைய ராவண னது த்வஜத்தைப் பல துணுக்கைகளாகத் துண்டித் தனன. மிகுந்த காந்தியும் மஹாபலமும் உடைய லக்ஷ் மணன், அப்பால் ஒரு பாணத்தினுல் குண்டலங்களால் அலங்கரிக்கப்பட்ட ராவணனது ஸாரதியின் சிரஸ்ஸை அறுத்தனன். லக்ஷ்மணன் கூருள்ள ஐந்து பாணங்க ளால் ராக்ஷஸேந்த்ரனுகிய ராவணனுடைய யானையின் துதிக்கை போன்ற மஹாதனுஸ்ஸையும் துணுக்கை களாகச் செய்தனன். இங்ஙனம் வில்முறிந்து ராவணன் வெறுமனே யிருக்கும் ஸமயத்தில் விபீஷணன் கிளம்பி வந்து நீலமேகம் (கார்மேகம்) போன்று பர்வதத்தோ டொத்த உருவமுடையவையான ராவணனது உத்தம அஶ்வங்களை கதையால் அடித்துக் கொன்றனன். மஹா வேகமுடைய ராவணன், குதிரைகள் மாண்டு போகை யில் தனது மஹா ரதத்தினின்று பூமியில் குதித்துத் தம்பியாகிய விபீஷணன்மேல் பெருங்கோபமுற்றவனுயி னன். அப்பால் மஹா சக்தியுடையவனும் ப்ரதாபசாலி யுமான ராவணன் ஜ்வலிப்பதும் வஜ்ரம்போல் விளங்கு வதுமான சக்தியை விபீஷணன்மேல் ப்ரயோகித்த னன். லக்ஷ்மணன் அந்த சக்தி விபீஷணன்மேல் வரு வதற்கு முன்னமே அதைமூன்று பாணங்களால் சேதித் தனன். அப்பொழுது யுத்தத்தில் வானரர்கள் உரக்க இரைச்சலிட்டனர். பொன் சங்கிலிகளால் அலங்கரிக்கப் பட்ட அந்த சக்தி மூன்று துண்டங்களாக ஒடிந்து நெருப்புப் பொறிகள் பறக்கப்பெற்று ஜ்வலித்துக் கொண்டு ஆகாயத்தினின்று பெரிய குறைக்கொள்ளி

போல், பூமியில் வீழ்ந்தது. அனந்தரம் அந்த ராவணன் சந்தனுதிகளால் மிகுதியும் பூஜிக்கப்பெற்றதும் யமனுக்குங்கூட அணுகமுடியாததும் தேஜஸ்ஸினுல் ஜ்வலிப்பதுமான மஹா சக்தியை எடுத்தனன். எப்படிப்பட்டவர்க்கும் அணுகமுடியாததாகி தேவேந்த்ரனுடைய வஜ்ராயுதம்போல் ப்ரகாசிப்பதுமான அம்மஹாசக்தி, பலிஷ்டனுகிய ராவணனுல் பலமுள்ளவளவும் சுழற்றப்பெற்று ஜ்வலித்துக்கொண்டு மிகுதியும் பயங்கரமாகப் புலப்பட்டது. இதற்குள் வீரனுகிய லக்ஷ்மணன், விபீஷணன் அங்ஙனம் ப்ராணஸந்தேஹம் அடைந்திருப்பது கண்டு, சீக்ரமாகப் போய் அவனுக்கு குறுக்கே நின்றனன். வீரனுகிய லக்ஷ்மணன் அவ் விபீஷணனைத் தப்புவிக்கும் பொருட்டு தனுஸ்ஸை இழுத்து சக்தியைக் கையில் தரித்திருக்கின்ற ராவணன்மேல் பாணவர்ஷங்களைப் பெய்தனன். மஹானுபாவனுகிய லக்ஷ்மணன் ராவணன்மேல் பாணஸமூஹங்களை விடுத்துக்கொண்டிருக்கையில், அவன் விபீஷணன்மேல் ப்ராக்ரமத்தைக் காட்ட இடங்கொடாமையால் அவ்விபீஷணனை அடிக்கும் நினைவு மாறப்பெற்றனன். அந்த ராவணன் தன் தம்பியை லக்ஷ்மணன் தப்புவித்ததைக் கண்டு, லக்ஷ்மணனை எதிர்த்து நின்று அவனைப் பார்த்து 'லக்ஷ்மணு! நீ பலத்தினுல் கர்வித்து, வெறுமனேயிராமல் இங்ஙனம் விபீஷணனைத் தப்புவித்தனையாகையால் இனி அந்த ராக்ஷஸனை விட்டு இந்தச் சக்தியை உன்மேல் ப்ரயோகிக்கிறேன். இது வரையில் எத்தனையோ பேர்களைக் கொன்று ரக்தங்கள் அடையாள மாகப்பெற்ற இந்தச் சக்தி இரும்புத்தடி போன்ற என் பாஹுவினின்று விடுபட்டு உன் ஹ்ருதயத்தைப் பிளந்து ரக்தத்தில் நனைந்து உன் ப்ராணன்களைப் பறிக்கப்போகின்றது' என்றனன். ராவணன் இங்

னைஞ் சொல்லி மிகுதியும் கோபமுற்று எட்டு மணிக ளோடு கூடிப் பெருங் கோஷத்துடன் ஒலிக்கின்ற அந்த மஹா சக்தியை லக்ஷ்மணன்மேல் ப்ரயோகித்து இரைச் சலிட்டனன். அந்தச் சக்தி மயனுடைய மாயையால் நிர்மிக்கப்பட்டது. அது எப்படிப்பட்ட சத்ருக்களின் மேல் ப்ரயோகிக்கினும் வீணாகாமல் அவர்களை உரு மாய்ப்பதாகி ஒளியுடன் ஜ்வலிப்பதுபோல் புலப்பட்டுக் கொண்டிருக்கும். அங்ஙனம் ராவணன் பயங்கரமான வேகத்துடன் அதை ப்ரயோகிக்கையில், அது இந்த்ர னுடைய வஜ்ராயுதம்போல் உரக்க ஒலித்துக்கொண்டு யுத்தத்தின் முனையில் லக்ஷ்மணன் மேல் எதிர்த்து வந்தது. ராமன் அதைப் பார்த்து 'லக்ஷ்மணனுக்கு க்ஷேமம் உண்டாகுக' என்று தம்பிக்கு மங்களாஶாஸ னஞ்செய்து, உடனே அந்தச் சக்தியைக் குறித்து 'நீ அடிக்க முயன்ற முயற்சி நிறைவேறாமல் பயனற்றதாவா யாக' என்று மொழிந்தனன். ராவணன் யுத்தத்தில் கோபித்து சர்ப்பம்போன்ற அந்தச் சக்தியை விடுகை யில், அது ஒருகொடிப்பொழுதில் எப்படிப்பட்டவரையும் பஸ்மஞ் செய்ய வல்லதாயினும், அதன் வலிவை ராமன் வீண் செய்கையால், சூரனாகி எள்ளளவும் பயப்படாமல் நிற்கின்ற லக்ஷ்மணனுடைய மார்பில் வெறுமனே வந்து விழுந்தது. மிகுந்த வேகமுடையதும் பேரொளியுடன் ப்ரகாசிப்பதுமான அந்தச் சக்தி, ஸர்ப்பராஜனாகிய ஆதிசேஷனுடைய நாக்குப்போல் பயங்கரமாகி ஜ்வலித் துக்கொண்டு லக்ஷ்மணனுடைய அகன்ற மார்பில் விழுந் தது. அனந்தரம் லக்ஷ்மணன், ராவணனுடைய கை வேகத்தினால் அந்தச் சக்திமிகுதியும் ஆழமாகப்பாய்ந்து மார்பு பிளக்கப்பெற்று பூமியில் வீழ்ந்தனன். அப் பொழுது மஹாதேஜஸ்வியாகிய ராமன் அருகிலிருந்தா னாகையால் லக்ஷ்மணன் அந்த ஸ்திதி அடைந்தமை கண்டு, தம்பியிடத்திலுள்ள ஸ்னேஹத்தினால் மனத்

தில் வருத்தமுற்றனன். அவன் கண்களில் நீர் தளும்பப் பெற்றுச் சிறிதுநேரம் 'என் செய்யலாம்' என்று ஆலோசித்து, உடனே ப்ரளயகாலாக்னிபோல் மிகுந்த வேகத்துடன் பராக்ரமத்தை நிறைவேற்றத்தொடங்கினன். ராமன், இது துக்கத்திற்கு ஸமயமன்றென்று நினைத்து ஸீதையைப் பறித்துக்கொண்டு போனதைப் பற்றியேயன்றி லக்ஷ்மணன் அங்ஙனமிருக்கக் கண்டது பற்றியும் எல்லாவிதத்திலும் மிகுதியும் ப்ரயத்னப்பட்டு ராவணனைவதிப்பதிலேயே கண்வைத்து அவனோடு பயங்கரமாக யுத்தஞ்செய்யத் தொடங்கினன். அப்பால் ராமன் மஹா யுத்தத்தில் சக்தியால் பிளக்கப்பட்டு ரக்தத்தில் நனைந்து லக்ஷ்மணன் ஸர்ப்பத்தோடுகூடின பர்வதம் போலிருக்கக் கண்டனன். உடனே ராவணனைக் கொல்ல நிச்சயித்தனன். அங்குள்ள வானரஶ்ரேஷ்டர்கள் பலிஷ்டனான ராவணன் ப்ரயோகித்த அந்தச் சக்தியை, அது உறுதியாயிருக்கையால் தாம் எவ்வளவு ப்ரயத்னஞ்செய்தும் முறிக்கவல்லராகாமற்போனமை மாத்ரமேயன்றி, ராவணன் ஹஸ்தலாகவ முடையவனாகி மிக வேகத்துடன் பாணஜாலங்களை விடுத்து ஹிம்ஸிக்கையாலும் அந்தச் சக்தியைச் சிறிதும் முறிக்கவல்லராகவில்லை. மற்றும், அந்தச் சக்தி லக்ஷ்மணனைப் பிளந்து பூமியை அடைந்தது. ஆனது பற்றியும் அவர் அதைப் பெயர்த்தெடுத்து. முறிக்க வல்லமையற்றிருந்தனர். பலிஷ்டனாகிய ராமன் யுத்தத்தில் கோபித்தவனாகி பயங்கரமான அம்மஹாசக்தியை இரண்டு கைகளாலும் பிடித்து இழுத்து முறித்துப் பொகட்டனன். ராமன் அந்தச் சக்தியைப்பிடித்து இழுத்துக்கொண்டிருக்கையில், மஹாபலமுடைய ராவணன் அவனுடைய ஸமஸ்த அவயவங்களிலும் மர்மங்களைப் பிளக்கும்படியான கூருள்ளபாணங்களை ப்ரயோகித்தனன். ராமன்அந்தபாணங்

களைப் பொருள் செய்யாது லக்ஷ்மணனை அணைத்துக் கொண்டு ஹநுமானையும் ஸுக்ரீவனையும் மற்றுமுள்ள வானர வீரர்களையும் பார்த்து 'வானரோத்தமர்களே! இங்கு நீங்கள் லக்ஷ்மணனைச் சுற்றிலும் சூழ்ந்து காத்துக்கொண் டிருப்பீர்களாக. வெகுநாளாக ஆசைப் பட்டுக்கொண்டிருந்த சாதகப் பறவைக்கு வர்ஷாகாலம் வர மேகம் அகப்படுவதுபோல், வெகுகாலமாக விருப் புற்றிருந்த எனக்குப் பராக்ரமத்தை உபயோகப்படுத் தும்படியான காலம் இதோ லபித்தது. ஆகையால் பாபஸ்வபாவனும் பாபநிச்சயனுமாகிய ராவணனை இப் பொழுது தவறாமல் வதிக்கவேண்டும். வானரர்களே! உங்களெதிரில் ஸத்யமாக ப்ரதிஜ்ஞை செய்கின்றேன். இம்முஹூர்த்தத்திலேயே, அவ்வளவு காலமா! மிகுதி யும் த்வரையிலேயே நீங்கள் உலகத்தில் ராவணனாவது ராமனாவது இல்லாதிருக்கக் காண்பீர்கள். ராஜ்யங் கைசோருதல், வனத்தில் வாஸஞ்செய்தல், தண்டகா ரண்யத்தில் திரிதல், ஸீதை பிறரால் ஸ்பர்சிக்கப்படு தல், அவள் ராக்ஷஸர் கையில் அகப்படுதல், நான் பம் பையின் கரையிலுள்ள உபவனம் முதலிய இடங்களில் பெருந்துக்கம் உண்டாகப்பெறுதல், இந்த லக்ஷ்மணன் விஷயத்தில் நரகம்போல் கோரமான வருத்தம் உண் டாயிருத்தல் ஆகிய இவற்றை யெல்லாம் இப்பொழுது யுத்தத்தில் ராவணனைக் கொன்று போக்கடித்துக் கொள்ளுகிறேன். எவனுக்காக நான் யுத்தத்தில் வாலி யைக்கொன்று ஸுக்ரீவனை வானர ராஜனாகச் செய்து இவ்வானர ஸேனையை இவ்விடம் அழைத்துக்கொண்டு வந்தேனோ, மற்றும் எவனுக்காக ஸமுத்ரத்தில் ஸேது வைக் கட்டி அதைத் தாண்டி இவ்விடம் வந்தேனோ. அப்படிப்பட்ட பாபிஷ்டனாகிய ராவணன் இப்பொழுது என் கண்களில் பட்டனன். கண்களில் விஷமுடைய

ஸர்ப்பத்தின் கண்பட்டவன் ஜீவிக்கமுடியாததுபோல், என் கண்களில் பட்ட பின்பு இவன் பிழைத்துப்போக வல்லனல்லன். பரிபவிக்க முடியாத வானரஸ்ரேஷ்டர்களே! நீங்கள் பர்வதத்தின் நுனியில் உட்கார்ந்திருந்து ஸுகமாக எனக்கும் ராவணனுக்கும் இதோ நடக்கப்போகிற யுத்தத்தைக் காண்பீர்களாக. தேவதைகளும் ரிஷிகளும் கந்தர்வர்களும் சாரணர்களும் மற்றும் மூன்று லோகங்களிலுள்ளவர்களும் இப்பொழுது யுத்தத்தில் ராமனுடைய ராமத்தனத்தையும் ஜகதேகவீரனுயிருத்தலையும் காண்பார்களாக. உலகத்திலுள்ள ஸமஸ்த ஜங்கமஸ்தாவரங்களும் தேவதைகளும் குவியலாகச் சேர்ந்து இப்பொழுது யுத்தம் நடந்த விதத்தை, பூமி உள்ள வரையிலும் என்றும் உலகத்தில் சொல்லிக்கொண்டிருக்குமாறு செய்யக்கூடிய பராக்ரம கார்யத்தை இதோ செய்கின்றேன்' என்றனன். இங்ஙனம் மொழிந்து ராமன், யுத்தத்தில் மனவூக்கம் மிகப்பெற்று மேலான பொன்னால் விளங்கும் கூரான பாணங்களைப் பெய்து ராவணனை ஹிம்ஸித்தனன். அனந்தரம் மேகங்கள் ஜலதாரைகளைப் பெய்வதுபோல் ராவணன் ராமன்மேல், தகதகவென்று ஜ்வலிக்கின்ற பாணங்களையும் முஸலங்களையும் மற்றும் பல ஆயுதங்களையும் ஓயாமற் பெய்தனன்; ராமனும் ராவணனும் ஒருவர்மேல் ஒருவர் ப்ரயோகிக்கும் பாணங்கள் ஒன்றோடொன்று அடித்துக்கொள்கையில், விளைந்த த்வனியானது இன்னது இனியதென்றில்லாமல் பெருங்கோஷமாகக் கிளம்பிற்று. தகதகவென்று ஜ்வலிக்கின்ற நுனியுடைய அந்த ராமராவணர்களின் பாணங்கள் ஒன்றுலொன்று முறிக்கப் பட்டுச் சிதறி, ஆகாயத்தினின்று பூமியில் வீழ்ந்தன. ராமராவணர்களிருவருடையவும் உள்ளங்கையில் நாண் உறைவதாலுண்டாகும் த்வனி ஸமஸ்த பூதங்களுக்கும் மிகுதியும் திகலை விளைவிப்பதாகி ஆச்சர்ய

மென்னும்படி கிளம்பிற்று: தகதகவென்று ஜ்வலிக்கின்ற பெரியதனுஸ்ஸை ஏந்தின மஹாநுபாவனாகிய ராமன் பாணஜாலங்களை மழை மழையாக ராவணன்மேல் ஓயாமல் பெய்து நிரப்புகையில், ராவணன் அங்ஙனம் அடியுண்டு மிகுதியும் பீடிக்கப்பட்டு வாயுவினால் அடிக்கப்பட்ட மேகம்போல் பயந்தோடினன். நூற்றொன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராமன் லக்ஷ்மணனைக் குறித்துப் புலம்புதலும், ஸுஷேணனுடைய கட்டளையின்படி ஹநுமான் கொண்டுவந்த திவ்ய ஒஷதியை ஸுஷேணன் லக்ஷ்மணன் மூக்கில் பிழிய அவன் நோயற்று எழுந்திருத்தலும்.

சூரனாகிய லக்ஷ்மணன பலிஷ்டனாகிய யுத்தத்தில் ராவணனது சக்தியினால் அடியுண்டு ரக்த ப்ரவாஹத்தில் மிதந்து வருந்துவதைக் கண்டு ராமன் துர்ப்புத்தியாகிய அந்த ராவணனுக்கு பயங்கரமான யுத்தத்தைக் கொடுத்து பாணங்களை விட்டுக் கொண்டே ஸுஷேணனைப் பார்த்து 'வீரனாகிய இந்த லக்ஷ்மணன் ராவணனுடைய வீர்யத்தினால் அடிக்கப்பட்டு பூமியில் விழுந்து ஸர்ப்பம்போல் புரளுகின்றனன். எனக்கு மிகுதியும் வருத்தமா யிருக்கின்றது. இவன் எனக்கு ப்ராணன்களைக் காட்டிலும் ப்ரியமானவன். இப்படிப்பட்டவன் ரக்தத்தில் நனைந்திருப்பதைக் கண்டவுடனே என் மனம் வ்யாகூலப்படுகின்றது. எனக்கு இனி யுத்தஞ் செய்யச் சக்தி எப்படி உண்டாகும்? யுத்தங்களில் செருக்குற்றுச் சுபலக்ஷணங்கள் அமைந்த என் தம்பியாகிய இவன் மரணம் அடைவானாயின் இனி எனக்கு ப்ராணன்கள் ஏதுக்கு? ஸுகந்தான் ஏதுக்கு? துர்ப்

புத்தியான ராவணனால் என் தம்பி அடியுண்டதைக்காண வே, என்னெதிரிலேயே என் தம்பி இப்படியாகையால் என்பராக்ரமம் வெட்கமுற்றாற்போல் பின்வாங்குகின்றது. தனுஸ்ஸு கையில் நிற்காமல் நழுவுகிறாப்போலிருக்கின்றது. பாணங்கள் கைசோருகின்றன. கண் நீர் தளும்பப்பெற்றிருக்கையால் ஒன்றும் புலப்படவில்லை. ஸ்வப்னங்களில் நடக்கும்பொழுது மனிதர்களுக்குக் கால்பின்னுக்கிழுப்பதுபோல்; எனக்கு அவயவங்கள் விலவிலத்து ஒன்றுஞ் செய்யக்கூடாதிருக்கின்றன. சிந்தை மிக வெப்பத்துடன் வளர்ந்து வருகின்றது. ப்ராணன்களின் மேல் ஆசையும் போயிற்று' என்றனன். ராமன், வெளியில் திரியும் ப்ராணன்போன்ற தனது அருமைத்தம்பியாகிய லக்ஷ்மணன் மர்மத்தில் நன்றாக அடியுண்டு அவ்வேதனையால் வருந்தி நெடுமூச்செறிந்துகொண்டிருப்பதைக் கண்டு, மிகுதியும் வருத்தம் மேலெழப்பெற்றுச் சோகத்தில் மூழ்கி ஒன்றுந் தோற்றாதிருந்தனன். அந்த ராமன் அங்ஙனம் மிக வருத்தமுற்று இந்த்ரியங்கள் கலங்கிப் புலம்பத் தொடங்கி 'என் தம்பியாகிய லக்ஷ்மணன் இங்ஙனம் அடியுண்டு தூள்களில் புரளுவதைக்காண்கின்றேனே! இனி எனக்கு யுத்தத்தினாலாவது ப்ராணன்களாலாவது ஸீதையினாலாவது ப்ரயோஜனமொன்றும் இல்லையல்லவா? லக்ஷ்மணன யுத்தத்தின் முனையில் அடியுண்டு இப்படி விழுந்திருக்கும்பொழுது எனக்கு ராஜ்யத்தினால் ப்ரயோஜனமென்? ப்ராணன்கள் எதுக்கு? யுத்தஞ்செய்து ஆகவேண்டிய கார்யம் ஒன்றுமில்லை. தேசங்கள்தோறும் வேண்டிய பார்யைகள் அகப்படுவார்கள். வேண்டிய பந்துக்களும் அகப்படுவார்கள். கூடப்பிறந்தவனான தம்பி அகப்படும்படியான தேசம் மாத்ரம் எங்கும் புலப்படவில்லை' என்று புலம்பினன். இங்ஙனம் புலம்பிக்கொண்டு சோகத்தினால் இந்த்ரியங்கள் கலங்கப்பெற்று மன இரக்

கம் உண்டாகும்படி பூமியில் புரண்டு அடிக்கடி பெரு மூச்சு விடுகின்ற ராமனை வீரனுகிய ஸுஷேணன் உரிய வசனங்களால் ஆஸ்வாஸப் படுத்த முயன்று 'மஹா பாஹு! லக்ஷ்மியை வளரச் செய்யுந் தன்மையுள்ள இந்த லக்ஷ்மணன் மரணமடைந்தவ னல்லன். ஏனென் னில், இவனது முகம் விகாரமும் அடையவில்லை. நிற மும் மாறவில்லை; காந்தியும் குறைய வில்லை. இவனு டைய முகம் நல்ல காந்தியுடையதும் தெளிவுற்றதுமா கவே புலப்படுகின்றது. உள்ளங்கைகள் செந்தாமரை போல சிவந்திருக்கின்றன. கண்கள் மிகுதியும் தெளிந் திருக்கின்றன. ராஜனே! ப்ராணன்களை இழந்தவர்க்கு உருவம் இங்ஙனம் இராது. தீர்க்காயுஷ்யமுடைய மனிதர்களுக்கே முகம் இங்ஙனம் இருக்கும. வீரனே! செல்வப்பெருக்குடைய இந்த லக்ஷ்மணன் மரணம் அடையவில்லை. பகைவரை அடக்குந் தீரனுகிய இவன் ப்ராணன்களோடேயே இருக்கின்றனன். ஆகையால் துக்கிக்கவேண்டாம். இவன் மூர்ச்சித்து அவயவங்கள் கீழ் நழுவியிருப்பினும் ஹ்ருதயம் அடிக்கடி அடித்துக் கொண்டிருக்கையால் பிழைத்திருக்கிறுனென்று தெரி கின்றது' என்றனன். பேசவல்லவனுகிய ஸுஷேணன் ராமனுக்கு இங்ஙனம் மொழிந்து, உடனே உறுதியான ஹனுக்களை (கன்னத்தின் மேல் ப்ரதேசங்களை) உடைய ஹனுமானைக்கண்டு, த்வரைப் படுத்திக் கொண்டு 'ஸௌம்யனே! வீரா! நீ இங்கிருந்து சீக்ரமாக, முன்பு உனக்கு ஜாம்பவான் சொன்ன அழகர்ன ஓஷதி பர்வ தத்திற்குப் போய் அதன் தெற்குச் சிகரத்தில் முளைத் திருப்பதும் மங்களத்தைக் கொடுப்பதும் சல்யங்களைப் போக்குவதுமான விசல்யகரணி யென்னும் திவ்ய ஓஷ தியையும், மற்றும் ஸாவர்ண்யகரணி ஸஞ்ஜீவனி ஸந்

தானகரணி என்கிற திவ்ய ஓஷதிகளையும், வீரனும் மஹானுபாவனுமான லக்ஷ்மணனைப் பிழைப்பிக்கும் பொருட்டுச் சீக்ரத்தில் கொண்டுவருவாய்' என்றனன். இப்படி ஸுஷேணன் மொழியக் கேட்டு ஸ்ரீமானுகிய ஹனுமான் அந்த ஓஷதி பர்வதத்திற்குப் போய், [1] அவ்வோஷதியின் ஸ்வரூபந் தெரியாமையால் சிந்தை யுற்றனன். மஹாதேஜஸ்வியாகிய அந்த ஹனுமான் 'இந்தப் பர்வதத்தில் இச்சிகரத்தையே எடுத்துக் கொண்டு போகிறேன். ஏனென்னில், லக்ஷ்மணனுக்கு ஸுகத்தைக் கொடுக்கும்படியான அந்த ஓஷதி, எனக் குண்டாயிருக்கும் மனத்தெளிவு முதலியவற்றைப் பற்றி அனுமானிக்கையில் இந்தச் சிகரத்திலேயே உண் டாயிருக்க வேண்டுமென்று எனக்குத் தோற்றுகின்றது. மற்றும், ஸுஷேணனும் தென்சிகரத்திலுண்டானஓஷ தியைக்கொண்டுவருவாயென்றுரைகையால்அவன்சொன் னதும் இப்படியே. ஆகையால் இந்தச் சிகரமே அதுவா யிருக்கவேண்டும். எனக்கு விசல்யகரணி எதுவோதெரி யவில்லையென்று அதை எடுத்துக்கொள்ளாமலே மீள வும்ஸுஷேணனைக் கேட்கப்போவேனுயின் அதற்குள்

1 முன்பு இந்த்ரஜித்தோடு யுத்தம் நடந்தபொழுது பாணங்க ளால் பீடிக்கப்பட்ட லக்ஷ்மணுதிகளுக்குச் சிகித்ஸை செய்யும்பொழுது ஸுஷேணன் அந்த ஓஷதியை எடுத்து வைத்திருக்கக்கூடும். அப் படி இருக்க, மீளவும் இப்பொழுது அந்தப் பர்வதத்திற்கு ஹனுமானை அனுப்பினனென்பது பொருந்தவில்லை. லக்ஷ்மணுதிகளின் சிகித்ஸை யில் ஓஷதிகளெல்லாம் செலவழிந்தனவென்று பரிஹாரஞ் சொல்லக் கூடுமாயினும், மறப்புநேரக்கூடாத ஹனுமான் தானே சிறிது காலத் திற்கு முன்பு ஸ்தாபித்து வந்த பர்வதத்தைத்தெரிந்துகொள்ள முடியா மல் மனத்தெளிவு முதலிய அடையாளங்களால் அனுமானித்துத்தெரி ந்துகொள்ளுதலும் மூன்றுதரம் அசக்கிப் பெயர்த்ததும் விருத்தமாகத் தோற்றுகிறதாகையால் இதற்குப் பரிஹாரம் பெரியோர்கள் கண்டு ணர்க.

காலம் விஞ்சிப் போமாகையால் லக்ஷ்மணனுக்கு ப்ராண ஹானியை விளைக்கும்படியான தோஷம் நேரிடும். என க்குச் சிறிதும் பௌருஷமில்லையென்பார்கள்' என்று ஆலோசித்தனன். மிகுதியும் பலிஷ்டனாகிய அந்தவானர ஸிம்ஹன் இங்ஙனம் ஆலோசித்துச் சீக்ரமாகப்போய் அம்மேலான பர்வதத்தைச் சேர்ந்து அதன் சிகரத் தை மூன்றுதரம் அசக்கிப் புஷ்பித்த நானாவகை வ்ரு க்ஷங்களோடு கூட அந்தப் பர்வதத்தைப் பேர்த்துக் கைகளால் மேலுக்குத் தூக்கிக்கொண்டனன். அவன் நீர்நிறைந்த காளமேகம் போல் அந்தப் பர்வத சிகரத் தை எடுத்துக்கொண்டு ஆகாய வழியாய் வந்தனன். அவன் அங்ஙனம் மஹாவேகத்துடன் ராமாதிகளிடம் வந்து அங்கு ஸேனையின் இடையில் பர்வதசிகரத்தை வைத்துச் சிறிது இளைப்பாறி ஸு்ஷேணனைப் பார்த்து 'வானர ஶ்ரேஷ்டனே! நீ சொன்ன மூலிகை எனக்கு அடையாளந் தெரியவில்லை. ஆகையால் அந்த ஓஷதி பர்வதத்திலுள்ள தென்கொடுமுடி முழுவதையுங் கொண்டுவந்தேன்' என்றனன். இங்ஙனஞ் சொல்லு கின்ற அந்த வாயுகுமாரனான ஹனுமானைக் கொண் டாடி வானரஶ்ரேஷ்டனாகிய ஸு்ஷேணன் அம்மஹௌ ஷதியைப் பிடுங்கி எடுத்துக்கொண்டனன். யுத்தபூமி யிலுள்ள வானரர்களும் ராக்ஷஸர்களும், தேவதை களுக்குங்கூட எவ்விதத்திலுஞ் செய்யமுடியாத ஹனு மானுடைய கார்யத்தைக் கண்டு, எல்லோரும் ஆச்சர் யம் அடைந்தனர். அனந்தரம் வானரோத்தமனான ஸு் ஷேணன் அந்த ஓஷதியைக் கசக்கி மிகுந்த தேஜஸ் வியாகிய லக்ஷ்மணனுடைய மூக்கில் பிழிந்தனன். சத்ரு வீரர்களை உருமாய்க்கவல்லவனும் சல்யம் பொற்றுக் கொண்டிருப்பவனுமாகிய அந்த லக்ஷ்மணன் அந்த மூலிகையை மோந்து, உடனே சல்யங்கள் தொலை

யப்பெற்றுச் சிறிதும் நோயின்றிச் சீக்ரமாகப்பூமி யினின்று எழுந்தனன். பூமியினின்று எழுந்த அந்த லக்ஷ்மணனைப் பார்த்து, அவ்வானரர்கள் ஸுஷே ணனை 'நல்லது நல்லது' என்று கொண்டாடினர். சத் ருவீரர்களை முடிக்கும்படியான ராமன் லக்ஷ்மணனை 'வாவா' என்றழைத்துக் கண்களில் நிரம்ப நீர்பெரு கப்பெற்று மிகுந்த ஸ்னேஹத்தினால் அழுந்தக் கட்டிக் கொண்டனன். அப்பொழுது ராமன் லக்ஷ்மணனை அணைத்துக்கொண்டு 'வீரனே! லக்ஷ்மணா! நீ மரணம் அடைந்தும் என் பாக்யவசத்தினால் பிழைத்திருக்கக் கண்டனன். நீ மரணம் அடைவாயாயின், எனக்கு ப்ராணன்களாலும் ப்ரயோஜனம் இல்லை. ஸீதையும் அவஶ்யமில்லை. இனியுத்தத்தில் ஜயம் பெறவேண்டிய நசை என்னிருக்கின்றது?'' என்றனன். மஹானுபாவனா கிய அந்த ராமன் இங்ஙனஞ் சொல்லிக்கொண்டிருக்கை யில், லக்ஷ்மணன் வருந்தி வார்த்தைகள் தழதழக்கப் பெற்று அவனைப் பார்த்து 'ராமா! உன் பராக்ரமம் எப்பொழுதும் பொய்யாகாது. அப்படிப்பட்ட நீ, முன்பு ராவணனைக் கொன்று விபீஷணனுக்கு லங்கையை கொடுக்கிறேனென்று அந்த ப்ரதிஜ்ஞையைச் செய்து இப்பொழுது பலமில்லாத ஓரல்பன்போல், நீ இங்ஙனஞ் சொல்லத் தகாது. அனக! ஸத்புருஷர்கள் தாம்செய்த ப்ரதிஜ்ஞையை வீண் செய்யமாட்டார்களல்லவா? செய் தப்ரதிஜ்ஞையைத் தவறாமல் நிறைவேற்றுகையே அல் லவோ பெருந்தன்மைக்கு அடையாளம். தோஷமற்ற வனே! என் நிமித்தமாக நீ ஸீதாதேவியிடத்திலும் வெற்றியிலும் உபேக்ஷை செய்வது போதும். இனி ராவணனைக் கொன்று உன் ப்ரதிஜ்ஞையைநிறைவேற்று வாயாக. கூரான கோரைப்பற்கள் அமைந்து கர்ஜிக்

கின்ற ஸிம்ஹத்தின் வசம் அகப்பட்ட மஹாகஜம்போல், உன் பாணத்தின் வசம் அகப்பட்டபகைவன் எள்ளளவும் பிழைத்துப்போக வல்லனல்லன். நானே என்றால் ஸூர்யன் உலாவுங் கார்யத்தை முடித்துக்கொண்டு அஸ்தமிப்பதற்குள் துர்ப்புத்தியாகிய இந்த ராவணன் ஹதனாகவேண்டுமென்று விரும்புகின்றனன். வீரனே! நீ யுத்தத்தில் ராவணனைக் கொல்ல விரும்புவாயாயின், நீ விபீஷணனுக்குச் செய்த ப்ரதிஜ்ஞையை நிறைவேற்ற நினைப்பாயாயின், ஜனகமஹாராஜன் புதல்வியாகிய ஸீதையிடத்தில் உனக்கு விருப்பம் உளதாயின், நான் சொன்ன வார்த்தையைச் சீக்ரம் நடத்துவாயாக' என்றனன், நூற்றிரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

இந்த்ரன் அனுப்பின தேரின்மீதேறி ராமன்யுத்தஞ் செய்தலும் ராவணன் ராமனுடைய ஸாரதியையும், குதிரைகளையும் வருந்தச் செய்தலும் ராமன் கோபித்தலும்.

சத்ருவீரர்களை அழிக்கும்படியான மஹா வீர்யமுடைய ராமன் லக்ஷ்மணன் மொழிந்த அவ்வசனத்தைக் கேட்டு தனுஸ்ஸை எடுத்து நாணேற்றி ஸேனையின் முன்நின்று ராவணன்மேல் பயங்கரமான பாணங்களை ப்ரயோகித்தனன். இதற்குள் ராக்ஷஸேஸ்வரனான ராவணன் மற்றொரு ரதத்தின்மேலேறி, ராஹு ஸூர்யன்மேல் எதிர்ப்பதுபோல், ராமன்மேல் எதிர்த்துப் போயினன். அங்ஙனம் ராவணன் ரதத்தின்மேல் ஏறிக்கொண்டு, மேகம் தாரை தாரையாக மழை பெய்வதுபோல், மிகுதியும் பயங்கரமாகி வஜ்ரம்போன்ற பாணங்களை ப்ரயோகித்து ராமனை ஹிம்ஸித்தனன். ராமன் யுத்தத்தில் மனவூக்கமுற்றிருக்கிற ராவணன்மேல் எரிகின்ற அக்னிபோன்றவைகளும் பொன்னால் ப்ரகாசிப்

பவைகளுமான பாணங்களை விடுத்து ஹிம்ஸித்தனன். ராமன் பூமியின்மேல் நின்றும், ராவணன் ரதத்தின் மேல் இருந்தும் யுத்தஞ்செய்வது ஸரியன்றென்றுதே வதைகளும் கந்தர்வர்களும் தானவர்களும் சொல்லிக் கொண்டனர். அப்பால் செல்வப்பெருக்கனுகிய தேவேந்த்ரனும் இதை ஆலோசித்து, மாதலியை அழைத்து ராமனுக்குத் தன்ரதத்தைக் கொண்டுபோகும்படி கட்டளையிடுகையில் அவ்விந்த்ரனுடைய ஸாரதியான அம்மாதலியும் அவனது ரதத்தில் ஏறிக்கொண்டு ஸ்வர்க்கத்தினின்று இறங்கி ராமனிடம் வந்தனன். அந்தரதம் ஸ்வர்ணத்தினுல் அவயவங்கள் விசித்ரஞ் செய்யப்பெற்றுப் பலமணிகளால் அலங்கரிக்கப்பட்டு பாலஸூர்யன் போல்ப்ரகாசித்துக்கொண்டிருந்தது. அதன் நுகத்தடி வைடூர்ய மணிகளால் செய்யப்பட்டிருந்தது. ஸ்வர்ண ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டவைகளும்வெளுத்த சாமரங்களோடுகூடி ஸூர்யன்போல் ப்ரகாசிப்பவைகளும் பொன்களால் நிரம்பவும் பூஷிக்கப்பட்டவைகளும் பச்சிலை நிறமுடையவைகளுமான சிறந்த குதிரைகள் பூட்டப்பெற்றிருந்தது. அந்த ரதத்திற்குப் பொன்தடி த்வஜமாயிருந்தது. அப்பால் இந்த்ரனுடைய ஸாரதியான மாதலி உழவுகோலைக் கையில் கொண்டு ரதத்திலிருந்தே அஞ்சலிசெய்து ராமனைப் பார்த்து 'காகுத்ஸ்த்தனே! நீ மிகுந்த பலமுடையவன்; செல்வப் பெருக்கமைந்தவன்; பகைவரை அடக்குந்திறமையுடையவன் இப்படிப்பட்ட உனக்கு விஜயம் உண்டாகும்பொருட்டு தேவேந்த்ரன் இந்த ரதத்தைக் கொடுத்தனன். மற்றும், பெரிதான இந்த இந்த்ர தனுஸ்ஸையும், அக்னியைப்போன்ற இந்தக் கவசத்தையும், ஸூர்யனேடொத்த இந்த பாணங்களையும் நிர்மலமாயிருப்பதும்

கூருடையதுமான இந்தச் சக்தியையும் தேவேந்த்ரன் உனக்குக் கொடுத்தனன். வீரனே! மஹாராஜனே! முன்பு தேவேந்த்ரன் இந்த ரதத்தில் ஏறிக்கொண்டு, நான் ஸாரதியாயிருக்கப்பெற்று தானவர்களை வதித் தாற்போல், நீ இப்பொழுது என்னை ஸாரதியாகக் கொண்டு இந்த ரதத்தில் ஆரோஹித்து ராவணனை வதிப்பாய்' என்றனன். அப்பொழுது ராமன், மாதலி அங்ஙனஞ் சொல்லக்கேட்டு அம்மஹாரதத்திற்கு ப்ர தக்ஷிணஞ்செய்து நமஸ்கரித்து, சந்த்ரகிரணம்போன்ற தன் தேஹகாந்தியால் உலகங்களை விளங்கச் செய்து கொண்டு அந்த ரதத்தில் ஆரோஹித்தனன். அப்பால் மஹாபாஹுவாகிய ராமனுக்கும் ராவணனுக்கும், காண் போர்களுக்கு ஆச்சர்யத்தையும் மயிர்க்கூச்சலையும் விளைக்கும்படியான மஹாயுத்தம் நடந்தது. ஸமஸ்த திவ்யாஸ்த்ரங்களையும் அறிந்த ராமன், ராவணன் ப்ர யோகித்த காந்தர்வாஸ்த்ரத்தை கந்தர்வாஸ்த்ரத்தினு லும் தெய்வாஸ்த்ரத்தை தெய்வாஸ்த்ரத்தினுலும் தடுத்தனன். ராக்ஷஸாதிபதியான ராவணன் மிகுதியும் கோபித்து மீளவும் மிக பயங்கரமான ராக்ஷஸாஸ்த் ரத்தை ப்ரயோகித்தனன். ஸ்வர்ணத்தினுல் அலங்கரி க்கப்பட்ட அந்த பாணங்கள் ராவணனுடைய தனுஸ் ஸினின்று புறப்பட்டு மஹாவிஷமுடைய ஸர்ப்பங்களா கி ராமன்மேல் எதிர்த்தன. அந்த ஸரப்பங்கள் ஜ்வலிக் கின்ற முகமுடையவையாகிய வாயைத் திறந்துகொண்டு அவற்றினின்று எரிகின்ற நெருப்புக்களைக் கக்கிக் கொண்டு திக்குக்களிலும் விதிக்குக்களிலும் இடைவெ ளியின்றிச் சூழ்ந்துகொண்டன. யுத்தத்தில் ராமன் தன்மேல் வருகின்ற அம்மஹா ஸர்ப்பங்களைப் பார்த்து, கோரமாயிருப்பதும் பயத்தை விளைவிப்பதுமான காரு

டாஸ்த்ரத்தை ப்ரயோகித்தனன். பொன் பிடிகள் அமைந்து அக்னிபோல் ஜ்வலிக்கின்ற அந்தராமபாணங்கள் தனுஸ்ஸினின்று புறப்பட்டு, ஸர்ப்பங்களுக்குச் சத்ருக்களும் பொன்னுருவம் அமைந்தவைகளுமான கருடபக்ஷிகளாகி விஹரித்தன (விளையாடின) கருடப் பறைவையினுருவம் அமைந்து காமரூபங்களுமான அந்தபாணங்கள், ஸர்ப்பரூபமுடையவைகளும் மஹா வேகமுடையவைகளுமான அந்த ராவண பாணங்களையெல்லாம் உருமாய்த்தன. ராக்ஷஸேஸ்வரனான ராவணன் தனது அஸ்த்ரம் வீணானமை கண்டு, கோபித்து, பயங்கரமான பாணவர்ஷங்களை ராமன்மேல் பெய்தனன். அப்பால் அந்த ராவணன்எப்படிப்பட்ட கார்யத்தையும் அனுயாஸமாக விரைவில் செய்து முடிக்குந் திறமை அமைந்த ராமனை ஆயிரம் பாணங்களால் அடித்து வருந்தச் செய்து மற்றும் பல பாணங்களை மாதலியின் மேல் ப்ரயோகித்தனன். ராவணன் அவ்விந்த்ரரதத்தின் த்வஜத்தைக் குறிவைத்து ஒருபாணத்தைவிடுத்து அதைச் சேதித்து ரதத்தின் நுனியிலிருக்கும் தண்டத்தினின்று பொன்மயமான த்வஜத்தைரதத்தினிடையில் விழச்செய்து உடனே பாண ஸமூஹங்களால் இந்த்ரனுடைய குதிரைகளை ஹிம்ஸித்தனன். தேவதைகளும் கந்தர்வர்களும் தானவர்களும் சாரணர்களும் துர்ப்புத்தியனான ராவணன் செய்த அப்பெருஞ் செயலைக் கண்டு வருத்தமுற்றனர். ஸித்தர்களும் மஹர்ஷிகளும் வானரவீரர்களும் விபீஷணனும், ராமன் வருந்துவதைக்கண்டு எல்லோரும் வருத்தமுற்றனர். ராஹு சந்த்ரனைவிழுங்குவதுபோல் ராவணன் ராமனை ஆக்ரமிக்கக் கண்டு, புதன் ப்ரஜைகளுக்கு அசுபஞ் செய்பவனாகி ப்ரஜாபதியை தேவதையாக வுடையதும் சந்த்ரனுக்கு

ப்ரியமுள்ள ரோஹிணி நக்ஷத்ரத்தை ஆக்ரமித்து நின்றனன். ஸமுத்ரம் புகை சூழப்பெற்ற அலைகளுடையதும் எரிவதுபோல் புலப்படுவதுமாகி அப்பொழுது கோபாவேசத்துடன் ஸூர்யனைத் தொடுவதுபோன்று, மேற்கிளம்பிற்று. ஸூர்யனும் காந்தி குறைந்து கட்கம்போல் கறுத்து, தலையில்லாத முண்டம் இடையில் அடையாளமாகத் தோற்றப்பெற்று தூமகேதுவுடன் கூடி தாருணமாகப் புலப்பட்டனன். ஆகாயத்தில் இக்ஷ்வாகு வம்சத்தரசரது நக்ஷத்ரமும் இந்த்ராக்னிகளை தேவதையாகவுடையதுமான விசாகா நக்ஷத்ரத்தை அங்காரகன் ஆக்ரமித்தனன். ராவணன் பத்துத் தலைகளோடும் இருபது புஜங்களோடும் தனுஸ்ஸை ஏந்திக்கொண்டு மைநாகபர்வதம்போல் புலப்பட்டனன். யுத்தரங்கத்தில் ராவணன் மிகுதியும் வளர்ந்து ராமனை இங்ஙனம் அடக்கிக்கொண்டிருக்கையில், ராமனுக்கு தனுஸ்ஸில் பாணங்களைத் தொடுப்பதும் ஸாத்யமில்லாதிருந்தது. முன்னமே கோபித்துக் கொண்டிருந்த ராமன் புருவத்தை நெரித்துக் கண்கள் சிறிது திறக்கப்பெற்றுக் கண்ணால் தஹிப்பவன்போன்று மிகுந்தகோபாவேசம் அடைந்தனன். நூற்று மூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராவணன் ப்ரயோகித்த சூலத்தை ராமன் இந்த்ரன் கொடுத்த சக்தியால் ஹதஞ்செய்து ராவணனுடைய குதிரைமுதலியவற்றை ஹிம்ஸித்தல்.

புத்தியிற் சிறந்த ராமன் அங்ஙனம் கோபாவேசமுற்றிருக்கையில், அவனுடைய முகத்தைக் கண்டு ஸமஸ்த பூதங்களும் பயம் அடைந்தன. பூமியும் நடுக்கமுற்றது; பர்வதமும் தன்னிடத்திலுள்ள ஸிம்ஹங்க

ளோடும் பெரும் புலிகளோடும் வ்ருக்ஷங்கள் அல்லாடப் பெற்று மிகுதியும் நடுக்கமுற்றது. நதிகளுக்குப்பதியான ஸமுத்ரமும் மிகுதியும் கலக்கமுற்றது. ஆகாயத்தில் பருஷத்வனியுடைய பறவைகளும் பருஷமான மேகங்களும் உத்பாத ஸூசகமான த்வனிகளைச் செய்துகொண்டு முழுவதும் உலாவின. ராமன் மிகுந்த கோபாவேச முற்றிருப்பதையும் மிகுதியும் தாருணமான உத்பாதங்களையும் கண்டு ஸமஸ்த பூதங்களும் பயம் அடைந்தன. ராவணனுக்கு பயம் உண்டாயிற்று. அப்பொழுது சூரர்களான அவ்விருவரும் பயங்கரமான பலவகைஆயுதங்களோடு விசித்ரமாக யுத்தஞ் செய்துகொண்டிருக்கையில், ஜகத்ப்ரளயம் போன்ற அம்மஹாயுத்தத்தை, தேவதைகளும் கந்தர்வர்களும் மஹோரகர்களும் மஹர்ஷிகளும் தானவர்களும் தைத்யர்களும் கருடர்களும் விமானங்களிலிருந்து ஆகாயத்தினின்றுபார்த்துக்கொண்டிருந்தனர். அப்பொழுது தேவதைகளும் அஸுரர்களும் அனைவரும் வந்து அம்மஹாயுத்தத்தைப் பார்த்துக்கொண்டே ராமனிடத்திலும் ராவணனிடத்திலும் தந்தமக்குள்ள பக்ஷபாதத்தினால் ஒருவர்க்கொருவர்வாதாடிக் கொண்டிருந்து, அவ்விருவரில் தந்தமது வீரர்களிடத்திலுள்ள பக்தியால் மிகுதியும்ஸந்தோஷத்தை அறிவிக்கும்படியான வார்த்தைகளைச் சொல்லினர். அப்பொழுது அஸுரர்கள் தேவதைகளிடத்திலுள்ள த்வேஷத்தினால் ராமனுக்கு ஜயங்கூடாதென்று பிடிவாதங்கொண்டு யுத்தத்திற்கு ஸரியாக வந்து நின்று ராவணனைப் பார்த்து 'ராவணா! நீ ஜயிப்பாயாக' என்றனர். அப்பால் அந்த தேவதைகள் ராமனைப் பார்த்து 'நீ ஜயிப்பாயாக' என்று அடிக்கடி மொழிந்தனர். இதற்குள் துர்ப்புத்தியாகிய ராவணன் ராமன்மேல்கோபித்து

அவனை அடிக்க விரும்பி, அப்பொழுது பெரிய ஆயுதம் எதை ப்ரயோகிக்கலாமென்று க்ஷணம் ஆலோசித்து வஜ்ராயுதத்தோடொத்த வலிமையுடையதும் மஹாகோஷஞ்செய்வதும் ஸமஸ்த சத்ருக்களையும் உருமாய்ப்பதுமாகிய சூலத்தை, ரோஷத்தினால் ஜ்வலிப்பவன் போன்று எடுத்துக்கொண்டனன். அந்தச் சூலம் பர்வதசிகரம் போன்ற இரும்பாணிகளால் நிறைந்து பார்க்க பயங்கரமாகிச் சிறிது கறுப்பு நிறங்கலந்து கூரிய நுனியுடன் கூடி ஜ்வலித்துக்கொண்டிருக்கையால் புகையோடு கூடின அக்னி ஜ்வாலை போன்று, ப்ரளயகலாக்னி ஸமூஹம் போன்ற ருத்ரனுடைய சூலத்தையும் விஞ்சி எப்படிப்பட்டவர்க்கும் அணுகமுடியாமல், ஆயிரஞ் சொல்லியென்? யமனுக்குங்கூட அணுகமுடியாமல் ஸமஸ்த பூதங்களுக்கும் திகில்விளைப்பதும் வாளைப்போல் அறுப்பதும் கத்தியைப்போல் சேதிப்பதுமாய் விளக்கமுற்றிருந்தது. அங்ஙனம் வீர்யசாலியாகிய ராவணன் மிகுந்த கோபாவேசத்துடன் யுத்தத்தில் சூரர்களான பலராக்ஷஸர்கள் தன்னைச் சூழ்ந்திருக்கப் பெற்று அம்மஹாசூலத்தை இடையில் பிடித்தனன். மஹாசரீரனாகிய ராவணன்அந்த யுத்தத்தில் ரோஷத்தினால் கண்கள் சிவக்கப்பெற்று, அம்மஹா சூலத்தை எடுத்துத் தன்ஸைன்யமெல்லாம் ஸந்தோஷிக்கும்படி பயங்கரமாக ஸிம்ஹநாதஞ்செய்தனன். அப்பொழுது ராக்ஷஸேந்த்ரனாகிய ராவணனுடைய பயங்கரமான ஸிம்ஹநாதத்வனியால் பூமியும் ஆகாயமும் திக்குக்களும் விதிக்குக்களும் நடுக்கமுற்றன. பெருங்கோஷமுடைய துர்ப்புத்தியான அந்த ராவணன் செய்த ஸிம்ஹநாதத்தைக் கேட்டு, ஸமஸ்த பூதங்களும் பயம் அடைந்தன. ஸமுத்ரங் கலங்கிற்று. மஹாவீர்யமுடைய அந்த ராவணன் அங்ஙனம் அம்

மஹாசூலத்தை எடுத்துப் பெருங்கோஷம் உண்டாகும் படி ஸிம்ஹநாதஞ் செய்து ராமனைப் பார்த்துப் பருஷமானவசனங்களை மொழியத் தொடங்கி 'ராமா! உனக்காகரோஷத்தினல் இப்பொழுது நானெடுத்த வஜ்ரம் போன்ற வலிமையுடைய இச்சூலம் இந்தக்ஷணத்திலேயே உன்னையும் உன்தம்பியையும் வதிக்கப்போகின்றது. ராமா! யுத்தத்தை விரும்புந் தன்மையனே! உன்னை இப்பொழுது சீக்ரமாக வதித்து இதுவரையில் என் ஸைன்யத்தில் மாண்ட சூரர்களான ராக்ஷஸர்களுக்கு நிகராகச்செய்துவிடுகிறேன். ராமா! சிறிது நிற்பாயாக. இப்பொழுதே உன்னைச் சூலத்தினல் வதித்து விடுகிறேன்' என்றனன். ராக்ஷஸேஸ்வரனுன ராவணன் இங்ஙனஞ் சொல்லி அந்தச் சூலத்தை ப்ரயோகித்தனன். அந்தச் சூலம்ராவணன் கையினின்று விடுபட்டு மின்னலின் ஜ்வாலைபோன்ற ஜ்வாலைகளோடு கூடி, எட்டுமணிகள் அமைந்து பெருங்கோஷத்துடன் ஆகாயத்தில் மிகுதியும் ப்ரகாசித்துக்கொண்டிருந்தது. வீர்யம் மிகுந்த ராமன் ஜ்வலித்துக் கொண்டு பயங்கரமான உருவத்துடன்வருகின்ற அம்மஹா சூலத்தைக்கண்டு தனுஸ்ஸை இழுத்து பாணங்களை ப்ரயோகித்தனன். ப்ரளயகாலத்தில் ஜ்வலிக்கின்ற அக்னியை இந்த்ரன் ஜலப்ரவாஹங்களால் அணைப்பதுபோல், ராமன் தன்மேல் வருகின்ற அச்சூலத்தை பாண ஸமூஹங்களால் தடுத்தனன். ராமன் ப்ரயோகித்த பாணங்கள் ராவணனுடைய அம் மஹா சூலத்தின்மேல்பட்டு அக்னியில் குதித்த விட்டில்கள் போல் பஸ்மமாயின. ராமன் தன் பாணங்கள் ஆகாயத்திலேயே சூலத்தில் பட்டுப் பொடியாகி நீருனமை கண்டு மிகுதியும் கோபமுற்றனன். அனந்தரம் அந்த ரகுகுலகுமாரனுகிய ராமன் அங்ஙனம் பெருங் கோபமுற்றுத் தனக்கு மாதலி கொண்டு வந்துகொடுத்

ததும் தேவேந்த்ரனால் நிர்மிக்கப்பட்டதுமாகிய மஹா சக்தியை எடுத்தனன். பலிஷ்டனாகிய ராமன் அம்மஹா சக்தியை எடுத்துச் சுழற்றி விடுகையில், அது மணிக ளுடன் சப்திப்பதும் ஜ்வலிப்பதுமாகி ப்ரளயகாலத்தி லுள்ள பெரிய குறை கொள்ளிபோல், ஆகாயத்தை யெல்லாம் விளங்கச் செய்தது. அம்மஹா சக்தி ராம னால் ப்ரயோகிக்கப்பட்டு ராவணனுடைய சூலத்தில் பட்டு அம்மஹா சூலத்தை முறித்து ஒளியற்று பூமியில் வீழ்ந்தது. அப்பால், ராமன், மஹாவேகமுடையவை களும் வஜ்ரகோஷம்போன்ற கோஷமுடையவைகளும் கூருள்ளவைகளுமான கொடிய பாணங்களை ப்ரயோ கித்து மிகுந்த வேகமுடையவைகளான ராவணனது அஶ்வங்களை ஹிம்ஸித்தனன். பின்பு ராமன் மிகுந்த ஹஸ்தலாகவந் தோற்ற ராவணனுடைய வக்ஷஸ்தலத் தில் பல பாணங்களையும் நெற்றியில் மூன்று பாணங்களை யும் ப்ரயோகித்தனன். அப்பொழுது யுத்தத்தில் ராக்ஷ ஸேந்த்ரனாகிய ராவணன் ஸமஸ்த அவயவங்களும் பாணங்களால் பிளக்கப்பட்டு வருந்தவும் ரக்தத்தினால் சரீரம் நனையவும் பெற்றுப் புஷ்பித்த அசோக வ்ருக்ஷம் போல் ப்ரகாசித்தனன். அப்பொழுது யுத்தத்தின் நடு வில் ராக்ஷஸேஶ்வரனான அந்த ராவணன் ராமபாணங் கள் அவயவங்களெல்லாவற்றிலும் பொற்றப்பெற்று ரக் தத்தினால் சரீரம் நனைந்து வருத்தமுற்றனன். அன்றி யும் அவன் மிகுந்த கோபாவேசத்தையும் அடைந்த னன். நூற்றுநான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராமன் ராவணனை பாணங்களால் விலவிலக்கச் செய்தலும், அவன் ஸாரதி ரதத்தை அப்புறங் கொண்டுபோதலும்.

யுத்தத்தைக் கொண்டாடுந் தன்மையுடைய அந்த ராவணன் காகுத்ஸ்த்த ராமனால் அங்ஙனம் கோபாவேசமுற்று யுத்தத்தில் வருத்தப்பட்டுத் தானும் மிகுந்த கோபாவேசம் அடைந்தனன். மிகுந்த வீர்யமுடைய அந்த ராவணன் அங்ஙனம் கோபித்துக் கோபத்தினால் கண்கள் சிவக்கப்பெற்று அம்மஹா யுத்தத்தில் தநுஸ்ஸை இழுத்து பாணங்களை நிரம்ப விடுத்து ராமனை ஹிம்ஸித்தனன். ஆகாயத்தினின்று மேகம் அனேகமாயிரம் வர்ஷதாரைகளைப் பெய்து குளங்களை நிறைப்பதுபோல், ராவணன் சப்திக்கின்ற பல பாணங்களை ப்ரயோகித்து ராமனுடைய தேஹம் முழுவதும் நிறைத்தனன். ராமன் அங்ஙனம் யுத்தத்தில் ராவணனுடைய தனுஸ்ஸினின்று புறப்பட்டபாண ஸமூஹங்களால் நிறைக்கப்பட்டு அசையாத மஹா பர்வதம்போல் நடுக்கமுற்றனன். வீர்யத்தில் சிறந்த ராமன் யுத்தத்தில் காலூன்றி பாணங்களால் பாணஸமூஹங்களைத் தடுத்துக்கொண்டே ஸூர்யகிரணங்கள் போன்ற அவனது பாணங்களை அங்கீகரித்தனன். அப்பால் ராவணன் கோபித்து ஹஸ்தலாகவம் விளங்க, மஹானுபாவனாகிய ராமனது மார்பில் அனேகமாயிரம் பாணங்களை ப்ரயோகித்தனன்; அப்பொழுது யுத்தத்தில் லக்ஷ்மணனுக்குத் தமையனாகிய ராமன் தேஹமெல்லாம் ரக்தத்தில் நனைந்திருக்கையில், அடவியில் புஷ்பித்த ஓர் பலாச வ்ருக்ஷம்போல் புலப்பட்டனன். மஹாதேஜஸ்வியாகிய அந்தராமனும் ராவணனது பாணங்களால் அடிக்கப்பட்டுச் சினந்து ப்ரளயகால ஸூர்யன் போல் ஜ்வலிப்பவைகளும் மிகுதியும் க்ரூரங்களுமான

பாணங்களை எடுத்தனன். அனந்தரம் ஒருவர்மேலொரு வர் கோபத்தினால் மிகுதியும் பரபரப்புற்றிருக்கிற அந்த ராமலக்ஷ்மணர்களிருவரும், யுத்தத்தில் பாணங்கள் அந்தகாரம்போல் ஒன்றுந் தெரியாதபடி மறைத்துக் கொண்டிருக்கையால் ஒருவரையொருவர் காணப்பெறு திருந்தனர். அப்பால், வீரனும் தசரத குமாரனுமாகிய ராமன் கோப வேசமுற்று ராவணனைப் பார்த்துப் பெருஞ்சிரிப்புச் சிரித்துப் பருஷவசனங்களைப் பேசத் தொடங்கி 'ராக்ஷஸாதமா! என் பார்யையை, நான் அருகில் இல்லாதிருக்கையில் ஸ்வாதீன மற்றிருக்கும் பொழுது எனக்குத் தெரியாதபடி ஜனஸ்தானத் தினின்று அவிவேகத்தினால் பறித்துக்கொண்டுவந்தனை யே! இப்படிப்பட்ட நீ பராக்ரமசாலியா? உனக்கு எள் ளளவும் பராக்ரமம் இல்லை. மஹத்தான அரண்யத்தில் என்னைப் பிரிந்து வருந்தியிருக்கின்ற ஸீதையை நீ பலாத்காரமாகத் திருடிக்கொண்டு வந்து சூரனென்று நினைக்கின்றனையே! நீ எப்படிப்பட்ட சூரனோ! பாதா ரங்களை யிழுக்கும் பாபிஷ்டனே! கணவன் அருகில் இல் லாத ஸமயத்தில் ஸ்த்ரீ விஷயத்தில் துர்ஜனங்கள் செய்யும்படியான கார்யத்தைச் செய்து சூரனென்று நினைக்கின்றனையே! மர்யாதைகளை (தர்மநிலைமைகளை) அழிப்பவனே! உனக்கு வெட்கமென்பது சிறிதும் கிடை யாது. பெரியோர்கள் ஆசரிக்கும் தர்ம நடத்தைகளில் நிலைபெறாதவனே! கொழுப்பினால் உன் ம்ருத்யுவை நீயே வரவழைத்துக்கொண்டு செத்தாற்போல் நினைக்காமல் சூரனென்று நினைக்கின்றனை. சூரன், குபேரனுக்குத் தம்பி, தவபலம் முதலிய பலவகை பலங்கள் அமைந்த வன். இப்படிப்பட்ட நீ ஸீதையை அபஹரித்துக் கொண்டு வந்து எவ்வளவு பெரிய கார்யஞ் செய்தனை?

அது எவ்வளவு கொண்டாடத் தகுந்தது? எவ்வளவு யசஸ்ஸைக் கொடுக்கத்தகுந்ததோ? நீ கொழுப்பினால் கண் தெரியாமல் நிந்தைக்கிடமாயிருப்பதும் நன்மைக்கு இடமாகாததுமான கார்யத்தைச் செய்தனை. அதனால் விளையும்படியான மஹாபலனை இப்பொழுதே இதோ அனுபவிப்பாயாக. துர்ப்புத்தி! சூரனென்று உன்னை நீயே நினைத்துக் கொண்டிருக்கின்றனையே! ஸீதையைத் திருடன்போல் பறித்துக்கொண்டு வரும் பொழுது உனக்கு வெட்கம் உண்டாகவில்லையே! நீ என்னெதிரில் அங்ஙனம் ஸீதையை பலவந்தமாகக் கொண்டுபோக முயன்றிருப்பாயாயின், அப்பொழுதே என் பாணங்களால் அடிக்கப்பட்டு உனதுடன் பிறந்தவனான கரனைக் காண்பாய். துர்ப்புத்தியனே! என்பாக்யவசத்தினால் நீ இப்பொழுது என் கண்ணில் பட்டனை. இதோ உன்னைக் கூரான பாணங்களால் யமபட்டணத்திற்கு அனுப்புகிறேன், காண்பாய். இதோ குண்டலங்கள் விளங்கப்பெற்ற உன் சிரஸ்ஸு என் பாணங்களால் அறுப்புண்டு, யுத்தபூமியின் தூள்படியப் பெற்றிருக்க, அதை நரி முதலியவை இழுத்துக்கொண்டு போமாக. ராவணா! நீ பூமியில் வீழ்ந்திருக்கையில் கழுகுகள் உன் மார்பில் பாய்ந்து பாணங்களால் பொற்றப்பட்ட ரந்த்ரங்களினின்று மேற்கிளம்பி வருகின்ற உன் குருதியைத் தாஹந்தீரப் பருகுமாக. இப்பொழுதே இதோ நீ என் பாணங்களால் பிளவுண்டு ப்ராணன்களை இழந்து பூமியில் விழுந்தவுடனே, கருடப்பறவைகள் ஸர்ப்பங்களைப் பிடித்திழுப்பதுபோல், கழுகு முதலான பக்ஷிகள் உன்குடல் முதலிய நரம்புகளைப் பிடித்திழுக்குமாக' என்றனன். பகைவரை உருமாய்க்க வல்ல வீரனாகிய ராமன் இவ்வண்ணம் மொழிந்துகொண்டே தன்னை அணுகியிருக்கின்ற ராக்ஷஸர் தலைவனான ராவணன்மேல் பாண

மழைகளைப் பெய்தனன். சத்ருவை உருமாய்க்கவிரும்பு கின்ற அந்த ராமனுக்கு அப்பொழுது வீர்யமும் பலமும் உத்ஸாஹமும் திவ்யாஸ்த்ர பலமும் யுத்தத்தில் இரு மடங்கதிகமாய் வளர்ந்தன. எல்லாமறிந்த மதியுடைய வனும் தன் ஸ்வரூபத்தை அறிந்தவனுமாகிய ராமனுக்கு ஸமஸ்தமான திவ்யாஸ்த்ரங்களும் ப்ரத்யக்ஷமாகத் தோற்றின. அனந்தரம் அம்மஹாதேஜஸ்வி, சந்தோ ஷப் பெருக்கினல் மிகுந்த ஹஸ்தலாகவமுடையவனுயி னன். ராக்ஷஸர்களை முடிக்கும் தீரனுகிய அந்த ராமன் இங்ஙனம் இந்தச் சுபசகுனங்கள் தனக்கு உண்டான தை அறிந்து மேன்மேலும் உத்ஸாஹம் அடைந்து ரா வணனை மிதமின்றி ஹிம்ஸித்தனன்; வானரர்கள் எறி யும் கற்குவியில்களாலும் ராமனுடைய பாண மழைக ளாலும் அடியுண்கின்ற ராவணன் ஏதுந் தோற்றப்பெரு மல் மனத்தில் தடுமாற்றமுற்றனன். ராவணனுக்கு மா ணகாலம் அப்பொழுது ஸமீபித்ததாகையால் அவன் அப்பொழுது பாணங்களை ப்ரயோகஞ்செய்யாமல் தனு ஸ்ஸை இழுக்காமலே இருந்தனன். மற்றும், அவனுக்கு மனம் ஸ்வாதீன மற்றிருக்கையால் ராமனது வீர்யத் தை பதில் செய்து தடுக்காமலே இருந்தனன். மற்றும், ராவணன் விடுத்த பாணங்களும் மற்ற நானுவித ஆயு தங்களும் யுத்தத்தில் சேதித்தல் பேதித்தல் முதலிய ப்ரயோஜனங்க ளொன்றையுஞ் செய்யாமல் வெறு மனே இருந்தன. ராவணன் இத்தகைய துரவஸ்த் தையிலிருப்பதைக் கண்டு அவனது ரதத்தையோட் டும் பாகன் தழதழப்பின்றி யுத்த பூமியினின்று ரதத் தை மெதுவாக அப்புறங் கொண்டுபோயினன். நாற் றைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராவணன் மனந்தெளிந்து ரதத்தை ஓட்டிக் கொண்டு வந்ததற்காக ஸாரதியை விரட்டுதலும், ஸாரதி அதற்கு ஸமாதானஞ்சொல்லி ரதத்தை மீளவும் யுத்தபூமிக்கு ஓட்டிக்கொண்டு போதலும்.

அந்த ராவணன் ம்ருத்யு பலத்தினுல் தூண்டப்பட்டு விவேகமற்று மிகுதியுங் கோபாவேசமுற்றுக் கோபத்தினுல் கண்கள் சிவந்து ஸாரதியைப் பார்த்து 'அடா துர்ப்புத்தீ! என்னை, பலஹீனனைப்போலும் உத்ஸாஹமில்லாதவனைப்போலும் பௌருஷமற்றவனைப்போலும் பயங்காலியைப்போலும் அற்பனைப்போலும் தைர்யமில்லாதவனைப்போலும், தேஜஸ்ஸை இழந்தவனைப் போலும் மாயைகள் தெரியாதவனைப்போலும் திவ்யாஸ்த்ரங்களுக்கு வெளிப்பட்டவனைப்போலும் அலக்ஷ்யஞ்செய்து உன் புத்திக்குத்தோற்றின போக்கெல்லாம் போகின்றனை. என் அபிப்ராயத்தைத் தெரிந்துகொள்ளாமல் என்னை அலக்ஷ்யஞ்செய்து சத்ருஸம்முகத்தில் என்னுடைய இந்த ரதத்தை ஏன் அப்புறம் ஓட்டிக் கொண்டு வந்தனை? பூஜைக்கிடமாகாதவனே! நான் வெகுகாலமாக ஸம்பாதித்த என் யசஸ்ஸையும் வீர்யத்தையும் தேஜஸ்ஸையும், ராவணன்யுத்தத்திலோடிப்போக் மாட்டானென்று எல்லோர்க்கும் என்னிடத்தில் உண்டாயிருக்கும் நம்பிக்கையையும் நீ இப்பொழுது இதோ நாசம் செய்தனையே! சத்ருவோ வீர்யத்தில் ப்ரக்யாதியடைந்தவன்; என் பராக்ரமத்தை நிரம்பக்காட்டி ஸந்தோஷப்படுத்தத் தகுந்தவன். அப்படிப்பட்ட சத்ரு பார்த்துக் கொண்டிருக்கையில், யுத்தத்தில் போராசையுடைய என்னை உபயோகமற்றவனுகச் செய்தனை. துர்ப்புத்தி! நீ இந்த ரதத்தைச் சத்ருவுக்கெதிரில்

நடத்தாமல் மதிமயக்கங்கொண்டு அப்புறம் கொண்டு வந்தமை கண்டால், பகைவன் உனக்கு ஏதோ லஞ்சங் கொடுத்து உன்னைத் தன் வசஞ்செய்து கொண்டா னென்று எனக்குத் தோற்றுகின்றது. இது ஸத்யமாக வே இருக்கும். ஹிதத்தை விரும்பும் நண்பர் செய்யுங் கார்யம் இதுவன்று. இது பகைவன் செய்யத்தகுந்த தே. நீ செய்த இது நற்கார்யம் அன்று. நீ நன்கு ஆலோசித்துச் செய்யவில்லை. நீ என்னிடத்தில் வெகு காலம் ஸஹவாஸஞ் செய்தவனு யிருப்பாயாயின், நான் செய்த வெகுமானுதிகள் உன்நினைவுக்கு வந்திருக்குமா யின், பகைவன் என்மேல் விழுந்து வருவதற்கு முன்ன மே ரதத்தை வேகமாகத் திரும்பி யுத்தத்திற்கு எதிர் முகமாக ஓட்டிக் கொண்டுபோவாயாக' என்றனன். ராவணன் புத்தியில்லாமல் அங்ஙனம் பருஷமாகச் சொன்னதைக்கேட்டு, ஸாரதி அவனுடைய ஹிதத்தை விரும்பும் புத்திசாலியாகையால் அவனை ஸமாதானப் படுத்திக்கொண்டே ஹிதமான வசனங்களை மொழியத் தொடங்கி, 'நான் பயந்தவனல்லேன், மூடனுமன்று, லஞ்சம் வாங்கிக்கொண்டு பகைவரோடு சேர்ந்தவனு மல்லேன், ஏமாறியிருப்பவனுமல்லேன், உன்னிடத்தில் நட்பில்லாதவனும் அல்லேன், நீ எனக்குச் செய்த வெகு மதிகளை மறந்தவனுமல்லேன், 'ஆனுல் என்?' என்னில், நான்ஹிதத்தை விரும்பி உனது யசஸ்ஸை நன்கு பாது காக்க முயன்று உன்னிடத்தில் ஸ்னேஹம் விளங்கப் பெற்ற மனத்துடன் இது ப்ரியமாயிருக்குமென்று இங் ஙனஞ் செய்தேன். இது உனக்கு அப்ரியமாயிற்று. மஹாராஜனே! நீ, ஏதோ ஒரு குலத்தில் பிறந்து அற்ப புத்தியும் துஷ்ட ஹ்ருதயனுமான மற்றொரு வன்போல், உனக்கு ப்ரியஞ் செய்வதிலேயே மனதுக் கமுடைய என்னிடத்தில், இங்ஙனம் ரதத்தை ஓட்டிக்

கொண்டு வந்த விஷயமாக தோஷம் நினைப்பது யுக்த மன்று. உயர்ந்த ப்ரதேசத்தினின்று நதிவேகமா கத் திரும்புவதுபோல், யுத்தபூமியினின்று மிகவேகத் துடன் ரதத்தைத் திருப்பிக்கொண்டு வந்ததற்குள்ள காரணத்தைச் சொல்லுகிறேன் கேட்பாய். வீரனே! நீ அப்பொழுது வெகுநேரம் மஹாயுத்தஞ் செய்து இளைப்புற்றிருந்தமை எனக்குத்தெரியவந்தது. நீயுத்தத் தில் நன்குமுகமுற்றிருக்கையாவது, நீஉத்ஸாஹமுற்றி ருக்கையாவது எனக்குத் தோற்றவில்லை. இந்த ரதக் குதிரைகளும் ரதத்தை இழுத்து இழுத்து இளைப்புற்று தீனங்களாகிவெயில்மேலேபட்டுமிகுதியும்ஓய்ந்து, மழை யில் அடிபட்ட பசுக்கள்போல் இருந்தன. நமக்கு எங் தெந்த சகுனங்கள் விளைகின்றனவோ, அவையெல்லாம் விபரீதமாகவே எனக்குத் தோற்றுகின்றன. ஸார தியாயிருப்பவன் தேசகாலங்களையும் சுபா சுப நிமித் தங்களையும் தன் ரதிகனுடைய எதிரியின் முகத்தி லுள்ள தெளிவு கலக்கம் முதலிய அடையாளங்களை யும் உற்ஸாஹ மில்லாமையையும் துக்கத்தையும் ஸந் தோஷத்தையும் பலாபலங்களையும் பூமியின் மேடுகளை யும் பள்ளங்களையும் மேடுபள்ள மில்லாத ஸமப்ரதேசங் களையும் மேடுபள்ளமான விஷம ப்ரதேசங்களையும் யுத்தத்தின் ஸமய அஸமயங்களையும், எதிரியினிடத்தில் கண்டறியத்தகுந்த ரந்த்ரங்களையும் மற்றும் ரதத்தை எதிரியின் அருகில் ஓட்டுவதையும் பக்கங்களில் நடத்து வதையும் நிலையாக நிறுத்துதலையும் எதிர்முகமாகவே பின்னுக்குத் திரும்புதலையும் நன்றாக அறிந்து ரதத்தை நடத்தவேண்டும். வீரனே! உனக்கும் இந்தரதக்குதிரை களுக்கும் இளைப்பாறுதல் உண்டாகும் பொருட்டும் பொறுக்கமுடியாத வருத்தமேதும் உண்டாகாதிருக்

கும் பொருட்டும் இங்ஙனம் ரதத்தை அப்புறம் கொண்டு போகுதல் யுக்தமென்று செய்தேனன்றி இப்படிப்பட்ட காரணம் ஒன்றும் இல்லாமலே என்னிஷ்டப்படி இங்ஙனஞ் செய்தேனல்லேன். ப்ரபூ! நான் இப்பொழுது செய்தது பர்த்தாவான உன்னிடத்தில் உள்ள ஸ்னேஹத்தின் மிகுதியாலன்றி வேறு காரணத்தினாலன்று. வீரனே! சத்ருக்களை அழிப்பவனே! நீ இப்பொழுது ஆஜ்ஞை செய்வாயாக. நீ எதை எப்படி செய்ய நியமிப்பாயோ, அதை அப்படியே, உன்சொத்தை இதுவரையில் நான் சாப்பிட்டருணத்தைத் தீர்க்க வேண்டுமென்கிற மனஉறுதியுடன் செய்கிறேன்' என்றனன். ராவணன் அந்த ஸாரதிமொழிந்த அவ்வசனத்தைக்கேட்டு ஸந்தோஷம் அடைந்து அவனைப் பலவாறு கொண்டாடி யுத்தஞ்செய்ய வேண்டுமென்னும் பேராசையுடையவனாகி அவனைப் பார்த்து, ஸாரதீ! இந்த ரதத்தைச் சீக்ரத்தில் ராமனுக்கு எதிர் முகமாக ஓட்டிக்கொண்டு போவாயாக. ராவணன்யுத்தத்தில் சத்ருக்களைக்கொல்லாமல் திரும்பி வரமாட்டான்' என்றனன். ராக்ஷஸேஸ்வரனான ராவணன் இங்ஙனஞ் சொல்லி அவனிடத்தில் ஸந்தோஷமுற்று, உடனே அவனுக்கு அழகாயிருப்பதும் விலையுயர்ந்ததுமான ஒரு ஹஸ்தாபரணத்தை (கைவளையை)க் கொடுத்தனன். ஸாரதியும் ராவணனுடைய வசனத்தைக்கேட்டு ரதத்தைத் திருப்பியுத்தத்திற்கு எதிராக ஓட்டினன். அனந்தரம் அந்த ஸாரதி ராவணனுடைய ஆஜ்ஞையின்படி சீக்ரமாகக் குதிரைகளை ஓட்டினன். அப்பால் ராக்ஷஸர் தலைவனாகிய ராவணனுடைய அம்மஹா ரதம் க்ஷணகாலத்தில் யுத்தத்தின் முனையில் ராமனுக்கு எதிர் முகமாகவந்து நின்றது. நூற்றுருவது ஸர்க்கம் முற்றிற்று.

---

அகஸ்த்யர் ஸ்ரீராமனுக்கு ஆதித்ய ஹ்ருதயம் உபதேசித்தலும், ராமன் அந்த ஸ்தோத்ரத்தை ஜபிக்கையில், ஸூர்யன் ராமனை அனுக்ரஹித்தலும்.

அனந்தரம் யுத்தத்தைப் பார்க்கும் பொருட்டு தேவதைகளோடுகூட வந்திருக்கும் பகவானான அகஸ்த்ய மஹர்ஷி, யுத்தத்தில் இளைப்புற்ற ராவணன் மீளவும் யுத்தத்திற்கு வந்து முன்னே நிற்பதையும், ராமன் 'இவனை எப்படி ஜயிப்பது?' என்று சிந்தையிலாழ்ந்திருப்பதையுங் கண்டு, அவனருகே வந்து 'ராம! ராம! மஹாபாஹோ! உனக்கு, வேதங்களைப்போல் நித்யமாயிருப்பதும் ரஹஸ்யமுமான ஆதித்ய ஹ்ருதயத்தை உபதேசிக்கிறேன். குழந்தாய்! அதைக்கொண்டு நீ யுத்தத்தில் ஸமஸ்த சத்ருக்களையும் ஜயிப்பாய். [1] அதுபடிப்பவர்க்குப் புண்யத்தை வளரச்செய்வது; ஸமஸ்தசத்ருக்களையும் நாசஞ்செய்வது; ஜயத்தை விளைவிப்பது; அழிவில்லாதபயனைக்கொடுப்பது; மிகவும் பரிசுத்தமாயிருப்பது; ஸமஸ்தமங்களங்களுக்கும் மங்களமானது; (ஸமஸ்த நன்மைகளுக்கும் ஸாதனமாயிருப்பது); முன்செய்த ஸமஸ்த பாபங்களையும் போக்குவது; மனோவ்யாதிகளை

---

1 இங்கு ஆதித்யசப்தம் ஸூர்யமயமண்டலத்தைச் சொல்லுகிறது. அதன் ஹ்ருதயமாவது அதன் மத்யப்ரதேசம். 'ய ஏஷோந்தராதித்யே ஹிரண்மயஃ புருஷோ த்ருஶ்யதே' என்னும் ஶ்ருதியின்படி ஸூர்யமண்டலத்தினிடையிலிருக்கும் பரமபுருஷனைச் சொல்லுகிறது. அல்லது ஆதித்யனென்றால் ஸூர்யன். ஹ்ருத் என்று ஹ்ருதயத்தைச் சொல்லுகிறது. அயம் என்று அதிலுள்ள வஸ்துவைச் சொல்லுகிறது. 'அய பயகதௌ' என்று தாது. 'ய ஆதித்யேதிஷ்டந் ய ஆதித்யமந்த்ரோ யமயதி' என்ற ஶ்ருதியின்படி ஸூர்யஹ்ருதயத்திலிருப்பவன் பரமபுருஷனாகையால், ஆதித்யஹ்ருதயமென்றால் பரமபுருஷனைச் சொல்லும் ஸ்தோத்ரமென்று பொருள்.

யும் தேஹவ்யாதிகளையும் தொலையச்செய்வது; ஆயுஸ்ஸை மேன்மேலும் வளரச் செய்வது; ஜபிக்கத் தகுந்தவைகளனைத்திலும் மேன்மையுற்றது. இப்படிப்பட்ட ஆதித்ய ஹ்ருதயமென்னும் ஸ்தோத்ரத்தை என்றும் ஜபிக்கவேண்டும். [1] ஸ்வர்ண வர்ணமுடையவை யாகையால் சிறப்புற்ற கிரணங்கள் அமைந்தவனும் நன்கு உதிக்கின்றவனும் தேவாஸுரர்களால் நமஸ்கரிக்கப்பட்டவனும் மற்ற தேஜஸ்ஸுக்களை யெல்லாம் மறைக்கும்படியான மஹாதேஜஸ்ஸை யுடையவனும் சந்த்ரஸூர்யாதிகளுக்கும் தேஜஸ்ஸைக் கொடுப்பவனும் வெயி

---

1 இங்கு 'ரஶ்மிமந்தம் ஸமுத்யந்தம் தேவாஸுரநமஸ்க்ருதம்। பூஜயஸ்வவிவஸ்வந்தம் பாஸ்கரம் புவநேஶ்வரம்' என்பது மூலம். (ரஶ்மிமந்தம்) ரஶ்மிஶப்தம் மிகவும் அந்தரங்கரான பக்தர்களைச் சொல்லுகிறது. அவர்களை யுடையவன் அப்படிப்பட்ட பக்தர்களினிடையில் ப்ரகாசிப்பவனென்கை. 'ரஶ்மிம் ரஶ்மீநாம் மத்யே தபந்தம்' என்று ஸுவர்ண ஸூக்தம் சொல்லுகிறது. (ஸமுத்யந்தம்,) 'யஃ பூர்வ்யாய வேதஸே நவீயஸே' என்கிற ஶ்ருதியின்படி புதிது புதிதாக உதித்தாற்போல் புலப்படுமவன். (தேவாஸுரநமஸ்க்ருதம்) 'தேவாநாம் தாநவாநாஞ்ச ஸாமாந்யமதிதைவதம்' என்கிறபடியே ஸர்வஜனங்களுக்கும் ஸாதாரணமாயிருப்பவன். (விவஸ்வந்தம்) மிகுந்த ஒளியுடையவன். 'அத யதஃ பரோதிவோ ஜ்யோதிர்தீப்யதே விஶ்வதஃ ப்ருஷ்டேஷு ஸர்வதஃ ப்ருஷ்டேஷ்வநுத்தமேஷூத்தமேஷு லோகேஷு' என்னும், ஶ்ருதியைக் கண்டுகொள்வது. (பாஸ்கரம்) ஸூர்யன் சந்த்ரன் முதலியவர்க்கும் தேஜஸ்ஸை விளையச் செய்பவன். 'நதத்ர ஸூர்யோ பாதி நசந்த்ரதாரகம் நேமா வித்யுதோ பாந்தி குதோயமக்நிஃ। தமேவ பாந்தமநுபாதி ஸர்வம் தஸ்யபாஸா ஸர்வமிதம் விபாதி' என்று ஶ்ருதி (புவநேஶ்வரம்) புவனசப்தம் ஸமஸ்தமான அண்டங்களையுஞ்சொல்லுகிறது. ஸமஸ்த அண்டங்களுக்கும் ஈஶ்வர னென்கை (பூஜயஸ்வ) இப்படிப்பட்ட பகவானை இந்த ஸ்தோத்ரத்தினால் ஆராதிப்பாயாக. இங்ஙனம் மஹேஶ்வரதீர்த்தர்.

லாலும் மழையாலும் ஸமஸ்தலோகங்களுக்கும் ரக்ஷகனுமாகிய பரமபுருஷனை இம்மஹா ஸ்தோத்ரத்தினால் பூஜித்து ஸந்தோஷப்படுத்துவாயாக. [1] ஏனென்னில், ஸூர்யமண்டலத்தின் இடையில் இருக்கின்ற இப்புருஷன் ஸமஸ்ததேவதைகளுக்கும் அந்தராத்மாவாயிருப்பவன்; மிகுந்த தேஜஸ்ஸூடையவன்; தன் கிரணங்களால் உலகங்களை ரக்ஷிப்பவன்; தேவஸ்வபாவரும் அஸுரஸ்வபாவருமான ஸமஸ்த லோகங்களையும் தன் கிரணங்களால் வெயிலையும் மழையையும் விளைத்து ரக்ஷிப்பவன். இவன் ஸமஸ்த லோகங்களையும் சரீரமாகவுடைய பரமாத்மாவாகையால் இவனே ப்ரஹ்மாவும் விஷ்ணுவும் சிவனும் குமாரனும் ப்ரஜாபதிகளும்

---

1 இங்கு 'ஸர்வதேவாத்மகோ ஹ்யேஷ தேஜஸ்வீ ரஶ்மிபாவந:। ஏஷ தேவாஸுரகணாந் லோகாந் பாதி கபஸ்திபி:' என்பது மூலம். (ஸர்வதேவாத்மக:) ஸமஸ்த தேவதைகளையும் சரீரமாகவுடையவன். 'யஸ்ஸர்வேஷு தேவேஷு திஷ்டந்' என்று ஶ்ருதி. தேஜஸ்வீ) பிறரைக் கீழ்ப்படுத்தும் ஸாமர்த்ய முடையவன் (ரஶ்மி பாவந:)ரஶ்மிகள் நித்யமுக்தர். நித்யமுக்தர்களுக்கு ஸத்தையை நிர்வஹிப்பவன். 'நித்யர்களாவார் பகவானுடைய நித்யேச்சையால் ஸத்தை உண்டாகப் பெற்றவர். 'நித்யம் ப்ரியாஸ் தவது கேசவதேஹி நித்யா:'என்று பெரியோர்களும் கூறினர். (ஏஷதேவாஸுரகணாந் லோகாந் பாதி கபஸ்திபி:) 'அக்நௌ ப்ராஸ்தாஹுதிஸ் ஸம்யகாதித்யமுபதிஷ்டதே। ஆதித்யாஜ் ஜாயதே வ்ருஷ்டிர் வ்ருஷ்டேரந்நம் தத: ப்ரஜா:' இத்யாதிகளிற் சொல்லியபடி மழைபெய்து அதன் மூலமாய் அன்னதானஞ் செய்தும் 'தேவாந் பாவயதாநேந தே தேவா பாவயந்து வ:' என்று புரோடாசாதிதானஞ் செய்தும் ஸர்வத்தையும் ரக்ஷிப்பவனென்று பொருள். இங்கு 'யாபிராதித்யஸ் தபதி ரஶ்மிபிஸ் தாபி: பர்ஜந்யோ வர்ஷதி' இத்யாதிஶ்ருதியின்படி கிரணங்களால் மழைபெய்து அதனால் அன்னத்தை விளைத்து ரக்ஷிப்பானென்று கருத்து. ஸூர்யகிரணங்கள் மூலமாய் மழைபெய்வது ஸர்வேஶ்வரனுடைய காரியமே.

தேவேந்த்ரனும் குபேரனும் ம்ருத்யுவும் யமனும் சந்த்ரனும் வருணனும் பித்ரு தேவதைகளும் அஷ்டவஸுக்களும் ஸாத்யர்களும் அஶ்விகளும் ஆவஹம் முதலிய ம்ருத்கணங்களும் மனுவும் பூதலோக ஸஞ்சாரியாகிய வாயுவும் அக்னியும் ப்ரஜைகளின் சரீரத்திலுள்ள ப்ராணவாயுவும் வஸந்தாதிருதுக்களை உண்டுபண்ணும் ப்ரபாகரனுமாவான். [1] நீ அதிதிக்குப் பிள்ளையாகப்பிறந்த

---

ஆதித்ய ஹ்ருதய ஸ்தோத்ரம்.

1. 'ஆதித்யஸ் ஸவிதா ஸூர்யঃ வகঃ பூஷா கஹஸ்திமாந்। ஸுவர்ணஸத்ருஶோ பாநுர் ஹிரண்யரேதா திவாகரঃ' என்பது மூலம். 'ஸுபர்ணஸ் தபகோ பாநுঃ' என்று பாடாந்தரம். இங்ஙனம் ஆதித்ய மண்டலாந்தர்வர்த்தியான பரமாத்ம ஸ்வரூபத்தை உபதேசித்து அவன் விஷயமான ஸ்தோத்ரத்தை உபதேசிக்கிறார். (ஆதித்யঃ) அதிதிக்குப் பிள்ளையாகப் பிறந்தவன். அல்லது அகண்டமான பூமண்டலத்திற்குப் பதியானவன் ஆதித்யன் (ஸவிதா) ஜகத்தைப் படைத்தவன். (ஸூர்யঃ) ஜனங்களைக் கார்யங்களில் தூண்டுமவன். அல்லது 'ஸூர்ய ஆத்மா ஜகதஸ் தஸ்துஷஶ்ச' என்னும் ஶ்ருதியின்படி ஸ்தாவர ஜங்கமஸ்வரூபமான ஜகத்திற்கு அந்தர்யாமியாய் ஸூர்யனென்று கூறப்படுமவன் (வகঃ) லோகத்தின் உபகாரத்திற்காக ஆகாயத்தில் ஸஞ்சரிப்பவன், (பூஷா) மழையினால் ஜகத்தைப் போஷிப்பவன். (கஹஸ்திமாந்) கிரணங்களையுடையவன், (ஸுவர்ணஸத்ருஶঃ) பொன்னிறமுடையவனாகையால் பொன் போலிருப்பவன். 'ஹிரண்யஶ்மஶ்ருர் ஹிரண்யகேஶ ஆப்ரணவாத் ஸர்வ ஏவ ஸுவர்ணঃ) பொன் நிறமான மீசையும் பொன் நிறமான தலைமயிர்களும் உடையவன். நகம் முதற்கொண்டு சரீரம் முழுவதும் பொன்னிறமாயிருப்பவன்) என்று ஶ்ருதி. (பாநுঃ) ப்ரகாசிப்பவன். (ஹிரண்யரேதাঃ) ஸ்வர்ணத்தை ரேதஸ்ஸாக உடையவன், ஸ்வர்ணமயமான ப்ரஹ்மாண்டத்தைப் படைத்தவன், (திவாகரঃ) பகலில் ப்ராணியின் சேஷ்டையை நடத்துமவன். இங்ஙனம் கோவிந்தராஜர், (ஆதித்யঃ) எல்லாவற்றையும் க்ரஹிப்பவன், எல்லாவிஷயங்களையும் அநுபவிப்பவனென்று பொருள், (வகঃ) 'யோ அஸ்யாத்யக்ஷঃ பரமே வ்யோமந்'

வன்; ஸமஸ்த பூமண்டலத்திற்கும் ப்ரபு; ஜகத்தையெல்லாம்படைப்பவன்; ஜனங்களைச்செயல்களில்தூண்டுமவன், ஜங்கமஸ்தாவர ரூபமான ஜகத்திற்கெல்லாம் அந்தராத்மாவாயிருப்பவன்; உலகங்களின் உபகாரத்திற்காக ஸூர்யனாகி வெளிச்சங் கொடுத்துக்கொண்டு ஆகாயத்தில் உலாவுந் தன்மையன்; மழைபெய்து லோகங்களையெல்லாம் போஷிப்பவன்; சிறந்த கிரணங்களையுடையவன்; ஸ்வர்ணத்தோடொத்த நிறமுடையவன்; ப்ரகாசிக்குந் தன்மையன்; ஸ்வர்ணமயமான ரேதஸ்ஸையுடையவன்; (ஸ்வர்ணமயமான ப்ரஹ்மாண்டத்தைப் படைத்தவன்); பகலில் ப்ராணிகளின் சேஷ்டையை நடத்துமவன்; பகலை விளைவிப்பவன்.[1] பச்சைக்குதிரைகளமைந்தவன்; ஆயிரங்

---

என்கிற ஶ்ருதியின்படி பரமாகாசமெனப்படும் பரமபதத்தில் வஸிப்பவன். (கபஸ்திமாந்) கபஸ்தியென்று லக்ஷ்மியைச் சொல்லுகிறது. லக்ஷ்மியோடு என்றும் இணை பிரியாதிருப்பவன், (ஸுபர்ண:) அழகான இறகுகளுடையவன். அதாவது—பரமாத்மா. 'த்வா ஸுபர்ணா ஸயுஜா ஸகாயா' என்கிற ஶ்ருதியில் ஜீவாத்மாவையும் பரமாத்மாவையும் இரண்டு பக்ஷிகளாகச் சொல்லிற்று. அதைக் கருதி இங்கும் பக்ஷியின் தன்மை சொல்லப்பட்டதென்று கருத்து. (தபந:,) 'ஸுக ஸுப்த: பரந்தப:' என்கிறபடியே இருந்தபடியே இருந்தும் சத்ருக்களைத் தபிக்கச் செய்பவன். 'ஸுவர்ணஸத்ருஶ:' என்று கோவிந்தராஜர் பாடம். அதன் பொருள் முன்னமே கூறப்பட்டது (திவாகர:) அஜ்ஞானத்தைப் போக்கிப் பகல் வெளிச்சம் போன்ற ஜ்ஞானத்தை விளையச் செய்பவன், இங்ஙனம் மஹேஶ்வரதீர்த்தர்.

1 'ஹரிதஶ்வஸ்ஸஹஸ்ரார்ச்சிஸ் ஸப்தஸப்திர் மரீசிமாந்। திமிரோந்மதந: ஶம்பு: த்வஷ்டா மார்த்தண்ட அம்ஶுமாந்' (ஹரிதஶ்வ:) பச்சைக் குதிரைகளுடையவன் (ஸஹஸ்ரார்ச்சி:) ஆயிரங் கிரணங்களை யுடையவன். (அதாவது 'அவிஜ்ஞாதா ஸஹஸ்ராம்ஶு:' என்றாற்போல் அபாரமான ஜ்ஞானங்களையுடையவன். இங்கு ஜ்ஞானத்தைக் கிரணமாகச் சொல்லுகிறது. கிரணம் போல் ஜ்ஞானமும் தெரியாததைத் தெரிவிக்கிறதாகையால் ஜ்ஞானத்தைக் கிரணசப்தத்

கிரணங்களையுடையவன்; ஏழுபெயர்களைப்பூண்டகுதிரை

தால் சொல்லுகிறது. இங்ஙனமே பகவத் குணதர்ப்பணமென்னும் ஸஹஸ்ரநாமபாஷ்யத்தில் பட்டர் நிர்வஹித்தருளினர். இதனுல் ஸர்வஜ்ஞனென்று கூறப்பட்டது.) (ஸப்தஸப்தி:) ஏழு பெயர்களைப் பூண்ட குதிரையுடையவன். 'ஏகோ அஶ்வோ வஹதி ஸப்தநாமா' என்று ஶ்ருதி சொல்லுகிறது. (மரீசிமாந்) மிகுந்த ப்ரகாசமுடையவன். (திமிரோந்மதந:) இருட்டைப் போக்கடிப்பவன். [ஸூர்யன் மூலமாய் உலகத்தின் இருட்டைப் போக்கடிப்பவனென்கை.] (ஶம்ஹாரஸூ) கத்தை விளைவிப்பவன். (த்வஷ்டா) ஸமஸ்த உருவத்தையும் பாழ் செய்பவன். ஸர்வத்தையும் ஸம்ஹரிப்பவனென்கை. (மார்த்தண்ட:-ம்ருதே அண்டே ஜாதோமார்த்தண்ட:) மரணம் அடைந்த அண்டத்தில் பிறந்தவன். அண்டத்தை யெல்லாம் ஸம்ஹரித்த பின்பு மீளவும் அண்டத்தைப் படைக்கும் பொருட்டுத் தோன்றினவன் (அம்ஶுமாந்) கிரணங்களையுடையவன். ப்ரகாசிப்பவனென்கை. இங்ஙனம் கோவிந்தராஜர். (ஹரிதஶ்வ:) இங்கு அஶ்வஶப்தம் வாஹனத்தைச் சொல்லுகிறது, 'ஹரதி மந இதி ஹரித்' மனேஹரமான வாஹன முடையவன். (அதாவது வடிவின் அழகினுலும் வேதஸ்வருபவனுயிருக்கை முதலிய மஹிமையாலும் குணஸமூஹங்களாலும் மனத்திற்கினியனுன கருடனை வாஹனமாக உடையவன்.) (ஸஹஸ்ரார்ச்சி:) அர்ச்சிஶ்ஶப்தம் பூஜைக்கிடமான மங்கள குணங்களைச் சொல்லுகிறது. கணக்கில்லாத கல்யாண குணங்களையுடையவன். (ஸப்தஸப்தி:) ஏழு பெயர்கள் பூண்ட குதிரையுடையவன். இதனுல் கல்கி அவதாரம் ஸூசிப்பிக்கப்பட்டது. (மரீசிமாந்) 'ம்ரியந்தேஶத்ரவோऽநேந மரீசி: சக்ரம்; சத்ருக்களை உருமாய்க்கும்படியான ஸுதர்சனமென்னும் சக்ரம், அப்படிப்பட்ட சக்ராயுதத்தையுடையவன், இந்தச் சக்ரம் மற்றை ஆயுதங்களுக்கும் உபலக்ஷணமாகையால் சங்க சக்ர கதைகளைத் தரித்திருப்பவனென்கை, (திமிரோந்மதந:) ஜ்ஞானேத்பத்திக்கு ப்ரதிபந்தகமான தோஷத்தைப் போக்குமவன். 'ஹ்ருதயஸ்யோ ஹ்யஹமிராணி வியுநோதி ஸுஹ்ருத் ஸதாம்' என்னும் ஸ்ம்ருதி ப்ரமாணம். (த்வஷ்டா) க்ஷத்ரியர்களோடுகூடின பூமியை மூவேழுதடவை நாசஞ் செய்தவன். இதனுல் பரசுராமாவதாரம் கூறப்பட்டது. (மார்த்தண்ட:) அசேதனமான ப்ரஹ்மாண்டத்

யுடையவன்; மிகுந்த ப்ரகாச முடையவன்; இருட்டைப் போக்குமவன்; ஸூகத்தை விளைவிப்பவன்; ஸம்ஹாரஞ் செய்பவன்; எல்லாவற்றையும் ஸம்ஹாரஞ் செய்தபின்பு மீளவும் முன்போலவே அந்த ப்ரபஞ்சத்தை ஸ்ருஷ்டிக் கும்பொருட்டுத் தோற்றுமவன்; மிகுதியும் ப்ரகாசிக்குந் தன்மையன்;[5] ஸ்வர்ணமயமான அண்டத்திற்குள் புகுந் திருப்பவன்; (ப்ராணிகளுக்கு ஹிதஞ்செய்வதில் ஊக்க முடையதும் அழகியதுமான மனமுடையவன்); ஸம் ஸாரத்தில் விளைகிற ஆத்யாத்மிகம் முதலிய தாபங்க

---

தை ஜீவிக்கச் செய்பவன். (அ0ஶுமாந்) உள்ளும் புறமும் வ்யாபித் திருப்பவன். இங்கு 'அந்தர் வஹிஶ்ச தத்ஸர்வம் வ்யாப்ய நாராயண: ஸ்யித:, என்னும் ஶ்ருதி ப்ரமாணம் இங்ஙனம் மஹேஶ்வரதீர்த்தர்.

1 'ஹிரண்யகர்ஹஶ் ஶிஶிரஸ்தபநோ ஹாஸ்கரோ ரவி:। அக்நி கர்ஹோஉதிதே: புத்ரஶ் ஶம்வஶ் ஶிஶிரநாஶந:' (ஹிரண்யகர்ஹ:) ஹிர ண்யமாவது 'தத்ண்டமஹவத் ஹைமம்ஸஹஸ்ராம்ஶுஸமப்ரஹம்' என்ற மனுஸ்ம்ருதியின்படி ஸ்வர்ணமயமான ப்ரஹ்மாண்டம். அதன் கர்ப் பத்திலிருப்பவன். ப்ரஹ்மாண்டத்தின் இடையிலிருப்பவன் (ஶிஶிர:) ஆத்யாத்மிக ஆதிபௌதிக ஆதிதைவிகங்களென்கிற மூன்று தாபங்க ளையுடையவர்க்கும் இளைப்பாறும் ஸ்தானமாயிருப்பவன் (தபந:) தா பத்தைவிளைவிப்பவன். (ஹாஸ்கர:)கிரணங்களை வீளைப்பவன் (ரவி:) அனைவராலும் ஸ்தோத்ரஞ் செய்யப்பட்டவன். (அக்நிகர்ஹ:) பக லில் அக்னியை உட்கொண்டிருப்பவன். 'உத்யந்தம் (வாவாதித்யமக்நி ரநு ஸமாரோஹதி' என்று ஶ்ருதி (அதிதே: புத்ர:) அதிதிக்குப் புத்ரனாக அவதரித்தவன். (ஶம்வ:) ஸாயங்காலத்தில் தானே சாந்தி அடைபவன். (ஶிஶிரநாஶந:) பனியை நாசஞ் செய்பவன். கோவிந்த ராஜர் (ஹிரண்யகர்ஹ:) ஹிரண்யமாவது ஸகல ஜகத்தையும் விளைப் பதான ஸமஷ்டி ஜீவஸமூஹம். அதை உள்ளே உடையவன் (தபந:) தன்னைப்பற்றினாற்கு விரோதஞ்செய்பவர்களைத் தபிக்கச்செய்பவன். (ஹாஸ்கர:) ஸமஸ்தவஸ்துக்களையும் ஸாக்ஷாத்கரிப்பதற்குக் காரணமா யிருப்பவன் (ரவி:) யோவைவேதாம்ஶ்ச ப்ரஹிணோதி தஸ்மை' என் னும் ஶ்ருதியின்படி ப்ரஹ்மாவுக்கு வேதங்களை உபதேசிப்பவன்.

ளால் வருந்தினவர்களுக்குக் குளிர்ந்து இளைப்பாறு மிடமாயிருப்பவன்; அவரது விரோதிகளைத் தபிக்கச் செய்யுந் தன்மையன்; ஜனங்களின் ஸௌக்யத்திற்காகக்கிரணங்களை உலகங்களில் பரப்புந்தன்மையன்; இங்ஙனம் மஹோபகாரகனாகையால் அனைவராலும் புகழப்படுந்தன்மையன்; பகலில் அக்னியை உள்ளே உடையவன்; அதிதியின் பிள்ளையாய் அவதரித்தவன்; ஸாயங்காலத்தில் அஸ்தமிக்குந் தன்மையன் பனியைப் போக்குமவன். [1] நீ ஆகாயத்திற்கு நாயகன் (பரமாகாசமெனப்படுகிற பரம பதத்திற்கு நாதன்); ராஹு

(அக்நிகர்பஃ) அக்னியாவது—காலாக்னிருத்ரன். அவனை உள்ளேயுடையவன், ருத்ரனைப் பிறப்பித்தவன். 'நாராயணாத் ருத்ரோ ஜாயதே' என்று ஶ்ருதி. (அதிதேஃபுத்ரஃ) அதிதியின் புதல்வனாகிய இந்த்ரனைப் பாதுகாப்பவன். (ஶம்வஃ-ஶம் ஸுகம்வே ஆகாஶே ஹ்ருதயாகாஶேயஸ்ய ஸ ஶம்வஃ) ஹ்ருதயாகாசத்தில் ஸுகமுடையவன். நிரவதிகமான ஆநந்த முடையவனென்கை. (ஶிஶிரநாஶநஃ) ஸூர்யரூபனாகிப் பனியை நாசஞ் செய்பவன். மஹேஶ்வரதீர்த்தர்.

1 'வ்யோமநாதஸ்தமோபேதீ ருக்யஜுஸ்ஸாமபாரகஃ| கநவ்ருஷ்டிரபாம்மித்ரோ விந்த்யவீதிப்லவங்கமஃ' 'விந்த்யவீதிஃ ப்லவங்கமஃ' என்றும் பாடம். (வ்யோமநாதஃ) பரமாகாசத்திற்கு நாதன். பரமபதநாதனென்கை. (தமோபேதீ) ராஹுவைப் பேதிக்கும் ஸ்வபாவமுடையவன். ருக்யஜுஸ்ஸாம பாரகஃ) ருக்யஜுஸ்ஸாம வேதங்களின் கரையறிந்தவன். 'ருக்பிஃ பூர்வாஹ்ணே திவி தேவ ஈயதே' 'யஜுர்வேதே திஷ்டதி மத்யே அஹ்நஃ, ஸாமவேதேநாஸ்தமயே மஹீயதே' 'வேதைரஶூந்யஸ் த்ரிபிரேதி ஸூர்யஃ' என்ற ஶ்ருதிகள் இங்கு ப்ரமாணம். (கநவ்ருஷ்டிஃ) பெரிய மழை பெய்பவன். 'அக்நௌ ப்ராஸ்தாஹுதிஸ் ஸம்யகாதித்யமுபதிஷ்டதே ஆதித்யாஜ்ஜாயதே வ்ருஷ்டிர் வ்ருஷ்டேரந்நம் ததஃ ப்ரஜாஃ' என்று ஸ்ம்ருதி. ஆனதுபற்றியே (அபாம் மித்ரஃ) ஜலங்களுக்கு நண்பனாயிருப்பவன். (விந்த்யவீதிஃ) தக்ஷிணாயனத்தில் விந்த்யத்தை ஸஞ்சாரமார்க்கமாகக் கொண்டவன். (ப்லவங்கமஃ) தெப்பம்போல் போகுமவன். விந்த்யவீ

வைப் பிளக்குந் திறமையுடையவன்; ருக்வேதம் யஜுர் வேதம் ஸாமவேதம் இவற்றின் கரையறிந்தவன்; கனத்தமழை பெய்யுந் தன்மையன்; ஜலத்திற்கு நண்பன்; தக்ஷிணாயனத்தில் விந்த்யத்தின் வழியாய் ஸஞ்சரிப்பவன்; வெகுவேகமாகச் செல்பவன் ; (ஆகாயமார்க்கத்தில் விரைவாகப் போகுமவன்). [1] வெயில்காயுந்தன்மையன்; மண்டலமுடையவன் உதிக்கும்பொழுது பொன்னிறமுடையவன்; மத்யாஹ்னத்தில் எல்லோரையும் தபிக்

யீப்லவங்கம:)என்று ஒரே பதமாய்ப் பாடமானபோது விந்த்யவீதியாவது ஆகாயமார்க்கம். அதில் வேகமாகப் போகுமவனென்று பொருள். இங்ஙனம் கோவிந்தராஜர். (வ்யோமநாய:) ஆகாயத்தைச்செய்தவன். தாமஸாஹங்காரரூபமாய் ஆகாயத்தை ஸ்ருஷ்டித்தவன். 'ஆத்மந ஆகாஶஸ்ஸம்பூத:' என்று ஶ்ருதி ப்ரமாணம்.(தமோபேதீ) பக்தர்களின் தமோகுணத்தைப் போக்குமவன். (ருக்யஜுஸ் ஸாமபாரக:) ஸமஸ்த வேதங்களுக்கும் பர்யவஸான பூமியாயிருப்பவன். 'வேதைஶ்ச ஸர்வைரஹமேவவேத்ய:' 'யேச வேதவிதோ விப்ரா யேசாத்யாத்மவிதோ ஜநா:। தே வதந்தி மஹாத்மாநம் க்ருஷ்ணம் தர்மம் ஸநாதநம்' இது முதலியவை ப்ரமாணம். (கநவ்ருஷ்டி:) ஸமஸ்த கர்மங்களுக்கும் பலன் கொடுக்கையாகிற பெருமழையுடையவன். 'அஹம்ஹி ஸர்வயஜ்ஞாநாம் போக்தாச ப்ரபுரேவச' 'பலமத உபபத்தே:' இது முதலியவை இங்கு ப்ரமாணம். (அபாம் மித்ர:) மஹாஸமுத்ரத்தில் சயனித்துக் கொண்டிருப்பவனாகையால் ஜலத்திற்கு நண்பனாயிருப்பவன். 'யமந்தஸ் ஸமுத்ரே கவயோ வயந்தி' இத்யாதிகள் ப்ரமாணம். (விந்த்யவீதீப்லவங்கம:) விந்த்யம்போல் புகக்கூடாத வீதியில் அதாவது ஸுஷும்னை யென்னும் நாடியின் வழியாய் அழைத்துக்கொண்டு போகுமவன். 'ஸஏநாந் ப்ரஹ்ம கமயதி' என்று ஶ்ருதியும் 'ஹார்தாநுக்ருஹீதஶ் ஶதாதிகயா' என்ற ஸூத்ரமும் இங்கு ப்ரமாணம். மஹேஶ்வரதீர்த்தர்.

1 ஆதபீ மண்டலீ ம்ருத்யு: பிங்கலஸ் ஸர்வதாபந:। கவிர் விஶ்வோ மஹாதேஜா ரக்தஸ் ஸர்வபவோத்பவ:' என்பதுமூலம்.(ஆதபீ) வெயில்காய்பவன். (மண்டலீ) வட்டமானபிம்பத்தையுடையவன்.(ம்ரு

கச்செய்பவன்; வ்யாகரணம் முதலிய ஸமஸ்த ஶாஸ்த்ரங்களையும் நடப்பித்தவன்; அனைத்திற்கும் நிர்வாஹகன்; மிகுந்த தேஜஸ்ஸுடையவன்: எல்லோரிடத்திலும் மிகுந்த ப்ரீதியுடையவன்; அனைவரும் ஸம்

---

த்யு:) விரோதிகளை நிவ்ருத்தி செய்பவன், (பிங்கல:')உதயகாலத்தில் பொன்வர்ணமுடையவன். (ஸர்வதாபந:) மத்யாஹ்னத்தில் எல்லோரையும் தபிக்கச் செய்பவன். (கவி:) பண்டிதன். வ்யாகரணம் முதலிய ஸமஸ்த சாஸ்த்ரங்களையும் வெளியிட்டவனென்கை. (விஶ்வ:) எல்லாவற்றையும் நிர்வஹிப்பவன். (மஹாதேஜா:) மிகுந்த தேஜஸ்ஸுடையவன். (ரக்த:) எல்லோரிடத்திலும் ப்ரீதியுடையவன். (ஸர்வபவோத்பவ:) அனைவருடைய ஸம்ஸாரத்திற்கும் காரணமாயிருப்பவன். இங்ஙனம் கோவிந்தராஜர். (ஆதபீ) 'தப ஆலோசநே' என்னும் தாதுவின்மேல் உண்டான தப சப்தம் இங்கு ஜகத்தைப் படைக்கும் ஸங்கல்பத்தைச் சொல்லுகிறது. (ஆ-தப:) என்றும் மாறாதஸங்கல்பம். (ஆதபீ)அப்படிப்பட்ட ஸங்கல்பத்தையுடையவன். 'யஸ்ய ஜ்ஞாநமயம் தப:' என்னும் ஶ்ருதி ப்ரமாணம். (மண்டலீ) இங்கு மண்டல ஶப்தம் கௌஸ்துபம் முதலிய அலங்காரத்தைச் சொல்லுகிறது. அவற்றையுடையவன். (ம்ருத்யு:) இங்கு ம்ருத்யுசப்தம் ப்ரக்ருதியைச் சொல்லுகிறது. ப்ரக்ருதியைச் சரீரமாகவுடையவனென்கை. 'யஸ்ய ம்ருத்யுஶ் ஶரீரம்' என்று ஶ்ருதி. (பிங்கல:) பிங்கதி மிலதி இதி பிங்கல:—'பிங்கமேலநே' என்று தாது. கலக்குந் தன்மையுடையவன், ஸுஶீலனுக்கே கலக்கை உள்ளது. ஸுஶீலன்—ஸௌஶீல்யகுணமுடையவன். ஸௌசீல்யமாவது—பெருந்தன்மையுடையவர் தமது பெருமையைப் பாராமல் தாழ்ந்தவருடன் புரையறக் கலக்கை. (ஸர்வதாபந:) ஒரேதடவையில் ஸமஸ்த அண்டங்களையும் ஸம்ஹாரஞ் செய்பவன். (கவி:) அறியவேண்டியவற்றை யெல்லாம் அறிந்தவன் 'யஸ்ஸர்வஜ்ஞஸ் ஸர்வவித்' என்று ஶ்ருதி. (விஶ்வ:)எல்லாவற்றையும் சரீரமாகவுடையவன்; எல்லாவற்றிலும் வ்யாபித்திருப்பவனென்கை. 'விஶ்வமேவேதம் புருஷ:' என்று ஶ்ருதி. (மஹாதேஜா:) பிறரைக் கீழ்ப்படுத்தும் ஸாமர்த்யம் நிரவதிகமாயிருக்கப் பெற்றவன். (ஸர்வபவோத்பவ:)ஸமஸ்தமான கார்ய வர்க்கங்களுக்கும் காரணமாயிருப்பவன். மஹேஶ்வரதீர்த்தர்.

ஸாரத்தை அனுபவிப்பதற்குக் காரணமா யிருப்பவன்; [1] நக்ஷத்ரங்கள் க்ரஹங்கள் தாரகைகள் இவற்றிற்கு அதிபதி. நீ ஜகத்தையெல்லாம் நிலை நிறுத்துந்தன்மை யன். நீ அக்னிமுதலிய தேஜஸ்ஸுக்களைக் காட்டிலும் சிறந்த தேஜஸ்ஸுடையவன். நீ பன்னிரு மூர்த்திகளு டையவன். இப்படிப்பட்ட உனக்கு நமஸ்காரம் [2] பூர்வ

1 'நக்ஷத்ரக்ரஹதாராணுமயிபோ விஶ்வபாவநः। தேஜஸாமபி தேஜஸ்வீ த்வாதஶாத்மந் நமோஉஸ்து தே' 'த்வாதஶாத்மாநமோ உஸ்துதே' என்று பாடங்கொள்வதாகத் தெரியவருகின்றது (நக்ஷத்ர க்ரஹதாராணுமயிபः) நக்ஷத்ரங்கள் அஶ்வின்யாதிகள் க்ரஹங்கள் ஸூர்யன்சந்த்ரன் முதலியவை, தாரைகள்மற்றைநக்ஷத்ரங்கள், இவற் றிற்கு அதிபதியாயிருப்பவன். (விஶ்வபாவநः)எல்லாவற்றையும் நிலை நிறுத்துவோன். (தேஜஸாமபி தேஜஸ்வீ) அக்னி முதலியவர்களின் தேஜஸ்ஸைக் காட்டிலும் மேலான தேஜஸ்ஸுடையவன். (த்வா தஶாத்மா) பன்னிரண்டு மூர்த்திகளுடையவன். 'இந்த்ரோ யாதா ஹ:ः பூஷா மித்ரோऽத வருணோऽர்யமா। அர்ச்சிர் விவஸ்வாம்ஸ்த்வ ஷ்டாச ஸவிதா விஷ்ணுரேவச' என்று த்வாதச மூர்த்திகள். நீ இப் படிப்பட்டவன். உனக்கு நமஸ்காரமென்று கூட்டுக. கோவிந்தராஜர். (நக்ஷத்ரக்ரஹதாராணுமயிபः) நக்ஷத்ர க்ரஹ தாரைகளுக்கு அந்தர்யா மியாயிருப்பவன். 'யஶ் சந்த்ரதாரகமந்தரோ யமயதி' என்று ஶ்ருதி. (விஶ்வபாவநः) அனைத்தும் நிலைநிற்பதற்குக் காரணமாயிருப்பவன். 'த்யௌஸ்ஸசந்த்ரார்க்க நக்ஷத்ரம் வம் திஶோ ஹூர் மஹோதயிः। வாஸுதேவஸ்ய வீர்யேண வித்ருதானி மஹாத்மநः' என்று ப்ரமா ணம். (தேஜஸாமபி தேஜஸ்வீ) மேலான தேஜஸ்ஸுடையவன். 'யே நஸூர்யஸ்தபதி தேஜஸேத்தः' என்று ஶ்ருதி. 'ஸூர்யஸ்யாபி ஹவேத் ஸூர்யः' என்று ப்ரமாணம் காண்க. (த்வாதஶாத்மந்) த்வாதசாதித்யர்களின் மண்டலத்தின் இடையிலிருப்பவனே! உன க்கு நமஸ்காரம். மஹேஶ்வர தீர்த்தர்.

2. 'நமः பூர்வாய கிரயே பஶ்சிமே கிரயே நமः। ஜ்யோதிர் கணாநாம் பதயே திநாதிபதயே நமः' (பூர்வாய கிரயே) கீழ்த்திக்கி லுள்ள உதயபர்வதத்தில் உதிப்பவனாகையால் அந்த ஸம்பந்தத்தைக்

திக்கிலுள்ள பர்வதத்தைச் சேர்ந்த உனக்கு நமஸ்காரம். மேற்குத்திக்கிலுள்ள பர்வதத்தைச் சேர்ந்த உனக்குநமஸ்காரம். ஜ்யோதிஸ் ஸமூஹங்களுக்குப் பதியான உனக்கு நமஸ்காரம். பகலுக்கு அதிபதியான உனக்கு நமஸ்காரம். [1]ஜயிக்குந் தன்மையுள்ள உனக்கு நமஸ்காரம். ஜயத்தையும் க்ஷேமத்தையும் விளைவிப்பவனாகிய உனக்கு நமஸ்காரம். பச்சைக் குதிரையுடைய உனக்கு நமஸ்காரம். ஆயிரம் கிரணங்களையுடைய உனக்கு அடிக்கடி நமஸ்காரம். ஆதித்யனுக்கு நமஸ்காரம். தன்னைப் பற்றாதவர்க்கு பயங்கரமாயிருக்கிற உனக்கு நமஸ்காரம். ப்ராணிகளைப்பலவாறு தூண்டுகிற உனக்கு நமஸ்காரம். போகிறவர்களில் தன்னைக் காட்டிலும்

---

கொண்டு அந்தப்பர்வதமாகவே சொல்லுகிறது. (பஸ்சிமே கிரயே) என்ற இடத்திலும் இப்படியே. கோவிந்த ராஜர். (பூர்வாய கிரயே) ஸ்ரீவிஷ்ணு புராணத்திற் சொன்ன அந்தந்தப் பர்வதங்களுக்கு அந்தர்யாமியாயிருப்பவனுக்கு. (ஜ்யோதிர் கணாநாம்பதயே) முக்தர்களுக்கு ஸ்வாமியாயிருப்பவனுக்கு. ஸூர்யனுக்குப் பர்யாயமான நாமங்களெல்லாம் அவனுக்கு அந்தர்யாமியான பரமாத்மாவினிடம் முடிகின்றன வென்னும் அபிப்ராயத்தினால் (தினாதிபதயே) இத்யாதிகள் சொல்லப்பட்டன. மஹேஸ்வர தீர்த்தர்.

1. 'ஜயாய ஜயபத்ராய ஹர்யஸ்வாய நமோநம:। நமோநமஸ் ஸஹஸ்ராம்ஸோ ஆதித்யாய நமோநம:। நம உக்ராய வீராய ஸாரங்காய நமோ நம:। நம: பத்மப்ரபோதாய மார்த்தண்டாய நமோ நம:। ப்ரஹ்மேஸாநாச்யுதேஸாய ஸூர்யாயாதித்யவர்ச்சஸே। பாஸ்வதே ஸர்வபக்ஷாய ரௌத்ராய வபுஷேநம:' (ஜயாய)தன்னை உபாஸிப்பவர்க்கு ஜயம் விளைப்பவனான உனக்கு நமஸ்காரம் அல்லது ஜயஸீலனாகிய உனக்கு நமஸ்காரம்.(ஜயபத்ராய) ஜயத்தையும்க்ஷேமத்தையும் கொடுக்கிற உனக்கு நமஸ்காரம் (ஹர்யஸ்வாய) பச்சைக்குதிரைகளையுடைய உனக்கு. இங்கு ஸ்தோத்ரமாகையால் புனருக்தியென்று சிந்திக்கலாகாது. புனருக்தியாவது சொன்னதையே மீளவும் சொல்லுதல். ஸஹஸ்ராம்ஸு ஸப்தத்திற்கும் ஆதித்யஸப்தத்திற்கும்

சிறந்தவன் எவனும் இல்லாதபடி மிக வேகத்துடன் போகிற உனக்கு அடிக்கடி நமஸ்காரம். தாமரைமலர்களை மலரச்செய்யுந் தன்மையுள்ள உனக்கு நமஸ்காரம். ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹார கர்த்தாக்களான ப்ரஹ்ம விஷ்ணு ருத்ரர்களுக்கும் ப்ரபுவான உனக்கு நமஸ்காரம். ப்ரஹ்மருத்ரர்களை எப்படிப்பட்ட ஆபத்திலுங்

---

முன்போலவே பொருள், (உக்ராய) தன்னைப் பற்றாதார் விஷயத்தில் உக்ரமாயிருக்கிற உனக்கு, (வீராய) 'விவியம் ஈரயதி இதி வீரঃ' பலவாறு ப்ராணிகளைத் தூண்டுகின்ற உனக்கு, (ஸாரங்காய) 'ஸாரம் ஸீக்ரம் கச்சதி இதி ஸாரங்கঃ' சீக்ரமாகப் போகின்ற உனக்கு. அரை நிமிஷத்தில் ஆயிரம் யோஜனைகள் போவானென்று புராண ப்ரஸித்தி. (ப்ரஹ்மேஸாநாச்யுதேஸாய) ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹார கர்த்தாக்களுக்கும் ஈஸ்வரனான உனக்கு. இங்ஙனம் ஸூர்யனை ஸ்தோத்ரஞ் செய்கிறது. 'அஸாவாதித்யோ ப்ரஹ்ம' என்று ஸ்ருதி. அல்லது ப்ரஹ்மருத்ரர்களுக்கு அச்யுதனான ஈஸ்வரனாகிய உனக்கு எப்படிப்பட்ட ஆபத்துக்களிலும் கைவிடாமல் ரக்ஷிப்பவனென்று பொருள். வேதாபஹார குருபாதக தைத்யபீடாதியான ஆபத்துக்களினின்று விடுவித்துப் பெரியபலன்களைக் கொடுப்பவனென்று கருத்து. (ஆதித்யவர்ச்சஸே) ஆதித்யரூபமான தேஜஸ்ஸையுடைய உனக்கு. (பாஸ்வதே) கிரணங்களையுடைய உனக்கு. (ஸர்வபக்ஷாய) ஸர்வத்தையும் ஸம்ஹரிப்பவனுக்கு. (ரௌத்ராயவபுஷே) ஸம்ஹாரகாலத்தில் ருத்ராகாரமுடைய உனக்கு, கோவிந்தராஜர். (ஜயாய) தடைபடாத பராக்ரமமுடைய உனக்கு. 'ஜயந்தயநேந பக்தாஸ் ஸம்ஸாரமிதி வா ஜயঃ' பக்தர்களை ஸம்ஸாரத்தை ஜயிக்கச்செய்பவனான உனக்கு. (ஜயபத்ராய) தன்னை உபாஸிப்பவர்களுக்கு ரோகபாதி ஜயத்தையும் மங்களத்தையும் கொடுக்கின்ற உனக்கு. (ஹர்யஸ்வாய) ஹரி-குரங்கு. இங்கு ஹனுமானைச் சொல்லுகிறது. ஹனுமானை வாஹனமாகவுடைய உனக்கு. இதனால் ராமாவதாரம் ஸூசிப்பிக்கப்பட்டது. (ஸஹஸ்ராம்ஸோ) இங்கு அம்சுவென்றால் 'மமைவாம்ஸோ ஜீவலோகே ஜீவபூதঃ' என்கிற ஸ்ம்ருதியின்படி ஜீவனைச் சொல்லுகிறது. அனேகமாயிரம் ஜீவராசிகளையுடையவனென்

கைவிடாமல் பாதுகாத்துவருகிற உனக்கு நமஸ்காரம். ஜகத்தையெல்லாம் ஸ்ருஸ்டிப்பவனும் அவற்றையெல்லாம் கர்மத்தில் தூண்டுகிறவனுமாகிய உனக்கு நமஸ்காரம். ஆதித்யனெனப்படுகிற ஸூர்யனுகிற தேஜஸ்ஸை நியமிக்கிற உனக்கு நமஸ்காரம். மிகுந்த ஒளியுடைய உனக்கு நமஸ்காரம். அனைத்தையும் ஸம்ஹாரஞ் செய்கிற உனக்கு நமஸ்காரம். அந்த ஸம்ஹாரகாலத்தில் பயங்கரமான உருவமுடைய உனக்கு நமஸ்காரம். அந்தகாரத்தையும் பனியையும் அழிப்பவனுகிய உனக்கு நமஸ்காரம். தன்னைப்பற்றினருடையசத்ருக்களை அழிக்குந்திறமையுடைய உனக்கு நமஸ்காரம். அளவிடமுடியாத ஸ்வரூபத்தையுடைய உனக்கு நமஸ்காரம். செய்த உபகாரத்தை நெஞ்சிலும் நினையாது பாழ்செய்யும் பாபிஷ்டர்களை அழிக்குந் தன்மையுள்ள உனக்கு நமஸ்காரம். ஜீவனைப்போல் புண்யபாபகர்மங்களுக்குத் தகுந்தபடி ஸுகிப்பதும் வருந்துவதுமாகி ஒளி மழுங்கப்பெற்றிருக்கையில்லாமல் எப்பொழுதும் ஒளியுடன் விளங்குந்

---

னுதல். (ஸாரங்மாய) ஸாரக்ராஹியான உனக்கு, அல்லது ஸாரங்கமென்று ஹம்சத்தைச் சொல்லுமாகையால் ஹம்ஸாவதாரஞ் செய்த உனக்கு. அல்லது—ஸாரமென்றால் ப்ரணவம். அதனுல் ஓதப்படுகிற உனக்கு. (ப்ரஹ்மேஶாநாச்யுதேஶாய) ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரகர்த்தாக்களான த்ரிமூர்த்திகளுக்கும் ஸ்வாமியான உனக்கு. பரப்ரஹ்மம் அத்தகையதாகையால் இங்ஙனம் சொல்லப்பட்டது. 'ஸ்ருஷ்டிஸ்யித்யந்தகரணீம் ப்ரஹ்ம விஷ்ணு ஶிவாத்மிகாம்| ஸஂஜ்ஞாஂயாதி ஹ்ருவாநேக ஏவ ஜநார்தநः'என்று ஸ்ம்ருதி. (ஸர்வபக்ஷாய) ஸமஸ்த யாகங்களிலும் போக்தாவான உனக்கு. அல்லது: ஸர்வத்தையும் ஸம்ஹரிக்கிற உனக்கு. 'யஸ்ய ப்ரஹ்மசக்ஷத்ரஂச உபே பவத ஓதநः' என்று ஶ்ருதி. (ரௌத்ராய வபுஷே) சத்ருஸம்ஹாரத்திற்காக ரௌத்ராகாரம் தரிக்கின்ற உனக்கு. இதனுல் ந்ருஸிம்ஹாவதாரம் கூறப்பட்டது. மஹேஶ்வரதீர்த்தர்.

தன்மையுடைய உனக்கு நமஸ்காரம். ஒளியுடைய வஸ்துக்களனைத்துக்கும் ஒளியைக் கொடுக்கும் ப்ரபுவாகிய உனக்கு நமஸ்காரம். அக்னியின் மூலமாய் யாகங்களில் ஹவிஸ்ஸைப் பெறுகிற உனக்கு நமஸ்காரம், ஜகத்தை யெல்லாம் படைக்கிற உனக்கு நமஸ்காரம். [1] இருட்டைச் சிறிதும் எங்கும் நிற்கவொட்டாமல் போக்குந் திறமையுடைய உனக்கு நமஸ்காரம். (தன்

---

1. 'தமோக்ஞாய ஹிமக்ஞாய ஶத்ருக்ஞாயாமிதாத்மநே! க்ருதக்ஞக்ஞாய தேவாய ஜ்யோதிஷாம் பதயே நம:|| தப்தசாமீகராபாய வஹ்நயே விஶ்வகர்மணே| நமஸ்தமோஅபிநிக்ஞாய ருசயே லோகஸாக்ஷிணே' (தமோக்ஞாய) இருட்டைப்போக்குமவனுக்கு. (ஹிமக்ஞாய) பனியைப் போக்குமவனுக்கு. (ஶத்ருக்ஞாய) ஆஶ்ரிதர்களுடைய சத்ருக்களை அழிப்பவனுக்கு. (அமிதாத்மநே) அளவிறந்த ஸ்வரூபமுடையவனுக்கு. (க்ருதக்ஞக்ஞாய) க்ருதக்னனை அழிப்பவனுக்கு (தேவாய) ப்ரகாசிக்கின்றவனுக்கு. (தப்தசாமீகராபாய) ஸ்வர்ணமயமான புருஷனுக்கு. (வஹ்நயே) அக்னியின் மூலமாக ஹவிஸ்ஸை வஹிப்பவனுக்கு. (விஶ்வகர்மணே) ஸர்வஜகத்துக்களுக்கும் கர்த்தாவான உனக்கு. (லோகஸாக்ஷிணே) லோகங்களுக்கு அந்தர்யாமியாயிருந்து அவற்றின் புண்யபாப கர்மங்களுக்கு ஸாக்ஷியாயிருப்பவனுக்கு நமஸ்காரம் என்று ஒவ்வொன்றிலும் கூட்டிக்கொள்க.

கோவிந்த ராஜர். (ஶத்ருக்ஞாய) சத்ருக்களான இந்த்ரியங்களை நிக்ரஹிப்பவனுக்கு. (அமிதாத்மநே) அபாரமான மஹிமையையுடையவனுக்கு. (தேவாய) ஸ்வயம் ப்ரகாசனான உனக்கு. (விஶ்வகர்மணே) எல்லாம் தன் கார்யமாயிருக்கப் பெற்ற உனக்கு. 'ஸர்வகர்மா ஸர்வகாம:' என்று ஶ்ருதி. (தமோஅபிநிக்ஞாய) அஜ்ஞானத்தை நாசஞ்செய்பவனுக்கு. (ருசயே) சித்தென்னும் தீப்தியுடையவனுக்கு, தீப்தி ப்ரகாசம். (லோகஸாக்ஷிணே) ஸர்வஸாக்ஷியான உனக்கு, நமஸ்காரம். 'ஸர்வதேவாத்மகோ ஹ்யேஷ:' என்பது முதலாக லோகஸாக்ஷிணே' என்பதுவரையில் ஆதித்ய ஹ்ருதய ஸ்தோத்ரநாமங்கள் நூற்றெட்டென்று தெரிகிறது. இங்ஙனம் மஹேஶ்வரதீர்த்தர்

ளைப் பற்றினருடைய அஜ்ஞானமாகிற அந்தகாரத் தைப் போக்கும் தன்மையுடைய உனக்கு நமஸ்காரம்.) சேதனனகிற ஒளியையுடைய உனக்கு நமஸ்காரம். உலகத்திலுள்ள ஜனங்களனைத்துக்கும் அந்தர்யாமி யாயிருந்து அவர் செய்யும் புண்ய பாபகர்மங்களுக்கு ஸாக்ஷியாயிருக்கிற உனக்கு நமஸ்காரம்.

இவனே மஹாப்ரளயத்தில் ஜகத்தை நாசஞ்செய் பவன்; மீளவும் அதையே ஸ்ருஷ்டிப்பவன்; எல்லாவற் றையும் பாதுகாக்கவல்லவன். இவன் கிரணங்களால் உலரச்செய்வான்; வெயில் காய்வான்! மழை பெய்வான்; ஸமஸ்த ப்ராணிகளும் உறங்கும்பொழுது அவற்றில் அந்தர்யாமியாக நிலைநின்று விழித்துக் கொண்டிருப் பான். இவனே அக்னிஹோத்ரமும் அக்னிஹோத்ரஞ் செய்பவர்க்கு விளையும் பயனுமாவான். வேதங்களும் யாகங்களும் யாகங்களின் பயனும் இவனே. மற்றும், உலகத்திலுள்ள ஸமஸ்த கர்மங்களுக்கும் ஸர்வாத்மா வான இந்த ரவியே (ஸூர்ய மண்டலத்தி னிடையி லிருக்கும் பரமபுருஷனே) நியாமகன், ராமா! 'இவன் அவன்' என்று அதிகாரி நியதி இல்லை, எவனயினும் ஆகலாம். ஆபத்துக்களிலும் பற்பல கஷ்டங்கள் வந்த பொழுதும் அரண்ய மார்க்கங்களிலும் மற்ற பயங்கள் விளையும் பொழுதும், இந்த ஸ்தோத்ரத்தை மொழி வானயின், அவன் கெடுதியில்லாமல் ஸுகம் பெறு வான். உன் மனத்தை நிலை நிறுத்தி, தேவதேவனும் ஜகந்நாதனுமாகிய இந்த தேவனை இதனல் பூஜிப்பா யாக. இந்த ஸ்தோத்ரத்தை மூன்றுதரம் ஜபிப்பாயா யின், யுத்தங்களில் ஜயம் பெறுவாய்; மஹாபாஹோ! இந்தக்ஷணமே நீ ராவணனை வதிப்பாய்' என்றனன். இவ்வனம் அகஸ்த்யர் மொழிந்து, தான் வந்தவழியே

போயினர். அப்பொழுது மஹா தேஜஸ்வியாகிய ராமனும் இந்த ஸ்தோத்ரத்தைக் கேட்டவுடனே சோகமெல்லாம் நசிக்கப்பெற்று மிகுதியும் ஸந்தோஷமுற்றுப் பரிசுத்தமான மனத்துடன் ஆசமனஞ் செய்து வீர்யம் மிகப்பெற்று வில்லைப் பிடித்துக்கொண்டு தீரனாக யுத்தத்தில் நின்றனன். அப்பால் ராமன் ராவணனைப் பார்த்து, மனத்தில் ஸந்தோஷம் அடைந்து ஸமஸ்த ப்ரயத்னங்களாலும் அவனை வதிக்க நிச்சயித்து யுத்தஞ் செய்யும்பொருட்டுக் கிட்டினன். [1] அனந்தரம் ஆதித்யன் தன்னை ஸ்தோத்ரஞ் செய்த ராமனைப்பார்த்து மனத்தில் ஸந்தோஷம் அடைந்து அந்த ஸந்தோஷத்தினால் சரீரம் மிகுதியும் மயிர்க்கூச்சலடையப்பெற்று ராக்ஷஸ ராஜனான ராவணனுடைய வதத்தை அனுக்ரஹித்துத் தன் மண்டலத்தினின்று தேவக் கூட்டங்களினிடையில் வந்து நின்று 'ராவணனை வதிக்கத்வரைப்படுவாய்' என்று ராமனுக்குச் சொல்லினன். 2 நூற்றேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

1 மேல் ப்ரஹ்மருத்ராதிகள் அனைவரும் ஒருமிடறாக 'ஹவாந் நாராயணோ தேவ:' இத்யாதிகளால் விஷ்ணுவே ஸர்வஸ்மாத்பரனென்று பரக்கக் கூறியிருக்கின்றனர். இங்கு ஸூர்யனே ஸர்வஸ்மாத்பரனென்று சொல்லப்படுகிறது. இது எப்படி பொருந்துமென்னில்—மதுவித்யையில் ஸூர்யனே ஸர்வஸ்மாத் பரனென்று சொல்லினும் அந்த மேன்மை ஸூர்யனுக்கு அந்தர்யாமியான பரமாத்மாவினிடத்திலேயே வந்து முடிகிறதென்று வ்யாஸமாமுனிவர் பரப்ரஹ்மத்தை அறிவிக்கிற ப்ரஹ்மமீமாம்ஸா சாஸ்த்ரத்தில் மொழிந்தாரல்லவா? அப்படியே இம்மந்த்ரமும் ஸூர்யனுக்கு அந்தர்யாமியான பரமாத்மாவையே மொழிகிறதாகையால் எல்லாம் பொருந்துகின்றது. இங்கு ஸூர்யன் தன் மண்டலத்தை விட்டு யுத்தம் பார்க்க தேவக் கூட்டத்தினிடையில் நின்று ராமனுக்குத் தோற்றி ஸ்தோத்ரத்தின் பலனை அனுக்ரஹித்தானென்று தெரிகிறது.

2 இந்த ஸர்க்கம் சில கோசங்களில் புலப்படவில்லை. ஸ்ரீராமாயணம் முழுவதும் வ்யாக்யானஞ் செய்த கடாரியென்பவன் இந்த

ராவணனுக்கு மரணத்தை அறிவிக்கும்படியான அவசகுனங்கள் தோற்றுதல்.

அங்ஙனம் அந்த ராவணனுடைய ஸாரதி ஸந்தோஷம் அடைந்து அவனுடைய ஆஜ்ஞையின்படி ரதத்தை வேகமாக யுத்தபூமிக்கு ஓட்டினன். அந்த ரதம் சத்ரு ஸைன்யங்களைக் கலக்கி நாசஞ் செய்வது. அது உயர எடுக்கப்பெற்ற பதாகைகளோடு கூடி, [1] கந்தர்வ நகரம்போல் சித்ரமான அலங்காராதிகள் அமைந்து மிகுந்த ஆச்சர்யத்தை விளைப்பதுமாகித் திகழ்ந்தது. பொன்மாலைகள் அமைந்து மிகுந்த வேகமுடையவைகளுமான குதிரைகள பூட்டப்பெற்றிருந்தது; யுத்தக்கருவிகளான தனுஸ்ஸு கவசம் முதலியவை ஸம்ருத்தமாயிருக்கப் பெற்றதும் பலவகைப் பதாகைகளும் த்வஜங்களும் விளங்கப்பெற்றதும் தனது

ஸர்க்கத்திற்கு வ்யாக்யானஞ் செய்யவில்லை. ஆரம்பம் முதல் இந்த க்ரந்தத்தில் சொல்லப்பட்ட நாராயண பரத்வத்திற்கு விருத்தமான ஸூர்யபரத்வமும் இந்த ஸர்க்கத்தில் தோற்றுகிறது. இந்தக் காண்டத்தில் நூற்று முப்பது ஸர்க்கங்களென்று உடாரி கணக்கிட்டிருக்கின்றனன். இந்த ஸர்க்கத்தையும் சேர்த்தால் நூற்று முப்பத்தொன்று ஸர்க்கங்களென்று அவன் கணக்கிட்டிருக்கவேண்டும். அதில்லாமையால் அவன் இந்த ஸர்க்கத்தைச் சேர்க்கவில்லையென்று தெரிகிறது. இங்ஙனம் கோவிந்த ராஜர். ஸூர்யபரத்வம் தோற்றுகிறதென்பது தோஷமாகாது. இவ்வண்ணம் பல இடங்களில் அந்தந்த தேவதைகளைப்பற்றிச் சொல்லுகிற வசனங்களுக்குக் கருத்துக் கூறுவதுபோல் இங்குங் கூறலாம். அங்ஙனமே கீழ்மொழிந்திருக்கிறது. பெரியோர்கள் அனைவரும் ஆதரித்து வருகையாலும் இதை அனைவரும் ஆதரிப்பதே நலம்.

1 கந்தர்வ நகரமாவது—'சித்ரவர்ணம் சித்ரரூபப்ராகாரக்ருஹ கோபுரம்। அலங்க்ருதமநேகாஹைர் விதாநத்வஜதோரணை:। கந்தர்வ நகரம் தந்திரவாஜிக்ஷயயுக் யகருத்। த்ருஶ்யதே சேந் மஹாக்ஷயுக்யமந்

விஸ்தீர்ணத்தினால் ஆகாயத்தை மறைத்து அதை விழுங்குவதுபோல் புலப்படுவதும் பூமியை ஒலிக்கச் செய்துகொண்டு சத்ருஸைன்யங்களை நாசஞ் செய்வதும் தனது ஸைன்யங்களுக்கு ஸந்தோஷம் விளைவிப்பதுமாய் விளங்கிற்று. நரநாதனாகிய ராமன், அங்ஙனம் ராக்ஷஸர் தலைவனாகிய ராவணனுடைய ரதம் மிகுந்த கோஷத்துடன்கூடித் திசைகளை ப்ரதித்வனியெழச் செய்துகொண்டு வேகமாக வரக் கண்டனன். ராமன் தன் சத்ருவான ராவணனுடைய அம்மஹாரதம் கறுத்த குதிரைகள் பூட்டப் பெற்று பயங்கரமான தேஜஸ்ஸுடன் கூடித் தன் பதாகைகளின் வரிசைகள் மின்னற் கொடிபோல் விளங்கவும் தன்னிடத்திலுள்ள தனுஸ்ஸு இந்த்ராயுதம்போல் திகழவும் பெற்று, மேகம் விடாமழை பெய்வதுபோல் பாணதாரைகளைப் பெய்கையால் மேகம்போன்று வருவதைக் கண்டு தன் வில்லை பாலசந்த்ரன்போல் மண்டலாகாரமாக வளையச் செய்து நாணேற்றி, வஜ்ராயுதத்தினடியால் பர்வதம் பிளவு படுங் கோஷம்போன்ற பெருங் கோஷம் உண்டாகும் படி வேகமாக நாணை இழுத்து ஒலிப்பித்துக்கொண்டு இந்த்ர ஸாரதியான மாதலியைப் பார்த்து 'மாதலீ! பகைவனுடைய ரதம் வேகமாக வருகின்றது பார்.

---

யோங்யம யரணீஹ்ஸுஜாம்' (நானாவர்ணமுடையதும் நானாவிதமான ப்ராகாரங்களும் க்ருஹங்களும் பட்டணத்து வாசற்படிகளும் கோபுரங்களும் அமைந்து பலவகை ஒளியுடைய மேல்கட்டுகளாலும் டக்கயங்களாலும் தோரணங்களாலும் அலங்காரமுற்று அழகியதுமாயிருப்பது கந்தர்வநகரம்.) அது புலப்படுமாயின் யானைகளுக்கும் மனிதர்களுக்கும் குதிரைகளுக்கும் நாசம் விளைப்பதான யுத்தம் உண்டாகும் ராஜாக்களுக்கு ஒருவர்க்கொருவர் பெருஞ் சண்டை உண்டாகும் என்று கந்தர்வநகர லக்ஷணம். கோவிந்தராஜர்.

அந்த ராவணன் மிகுந்த வேகத்துடன் அப்ரதக்ஷிண மாக வருகின்றனாகையால் அவனுக்கு யுத்தத்தில் மாண்டு போவதற்கு புத்தி உண்டாயிருப்பதுபோல் தோற்றுகின்றது. ஆகையால் நீ ஏமாறுதலின்றி அப்ர தக்ஷிணகதி இல்லாதிருக்கும்படி நமது ரதத்தைச் சத் ருவுக்கெதிர் முகமாக ஓட்டிக்கொண்டு போவாய். காற் று ஆகாயத்தில் கிளம்பின மேகத்தைப் பாழ்செய்வது போல் நான் இவனை உருமாய்த்து விடுகிறேன். நீ தைன்யமடையாமலும் பராக்கில்லாமலும் மனங்கலங்கா மலும் கண்பார்வை சிதறாமலும் கயிறுகளை இழுப்பது விடுவது முதலியவற்றில் ஊக்கத்துடனிருந்து ரதத்தை விரைவுடன் நடத்துவாயாக. நீ தேவேந்த்ரனது ரதத் தை நடத்திப் பழக்கப்பட்டவனாகையால் உனக்கு இவ் விஷயத்தில் சொல்லவேண்டிய அம்சம் ஒன்றுமே இல்லை. ஆயினும், நான் யுத்தஞ் செய்யப் போகிறேனா கையால் மிகுதியும் மனவூக்கமுற்று உனக்குத் தெரிந்த வற்றையே நினைவு மூட்டுகிறே னிவ்வளவேயன்றிப் புதி தாகக் கற்பிக்கிறேனல்லேன்' என்று மொழிந்தனன். தேவேந்த்ரனுக்கு ஸாரதியும் ஸாரதிகளில் சிறந்தவனு மாகிய அந்த மாதலி ராமன் மொழிந்த அவ்வார்த்தை யைக் கேட்டு மிகுதியும் ஸந்தோஷம் அடைந்து, ரதத் தை ஓட்டினன். அனந்தரம் அம்மாதலி ராவணனு டைய மஹாரதத்தை ப்ரதக்ஷிணஞ் செய்துகொண்டு சக்ரங்களினின்று கிளம்பின ரேணுவால் (தூளியினால்) ராவணனை மறைத்தனன். அப்பால் ராவணன் கோ பித்துக் கண்கள் சிவக்கப்பெற்று உற்றுப் பார்த்துக் கொண்டே தன் ரதத்திற்கு எதிர்முகமாகி நிற்கின்ற ராமனை பாணங்களால் அடித்தனன். மிகவும் தேஜஸ்

வியாகிய ராமன், ராவணன் அங்ஙனம் பரிபவிப்பதைப் பொறுமல் ரோஷத்தினுல் தைர்யத்தை மேன்மேலும் வளர்த்திக்கொண்டு யுத்தத்தில் மாதலி கொண்டு வந்துகொடுத்த மஹாவேகமுடைய இந்த்ர தனுஸ்ஸை யும் ஸூர்யன் போன்ற பாணங்களையும் எடுத்துக் கொண்டனன். ஒருவர்க்கொருவர் எதிர்முகமாகி ஒரு வரையொருவர் வதிக்க விரும்பிப் போராடுகின்றவரும் மதித்த ஸிம்ஹங்களை நிகர்த்தவருமாகிய அவ்விருவர்க் கும் மஹத்தான யுத்தம் நடந்தது. அப்பால் தேவதை களும் கந்தர்வர்களும் ஸித்தர்களும் மஹர்ஷிகளும் ராவணனுடைய நாசத்தை விரும்புமவராகையால் ரதி கர்களான அவ்விருவருடையவும் யுத்தத்தைப் பார்க்க வந்தனர். அனந்தரம் பயங்கரமாயிருக்கையால் மயிர்க் கூச்சலை விளைப்பவையாகி ராவணனுடைய விநாசத் தையும் அதன் மூலமாக ராமனுடைய விஜயத்தையும் அறிவிக்கின்றன உத்பாதங்கள் தோற்றின. ராவண னது ரதத்தின்மேல் பர்ஜன்யன் ரக்தத்தைப் பெய்த னன். உஷ்ணமான சுழற்காற்றுக்கள் அப்ரதக்ஷிணமாக வீசின. கழுகுகள் பெருங்கூட்டமாகக் கூடி ஆகாயத் தில் உலாவிக்கொண்டு ராவணனுடைய ரதம் எவ்வெப் படி போகுமோ அந்தந்த மார்க்கத்தை யெல்லாம் தொடர்ந்து சென்றன. பகலிலுங்கூட லங்கை ஜபாபுஷ் பம்போல் சிவந்த ஸந்த்யையின் காந்தி சூழப் பெற் றிருந்தது. ஆகையால் அதைச்சேர்ந்த பூமி ராத்ரியில் நெருப்புப் பற்றி எரிந்தாற்போல், பகலிலும் எரிவது போல் புலப்பட்டது. இடிகளுடன்கூடிப் பெருங்கொள் ளிகள் மஹத்தான கோஷம் இட்டுக்கொண்டு வீழ்ந் தன. அவைராவணனுக்கு அவசகுனமாகையால் ராக்ஷ ஸர்களுக்கு வருத்தம் விளைவித்தன. ராவணன் எங்கே

இருந்தானோ அந்த இடத்தில் பூமி நடுங்கிற்று ராக்ஷஸர்கள் யுத்தத்தில் சத்ருக்களை அடிக்க முயலும்பொழுது அவரது கைகள் எவரோ பிடித்துக்கொண்டாற்போல் தடைபட்டிருந்தன. ஸூர்யகிரணங்கள் சிவப்பாகவும் பச்சையாகவும் வெண்மையாகவும், கறுமையாகவும் ராவணனுடைய தேஹத்தில் படிந்து பர்வதத்திலுள்ள பலவகை நிறமுடைய கைரிகதாதுக்கள்போல் புலப்பட்டன. நரிகள் கழுகுகளால் பின்றொடரப்பெற்று வாயில் நெருப்பைக் கக்கிக்கொண்டு ராவணனுடைய முகத்தைப் பார்த்து விரைந்து அமங்களத்தை அறிவித்துக்கொண்டு ஊளையிட்டன. யுத்தத்தில் காற்றுக் கிளம்பி ராக்ஷஸர் தலைவனானராவணனுக்குக் கண்கள் தெரியாதபடி தூள்களை இறைத்துக்கொண்டு ப்ரதிகூலமாக வீசிற்று. மேககர்ஜனமில்லாமலே ராவணனதுஸைன்யம் முழுவதிலும்பயங்கரங்களாகிப்பொறுக்கமுடியாத பெருங்கோஷத்துடன்கூடின [1] உல்காசனியென்னும் சில இடிகள் வீழ்ந்தன. திக்குக்கள் விதிக்குக்கள் முழுவதும் இருள் மூடப்பெற்றன. தூள்கள் மிகுதியாகப் பெய்கையால் ஆகாயம் கண்ணெடுத்துப் பார்க்க முடியாதிருந்தது. அந்த யுத்தத்தில் சாரிகை

---

1 உல்காசனிகளாவன—'உல்காஸிரஸி விஸாலா ஙிபதந்தி வர்ம தேச தநுபுச்ஸா। அஸநிஸ்வநேக மஹதா யுக்தா ந்ருமஜாஸிவதருமு வேஷு। ஙிபததி விதராய்ந்தீ யராதலம் சக்ரஸம்ஸ்யாநா' என்று சொல்லப்பட்ட லக்ஷணமுடையவை. இதன் பொருள்—தலையில் அகன்றதும் ஸூக்ஷ்மமான நுனியுடையதுமாகி விழுந்து கொண்டே வளர்ந்து வரும். மஹத்தான இடியின் ஓசையோடு கூடியிருக்கும். சக்ரம்போன்ற உருவமுடையதாகி மனிதர் யானை குதிரை மரம் முதலியவற்றில் பூமியைப் பிளந்துகொண்டு விழும். இதுவே உல்காசனியெனப்படுவது.

யென்னும் பறவைகள் பயங்கரமாகக் கலஹஞ் செய்வதும் தாருணமாகக் கூச்சலிடுவதுமாகி அந்த ராவணனுடைய ரதத்தின்மேல் கூட்டங் கூட்டமாய் வீழ்ந்தன. ராவணனுடைய குதிரைகள்பின்புறங்களினின்று நெருப்புப்பொரிகளையும் கண்களினின்று நீர்களையும் பெருக்கிக்கொண்டு இங்ஙனம் நெருப்பையும் ஜலத்தையும் ஓயாமல் பெருக்கிக்கொண்டிருந்தன. இங்ஙனம் பயங்கரமும் க்ரூரமுமான பல அவசகுனங்கள் தோற்றி ராவணனுடைய விநாசத்தை அறிவித்தன. மற்றும், ராமனுக்குங்கூட அழகாயிருப்பவைகளும் மேல்வரும் சுபத்தை அறிவிப்பவைகளு மாகையால் ஜயஸூசகங்களுமான அனேக சுபநிமித்தங்கள் முழுவதும் புலப்பட்டன. ராமன் தனக்கு ஜயத்தை அறிவிக்கும்படியான சுபசகுனங்கள் தோற்றுவதைக் கண்டு மிகுதியும் ஸந்தோஷம் அடைந்து ராவணன் மாண்டதாகவும் ஸீதை லபித்ததாகவும் நினைத்தனன். அப்பால் ராமன் சகுனங்களின் லக்ஷணங்களை நன்கறிந்தவனாகையால் யுத்தத்தில் தனக்காக ஜயத்தை அறிவித்துக்கொண்டு தோற்றின சுப சகுனங்களைக் கண்டு மயிர்க் கூச்சலடைந்து மிகுதியும் ஸந்தோஷமுற்று யுத்தத்தில் அதிகமாகப் பராக்ரமத்தைக் காட்டத் தொடங்கினன். நூற்றெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## { ராமன் ராவணனுடையரதத்தின் த்வஜத்தைச் சேதித்தல். }

அனந்தரம் ரதத்தில் ஏறிக்கொண்டிருக்கிற அந்த ராம ராவணர்களிருவர்க்கும் அப்பொழுது மிக க்ரூரமாயிருப்பதும் இதற்கு முடிவேயில்லை யென்னும்படி மிகவும் மஹத்தாயிருப்பதும் ஸமஸ்த லோகங்களுக்கும்

பயம் விளைப்பதுமான த்வந்த்வயுத்தம் நடந்தது. அப்பால் ராக்ஷஸர்களின் பெரும்ஸைன்யமும் வானரர்களின் மஹாஸைன்யமும் யுத்தக் கருவிகளான கட்கம் சிலை முதலியவற்றை யெடுத்துக்கொண்டு ஸந்நாஹமுற்றிருப் பினும் அந்த யுத்தத்தைப் பார்க்குங் குதூஹலத்தினால் சேஷ்டைகளற்று வெறுமனே இருந்தன. அப்பொழுது ராமனும் ராவணனும் பலமுள்ளவனவும் யுத்தத்திற்கு முயன்றிருப்பதைக் கண்டு, இருதரத்திலுள்ளவர்களும் யுத்தம் பார்ப்பதில் மிகுதியும் மனம் தாழப்பெற்று மிக வும் ஆச்சர்யம் அடைந்தனர். அவ்விருதரத்து ஸேனா ஜனங்களும் கைகளில் பலவகை ஆயுதங்களைத் தரித்து யுத்தத்திற்கு முயன்றும் நடந்துகொண்டிருக்கிற அம் மஹாயுத்தத்தைப் பார்த்து புத்தியில் மிகவும் ஆச்சர் யம் அடைந்து ஒருவர்மேலொருவர் எதிர்க்கவேயில்லை. ராக்ஷஸர்களின் ஸைன்யம் ராவணனையும் வானரஸைன் யம் ராமனையும் பார்த்துக்கொண்டு ஆச்சர்யத்தினால் கண்ணிமை கொட்டுதலையும் மறந்து அசையாதிருக்கை யால் சித்ரத்தில் எழுதப்பட்டவைபோல் புலப்பட்டன. ராவண ராகவர்களிருவரும் தந்தமக்குத் தோற்றின அவசகுனங்களையும் சுபசகுனங்களையும் கண்டு தமக்கு இது அது உண்டாகுமென்று புத்தியில் நிச்சயம் உண் டாகப் பெற்றுக் கோபத்தை விடாமல் நிலைநிறுத்திக் கொண்டு நிர்ப்பயமாக அமராடினர். அப்பொழுது ராமன் தப்பாமல் ஜயம் உண்டாகுமென்றும் ராவணன் தப்பாமல் மரணம் நேருமென்றும் இருவரும் புத்தியில் நிச்சயித்துக் கொண்டு தைர்யத்தை அவலம்பித்துத் தமது பராக்ரமத்தையெல்லாம் யுத்தத்தில் காண்பித்த னர். அப்பால் மிகுந்த வீர்யம் அமைந்த ராவணன் தனுஸ்ஸில் பாணங்களைத் தொடுத்து ராமனது ரதத்தி

லிருக்கும் த்வஜத்தின்மேல் ப்ரயோகித்தனன். அந்த பாணங்கள் தேவேந்த்ரனுடைய ரதசக்தியால் அடியுண்டு அதிலுள்ள த்வஜத்தின்மேல் படாமலே பூமியில் வீழ்ந்தன. அனந்தரம் வீர்யசாலியாகிய ராமன் மிகுதியும் கோபித்துவில்லை இழுத்து ராவணன் செய்ததற்குப் பதில் செய்ய மனங்கொண்டனன். ராமன் மஹாஸர்ப்பம்போல் பொறுக்கமுடியாததும் தன் தேஜஸ்ஸினால் ஜ்வலிப்பதுமாகிய ஓர் கூரான பாணத்தை ராவணனுடைய த்வஜத்தின்மேல் ப்ரயோகித்தனன். அந்த பாணம் ராவணனுடைய த்வஜத்தைப் பிளந்து பூமியை அடைந்தது. ராவணனுடைய ரதத்வஜமும் அங்ஙனம் முறிந்து பூமியில் வீழ்ந்தது. மஹா பலமுடைய ராவணன் தன்னுடைய த்வஜத்தை அங்ஙனம் ராமன் துண்டித்தமை கண்டு அவனுடைய ஆடோபத்தைப் பொறுக்க முடியாமலும் கோபத்தை அடக்கமுடியாமலும் மிகுதியும் ஜ்வலிக்கின்ற அக்னிபோல் மிதமின்றி எரிந்தனன். அந்த ராவணன் இங்ஙனம் கோபத்திற்குட்பட்டுப் பெரிய பாணவர்ஷத்தைக் கக்குமவன்போல் தொடுத்துவிட முயன்று ராமன் குதிரைகளை ஜ்வலிக்கின்ற பாணங்களால் அடித்து ஹிம்ஸித்தனன். அந்தப் பச்சைக் குதிரைகள் அங்ஙனம் பாணங்களால் அடிக்கப்பட்டும் அடி தழுதழுக்கப் பெறுகை நடை தடைபடப்பெறுகை முதலிய விகாரங்கள் எவையுமில்லாதிருக்கை மாத்ரமே யன்றித் தாமரைத் தண்டுகளால் அடிக்கப்பட்டவைபோல் மனத்தில் சிறிதும் வருத்தமின்றி ஸுகமாயிருந்தன. அப்பொழுது ராவணன் தன் பாணங்களுக்கு அந்தக் குதிரைகள் தழுதழுப்புறுதிருக்கின்றமை கண்டு மிதமில்லாத கோபாவேசம் அடைந்து மீளவும் பாண வர்ஷங்களைப் பெய்தனன்.

அந்த ராவணன் கதைகளையும் இரும்புத் தடிகளையும் சக்ராயுதங்களையும் உலக்கைகளையும் பர்வதசிகரங்களையும் வ்ருக்ஷங்களையும் சூலங்களையும் கண்டக்கோடாலிகளையும் ராமன்மேல் ப்ரயோகித்தனன். அந்த ராவணன் தனுஸ்ஸினின்று ஆச்சர்யகரமான மாயாசக்தியால் பயங்கரமாயிருப்பதும் திசைகளில் தாருணமாக ப்ரதித்வனிகளை எழச்செய்வதும் பலவகைப்பட்டதும் திகில் விளைப்பதுமான இந்த கதை முதலிய ஆயுதவர்ஷத்தைப் பெய்தனன். பற்பல ஆயுதமயமான அப்பெருமழை யுத்தத்தில் ராமனது ரதத்தைக் குறிவைத்துப் பெய்யமுயன்றதாயினும் ராமபாணங்களால் தடைபட்டமைபற்றி அவனுடைய ரதத்தின்மேல் படாமலே சுற்றுப்பக்கங்களிலிருக்கும் வானரஸைன்யத்தின்மேல் முழுவதும் வீழ்ந்தது. அனந்தரம் ராவணன் உத்ஸாஹத்தினால் மனமுயற்சி மாறப்பெறுதவனாகவே அனேகமாயிரம் பாணங்களை ப்ரயோகித்து ஆகாயம் முழுவதும் சிறிதும் இடைவெளி யில்லாதிருக்கும்படி வேகமாக பாணங்களால் நிறைத்தனன், ராவணன் அங்ஙனம் யுத்தத்தில் ஆஸக்தனாகி மிகுதியும் பாடுபடுவதைக் கண்டு, ராமன் சிரிப்பவன்போல் அனாயாஸமாகவே கூரான பாணங்களையெடுத்து வில்லில் தொடுத்தனன். அப்பால் அவன் யுத்தத்தில் லக்ஷம் லக்ஷமாக பாணங்களைத் தொடுத்து விடுவதைக் கண்டு தானும் பல பாணங்களை விடுத்து ஆகாயம் இடைவெளியில்லாமல் நிரம்பும்படி செய்தனன். அனந்தரம் அவ்விருவரும் ப்ரகாசிக்கின்ற பாணங்களை மழைபோல் பெய்து நிரப்புகையில், அந்த பாணஸமூஹங்கள் இடைவெளியின்றிச் சூழ்ந்து விளங்குகின்ற ஆகாயம், பாணங்களால் இயற்றப்பட்ட மற்றொரு ஆகாயம்போல் புலப்பட்டது. ஒரு பாணமாவது

குறியில்லாமல் விடப்பட்டதில்லை; விரும்பின அளவுக்கு விஞ்சிக் குறியைப் பிளந்ததுமில்லை; குறியில்பட்டு வீணானதுமில்லை. அங்ஙனம் அற்புதமாக யுத்தத்தில் பாணங்களை ப்ரயோகிக்கின்ற ராம ராவணர்களின் பாணங்கள் ஒன்றின்மேலொன்று உறைந்து அடிபட்டு பூமியில் வீழ்ந்தன. அவ்விருவரும் இடவலங்களில் இடைவெளியின்றி பாணங்களை விடுத்து ஆகாயத்தையெல்லாம் மூச்சு விடுவதற்கும் அவகாசமில்லாதபடி பாணஸமூஹங்கள் நிரம்பும்படி யுத்தஞ் செய்தனர். ராமன் ராவணனுடைய குதிரைகளை அடித்தனன். ராவணன் ராமனுடைய குதிரைகளை அடித்தனன். இங்ஙனம் அப்பொழுது இருவரும் ஒருவன் செய்ததற்கு மற்றொருவன் பதில் செய்பவராகி ஒருவரையொருவர் அடித்துக்கொண்டிருந்தனர். இவ்வண்ணம் அவ்விருவரும் மிகுதியும் கோபமுற்றவராகி அற்புதமாக யுத்தஞ் செய்தனர். அப்பொழுது முஹூர்த்தகாலம் மயிர்க்கூச்சல் உண்டாகும்படி பயங்கரமான துமுலயுத்தம் நடந்தது. அங்ஙனம் மஹாபலிஷ்டர்களான ராம லக்ஷ்மணர்கள் கூரான பாணங்களால் யுத்தம் நடத்திக்கொண்டிருக்கும்பொழுது ராக்ஷஸர் தலைவனாகிய ராவணன் தன் த்வஜம் விழுந்ததற்கு மிகுதியும் கோபாவேசமுற்றனன். நூற்றொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

துண்டிக்கத் துண்டிக்க மீளவும் முளைக்கின்றராவணன் தலைகளை ராமன் நூற்றொருதடவை துண்டித்தல்.

அப்பொழுது (அந்த உத்பாத காலத்தில்) யுத்த பூமியில் அந்த ராம ராவணர்களிருவரும் அற்புதமாக நடத்தும் யுத்தத்தை ஸமஸ்த பூதங்களும் மனத்தில் ஆச்சர்யத்துடன் பார்த்துக்கொண்டிருந்தன. அந்த மேலானரதங்களில் ஆரோஹித்திருக்கிற அவ்விருவரும் ஒருவர்மேலொருவர் கோபித்து ஒருவரை யொருவர் எதிர்த்து ஒருவரையொருவர் வதிக்கமுயன்று ஒருவரை யொருவர் ஹிம்ஸித்துக்கொண்டிருக்கையில், அவரது ஸாரதிகள் தமக்கு ஸாரத்யஞ்செய்வதிலுள்ள ஸாமர்த்யத்தினுல் சுழல்நடைகளையும் நேர்நடைகளையும் சத்ரு ரதத்தின்மேல் எதிர்த்துப்போதலையும் மீளவும் இருந்த இடம் வந்து சேர்தலையும் மற்றும் பல நடைகளையும் காட்டிக்கொண் டிருக்கையில், அவ்விரண்டு ரதங்களும் மிகுதியும் பயங்கரமான உருவத்துடன் புலப்பட்டன. ராமன் ராவணனை ஹிம்ஸிப்பதும் ராவணன் ராமனை ஹிம்ஸிப்பதுமாயிருக்கிற அவ்விருவரும் ஒருவர்மே லொருவர் எதிர்ப்பதிலும் ஒருவரையொருவர் தடுப்பதிலும் மிகுந்த வேகத்தைக் காட்டினர். அவ்விருவரும் அங்ஙனம் பாண ஸமூஹங்களை விடுத்துக்கொண் டிருக்கையில், அவருடைய அம்மேலான ரதங்களிரண்டும் யுத்தபூமியில், ஓயாமழை பெய்யும் மேகங்கள்போல் விளங்கின. அங்ஙனம் அவர்கள் யுத்தத்தில் தமது ரதங்களை நானுவிதமாக நடத்திக்காட்டி மீளவும் அவற்றை ஒன்றோடொன்று எதிர்முகமாயிருக்கும்படி. நிறுத்தினர். அப்பொழுது யுத்தத்தில் போக்கற்றிருக்கிற அவ்விருவரது ரதங்களும் ஒன்றுக்கொன்று ஏர்க்கால் ஏர்க்காலோ

டும், குதிரைகளின் முகம் குதிரைகளின் முகத்தோடும் பதாகைகள் பதாகைகளோடும் கலந்திருக்கும்படி நின்றன. அப்பால் ராமன் ப்ரகாசிக்கின்றவைகளும் கூருள்ளவையுமான நான்குபாணங்களை தனுஸ்ஸில் தொடுத்து விடுத்துத் தன் குதிரைகளுக்குக் குறுக்கே இருக்கின்ற ராவணன் குதிரைகள் நான்கையும் அப்புறம் போகத் துரத்தினன். அந்த ராவணன் தன் குதிரைகளை அப்புறம் போகத் துரத்தி ஓட்டினதற்குக் கோபமுற்று ராமன்மேல் கூரான பாணங்களை ப்ரயோகித்தனன். ராமன் அங்ஙனம் பலிஷ்டனுகிய ராவணனுல் மிகுதியும் அடிக்கப்பட்டவனுயினும் வருத்தத்தையாவது அதை வெளிக்காட்டும் முகவிகாரத்தையாவது சிறிதும் பெற வில்லை. அப்பால் ராவணன் தேவேந்த்ரனுடைய ஸாரதியான மாதலியின்மேல் இடியின் கோஷம்போன்ற கோஷமுடைய பாணங்களை ப்ரயோகித்தனன். அந்த யுத்தத்தில் அந்த பாணங்கள் மஹத்தான வேகத்துடன் மாதலியின் தேஹத்தில் பாய்ந்தும் அவனுக்குச் சிறிதாயினும் மோஹத்தையாவது நோயையாவது விளைக்கவில்லை. ராமன் ராவணன் தன்னை அடித்ததற்கு அவ்வளவு கோபம் அடையவில்லையேயன்றி, மாதலியை அங்ஙனம் அடித்ததற்கு (அவமதித்ததற்கு) மாத்ரம் மிகுதியும் கோபாவேசமுற்று பாணஸமூஹங்களை விடுத்து யுத்தத்தில் அவனைத் தன்னெதிரில் நிற்கவொட்டாமல் சிறிது அப்புறம் தொலையச் செய்தனன். வீரனுகிய ராமன், உடனே, பாணங்களை இருபதும் முப்பதும் அறுபதும் நூறும் ஆயிரமுமாக இங்ஙனம் பலவாறு ராவண ரதத்தின்மேல் விடுத்தனன். அனந்தரம் ராக்ஷஸேஸ்வரனுன ராவணன் ரதத்தில் அசையாமல் நின்று கோபித்து கதைகளையும் உலக்கைகளையும் வர்

ஷித்து யுத்தத்தில் ராமனைப் பதிலுக்கு அடித்தனன். அனந்தரம் அந்த யுத்தம் மிகுதியும் வளர்ந்து துமுலமாகி மயிர்க்கூச்சலை விளைக்கும்படி பயங்கரமுமாகி நடந்தது. கதைகள் முஸலங்கள் பரிகங்கள் ஆகிய இவற்றின் வேகத்தினுலுண்டாகுந் த்வனிகளாலும் பாணங்களுடைய பிடிகளின் அடிகளாலும் ஸப்த ஸாகரங்களும் (ஏழு ஸமுத்ரங்களும்) கலக்கமுற்றன. அங்ஙனம் ஸப்த ஸாகரங்களும் கலங்கினவுடனே பாதாளத்தில் வஸிக்கும்படியான உரகர்களும் தானவர்களும் எல்லோரும் ஆயிரமாயிரமாய் வருத்தமுற்றனர். பர்வதங்களோடும் வனங்களோடும் கூடின பூமியெல்லாம் நடுக்கமுற்றது, ஸூர்யனும் காந்தி யற்றவனுயினன். காற்றும் வீசவில்லை. அப்பால் தேவதைகளும் கந்தர்வர்களும் ஸித்தர்களும் கின்னரர்களும் மஹோரகர்களும் மஹர்ஷிகளும் ஆகிய அனைவரும் சிந்தையுற்றனர். தேவதைகளும் ரிஷிக்கூட்டங்களும் 'கோக்களுக்கும் ப்ராஹ்மணர்களுக்கும் க்ஷேமம் உண்டாகுமாக. லோகங்கள் ஶாஶ்வதமா யிருக்குமாக. ராமன் யுத்தத்தில் ராக்ஷஸர் தலைவனுன ராவணனை ஜயிப்பானுக' என்று ஜபஞ்செய்தனர். இவ்விதமாக அப்பொழுது தேவதைகளும் மஹர்ஷிகளும் ஜபஞ்செய்துகொண்டே மஹாபயங்கரமாகி மயிர்க்கூச்சலை விளைக்கும்படியான அம்மஹா யுத்தத்தைப் பார்த்து 'ஆகாயத்தை நிகர்த்தது ஆகாயமே. ஸமுத்ரத்தைப் போன்றது ஸமுத்ரமே. அங்ஙனம் ராம ராவண யுத்தத்திற்கு நிகராயிருப்பது ராமராவண யுத்தமேயன்றி வேறொன்றுமில்லை' என்று இங்ஙனம் மொழிந்துகொண்டே மீளவும் அந்த ராமராவண யுத்தத்தைப் பார்த்துக்கொண்டிருந்தனர். அனந்தரம் ரகுகுலத்திற்குக் கீர்த்தியை வளரச்செய்

யும் மஹாபாஹுவாகிய ராமன் கோபித்துக் கொடிய ஸர்ப்பம் போன்றதும் கத்திபோன்ற நுனியுடையதுமான பாணத்தை வில்லில் தொடுத்துக் காந்தியுடன் விளங்கும் குண்டலங்கள் திகழப்பெற்ற ராவணனது ஶிரஸ்ஸை அறுத்தனன். அப்பொழுது அந்த ஶிரஸ்ஸு பூமியில் விழுகையில் மூன்று லோகங்களும் கண்டன. அந்த ஶிரஸ்ஸைப்போலவே மற்றொரு ஶிரஸ்ஸு ராவணனுக்கு முளைத்தது. அங்ஙனம் முளைத்த அந்த ராவண ஶிரஸ்ஸையும் ராமன் கார்யங்களை வெகு விரைவில் செய்பவனாகையால் ஹஸ்தலாகவம் திகழும்படி யுத்தத்தில் சீக்ரமாக பாணங்களை ப்ரயோகித்துத் துண்டித்தனன். அந்த ஶிரஸ்ஸைத் துண்டித்தவுடனே மீளவும் மற்றொரு ஶிரஸ்ஸு முளைத்தது. அதையும் ராமன் வஜ்ரம் போன்ற பாணங்களால் துண்டித்தனன். இங்ஙனம் சிரஸ்ஸுக்கள் ஒன்றைப்போலவே மற்றொன்று புலப்படுவதாகி முளைத்துக் கொண்டிருக்கையில் நூற்றொன்று சிரஸ்ஸுக்களை ராமன் நூற்றொரு தடவைகள் துண்டிக்கினும் ராவணனுடைய ப்ராணன்கள் நசிக்குமென்கிற நிச்சயம் என்னவோ தோற்றவில்லை. அனந்தரம் ஸர்வ அஸ்த்ரங்களையும் அறிந்தவனும் பலவகை திவ்ய பாணங்களுடையவனும் கௌஸல்யைக்கு மனக்களிப்பை வளரச் செய்பவனும் வீரனுமாகிய ராமன் மனத்தில் ‘முன்பு மாரீசனை எந்த பாணங்களால் அடித்தேனோ, எந்த பாணங்களால் கரதூஷணர்களை வதித்தேனோ, மற்றும் தண்டகாரண்யத்தில் விராதனையும், க்ரௌஞ்சாவனத்தில் கபந்தனையும் எந்த பாணங்களால் முடித்தேனோ, அந்த பாணங்களையெல்லாம், யுத்தங்களில் எப்பொழுதும் வீணாகாமல் சத்ருவைத் தப்பாமல் கொல்லவல்லவையென்று நம்பியிருந்தனன். இப்பொழுது அப்

படிப்பட்ட பாணங்களெல்லாம் ராவணனிடத்தில் அற்பசக்தி யுடையவையாகி வீணாவதற்குக் காரணம் என்னவோ தெரியவில்லை' என்று சிந்தையால் வ்யாகுலப்பட்டனன். இங்ஙனம் ராமன் சிந்தையி லாழ்ந்திருந்தும் யுத்தத்தில் சிறிதும் பராக்குப்படாமல் ராவணனுடைய மார்பில் பாணவர்ஷங்களைப்பெய்தனன். அனந்தரம் ரதத்திலிருக்கும் ராக்ஷஸேஸ்வரனான ராவணன் கோபித்து யுத்தத்தில் ராமன்மேல் கதைகளையும் முஸலங்களையும் பெய்து ராமனை ஹிம்ஸித்தனன். அங்ஙனம் ராமராவணர்கள் த்ரிகூடபர்வத சிகரத்தின் றுனியில் ஒருவர்மேலொருவர் பாய்ந்து ஆக்ரஹத்தினால் ரதங்களோடுகூட ஆகாயத்திற்குக் கிளம்பியும் பூமிக்குக் குதித்தும் போராடிக் கொண்டிருக்கையில் அந்த யுத்தம் மிகுதியும் வளர்ந்து ஆகாயத்திலும் பூமியில் த்ரிகூட பர்வதசிகரத்திலும் துமூலமாகிக் காண்போர்க்கு மயிர்க்கூச்சலை விளைத்துக்கொண்டு நடந்தது. தேவதைகளும் தானவர்களும் யக்ஷர்களும் பிசாசர்களும் உரகர்களும் ராக்ஷஸர்களும் பார்த்துக்கொண்டிருக்கையில் அம்மஹா யுத்தம் [1] இரவும் பகலும் ஓயாமல் நடந்தது. ராத்ரியிலாவது பகலிலாவது ஒரு முஹூர்த்தமாயினும் ஒரு க்ஷணமாயினும் ராமராவணர்களின் யுத்

1 இங்கு 'ஸர்வராத்ரமவர்த்தத' என்பது மூலம். 'ஸப்தராத்ரமவர்த்தத' என்றும் பாடம் உண்டேயாயினும் மேற்சொல்லுகிற தினக்கணக்குக்குப் பொருந்தாதாகையால் அது அழகன்று. அல்லது இதுவே அழகியதாகக் கூடும். எப்படி யென்னில்—பால்குனமாதஞ் சதுர்த்தசியினன்று ஹனுமான் லங்கையைக் கொளுத்தல். பூரணிமையினன்று ராமன் ஸமுத்ர தீரஞ் சேருதல். ப்ரதமை த்விதீயை த்ருதீயைகளில் தர்ப்பசயனம். அஷ்டமியினன்று ஸேதுவேலாரோஹனம். நவமியினன்று யுத்தாரம்பம். அமாவாஸ்யையினன்று ராவணவதம். ஆகையால் 'ஸப்தராத்ரம்' (ஏழு ராத்ரிகள்) என்பது சேரும்.

தம் சிறிதும் ஓயவில்லை. தசரத குமாரனாகிய ராமனும் ராக்ஷஸேஸ்வரனான ராவணனும் அங்ஙனம் யுத்தஞ் செய்யும்பொழுது ராமனுக்கு இன்னம் ஜயம் உண்டாகாதிருப்பதைக் கண்டு மஹா புத்தியுடையவனும் இந்த்ரஸாரதியுமாகிய மாதலி யுத்தஞ் செய்கின்ற இந்த ராமனைப் பார்த்து விரைவுடன் இங்ஙனம் மொழிந்தனன். நூற்றுப்பத்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ராமன் ப்ரஹ்மாஸ்த்ரத்தினால் ராவணனை வதித்தல்.

அனந்தரம் அத்தகைய ஸமயத்தில் மாதலி ராமனைப் பார்த்து 'வீரனே! நீ எதுந்தெரியாதவன்போல் இவனை என் அனுஸரிக்கின்றனை? இவனைப்போல் நீயும் என் அஸ்த்ரத்திற்கு பதிலஸ்த்ரந் தொடுப்பது மாத்ரமே பணியாயிருக்கின்றனை? ப்ரபூ! இவன் மனுஷ்யனால் வதிக்கப்படுவானென்று தேவதைகள் மொழிந்தகாலம் இதோ வந்தது. ஆகையால் இவனை வதிக்கும்பொருட்டு இவன்மேல் இப்பொழுது ப்ரஹ்மாஸ்த்ரத்தை ப்ரயோகிப்பாயாக' என்று ராமனுக்கு ராவணனை வதிக்கும் பொருட்டு ப்ரஹ்மாஸ்த்ரந் தொடுத்துவிடுவதை நினைவூட்டினன். அங்ஙனம் மாதலி சொன்ன வார்த்தையால் யுத்தத்தில் மஹா வீர்யசாலியாகிய ராமன் நினைவூட்டிக்கொண்டு தகதகவென்று ஜ்வலிப்பதும் மூச்செறிகின்ற ஸர்ப்பம்போல் புலப்படுவதுமான அந்த திவ்யாஸ்த்ரத்தை எடுத்துக்கொண்டனன். பலவகை மஹிமைகள் அமைந்தவரும் மிகுந்த வீர்யமுடையவருமாகிய அகஸ்த்ய மஹர்ஷி, முதலில் ப்ரஹ்மதேவனால் தன்னிடம்

கொடுக்கப்பட்டதும் யுத்தத்தில் வீணாகாததுமான அம் மஹா பாணத்தை இந்த ராமனுக்குக் கொடுத்தனன். இது மஹா தேஜஸ்வியாகிய ப்ரஹ்மதேவனால் முன்பு இந்த்ரனுக்காக நிர்மிக்கப்பட்டது. அந்த ப்ரஹ்மதேவன் மூன்று லோகங்களையும் ஜயிக்க விரும்புகின்ற இந்த்ரனுக்கு முன்பு இதை அங்ஙனம் நிர்மித்துக்கொடுத்தனன். இதன் இறகுகளில் வாயுதேவனும் நுனியில் ஸூர்யாக்னிகளும் அதிதேவதைகளா யிருப்பார்கள். இதன் உருவம் (இடை) ஆகாசமயமாகி முழுவதும் வ்யாபிக்க வல்லதாயிருக்கும். அன்றியும் அது மேருமந்தர பர்வதங்கள்போல் பெரும் பளுவுடையதும் மிகுதியும் ஜ்வலிக்கின்ற உருவம் அமைந்ததும் அழகிய பிடியுடையதுமாகி ஸ்வர்ண அலங்காரத்தினால் விளக்கமுற்றிருந்தது. மற்றும், அது புகையோடுகூடின ப்ரளயகாலாக்னிபோலவும் ஜ்வலிக்கின்ற கொடிய ஸர்ப்பம் போலவும் புலப்பட்டது; அது சத்ருக்களின் யானை குதிரைகளைக் கூட்டங்கூட்டமாய் மிக்க சீக்ரத்தில் சேதிக்கவல்லது. அன்றியும் சத்ருபட்டணங்களின்வாசற்படிகளையும் பரிகங்களையும் பர்வதங்களையும் பிளக்க வல்லது. அது பலவகை ராக்ஷஸர்களின் ரக்தத்தில் நனைந்து மேதஸ்ஸுக்கள் படியப்பெற்றதும் மிகபயங்கரமாயிருப்பதும் வஜ்ராயுதம்போல் மிகுதியும் திடமாகிப் பெருங்கோஷ மிடுவதும் பலவகைக் கபடயுத்தங்களையும் அடக்குவதுமாயிருந்தது; அதுபயங்கரமாகி எல்லோர்க்கும் பயத்தை விளைவிப்பதும் நெடுமூச்செறிகின்ற ஸர்ப்பம் போன்றதும் கங்கமென்கிற பக்ஷிகளுக்கும் கழுகுகளுக்கும் வளமென்னும் பறவைகளுக்கும் நரிக்கூட்டங்களுக்கும் ராக்ஷஸ கணங்களுக்கும் என்றும் யுத்தங்களில் ஆஹாரத்தைக் கொடுப்பதும்யுத்தங்களில் யமனைப்

போல் பயங்கரமுமாயிருந்தது. அது வானரவீரர்களனை வர்க்கும் ஸந்தோஷத்தையும் ராக்ஷஸர்களுக்கு விநாசத்தையும் விளைவிப்பதும் அழகுபொருந்தி விசித்ரங்களும் பலவகையுமானகருடப்பறவையின் இறகுகள் கட்டப்பெற்றதுமாயிருந்தது. அதுஸமஸ்தலோகங்களிலும் சிறந்த பாணமும் இக்ஷ்வாகு வம்சத்தரசர்களனைவர்க்கும் பயத்தைப் போக்குவதும் சத்ருக்களின் கீர்த்தியை முடிப்பதும் ராமனுக்கு மிகுந்த ஸந்தோஷத்தை விளைவிப்பதுமாயிருந்தது. மஹா பலிஷ்டனுகிய ராமன் அங்ஙனம் அந்த திவ்யாஸ்த்ரத்தை எடுத்து வேதத்திற் சொன்ன விதியின்படி அபிமந்த்ரித்து தனுஸ்ஸில் தொடுத்தனன். ராமன் அம்மஹாபாணத்தை தனுஸ்ஸில்தொடுத்துக்கொண்டிருக்கையில் ஸமஸ்த பூதங்களும் நிலைகலங்கின; பூமியும்நடுக்கமுற்றது.ராமன் மிகுதியும் கோபமுற்றவனுகி பலமுள்ளவளவும் தனுஸ்ஸைக் காதுவரையிலும் இழுத்து மர்மங்களைப் பிளக்கும்படியான அம்மஹாபாணத்தை மிகுந்த மனவூக்கத்துடன் ராவணன்மேல் ப்ரயோகித்தனன். அம்மஹா பாணம் தேவேந்த்ரனுடைய ஹஸ்தத்தினின்று விடுபட்ட வஜ்ராயுதம்போல் அணுகமுடியாததும் ப்ரளய காலத்து யமன்போல் தடுக்க முடியாததுமாகி ராவணனுடைய மார்பில் பாய்ந்தது. மஹா வேகமுடையதும் சத்ரு தேஹங்களை உருமாய்ப்பதுமாகிய அந்த பாணம் விடுபட்டு துர்ப்புத்தியனுன ராவணனுடைய மார்பில் பட்டு ஹ்ருதயத்தைப் பிளந்தது. ப்ராணன்களை ஒழிக்கும்படியான அம்மஹா பாணம் ராவணனுடைய மார்பைப் பிளந்து வேகமாக அவனது ப்ராணன்களைப் பறித்துக்கொண்டு ரக்தம்பட்டு நனைந்து வெளிப்புறப்பட்டு பூமியில் ப்ரவேசித்தது. அந்த ராவணனை வதித்து

ரக்தத்தில் நனைந்திருக்கையால் சிவந்த ஒளியுடையதாகி நினைத்த கார்யத்தைச் செய்து முடிக்கையால் வணக்கத்துடன் கூடியதுபோல் மீளவும் அம்பறுத்தூணிக்கு வந்துசேர்ந்தது. அங்ஙனம்ராவணன் அடியுண்டிருக்கையில் ப்ராணன்களை தரிக்கும் யத்னத்தினின்று நழுவுகின்ற அந்த ராவணனுடைய ஹஸ்தத்தினின்று தனுஸ்ஸுபிடிதளரப்பெற்று பாணத்தோடுகூடப் பூமியில்வீழ்ந்தது. அவனுடைய ப்ராணன்களும் நழுவின. பயங்கரமான வேகமும் மஹாதேஜஸ்ஸும் அமைந்த ராக்ஷஸேந்த்ரனுகிய அந்த ராவணன் ப்ராணன்கள் புறப்பட்டவுடனே, வஜ்ராயுதத்தினல் அடியுண்டு மாண்ட வ்ருத்ராஸுரன்போல் பூமியில் வீழ்ந்தனன். உடனே அடியுண்டு மிகுந்த ராக்ஷஸர்கள் ராவணன் முடிந்தமை கண்டு, தமது நாதன் மாண்டமையால் பயந்து நான்கு திசைகளுக்கும் ஓடிப்போயினர். வ்ருக்ஷங்களைக் கையில் கொண்டு சண்டை செய்பவரான வானரர்களும் ஸிம்ஹநாதங்களைச் செய்துகொண்டு அந்த ராக்ஷஸர்களை எதிர்த்தோடினர். அந்த ராக்ஷஸர்கள் ராவணன் மாண்டதையும் ராமன் ஜயம் அடைந்ததையும் கண்டு வானரர்கள் ஸந்தோஷத்துடன் பின்றெடர்ந்து ஹிம்ஸிக்கப் பெற்றுப் பிடிப்பில்லாதவராகையால் கண்ணீர் பெருக்குடன்கூடிக் காண்போர்களுக்குக் கருணையை விளைக்கின்ற முகமுடையவராகி பயந்து லங்கையைக் குறித்து ஓடிப்போயினர். அனந்தரம் ஜயசாலிகளான வானரர்கள் மிகுதியும் ஸந்தோஷம் அடைந்து ராமனுடைய விஜயத்தையும் ராவணனுடைய அந்த வதத்தையும் சொல்லிக்கொண்டு ஸிம்ஹநாதங்களைச் செய்தனர். அப்பால்ஆகாயத்தில் மங்களகரமானதேவதுந்துபி முழங்கிற்று. அங்குக் காற்று திவ்யமான வாஸனையுடன்

ஸுகமாக வீசிற்று. அப்பொழுது ஆகாயத்தினின்று ராமனுடைய ரதத்தின்மேல் பிறர்க்கு துர்லபமாயிருப்பதும் (கிடைக்கக் கூடாததும்) அழகியதுமான புஷ்ப வர்ஷமானது முழுவதும் சிதறிவீழ்ந்தது. பூமியில் வானரர்கள் செய்யும் ஸ்தோத்ரங்களே யல்லாமல்ஆகாயத்திலும் மஹானுபாவர்களான தேவதைகள் ராமனைப்பல வாறுபுகழ்ந்து 'நல்லதுநல்லது' என்று கொண்டாடும் மேலானவாக்கும் பூமியில் செவிப்பட்டது. கொடியனும் ஸமஸ்த லோகபயங்கரனுமாகிய ராவணன் மாண்டவுடனே தேவதைகளும் சாரணர்களும் மிகுந்த ஸந்தோஷம் அடைந்தனர். அப்பால் ராமன், ராக்ஷஸர் தலைவனான ராவணனை வதித்துத் தானும் ஸந்தோஷம் அடைந்து தன் ராஜ்யம் கைகூடப்பெற்ற ஸுக்ரீவனும் யௌவராஜ்யம்பெற்ற அங்கதனும் ப்ரத்யுபகாரஞ் செய்வதற்காக ராவணனது வதத்தை விரும்பியிருந்தார்களாகையால், அவர்களையும் கருத்து நிறைவேறப் பெற்றவர்களாகச் செய்தனன். அனந்தரம் தேவதைகளெல்லோரும் கலக்கமற்றுத் தெளிவுபெற்றனர். ஆகாயம் நிர்மலமாயிற்று. பூமிநடுக்கமற்று ஸுகமாயிருந்தது. காற்றும் ஸுகமாக வீசத்தொடங்கிற்று. ஸூர்யனும் நிலைநின்ற ஒளியுடன் திகழ்வுற்றனன். அனந்தரம் ஸுக்ரீவனும் விபீஷணன் முதலியவர்களும், மற்றும் ஜாம்பவான் முதலிய நண்பர்களும் லக்ஷ்மணனுடன் சேர்ந்து, ராமன் யுத்தத்தில் ஜயம் பெற்றதற்கு ஸந்தோஷம் அடைந்து எல்லோருங்கூடி ஜயலக்ஷ்மியுடன் மனோஹரமாய் விளங்குகின்ற ராமனைத் தகுந்தவகைகளால் பூஜித்தனர். மஹாதேஜஸ்வியும் ரகுகுலமன்னவர்களுக்கு ஆநந்தம் விளைப்பவனுமாகிய அந்த ராமன் யுத்தத்தில் சத்ருவைக்கொன்று ப்ரதிஜ்ஞையை நிறைவேற்றித் தன்

பந்துக்களான லக்ஷ்மணாதிகளும் மற்ற ஸைன்யங்களும் சூழப்பெற்று, தேவகணங்கள் சூழப்பெற்ற தேவேந்த்ரன் போல் ப்ரகாசித்தனன். நூற்றுப்பதினொன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ப்ராதா மரணம் அடைந்ததைப் பற்றி வருந்துகின்ற விபீஷணனை ராமன் ஸமாதானப்படுத்துதல்.

ராமனிடம் தோல்வி அடைந்து மாண்டு யுத்தபூமியில் விழுந்திருக்கின்ற அண்ணனைக் கண்டு விபீஷணன் மனத்தில் சோகத்தின் வேகம் நிரம்பப்பெற்றுப் புலம்பத் தொடங்கி, 'வீரனே! நீ மஹாபராக்ரமசாலியே! பெரும் புகழ்பெற்றவனே! ஸமஸ்த சாஸ்த்ரங்களையும் கற்றுணர்ந்தவனே! ராஜநீதியில் பண்டிதனே! லோகோத்தரமான படுக்கையில் படுக்கத் தகுந்தவனல்லையா! இங்ஙனம் மாண்டு இப்பொழுது தோள்வளைகளை அணிந்திருக்கின்ற நீண்ட புஜதண்டங்களை இப்படியப்படி அசையாதிருக்கும்படி நீட்டி ரதத்தினின்று விழுகையில் இடத்தினின்று சிறிது நழுவின ஸூர்யன்போல் ஜ்வலிக்கின்ற கிரீடத்துடன், பூமியில் வீழ்ந்திருக்கிறாய், என்? வீரனே! முன்பு நான் எது ஸம்பவிக்குமென்று மொழிந்தேனோ அவ்வார்த்தை, காமவிகாரத்தினால் ஸ்வாதீனமற்றிருக்கிற உனக்கு ருசிக்கவில்லை. அந்த வார்த்தையின்படியே இதோ அந்தப் பயனை அனுபவித்தனை. ஸீதையை அபஹரிக்கையாகிற மஹாபாபத்தைச்செய்துப்ரஹஸ்தனும் இந்த்ரஜித்தும் மற்ற ராக்ஷஸர்களும் கும்பகர்ணனும் அதிரதனும் அதிகாயனும் நராந்தகனும் நீயும் கொழுப்பினால் சிறிதும் பொருள் செய்யாதிருந்தீர்கள். உங்க

ளில் ஒருவனும் இதைப்பற்றிச் சிறிதும் மனத்தில திகிலடையவில்லை. அதற்கு பயன் இதோ நேர்ந்தது. ஸமஸ்த நீதிகளுக்கும் ஸேதுவாயிருந்தவன் சென்றனன். தர்மத்தின் ஓர் வடிவமாயிருந்தவன் போயினன். பலத்திற்கு நிதியாயிருந்தவன் போயினன். ஸகலஸ்தோத்ரங்களுக்கும் இடமாயிருப்பவன் போயினன். ஆயுதம் பிடித்தவரனைவரிலும் மேலான வீரனுகிய இவன் தரையில் வீழ்கையால், ஸூர்யன் பூமியில் விழுந்தாற் போலாயிற்று. சந்த்ரன் இருட்டில் மூழ்கினுற் போலிருக்கிறது. அக்னி அணைந்தாற்போலாயிற்று. இனி இவனைப்போன்றவன் இல்லையாகையால் உத்ஸாஹ சக்தியே இருப்பிடமின்றித் தன் செயலற்றதாயிற்று. ராக்ஷஸஶ்ரேஷ்டன் யுத்தத்தில் அடியுண்டு தூட்களில் புரண்டு நித்ரித்தாற்போலிருக்கையில், இப்படிப்பட்ட மஹாவீரன் மாளப்பெற்ற இந்த ப்ரபஞ்சத்தில் இனி என்ன மிகுந்திருக்கின்றது. ஒன்றுமேயில்லை. எல்லாம் சூன்யமாகவே தோற்றுகின்றது. [1] தைர்யம் தளிராகவும் எல்லாவற்றையும் பொறுத்திருக்கையாகிற பொறுமையே சிறந்த பூவாகவும் தவமே உறுதியாகவும் ஶௌர்யமே திடமான வேராகவும் பெற்ற மிகுதியும் பெரியதான ராவணனென்னும் வ்ருக்ஷத்தை ராமனென்னும் பெருங்காற்று முறித்து விட்டது. பராக்ரமம் கொம்பாகவும் பித்ருபிதாமஹாதிவம்சமே முதுகின் தண்டாகவும் கோபமே

1 வ்ருக்ஷத்திற்குத் தளிர்போல் தைர்யமே முதன்மையானபலன். காய்ப்பதற்குப் புஷ்பம்போல் பொறுக்கும் திறமையே கார்யத்திற்கு முக்யமான காரணம். ஆகையால் ராவணனுகிற வ்ருக்ஷத்திற்கு தைர்யம் தளிராகவும் பொறமை புஷ்பமாகவும் நிரூபிக்கப்பட்டன. ஶௌர்யத்தினுலேயே தவம் முதலியவை விளையுமாகையால் ஶௌர்யத்தை மூலமாகச் சொல்லிற்று.

உடலாகவும் அனுக்ரஹமே கையாகவும் பெற்ற ராவண னென்னும் மத்தகஜத்தை ராமனென்னும் ஸிம்ஹம் பிடித்துக் கொன்று பூமியில் விழத்தள்ளிற்று. பராக் ரம் உத்ஸாஹம் இவைகள்வளர்ந்தெரிகின்ற ஜ்வாலைக ளாகவும் பெருமூச்சுக்கள் புகையாகவும் பெற்று விளங் கும் ராவணனுகிற அக்னியை யுத்தத்தில் ராமனுகிற மேகம் அணைத்துவிட்டது. ராக்ஷஸர்களே வாலும் முசுப்பும் தந்தங்களுமாகப்பெற்றுச் சத்ருக்களை ஜயிப் பதும் சத்ருக்களின் கர்வத்தை அடக்குவதில் மூக்ய மாயிருப்பதுமாகிச் சப்தாதி விஷயங்களில் விளையும் சா பலமே காதும் கண்ணுமாகப்பெற்ற ராவணனென்னும் காளை ராமனென்னும் புலியால் அடியுண்டு மாண்டது' என்று புலம்பினன். அங்ஙனம் சோகாவேசத்தினல் யுக் திகளமைந்த வசனங்களை மொழிந்துகொண்டு பொரு ளின்ன தென்று ஆலோசித்து நிச்சயித்தறிந்தவனுகிய விபீஷணனைப் பார்த்து ராமன் இங்ஙனம் கூறினன். 'இந்தராவணன் பராக்ரமத்தைக் காட்டாமல் பயங்காலி போல் யுத்தத்தில் நாசம் அடையவில்லை. கொடிதான பராக்ரமமுடைய இவன் மிகுதியும் சிறந்த உத்ஸாஹப் பெருக்குடன் சிறிதும் பயமின்றி யுத்தஞ் செய்து மாண்டு விழுந்தனன். பரலோகத்து மேன்மையை விரும்பிச் சூர தர்மத்தில் தவருமல் நின்று இங்ங னம் யுத்தத்தில் மாண்டவர்களைப் பற்றி வருந்தலா காது. யுத்தத்தில் தேவேந்த்ரனேடு கூடின மூன்று லோகங்களும் எவனுக்கு பயப்படுமோ, அப்படிப்பட்ட பராக்ரமமும் புத்தியும் அமைந்த ராவணன் மரணம் அடைந்து வீர ஸ்வர்க்கம் போகையில் இங்ஙனம் துக்கிப்பது யுக்தமன்று 'மரணமென்றல் துக்கியா திருக்க முடியுமா?' என்கிறுயோ? யுத்தத்தில் ஜயமே

வினையுமென்னும் நியதி இதுவரையில் என்றும் ஸம்ப வித்ததில்லை. வீரனாயிருப்பவன் சத்ருக்களையாவது வதிப் பான். சத்ருக்களால் தானாவது மாண்டுபோவான். அவ னுக்கு இரண்டும் ஸமமே. க்ஷத்ரியதர்மத்தை ஆலோ சிப்பாயாக. இங்ஙனம் யுத்தத்தில் மாண்டு வீரஸ்வர்க் கம் பெறுவது பூர்வர்களான பெரியோர்கள் உபதேசிப் பதே; மற்றும் க்ஷத்ரியர்க்கெல்லாம் ஸம்மதமானதே. யுத்தத்தில் மாண்ட சூரனைக் குறித்து, அவன் வீரஸ் வர்க்கம் அடைந்தானாகையால் சிறிதும் துக்கிக்கலாகா தென்று சாஸ்த்ரங்களில் ஏற்பட்ட நிர்ணயம். ஆகை யால் சாஸ்த்ர நிச்சயம் இப்படிப்பட்டதென்று அறிந்து பிறந்தார்க்கு மரணம் தப்பாதென்கிற பரமார்த்த புத்தி யும் உண்டாகப் பெற்றுச் சோகத்தை இழந்து இனி மேல் அனுஷ்டிக்க வேண்டிய கார்யம் எதுவோ அதைக் குறித்து ஆலோசிப்பாயாக' என்றனன். அங்ங னம் பராக்ரமசாலியான ராஜகுமாரன் ராமன் மொழிந் தவுடனே அவ்விபீஷணன் சோகத்தினால் வருந்தித் தன் தமையனுக்கு உடனே செய்யவேண்டிய நன்மை யைக்குறித்து ராமனைப் பார்த்து 'எப்படி ஸமுத்ரம் கரையில் மோதி முறிகின்றதோ, அப்படியே இப் பொழுது யுத்தத்தில் உன்மேல் எதிர்த்துத் தோல்வி யடைந்து மாண்ட இந்த ராவணன், இதற்கு முன்பு தேவேந்த்ரனோடுகூடி தேவதைகள் எதிர்த்துவரினும் யுத்தங்களில் தோல்வி அடைந்தவனல்லன்; ஆகை யால் மஹாவீரன்: இவன் பலதானங்களைச் செய்தவன்; குருதேவதாதிகளை நன்கு பூஜித்தவன்; ஸமஸ்த போ கங்களையும் அனுபவித்தவன்; நண்பர்களுக்கு யதேஷ் டமாக தனங்களைக் கொடுத்தவன். சத்ருக்களிடத் தில் பகையைத் தவறாமல் தீர்த்து விட்டவன். ஆகை

யால் இவன் தர்மஸ்வபாவனுவான். மற்றும் இவன் அக்னி ஆதானஞ் செய்து அக்னியில் தவறாமல் ஹோமத்தை நிறைவேற்றிக் கொண்டிருந்தனன்; மஹா தபஸ்வி; வேதாந்தங்களை அறிந்தவன்; கார்யங்களில் சிறந்த வீர்யமுடையவன். இங்ஙனம் மஹாசூரத்வம் முதலிய லக்ஷணங்கள் அமைந்து ஸம்ஸ்காரத்திற்குரியவனுகிய இவன் ப்ரேதமாயிருத்தலை அடைகையில் இவனுக்குச் செய்யவேண்டிய ப்ரேதகார்யங்களை உனது அனுக்ரஹம் பெற்றுச் செய்ய விரும்புகின்றேன்' என்றனன். அங்ஙனம் விபீஷணன் மன இரக்கம் உண்டாகும்படி மொழிந்து நன்கு போதிக்கையில், மஹானுபாவனும் மஹாபலிஷ்டனுமாகிய ராஜகுமாரன் ராமன் ராவணனுக்கு ஸ்வர்க்கத்தின் பொருட்டு ஹிதமான அந்த்யேஷ்டி கர்மத்தை (ப்ரேதகார்யத்தைச்)செய்ய நியோகிப்பவனுகி 1 'மரணம் வரையிலுமே வைரம் இருக்குமன்றி, அதன்பிறகு வைரத்தினுல் ப்ரயோஜனம் என்ன?

1 இங்கு 'மரணாந்தாநி வைராணி நிர்வ்ருத்தம் ந꞉ ப்ரயோஜநம்। க்ரியதாமஸ்ய ஸம்ஸ்காரோ மாமாப்யேஷ யதா தவ' என்பது மூலம். இங்கு 'நிர்வ்ருத்தம் ந꞉' என்ற இடத்தில் 'ந꞉' என்பது காயத்ரியின் இருபதாவது அக்ஷரமாகையால் இருபதாவது ஆயிரம் தொடங்கிற்றென்று தெரிகிறது. (மரணாந்தாநி வைராணி) ரிஷிஜனங்களை இருப்பிடங்களினின்று துரத்துவது ஸீதையைப் பறிப்பது, எனக்கு ப்ராணனுன ஜடாயுவைக் கொல்வது முதலாக என்னிடத்தில் த்வேஷத்தால் ஆசரிக்கும் கார்யங்களை இனிமேல் செய்யமாட்டானல்லவா? என்று கருத்து. (நிர்வ்ருத்தம் ந꞉ ப்ரயோஜனம்) நங்கார்யம் கைகூடிற்று. 'யதிவா ராவண꞉ ஸ்வயம்' ராவணன் வந்தாலும் அழைத்துக்கொண்டு வருவாய் என்று மொழிந்த நான் இவன் விஷயத்தில் ஏதேனுமொரு நன்மை செய்யவேண்டுமென்று மனத்தில் நினைத்திருந்தேன். அன்றி இவன் 'த்விதா பஜ்யேயமப்யேவம் ந நமேயம் து கஸ்யசித்' (இருதுண்டங்களாகப் பிளவுறுவேனுயினுமாவேனன்றி

ஈமது கார்யம் நிறைவேறிற்று. இனி இவனுக்கு ஸம்ஸ்காரம் நடத்துவாயாக. இவன் உனக்கு எப்படி உடன் பிறந்தவனோ, அப்படியே இவன் எனக்கும் உடன் பிறந்தவனேயன்றி வேறல்லன்' என்றனன். நூற்றுப் பன்னிரண்டாவது'ஸர்க்கம் முற்றிற்று.

---

{ ராவணபார்யைகள் மரணம் அடைந்த ராவணனைப் பார்த்து ரோதனஞ் செய்தல். }

மஹானுபாவனாகிய ராமனால் ராவணன் மாண்டானென்று கேட்டு, அவனுடைய பார்யைகளான ராக்ஷ

---

எவ்விதத்திலாயினும் எவனுக்காயினும் வணங்கமாட்டேன்) என்று மொழிந்து பிடிவாதங் கொண்டிருந்தமையால் நான் நினைத்த நன்மையைச் செய்ய நேராமற் போயிற்று. அதைச் செய்ய இப்பொழுது ஸமயம் நேரிட்டது. (க்ரியதாமஸ்ய ஸம்ஸ்காரः) இப்பொழுது மரணம் அடைந்தனன். முன்புபோல் நான் செய்யும் நன்மைக்குத் தடை செய்ய முடியாத அவஸ்தை இவனுக்கு நேரிட்டிருக்கின்றது. ஆகையால் இந்த ஸமயத்தில் இவனை விடலாகாது. இனிமேற் செய்ய வேண்டியது எதுவோ அதை இவனுக்கு இனிச்செய்தேதீரவேண்டும். (மமாப்யேஷ யதாதவ) இவன் எனக்கு எப்படியோ அப்படியே உனக்கும், மரணம் அடைந்து நான் செய்யும் மேன்மைச்குத் தடைசெய்ய மாட்டாதவனாகையால் இவன் என் மனத்திற்கு அனுகூலனாயினன். ஆகையால் என் ஸ்னேஹிதனான நீயும் இவனை அனுவர்த்திக்கவேண்டுமென்றுகருத்து. அல்லது—(ஏஷ தவ யதா ததா மமாபி)இவன் உனக்கு எப்படியோ அப்படியே எனக்கும். இவனை ஸம்ஸ்கரிப்பது உனக்கு எங்ஙனம் ப்ராப்தமோ, அங்ஙனமே எனக்கும் ப்ராப்தமென்று கருத்து. நீ இவன் கோபத்தைப் பார்த்து இவனுக்கு ஸம்ஸ்காரஞ்செய்யமாட்டாயாயின், நானே செய்கிறேன், பந்துக்களில் எவராயினும் இதைச் செய்ய வேண்டுமெல்லவா? ஆகையால் நீ தூரத்தில் இருப்பாயாக. நானே செய்கின்றேன் (மமாப்யேஷ யதாதவ) எனக்கு ப்ராதாவான உனக்கு இவன் ப்ராதாவாகையால் எனக்கும் ப்ராதாவே. ஆகையால் நீ ஸம்ஸ்காரஞ் செய்யாயாயின் நான் செய்கிறேனென்றுகருத்து. கோவிந்தராஜர்.

ஸிகள் சோகத்தினுல் வருந்தி, எவர் எவ்வளவு தடுக்கி லும் நிற்காமல் பூமியின் தூள்களில் விழுந்து புரண்டு தலை மயிர்களை விரித்துக் கன்றுகளை இழந்த பசுக்கள் போல் துக்கத்தினுல் புலம்பிக்கொண்டு அந்தப்புரத்தி னின்று புறப்பட்டனர். அந்த ராக்ஷஸஸ்த்ரீகள் ராக்ஷ ஸர்களோடுகூட வடக்கு வாசல் வழியாக வெளிவந்து பயங்கரமான யுத்தபூமியில் நுழைந்து மரணமடைந்த தமது பர்த்தாவை முழுவதும் தேடி 'ராஜ புத்ரா!' என்று ராமனையும் 'நாதா' என்று ராவணனையும் பேர் சொல்லிப் புலம்பிக்கொண்டு கபந்தங்கள் (தலையில்லாத முண்டங்கள்)நிறைந்து ரக்தவெள்ளத்தினுல் சேறுபடிந் திருக்கிற யுத்த பூமியெல்லாம் திரிந்தனர். அந்த ஸ்த்ரீ கள் பர்த்தா மரணம் அடைந்த சோகத்தினுல் ஸ்வா தீனமற்றுக் கண்களில் நிரம்ப நீர் பெருகப்பெற்று ரோ தனஞ் செய்துகொண்டு, கூட்டத்தில் தலைமையுடைய ஆண்யானை மரணம் அடைகையில் பெண்யானைகள் கதறுவதுபோல், உரக்கக் கூச்சலிட்டனர். அவர்கள் மஹா வீர்யசாலியும் மஹாசரீரமுடையவனும் மஹா தேஜஸ்வியும் கறுத்த மைக்குவியல்போல் ப்ரகாசிப்ப வனுமாகிய அந்த ராவணன் அடியுண்டு மாண்டு பூமி யில் விழுந்திருக்கக்கண்டனர். அனந்தரம் அம்மடந்தை யர் யுத்தபூமியில் தூள்கள் படிந்து விழுந்திருக்கின்ற தம் ப்ராணநாதனைக் கண்டு ஸ்வாதீனமற்று, அறுப் புண்ட காட்டுக்கொடிகள்போல், அவனது அவயவங்க ளின்மேல் கபீலென்று விழுந்தனர். அவர்களில் ஒருத்தி, ப்ரீதியின் மிகுதியால் அந்த ராவணனை அணைத்துக் கொண்டு ரோதனஞ் செய்தனள். மற்றொருத்தி அவன் பாதங்களில் நன்றாக விழுந்தும், மற்றொருத்தி அவன் கண்டத்தை ஆலிங்கனஞ் செய்து கொண்டும் புலம்

பினர்: ஒருத்தி பர்த்தாவின் புஜங்களை எடுத்துக் கொண்டு பூமியில் புரண்டனள். மற்றொரு மடந்தை மரணம் அடைந்த காதனுடைய முகத்தைப் பார்த்து ஸந்தோஷித்தனள்; ஒரு தருணி தன் ப்ரியனுடைய சிரஸ்ஸை மடியில் இட்டு அவன் முகத்தை உற்றுப் பார்த்து, பன்னீர்களால் தாமரைமலரை நனைப்பது போல், கண்ணீர்களால் அதை நனைத்துக்கொண்டே ரோதனஞ் செய்தனள்; இங்ஙனம் அந்தப் பெண் மணிகளனைவரும், மரணம் அடைந்து யுத்தபூமியில் விழுந்திருக்கின்ற பர்த்தாவான ராவணனைப் பார்த்து வருந்தி ரோதனஞ் செய்தனர். மற்றும் மேன்மேலும் சோகம் வளர்ந்து வழியப்பெற்று ஸ்வாதீனமற்று அவனைக் குறித்து இங்ஙனம் புலம்பத்தொடங்கி 'எவனிடம் தேவேந்த்ரன் பயப்படுவானோ, எவனிடம் யமன் பயப்படுவானோ, எவன் குபேரனை ஜயித்து அவனுடைய புஷ்பகவிமானத்தை எடுத்துக்கொண்டானோ; மற்றும் எவனிடம் கந்தர்வர்களும் மஹர்ஷிகளும் மஹானுபாவர்களான தேவதைகளும் மிகுதியும் பயந்தார்களோ, அப்படிப்பட்ட மஹாவீரன் இப்பொழுது யுத்தத்தில் அடியுண்டு மாண்டு பூமியில் வீழ்ந்திருக்கின்றானே! அஸுரர்களிடத்தினின்றாவது தேவர்களிடத்தினின்றாவது எவன் பயமென்னும் வார்த்தையைச் சிறிதும் அறியானோ, அப்படிப்பட்ட சூரனுக்கு இப்பொழுது ஒருமனுஷ்யனால் பயம் நேரிட்டதே! எவனை தேவதைகளுக்கும்தானவர்களுக்கும் ராக்ஷஸர்களுக்கும் வதிக்கமுடியாதோ, அப்படிப்பட்ட இந்த ராவணன் இப்பொழுது யுத்தத்தில் ரதம்முதலியவை இல்லாமல் வெறுங்கால் நடையோடு வந்த ஓர் ஏழை மனிதனால் அடியுண்டு மாண்டு விழுந்திருக்கின்றானே! தேவதைகளும் யக்ஷர்களும் அஸுரர்



3223. மாண்ட ராவணனை அவனுடைய அந்தப்புர ஸ்த்ரீகள் சூழ்ந்து புலம்புதலும், ராமன் அவனுக்கு ஸம்ஸ்காரஞ் செய்யும்படி விபீஷணனைத் தூண்டுதலும்.

களும் எவனை வதிக்க வல்லமையற்றிருந்தனரோ அப் படிப்பட்ட மஹாசூரனுகிய இவன், எவனே ஒரு பலஹீ னன்போல் கேவல மனுஷ்யனுல் மரணம் அடைந்தா னே!' என்று பலவாறு புலம்பினர். அந்த ஸ்த்ரீகள் இங் ஙனம் பர்த்தாவின் பராக்ரமங்களைப் பலவாறு மொழிந் துகொண்டு ரோதனஞ் செய்து, மீளவும் துக்கம் மிகப் பெற்றுப் பொறுக்க முடியாமல் அடிக்கடி இங்ஙனம் புலம்பினர். 'நீ, எப்பொழுதும் உன் ஹிதத்தையே சொல்லுந்தன்மையரான நண்பர்கள் எவ்வளவு சொல் லினும் கேளாமல் ஸீதையைக் கொண்டு வந்தனை. அவள் உன் மரணத்தின் பொருட்டாயினள். மற்றும் ராக்ஷஸர்கள் மாண்டனர். இப்பொழுது இந்த நாங்க ளெல்லோரும் ராக்ஷஸர்களும் நீயும் ஆக எல்லோரும் ஒரே காலத்தில் முடிந்தோம். ஸீதையிடத்தில் ப்ரீதி யுடைய உன் தம்பி விபீஷணன் உனக்கு ஹிதத்தையே போதித்துக் கொண்டிருப்பினும் நீ அஜ்ஞானத்தினுல் உன் மரணத்தையே விரும்பி அவனை முன்பின் பாராமல் பருஷவசனங்கள் பேசிப் பரிபவித்தனை. நீ மிதிலாதிபதி யின் புதல்வியாகிய ஸீதையை ராமனுக்குத் திருப்பிக் கொடுத்திருப்பாயாயின், நம்மெல்லோர்க்கும் வேர்ப் பற்ருகிய நீ இங்ஙனம் மரணம் அடையாதிருப்பாயே! இங்ஙனம் உன் மரணத்தினுல் எமக்கு பயங்கரமாக நே ரிட்ட இந்தப் பெரும் வ்யஸனம் நேராதிருக்குமே? உன் தம்பியான விபீஷணனுடைய விருப்பத்தையும் நிறை வேற்றினதாகுமே! ராமனும் நமது வம்சத்திற்கு நண் பனுவானே! நாங்களெல்லோரும் விதவைகளாகா திருப் போமே! நீ அங்ஙனம் செய்யாமல் கொடியனுகி பலாத் காரமாக ஸீதையைச் சிறையில் வைத்திருந்தமையால் இந்த ராக்ஷஸக்கூட்டமும் நீயும் நாங்களும் ஆக மூவ

ரும் ஒரேகாலத்தில் முடியலாயிற்றே. ராக்ஷஸோத்த மனே! இதெல்லாம் நீ தோற்றியபடி செய்து வரவழைத் துக் கொண்டதேயன்று. எல்லாம் தெய்வமே செய்விக் கின்றது. தெய்வத்தினல் அடியுண்டவனே சத்ருக்க ளால் அடியுண்பானன்றி மற்றவனல்லன். மஹாபாஹோ! வானரர்களுக்கும் ராக்ஷஸர்களுக்கும் உனக்கும் இங்ஙனம் இம்மஹாயுத்தத்தில் இவ்விநாசம் தெய்வ ஸங்கல் பத்தினல் நேர்ந்ததேயன்றி வேறுகாரணத்தினலன்று. உலகத்தில் தெய்வம் ஒரு கார்யத்தில் முயன்றபின்பு, அர்த்த பலத்தினலாவது (பணத்தின் வலிமையாலாவது) இச்சையினலாவது பராக்ரமத்தினலாவது ஆஜ்ஞையினலாவது அதை எள்ளளவும் திருப்ப முடியாது' என்று அடிக்கடி மொழிந்துகொண்டே புலம்பினர். இவ்வண்ணமாக அந்த ராக்ஷஸேஸ்வரனது பார்யைகள் மனக்களிப்பின்றி துக்கத்தினல் வருந்திக் கண்கள் நீர் தளும்பிக் கலங்கப்பெற்று அழுகுரல் பக்ஷிகள் போல் புலம்பினர். நூற்றுப்பதின் மூன்ருவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராவணனுடைய பட்டமஹிஷியான மண்டோதரி புலம்புதலும் விபீஷணன் ராமனுடைய நியோகத்தினல் ராவணனுக்கு ஸம்ஸ்காரஞ் செய்தலும்.

அங்ஙனம் அந்த ராக்ஷஸஸ்த்ரீகள் புலம்பிக்கொண்டிருக்கையில் அவர்களில் ராவணனுக்கு மிகுதியும் ப்ரியமாயிருப்பவளும் ஜ்யேஷ்ட பத்னியுமான மண்டோதரி மனவருத்தத்துடன் தன் பர்த்தாவைக் கண்டனள். மண்டோதரி அங்குச் சிந்திக்க முடியாத அற்புதச் செயலுடைய ராமனல் அடியுண்டு மாண்டிருக்கின்ற

தன் ப்ராண நாதனுன ராவணனைக் கண்டு துக்கத் துடன் 'ஐயோ! மஹாபாக்ய முடையவனே! குபேரனுக் குத் தம்பி! நீ கோபித்துக் கண் சிவக்கப் பெறின், உன்னெதிரில் நிற்பதற்கு தேவேந்த்ரனும் ரிஷிகளும் ப்ராஹ்மணர்களும் பெரும்புகழுடைய கந்தர்வர்களும் திகில் படுவது வெளிச்சமேயல்லவா. இப்படிப்பட்ட நீ மனுஷ்யனுல் எங்ஙனம் தோல்வி அடைந்தாய்? ஐயோ! உனக்கு பயந்து சாரணர்களும் திசைகளைப்பற்றி ஓடிப் போயினரல்லவா. ராக்ஷஸ ஸ்ரேஷ்டனே! அப்படிப் பட்ட மஹாசூரனுகிய உன்னைக் கேவலமனுஷ்யனுகிய ராமன் யுத்தத்தில் வென்ருனே! ராஜனே! இதற்கு நீ வெட்கமுறு திருக்கின்றனையே! இதுவென்? பராக்ரமத் தினுல் மூன்று லோகங்களையும் ஆக்ரமித்து த்ரை லோக்ய ராஜ்யலக்ஷ்மியால் மிகுதியும் விளக்கமுற்று எப்படிப்பட்டவர்க்கும் பொறுக்கமுடியாத ஆண்மை அமைந்த உன்னையும் ஒரு கேவலமனுஷ்யன், அதிலும் அடவிகளில் திரியப்பட்டவன் எப்படிவதித்தானே? ஆச் சர்யமாயிருக்கின்றதே! இவ்வளவே அன்று. நீ இருக் கும் தேசம் மனிதர்களுக்குப் புகமுடியாதது. நீயும் நினைத்தபடி வடிவங் கொள்ளவல்லவன். இப்படிப் பட்ட உன்னை, மனுஷ்யனுகிய அந்த ராமன்கொன்ரு னென்பது சிறிதும் பொருந்தவில்லை. யுத்தக்கருவிகள் அனைத்தும் நிறைந்திருக்கிற உன்னை யுத்தத்தில் எதிர்த்து ராமன் வென்ருனென்ற இதைச் சிந்தித்தால் ராமனே கேவலமனுஷ்யனுக இந்தக்கார்யம் செய்தா னென்று எனக்கு நம்பிக்கை உண்டாகவில்லை. ஜனஸ் தானத்தில் அனேக ராக்ஷஸர்களோடுகூடின என் ப்ரா தாவானகரனை வதித்தபொழுதே இந்த ராமன் கேவல மனுஷ்யனன்றென்று ஸ்பஷ்டமாகத் தெரிந்தது. தேவ

தைகளுக்குங்கூட ப்ரவேசிக்கமுடியாத இந்த லங்கா நகரத்திற்குள் ஹனுமான் வீர்யப்பெருக்குடன் வந்த பொழுதே நாம், ராமன் கேவலமனுஷ்யனுயிருக்க மாட்டானென்று திகிலடைந்தனம். பயங்கரமான உருவமுடைய வானரர்கள் இம்மஹாஸமுத்ரத்தில் அணைகட்டினபொழுதே, நான் ராமன் கேவல மனுஷ்யனன்றென்று மனத்தில் நினைத்தனன். அப்படியில்லையாயின், யமனே உன்னை வதிக்கும்பொருட்டு அளவில்லாத ரூபலாவண்யங்கள் அமைந்த ஸீதையென்னும் மாயையைச் செய்து காமரூபந்தரித்துத்தானே உன்மேல் எதிர்த்து வந்திருப்பான். மஹாபலசாலீ! தேவேந்த்ரன் வந்து உன்னை இங்ஙனம் வதித்திருப்பானோ? இதுவும் பொருந்தாது. இந்த்ரன் யுத்தத்தில் உன்னைக் கண்ணெடுத்துப் பார்க்கவுங்கூட வல்லனல்லனே. [1] லோகரக்ஷண உபாயத்தைக் குறித்துப் பெருஞ்சிந்தை உண்டாகப்பெற்று ஸமஸ்த சேதனுசேதனங்

---

1. இங்கு 'வ்யக்தமேஷ மஹாயோகீ பரமாத்மா ஸநாதநः। அநாதிமத்யநிதநோ மஹதः பரமோ மஹாந்। தமஸः பரமோ தாதா ஶங்கசக்ர கதாதரः। ஸ்ரீவத்ஸவக்ஷா நித்யஸ்ரீரஜய்யः ஶாஶ்வதோ த்ருவः' என்பது மூலம். வேதாந்தங்களில் 'ந கிரிந்த்ர த்வதுத்தரோ ந ஜ்யாயாநஸ்தி வ்ருத்ரஹந்' 'மாமுபாஸ்ஸ்வ என்று இந்த்ரனே' பரதத்வமென்றும், 'விஶ்வாதிகோ ருத்ரோ மஹர்ஷிः' 'ஶிவ ஏகோ த்யேயः' ஶிவஶ்ஶங்கரः' என்று ருத்ரனே பரதத்வமென்றும், 'ப்ரஜாபதேஸ் ஸஹாம் வேஶ்ம ப்ரபத்யே' என்று நான்முகனே பரதத்வமென்றும் ஶங்கித்து 'ஏகோ ஹவை நாராயண ஆஸீந் ந ப்ரஹ்மா நேஶாநः' என்றும் 'அத புநரேவ நாராயணஸ் ஸோऽந்யம் காமயத ப்ரஹ்மா சதுர்முகோऽஜாயத' 'த்ர்யக்ஷஶ் ஶூலபாணிः புருஷோऽஜாயத' 'நாராயணாத் ப்ரஹ்மா ஜாயதே..'ருத்ரோ ஜாயதே..'இந்த்ரோ ஜாயதே' 'தத்த்வம் நாராயணः பரः' 'நாராயண பரம் ப்ரஹ்ம' 'ப்ரஹ்மவிதாப்நோதி பரம்' ப்ரஹ்மவேத ப்ரஹ்மைவ பவதி' 'ஸோऽந்வேஷ்டவ்யஸ் ஸ

களையும் சரீரமாகவுடையவனும் தன்னிடத்தில் ஒரு தோஷமும் தீண்டாதபடி என்றும் ஒருவாருயிருப்பவ

விஜிஜ்ஞாஸிதவ்ய:' 'பாரத் பரம் புருஷமுபைதி திவ்யம்' 'என்றும் நாராயணனுவாகம் ஸுபாலோபநிஷத்து முதலிய வேதாந்த வாக்யங்களாலும் மீமாம்ஸாந்யாயங்களாலும் நாராயணனே ஸர்வகாரணமென்றும் பரதத்வமென்றும் உபாஸ்யனென்றும் மோக்ஷப்ரதனென்றும் அறுதியிடவேண்டுவது அறிஞர் கார்யமாயிருப்பதையும் 'ஹக்த்யா ஶாஸ்த்ராணி வேத்மி ஜநார்த்நம்' என்று புண்யவான்களுடைய கார்யமாயிருப்பதையுங் கண்ட வால்மீகி மஹர்ஷி ஸமர்த்தராகையாலே பெண்ணுக்கும் பேதைக்கும் ப்ரஸித்தமென்னும்படி கணவனைப்பிரிந்து புலம்புகிற தாரைமண்டோதரி முதலானவர்களைக்கொண்டு தத்வ நிர்ணயம் பண்ணுவதாக உத்தேசித்து, கீழ் வாலிவதமானவுடனே ஸ்த்ரீகளும் பாலருமானதாரை அங்கதன் முதலியவர்களைக் கொண்டு 'த்வமப்ரமேயஶ்ச து ராஸதஶ்ச'என்று தொடங்கித் தத்வநிர்ணயம் பண்ணி இப்பொழுது ராவணவதானந்தரத்திலே மண்டோதரியையிட்டுத் தத்வ நிர்ணயம் பண்ணுகிறார்.

'ராவணம் நிஹதம் ஶ்ருத்வா ராகவேண மஹாத்மநா। அந்த:புராத் விநிஷ்பேது ராக்ஷஸ்ய: ஶோககர்ஶிதா:' என்று பெருமாள் கையிலே ராவணன் பட்டானென்று கேட்டு அந்தப்புரத்தினின்றும் பெண்டுகள் புறப்பட்டு வந்து ராவணனைக் கட்டியணைத்துப் புலம்பிக் கொண்டிருக்க, 'ஜ்யேஷ்டா பத்நீ ப்ரியா தீநா ஹர்த்தாரம் ஸமுதைக்ஷத' என்று கொலையுண்டுகிடக்கிற ராவணனை ஏற இறங்கப்பார்த்து 'மாநுஷாணுமவிஷயே சரத: காமரூபிண:। விநாஶஸ்தவ ராமேண ஸம்யுகே நோபபத்யதே' என்று மனுஷ்யர் கிட்டமுடியாத நிலத்திலே நின்று ஒருடம்பிலே அம்புபட்டால் அவ்வடிவத்தை விட்டு மற்றொரு வடிவங்கொள்ள வல்லனுகிய உனக்கு ராமனுல் நேரிட்ட இவ்விநாசம் எனக்குப் பொருந்தவில்லையேயென்று சங்கித்து, உன்னுல் நலிவு பட்ட இந்த்ராதிகள் உன்னைக்கொல்லவல்லரல்லரென்று கழித்து, 'ஸதாம் ஹி ஸந்தேஹபதேஷு வஸ்துஷு ப்ரமாணமந்த: கரணப்ரவ்ருத்தய:' என்று சொல்லப்படும். மானஸ ப்ரத்யக்ஷத்தாலும் ராவணவதத்தில் சாக்ஷாத் ப்ரத்யக்ஷத்தாலும் ஸேதுகட்டுதல் கரனைக் கொல்லு

னும் ஆதி நடு அந்தமில்லாதவனும் (பிறத்தல் வளர்தல் அழிதல் ஆகிய மூன்றுமில்லாதவனும்) பெருமையுடைய

---

தல் வாலியை முடித்தல் முதலிய கார்யங்களால் தோற்றுகிற அநுமானத்தாலும் இவனே பரவஸ்து வென்றுதானே அறுதியிட்டுத்தான் அறிந்தபடியைப் பிறர்க்கும் அறிவிக்கவிரும்பி ராவணனை நோக்கி, இவன் கேவலனன்று, பரவஸ்துவான நாராயணனே. தேவாதிகளால் சாவு நேராதபடி ப்ரஹ்மாவுக்கு அந்தர்யாமியாய் நின்று வரங்கொடுத்தபடியாலே தான் மொழிந்தது ஸத்யமாகைக்காகத் தன்னை மறைத்து மனுஷ்ய வேஷம் பூண்டு பயந்துவருந்தும் தேவதைகளையும் கரடி குரங்கு முதலிய உருவங்களைக் கொள்வித்து 'ப்ரவ்ருத்தம் லோககண்டகம்' என்று தன்விபூதியான லோகத்தை நீ நலிந்தபடியாலே லோகஹிதார்த்தமாக உன்னைப் பரிவாரங்களோடு முடித்துப் புகருடன் வீற்றிருக்கிறான்' என்று நிர்ணயித்துத்தலைக்கட்டுகிறாள்.

(வ்யக்தம்) அவரோஇவரோ என்று அலமந்து திரிந்தோம். இப்பொழுது வெளியாயிற்று. (வ்யக்தத்) 'இனியறிந்தேனீசற்கும் நான்முகற்கும் தெய்வம், இனியறிந்தேனெம்பெருமானுன்னை' என்னுமாபோலே இத்தனைப்போதும் அறிந்திலேன்; இப்போது அறிந்தேனென்கிறாள். (வ்யக்தம்) மம வ்யக்தம் 'மயாஜ்ஞாதம்' என்றத்ரௌபதியைப் போலே சொல்லுகிறாள். 'மஹத்யாபதி ஸம்ப்ராப்தே ஸ்மர்த்தவ்யோ பகவாந் ஹரி:। இத்யேவம் யத் புரா கீதம் வஸிஷ்டேந மஹாத்மநா। ததிதாநீம் மயாஜ்ஞாதம்' ('பெரிய ஆபத்து நேரிடுங்காலத்தில் ஆபத்துக்களைப் போக்குமவனான விஷ்ணுபகவானை நினைக்க வேண்டும்' என்று மஹானுபாவரான வஸிஷ்டர் இங்ஙனம் யாது மொழிந்தாரோ அது இப்பொழுது எனக்குத் தெரிந்தது) என்றாள் த்ரௌபதி. இவளும் நான் பெரியோரிடத்தில் கேட்டிருந்த பரமபுருஷன் இவனேயென்றறிந்தே னென்கிறாள். (வ்யக்தம்) ராவணன் முடிந்தவாறே இப்போது வெளியாயிற்று. அறிந்தபடிதான் என்னென்னில்—(ஏஷ மஹா யோகீ பரமாத்மா ஸநாதந:) என்கிறாள். (ஏஷ:) 'மாநுஷம்வபுராஸ்யாய' என்று மனுஷ்யவேஷம் பூண்டு தன்னை மறைத்துக்கொண்டிருக்கிற இவர். (ஏஷ:) 'தர்மஸம்ஸ்தாபநார்தாய' 'தர்மபாலோ ஜநஸ்யாஸ்ய' என்று ரிஷிகளுக்கு தர்மத்தைக் கொடுத்து 'விபீஷணவியே

ஸமஸ்த வஸ்துக்களைக் காட்டிலும் மேலான பெருமை யுடையவனும் ப்ரக்ருதி மண்டலத்தைக் கடந்தபரமபதத்

யம் ஹி லங்கைஶ்வர்யமிஷ்டம் க்ருதம்' என்று விபீஷணனுக்கு லங்கைஶ்வர்யங் கொடுத்து 'ஹஜஸ்வ காமம் ஸுக்ரீவ" என்று ஸுக்ரீவனுக்குக் காமத்தைக் கொடுத்து 'மயா த்வம் ஸமநுஜ்ஞாதோ கச்ச லோகாநநுத்தமாந்' என்றும் 'ஆவஹத் பாமாம் கதிம்' என்றும் ஜடாயு வாலிகளுக்கு மோக்ஷத்தைக் கொடுத்து அறம் பொருள் இன்பம் வீடென்கிற நான்கு புருஷார்த்தங்களும் முடிந்தவாறே எனக்குக் கைவல்யத்தையே கொடுத்து நிற்கிற இவர். (கைவல்யமாவது—தேசவிசேஷத்திலே போய் ஆத்மானுபவஞ் செய்தலும் தனியாயிருத்தலும்). (ஏஷ:) ஸர்வஶக்திஸ்து ஹ்ருவாந் அஶக்த இவசேஷ்டதே' என்கிறபடியே கரன் வாலிமுதலியவர்களைக் கொல்வது, ஸமுத்ரத்தில் அணைகட்டுவது, லங்கையை அழிப்பது, ராவணனை வதிப்பது முதலிய அதிமானுஷ செஷ்டிதங்களைப் பண்ணி ஒன்றுமறியாதவன்போலிருக்கிற இவன். இப்படி செய்தவன் தான் எவனென்னில் (மஹாயோகீ) 'யோகஸ் ஸந்நாஹநோபாய த்யாந ஸங்கதியுக்திஷு' என்ற நிகண்டுவின்படி யோகஶப்தம் ஸந்நாஹத்தைச் சொல்லுமாகையால்—மஹா ஸந்நாஹமுடையவன், ஆஶ்ரிதாக்ஷணத்தில் மிகுந்த ஸந்நாஹமுடையவனென்கை. (மஹாயோகீ) யோகஶப்தம உபாயத்தைச் சொல்லுகிறது. மஹத்தான உபாயமுடையவன். 'உபாய: கோ வதே தஸ்ய' என்று கேட்பது, 'ப்ரவிஷ்டோ மாநுஷீம் தநும்; அவஶ்யம் தைவதைர் விஷ்ணோ ஸமரே ஜஹி' என்று தேவர்கள் சொல்லுவதாய் இப்படி ராவணவரத்தின் வரிசையில் அகப்படாதபடி இதோருபாயமுடையனனென்று கருத்து. (மஹாயோகீ) யோகஶப்தம் த்யானத்தைச் சொல்லுகிறது. தசரதயஜ்ஞத்தில் தேவர்கள் திரண்டவன்று தொடங்கி ராவணவதம் வரையில் நடுவுள்ளகார்ய சிந்தைகளில் ஒன்றும் பழுதுபோகாதபடி பத்தும்.பத்தாகக் கார்யவிசாரமுடையவனென்னுதல். (மஹாயோகீ) யோகஶப்தம் யுக்தியைச்சொல்லுகிறது.மஹத்தான யுக்தியுடையவன் 'உத்தரோத்தர யுக்தௌச வக்தா வாசஸ்பதிர்யதா' என்கிறபடியே வனவாஸங் கூடாதென்ற இளைய பெருமாளைத் தடுத்தும், ஜாபாலி சொன்ன தர்மாக்ஷேபங்களைத் தள்ளியும், விபீஷண ஶரணாகதிக்கு ஸுக்ரீவன் சரபன் ஜாம்பவான் முதலா

தில் வஸிப்பவனும் வருங்காலம் நிகழ்காலம் கழிகால மான ஸமஸ்தகாலங்களிலுமுள்ள உலகங்களைப் படைப்

---

னவருடைய பக்ஷங்களைத் தகைந்தும் இப்படி பலபேரோடு கலந்தவிடத்திலும் இத்தனை பேரையுந் தள்ளும்படியான ப்ரபல யுக்திகளுடையவனென்னுதல். (மஹாயோகீ) தலையும் ஜடையும் அரையும் மரவுரியுமானவேஷத்தாலும், இத்தனை பெண்கள்திரண்டுகிடக்கமுகமெடுத்துப் பாராத வைராக்யத்தாலும், ஜயித்த ராஜ்யங்களையும் ஸுக்ரீவ விபீஷணாதிகளுக்குக் கொடுத்துத் தான் அவற்றில் நசை பண்ணுமையாலும், நினைத்ததை முடிக்கும்படியான தவமஹிமையாலும் இவன் தான் பெரிய யோகியாயிருக்கிறானென்னுதல். இப்படி மஹாயோகியானால் ஸம்ஸாரிகளிலொருவனோ என்ன (பரமாத்மா) அப்படியல்லன். ஸர்வாந்தர்யாமியான புருஷோத்தமன். (ஸநாதந:) அந்தர்யாமியாயிருந்தும் அவற்றின் தோஷம் கலசாதபடி என்றும் மாறாதிருப்பவன், (அநாதிமத்யநிதந: ஆதி நடு அந்தமில்லாதவன். (மஹத: பரமோமஹாந்)பெரியவற்றைக் காட்டிலும் மிகவும் பெரியோனாஇருப்பவன். தமஸ: பரம:) 'ஆதித்யவர்ணம் தமஸ: பரஸ்தாத்' என்றும் 'க்ஷயந்தமஸ்ய ரஜஸ: பராகே' என்றும். ரஜஸ்ஸென்றும் தமஸ்ஸென்றும் சொல்லப்படுவதான மூலப்ரக்ருதிக்கும் அவ்வருகாயிருப்பவன். (யாதா நித்யவிபூதியென்கிற பரமபதத்திற்கும் லீலாவிபூதியென்கிற ஸமஸ்த லோகங்களுக்கும் தாரகனாயிருப்பவன். (யாதா) தனக்குச் சரீரமான சேதனாசேதனங்களுக்கு அந்தராத்மாவாய் நின்று அவற்றை தரிப்பவனென்னுதல். (ஶங்கசக்ர கதாதர:) தன்னைப் பற்றினாருடைய விரோதிகளைப் போக்குவதற்கு ஆயுதங்களைத் தரித்திருப்பவனென்றபடி. (ஸ்ரீவத்ஸவக்ஷா:) ஸ்ரீவத்ஸ மென்கிற அடையாளத்தை மார்பிலுடையவன். ஸ்ரீவத்ஸ கௌஸ்துபாதிகள் நித்யமாகையால் ருத்ராதிகளைக் காட்டிலும் விலக்ஷணமாயிருப்பவனென்று சொல்லப்பட்டது. (நித்யஸ்ரீ:) லக்ஷ்மி என்றும் தன்னைப் பிரியாதிருக்கப் பெற்றவன். ஆனதுபற்றியே (அஜய்ய:) பிறரால் ஜயிக்கமுடியாதவன். 'அப்ரமேயாஹி தத்தேஜோ யஸ்ய ஸாஜநகாத்மஜா' என்கிறபடியே லக்ஷ்மீஸம்பந்தத்தினால் எவர்க்கும் வெல்ல முடியாதிருப்பவனென்னுதல், (ஶாஶ்வத: அஜய:) என்றும் ஜயம் மாறாதிருக்கப் பெற்றவன், (த்ருவ:) எல்லாம் அழிந்தவன்றும் தான் நிலையாயிருப்பவன். தனிசிலோகி. (வ்யக்த

பவனும் சங்கம் சக்ரம் கதை இவற்றை அணிந்திருப்ப வனும் வலமார்பிலில் சிவந்த நிறமுடையதாகி மத்ஸ்ய

---

மேஷ:) மற்றவர் எவரும் உன்னைக் கொல்ல வல்லரல்லராகையால் இந்த ராமனே உன்றனைக் கொன்றவனென்று வெளியாயிற்றென்கிருள், (மஹாயோகீ) பலவகைப்பட்டு விசித்ரமாயிருக்கிற ஜகத்தை நிர்மிக்குமுபாயத்தில் ஸமர்த்தனாயிருப்பவன். 'வஹுஸ்யாம் ப்ரஜாயேய' என்று முதலில் ஒருவனாயிருந்தான் பலவாறாகும்படி ஸங்கல்பிப்பவன், (மஹத:பரமோமஹாந்) பெரியோர்களைக் காட்டிலும் மிகுதியும் பெரியோனாயிருப்பவன், 'அணோரணீயாந் மஹதோ மஹீயாந்' என்று சொல்லப்பட்ட பரமமஹத்வமென்னும் பரிமாணத்தையுடையவன், (தமஸ: பரம:) 'அக்ஷராத் பரத: பர:' 'யஸ்மாத்க்ஷரமதீதோஹமக்ஷராதபிசோத்தம:' என்று ஶ்ருதிஸ்ம்ருதிகளின்படி க்ஷர அக்ஷரங்களைக் காட்டிலும் (சேதனசேதனங்களைக் காட்டிலும்) மேலாயிருப்பவன், (தமஸ: பரம:) 'ஆதித்யவர்ணம் தமஸ: பரஸ்தாத்' என்ற பரமபதத்தில் வஸிப்பவன், (யாதா) பூதபவிஷ்யத் வர்த்தமானங்களென்கிற மூன்று காலங்களிலும் ஸமஸ்த ஜகத்தையும் நிர்மிப்பவன். 'ஸூர்ய சந்த்ரமஸௌ யாதா யதா பூர்வமகல்பயத்' என்று ஶ்ருதி. (யாதா) ஸ்திதிகர்த்தாவாயிருப்பவன். ரக்ஷகனென்கை, அந்தரக்ஷணம் ஜகத்து பலவகைப்பட்டிருக்கையாலே பலவாறாயிருக்கும். (யாதா) தரிப்பவன். தனது சாஸனத்தினால் உலகங்கள் தனக்கு உட்பட்டிருக்கப்பெற்றவன். 'ஏதஸ்யவா அக்ஷரஸ்ய ப்ரஶாஸநே' என்று ஶ்ருதி. இங்ஙனம் காரணஸ்வரூபமும் உபாஸ்ய வஸ்துவும் அதற்குரிய குணங்களும் சொல்லப்பட்டன. இனிமேல் திவ்யமங்கள விக்ரஹயோகத்தைச் சொல்லுகிறது—(ஶங்கசக்ரகதாதர:) தான் உபாஸ்யனாயிருக்கைக்குத் தகுந்தபடி ஶரணாகதர்களின் விரோதிகளைப் போக்குவதில் ஜாகரூகனாகி (அதாவது அவர்களை முடிக்க ஆயுதங்களை ஏந்தி ஸித்தமாய்) இருத்தல் கூறப்பட்டது. (ஶ்ரீவத்ஸவக்ஷா:) ஶ்ரீவத்ஸகௌஸ்துபாதிகள் நித்யமாகையால் ருத்ராதிகளைக் காட்டிலும் விலக்ஷணமாயிருக்கை சொல்லப்பட்டது. (நித்யஶ்ரீ:) ஸ்வரூபநித்யத்வம் ஸர்வஸாதாரணமாகையாலே இங்கு விக்ரஹ நித்யத்வஞ் சொல்லுகிறது. (அஜய்ய:) லக்ஷ்மீஸம்பந்தத்தினால் தேஜஸ்ஸு மிகுந்திருக்கப்பெற்றவனாகையால் பிறர்க்கு எவர்க்கும் ஜயிக்கமுடியாதவனென்றக் கருத்து. அப்ரமேயம் ஹிதத்தேஜோயஸ்ய

உருவத்துடன்விளங்கும் ஸ்ரீவத்ஸமென்னும் அடையாள முடையவனும் ஸ்ரீமஹா லக்ஷ்மியோடு என்றும் இணை பிரியாதிருப்பவனும் எப்படிப்பட்டவர்க்கும் வெல்லமுடியாதவனுமாகிய அந்தப் பரமபுருஷனே இவன். இது நிச்சயம். 'அப்படிப்பட்ட பரமாத்மா இந்த மானிட உருவம் முதலியவற்றை எடுத்துக் கொள்வது ஏன்?' என்னில், உண்மையான பராக்ரமுடையவனும் மஹாதேஜஸ்வியுமான விஷ்ணுதேவன் ஸமஸ்த லோகங்களுக்கும் நியாமகனாகி அனிஷ்டங்களைப் போக்கி இஷ்டங்களை நிறைவேற்றும் கர்த்தாவாகையால் உடனே ஸமஸ்த லோகங்களுக்கும் ஹிதஞ்செய்ய விரும்பி, தன் மூலமாய் உனக்குச் சாவில்லாமையாகிற வரத்தைப் பரிஹரிக்கும் பொருட்டு மனுஷ்யதேஹந் தரித்து, ஸமஸ்த தேவதைகளும் வானர உருவத்துடன் தன்னைச் சூழ்ந்திருக்கப் பெற்று ஸமஸ்த லோகங்களுக்கும் விரோதியான உன்னையும் உனது ராக்ஷஸ பரிவாரத்தையும் வதித்துவிட்டனன். இது வெளிச்சமே. நீ முன்பு இந்த்ரியங்களை அடக்கி மூன்று லோகங்களையும் வென்றனை. இப்பொழுது அந்த இந்த்ரியங்கள் தம்மை நீ வென்ற அந்த வைரத்தை

---

ஸாஜநகாத்மஜா' என்று சொல்விற்றல்லவா. 'அப்ரயூஷ்யஸ் ச ஸம்கி ராமே ஸேந்த்ரைரபி ஸுராஸுரை:' (தேவேந்த்ரனோடு கூடின தேவாஸுரர்களுக்குங்கூட யுத்தத்தில் அணுகி எதிர்க்கமுடியாதவன்) என்கிறபடியே பிறர் எவர்க்கும் ஜயிக்கமுடியாதவன். (ஶாஶ்வத:) தேசகாலவஸ்து பரிச்சேதங்களென்கிற மூன்று பரிச்சேதங்களுமில்லாதவன். விகாரமற்றவன். (த்ருவ:) அசைக்கமுடியாதவன். ஸஹஸ்ரநாமத்தில் 'அநாதிநிதநோ' 'யாதா' என்று படித்திருக்கையால் 'யாதா என்பதை முக்ய விசேஷ்யமாகக் கொள்ளலாம். அல்லது 'நித்யஸ்ரீ:' என்பதையும் அங்ஙனம் கொள்ளலாம். இங்ஙனம் கோவிந்தராஜர்.

நினைத்து உன்னை வென்றனவோ என்னும்படி இந்த்ரியங்களுக்குட்பட்டு நீ மனம் போனபடியெல்லாஞ் செய்த பாபகார்யங்களின் பயனே இது. 'ராமனுடன் பகை வேண்டாம். ஸந்தி செய்வாயாக' என்று நான் எத்தனை தரம் சொல்லிக் கொண்டிருப்பினும் நீ கேளாமற்போயினையே! அதற்குப் பலன் இப்பொழுது அனுபவத்திற்கு வந்தது. ராக்ஷஸர் தலைவனே! நீ எந்தக் காரணமுமின்றியே ஸீதையிடத்தில் இவ்வளவு அபிலாஷம் வைத்தனை. அப்பெண்மணியினிடம் நீ இங்ஙனம் ஆசைப்பட்டது அயுக்தமே. அதனால் நீ ஐஸ்வர்யமும் உன் பந்துக்களும் நீயுமாக நாசமடைதலே பலித்தது. துர்ப்புத்தி! அருந்ததி ரோஹிணி இவர்களைக் காட்டிலும் மேன்மையுற்றவளும் பூஜைக்கிடமுமான ஸீதாதேவியைச் சிறையடைத்தனையே! இப்படி மிகுதியும் செய்யத் தகாத கார்யத்தையே செய்தனை. என் ப்ரபூ! நீ உன் ஸொத்தான என்னைக் குறைவாக நினைத்தனையே! அன்றி நீ பூமிக்குப் பூமியாகி மிகுந்த பொறுமையுடையவளும் லக்ஷ்மிக்கும் லக்ஷ்மியாகி ஸமஸ்த ஸம்பத்துக்களும் அமைந்து பர்த்தாவினிடத்தில் மிகுந்தப்ரேமமுடைய பதிவ்ரதாமணியும் ஸர்வாங்க ஸௌந்தரியும் மங்களஸ்வபாவையுமான அந்த ஸீதாதேவியை, ஸஞ்சாரமில்லாத அரண்யத்தில் அவள் விரும்பாதிருக்கையில், மாரீசனைக் கொண்டு கபடஞ் செய்து பறித்துக்கொண்டு வந்து, அந்த மிதிலாதிராஜன் புதல்வியோடு புணர வேண்டுமென்னும் விருப்பம் நிறைவேறப் பெறாமலே அந்தப் பதிவ்ரதையின் தவமஹிமையால் எரிந்து போயினை. இது நிச்சயம். நுண்ணிதான அழகிய இடையுடைய அந்த ஸீதையை நீ அங்ஙனம் சிறையிலடைத்த பொழுதே எரிய வேண்டியிருக்க, நீ அங்ஙனம் எரிந்து

போகாமையால் நீ மிகுந்த மாஹாத்ம்ய முடையவ னென்று தெரிகிறது. அந்த மஹிமையைப் பற்றியே, உன்னிடத்தில் இந்த்ரன் அக்னி முதலான தேவதைகள் அனைவரும் பயந்திருந்தனர். அந்த பயத்தினால் அவர் கள், நீ ஸீதையை அங்ஙனஞ் செய்தமைக்கு உன்னை எரிக்காது விட்டனர். பாபகர்மஞ் செய்தவன் அது பலிக்கும் ஸமயம் வந்தபொழுதுதான் செய்த பாபகர் மங்களுக்கு விளையும் கோரமான பலனை அவஶ்யம் அனுபவிப்பான். இதற்கு எள்ளளவும் ஸந்தேஹம் இல்லை. நல்லது செய்யுமவனுக்கு நன்மையே உண்டா கும். கெட்டது செய்யுமவனுக்கு கெடுதியே உண்டா கும். விபீஷணன் ராமனை அடைந்து நன்மை செய் தானாகையால் ஸுகம் பெற்றனன். நீயோ பாபஞ் செய்தாயாகையால் இப்படிப்பட்ட துக்கத்தை அடைந் தனை. அந்த ஸீதையைக் காட்டிலும் மிகுந்த அழ குடைய வேறு மடந்தையர் பலரும் உன்னிடம் இருக் கின்றனர். ஆயினும் நீ மன்மதன்வசம் அகப்பட்டு அந்த ஸீதையைப் பார்த்து மோஹித்திருந்தாயா கையால், உனக்கு அது தோற்றாமலே போயிற்று. ஸீதை குலத்திலும் ரூபத்திலும் வித்யாஸாமர்த்யத்தி லும் (கல்வி வல்லமையிலும்) என்னைக்காட்டிலும் மேற் பட்டவளன்று; என்னோடொத்தவளுமன்று. ஆயினும் நீ மோஹித்திருந்தமையால் இது உனக்குத் தோற்றவில் லை. எப்படியாயினும் எந்த ப்ராணிக்கும் நிமித்தமில்லா மல் ம்ருத்யு உண்டாகாது. அப்படியே உனக்கு ஸீதை யைக் கொண்டுவந்ததே காரணமாக இதோ ம்ருத்யு நேரிட்டது. நீ வெகுதூரத்தினின்று அந்தப் பெண் மணியைக் கொண்டுவந்தனை, ஆகையால் நீயே போய், வெகுதூரத்தினின்று ம்ருத்யுவைக் கொண்டுவந்ததா

யிற்று. ஸீதை இனிச் சோகத்தை இழந்து ராமனுடன் கூடி ஸுகமாக விளையாடப் போகின்றனள். புண்யம் அற்பமாயிருக்கப்பெற்ற நான்மாத்ரம் இங்ஙனம் பயங்கரமான துக்கத்தில் விழுந்தவளாயினள். நான் விசித்ரமான பூமாலைகளையும் வஸ்த்ரங்களையும் தரித்து உன்னுடன்கூடி இணையில்லாத ஒளிவிளங்கப் பெற்று, அந்த அழகின் பெருக்குக்குத் தகுந்த விமானத்தில் ஏறிக்கொண்டு கைலாஸத்திலும் மந்தரபர்வதத்திலும் மேருகிரியிலும் சைத்ரரதமென்னும் உத்யான வனத்திலும் அழகியதான தேவதைகளின் உத்யான வனங்களெல்லாவற்றிலும் இஷ்டப்படி விளையர்டி நானுவிதமான அந்தந்த இடங்களைப் பார்த்து ஸுகம் அனுபவித்துக்கொண்டிருந்தேனே; அப்படிப்பட்ட நான் இப்பொழுது நீமாண்டுபோனமையால் காமோபபோகங்களை யெல்லாந்துறந்தவளாயினன்; அப்படி ஸமஸ்த போகங்களையும் அனுபவித்துக்கொண்டிருந்த நானே இப்பொழுது இங்ஙனம் போகங்களின் பேரையே அறியாத ஸாதாரண வேருெரு மடந்தை போலாய்விட்டனன். ஆகையால், ஓ! அரசர்களின் ஸம்பத்துக்கள் நிலையற்றவை. அவை பாழாய் விடுமாக. ராஜனே! ஸுகுமாரமாகி அழகான புருவங்கள் அமைந்து அழகிய தோளுடன்கூடி உயர்ந்து அழகான மூக்குடையதும் காந்தியில் சந்த்ரனுக்கும் அழகில் தாமரைப்பூவுக்கும் தேஜஸ்ஸில் ஸூர்யனுக்கும் நிகராகி, பர்வத சிகரம் போன்ற கிரீடத்தினுல் தளதளவென்று ப்ரகாசிப்பதும், சிவந்த உதடும் தளதளவென்ற குண்டலங்களும் அமைந்து விளங்குவதுமாகிய உன்முகம் முன்பு பானபூமிகளில் மதத்தினுல் கலங்கிச் சுழலமிடுகின்ற கண்களுடையதாகிப் பலவகைப் பூமாலைகள் அணிந்து விளக்கமுற்று அழகான புன்

னையுடன்கூடி மிகவும் மங்களமாயிருக்குமே! அப்ப டிப்பட்ட இந்த உன்முகமே இப்பொழுது ராமபாணங் களால் பிளவுண்டு ரக்தவெள்ளத்தில் நனைந்து மேதஸ் ஸும் மூளையும் சிதறி வெளியாகப்பெற்றுத் தேரின் தூள்கள் படிந்து, என்னப்பனே! சிறிதும் விளக்கமுறா திருக்கின்றதே, ஐயோ! நீ மரணம் அடைய, நான் முட் டாக்கிட வேண்டுந்தசை நேர்ந்ததே! இப்படிப்பட்ட தசை நேருமென்று மூடையான எனக்கு முன்பு எப் பொழுதும் தோற்றவில்லையே! 'என் தந்தையான மயன் தானவர்களுக்கு அரசன். என் பர்த்தா ராக்ஷஸர் களுக்கு நாதன். என் புதல்வன் இந்த்ரனை ஜயித்தமஹா வீரன்' என்று கர்வித்துக்கொண்டிருந்தேனே! என்னை ரக்ஷிக்குந் திக்கான என் தந்தை பர்த்தா புதல் வன் முதலானவர்கள் மதித்த சத்ருக்களையும் முடிக் கும் மஹாசூரர்களென்றும், பலயுத்தங்களில் புகழ் பெற்ற பல பௌருஷங்களுடையவரென்றும், அவர்க்கு எவராலும் பயம் நேராதென்றும் கெட்டியாக நம்பி யிருந்தேனே! கடைசியில் இப்படி ஆயிற்று! ராக்ஷஸ திலகனே! அங்ஙனம் ப்ரஸித்தமான இப்படிப்பட்ட ப்ரபாவமுடையவனாயிருந்த உனக்கு இதுவரையில் என் றும் இப்படி நேருமென்று நினைக்கவும் முடியாத இப்ப டிப்பட்ட பயம் ஒரு கேவலமனுஷ்யனால், எப்படி நேரிட் டதோ! ஆ! ஆச்சர்யமாயிருக்கின்றதே! மஹாராஜனே! உன்மேனி, நிகுநிகுப்புள்ள இந்த்ர நீலம்போல் கறுத்து உயர்ந்த பர்வதம்போன்று, கைவளைகளும் தோள்வளை களும் வைடூர்ய மணிமாலையும் முத்து மாலையும் பூமாலை யும் அணிந்து விளங்குவதும் விளையாடும் ஸமயங்களில் மிகவும் அழகாயிருப்பதும் யுத்தபூமிகளில் வீர்யோத் ஸாஹத்தினால் இருமடங்கதிகமாக ஜ்வலிப்பதும் மின்

னல்களால் மேகம்போல் ஆபரணகாந்திகளால் மிகுதி யும் ப்ரகாசிப்பதுமாயிருக்குமே. அப்படிப்பட்ட சரீரமே இப்பொழுது, தீக்ஷ்ணமான பல பாணங்கள் முழுவதும் நிறைந்து ஸ்பர்சிக்கவும் முடியாததாகி ஆலிங்கனஞ் செய்யச்சிறிதும் ஸாத்யமில்லாதிருக்கின்றதே! மற்றும், இது, முள்ளம்பன்றியின் சரீரம் முட்கள் நிறைந்திருப் பதுபோல், சிறிதும் இடை வெளியின்றி நன்கு பொற் றுக்கொண்டிருக்கிற பாணங்கள் நிரம்பப்பெற்று, நரம் புகளின் கட்டுக்களெல்லாம் மிகுதியும் அறுந்து பொன் வர்ணமுடையதாயினும் ரக்தம் நிரம்பப் பெருகிக் கொண்டிருக்கையால் அதைப்போல் சிவந்த நிறமுடைய தாகிப் பூமியில் விழுந்து, வஜ்ராயுதத்தினல் பிளவுண்டு விழுந்த பர்வதம்போல் இருக்கின்றது. ஐயோ! நீ மர ணம் அடைந்தது ஸ்வப்னமே. ஸ்வப்னமென்பது ஸத்ய மே. உன்னைப்போன்ற சூரனை ராமன் எங்ஙனம் வதிக்க நேர்ந்தது? நீ ம்ருத்யுவுக்கும் ம்ருத்யுவாயிருப்பவனல் லவா? ம்ருத்யுவின் கையில் எப்படி அகப்பட்டுக் கொண்டனை? ஆகையால் நீ மரணம் அடைந்த மை ஸ்வப்னமே. மூன்று லோகங்களிலுமுள்ள ஸமஸ்த ரத்னங்களையும் அனுபவிப்பவனும் மூன்று லோகங்களுக்கும் பெரும்பயத்தை விளை விப்பவனும் ஸமஸ்த லோகபாலர்களையும் ஜயித்துக் கைலாஸ பர்வதத்தை அசக்கிச் சிவனைப் பரிபவித்து, பலத் தினல் கர்வித்தவர்களை அடக்கிப் பராக்ரமத்தைப் பத் துத்திசைகளிலும் பரப்பினையே. உலகங்களையெல்லாம் கலக்கி ஸமஸ்த பூதங்களையும் ஸிம்ஹநாதங்களால் குய் யோ முறையோவென்று கூப்பிடச்செய்தனையே. சத்ருக் கள் எதிர்க்கும்பொழுது வீர்யப்பெருக்கினல் பொருள் செய்யாமல் கர்வவார்த்தைகளைப் பேசி வென்றனையே.

அநேகமாயிரம் மேலான தானவ வீரர்களையும் யக்ஷர்களையும் கொன்றனையே. நிவாதகவசர்களையும் பயமுறுத்தி உனக்கு நண்பர்களாகும்படி செய்துகொண்டனையே. மூன்று லோகங்களுக்கும் நியாமகனுகிப் பலயாகங்களுக்கு விக்னஞ்செய்து வந்தனையே. தன் ஜனங்களை ஆதரவுடன் போஷித்து தர்மமர்யாதைகளை அழித்து யுத்தத்தில் பல மாயைகளைப் பரப்பி அந்தந்த இடங்களினின்று தேவகன்யகைகளையும் அஸுரகன்யகைகளையும் மனுஷ்யகன்யகைகளையும் வலிமையால் பறித்துக்கொண்டு வந்த மஹாசூரனல்லையா? சத்ருக்களை வதித்து அவரது மடந்தையர்க்குச் சோகத்தைக் கொடுத்துத் தன் ஜனங்களை நன்ருக நடத்தி லங்காத்வீபத்தை ஆண்டு வந்தனையே! சிரங்களை அக்னியில் ஹோமஞ் செய்கை முதலிய பயங்கரமான கார்யங்களை நடத்தினவனல்லையா? எங்களெல்லோர்க்கும் காம போகங்களை அளவில்லாமற் கொடுத்துக்கொண்டிருந்தனையே. ரதிகசிரோமணியல்லவா? இப்படிப்பட்ட ப்ரபாவங்கள் அமைந்த என் ப்ரியன், என் ப்ராணேஶ்வரன் ராமனுல் அடியுண்டு மாண்டு விழுந்திருப்பதைக் கண்டும் பர்த்தாவைப் பிரிந்து இன்னமும் தேஹத்தை வைத்துக்கொண்டிருக்கின்றனன். ஆகையால் நான் வஜ்ரசிலைபோல் கடினையாயிருக்கிறேனன்றி வேறில்லை. ராக்ஷஸேஶ்வரா! நீ மிகுதியும் விலையுயர்ந்த படுக்கைகளில் படுத்திருப்பாயே! இப்பொழுது இங்கு உடம்பெல்லாம் தூள் படிந்து சிவக்கும்படி பூமியில் படுத்திருக்கிறுயென்? என்புதல்வனுகிய இந்த்ராஜித்தை லக்ஷ்மணன் யுத்தத்தில் வதிக்கும்பொழுதே நான் தாருணமாக துக்கத்தினுல் அடியுண்டிருந்தனன். இப்பொழுது நீ மாண்டுபோகையில்முதலே விழத்தள்ளுண்டனன். ஆகையால் பிழை

ப்பில்லை. நீ ஜீவித்திருப்பின், என் பந்துக்கள் மாண்டார்களென்று எனக்கு துக்கம் உண்டாகாது. என் நாதனுகிய நீ என்னைப் பிரிந்து போனுயாகையால், இனி உள்ள காலமெல்லாம் காமபோகங்களைத் துறந்து துக்கத்தை அனுபவித்துக்கொண்டிருப்பேன். ராஜனே! எவர்க்கும் பெறமுடியாத வெகுதூரமான இடத்திற்குப் போயினை. துக்கத்தினுல் வருந்தியிருக்கின்ற என்னையுங்கூடவே அழைத்துக்கொண்டு போவாயாக. உன்னை விட்டுப் பிரிந்து நான் சிறிதும் பிழைத்திருக்க வல்லளல்லேன். நீ இங்ஙனம் மிகுதியும் துக்கித்து அடிக்கடி புலம்பிப் புலம்பி இளைப்புற்றுத் தீனையும் பாக்யமற்றவளுமாகிய என்னை, இங்கேயே தனியளாக நிறுத்திவிட்டுப் போக விரும்புகின்றுயென்? இது தகுமா? போகட்டும். எனக்கு மறுமொழியாயினும் கூறலாமல்லவா? அதையுங்கூட மொழியாதிருக்கின்றனை யேனே? ப்ரபூ! முட்டாக்கின்றிப் பட்டணத்து வாசல்வழியாக வெளிப்புறப்பட்டுக் கால் நடையாகவே வந்திருக்கின்ற என்னைப் பார்த்துக் கோபத்தினுல் பேசாதிருக்கின்றனையல்லவே? அப்படி கோபமுற்று திருக்கின்றனையேன்? நீ பார்யைகளிடத்தில் மிகுதியும் ப்ரீதியுடையவனல்லவா? ஆகையால் உன்பார்யைகள் எல்லோரும் வெட்கத்தினுல் முட்டாக்கிடுவதைத் தவிர்ந்து அந்தப்புரத்தினின்று வெளிப்பட்டு இதோ வந்திருக்கின்றனம், காண்பாய். கண்டு அவர்கள் மேல் கோபமுற்று திருக்கின்றனையேனே? உனக்கு விளையாடல்களனைத்திலும் ஸஹாயமாயிருந்த இந்த பார்யைகளெல்லோரும் இங்ஙனம் அநாதைகளாகிப் பன்னிப்பன்னிப்புலம்புகின்றனரே! இவர்களை ஸமாதானப்படுத்தவுங் கூடாதா? வெகுமதிக்கலாகாதா? இதுவென்? ராஜனே! பதிவ்ரதைகளும் தர்மத்தில் ஊக்கமுடையவரும் குரு

சுஶ்ரூஷையில் விருப்புற்றவருமான குலமடந்தையர் பல ரையும் நீ முன்பு அவரது பதிகளைக் கொன்று விதவை களாகச் செய்தனையே. அவர்கள் எல்லோரும் சோகத் தினால் பரிதபித்து உன்னைச் சபிக்கையால், நீ இங்ஙனம் சத்ருக்கள் வசம் அகப்பட்டனை. இல்லையாயின் இப்படி அகப்படுவாயா? உன்னால் அங்ஙனம் பரிபவம் அடைந்த அந்தக் குலமடந்தையர் தமது பர்த்தாக்களை நீ வதிக் குங்காலத்தில் உன்னை என்னென்று சபித்தார்களோ, அதற்குப்பலன் இப்பொழுது நேரிட்டது. ராஜனே! 'பதி வ்ரதைகளுக்குக் காரணமில்லாமல் கண்ணீர்கள் பூமி யில்விழா, அவை விழுமாயின், ஏதேனும அனர்த்தத் தை விளைவித்தே தீரும்' என்று லோகத்தில் ஜனங்கள் மொழிகிற இந்தப் பழமொழி என் விஷயத்தில் ஸத்ய மேயாயிற்று. ராஜனே! தேஜஸ்ஸினால் மூன்று லோகங் களையும் ஆக்ரமித்து மஹா சூராக்ரணியென்று செருக் குற்றிருக்கின்ற நீ பிறனுடைய பெண்டிரைத் திருடிக் கொண்டு வருகையாகிற இந்த அற்ப கார்யத்தை எங்ங னஞ்செய்தனை? நீகபடஉபாயத்தினால்மாயாம்ருகத்தைத் தோற்றுவித்து ராமனை ஆஶ்ரமத்தினின்று தொலைந்து போகும்படி செய்து ர்ாமனது பார்யையாகிய ஸீதை யைக் கொண்டுவந்தனையே. இதனால் உனக்கு விளைந்த தென்? உன் பயங்காலித்தனத்திற்கு இது ஓரடையாள மாயிற்று. ஆயினும், நீ யுத்தத்தில் ஒருபொழுதாயினும் பயப்படுந் தன்மையைக் காட்டினதாக நானறியேன். அப் படிப்பட்ட தைர்யஸ்வபாவனாகிய நீ பாக்யம் தலை கீழா யிருக்கையால். ஸீதையைத் திருடிக்கொண்டு வரும்படி- யான மனக்கலக்கம் உனக்கு விநாசம் ஸமீபித்ததென்ப தற்கு அடையாளமாக நேரிட்டதேயன்றி வேறன்று. பூத பவிஷ்யத்காலங்களைச் சேர்ந்த ப்ரயோஜனங்களை

யெல்லாம் நன்குணர்ந்து, வர்த்தமானகாலத்தின் ப்ரயோ ஜனத்திலும் ப்ராஜ்ஞனும் ஸத்யவாதியும் மஹா பாக்ய முடையவனுமாகிய என் மைத்துனன் விபீஷணன், நீ ஸீதையைக் கொண்டுவந்தமை கண்டு சிறிது நேரம் ஆலோசித்து நெடுமூச்செறிந்து உனக்கு என்ன மொழிந்தானே அந்த ப்ரகாரமாகவே இப்பொழுது உன்கா மக்ரோதங்களால் உண்டாகி வெகுதூரம் பரம்பின வ்ய ஸனமாகிற காரணத்தினால் ஸமஸ்த ராக்ஷஸஸ்ரேஷ்டர் களுக்கும் இதோ விநாசம் ஸமீபித்தது. எல்லாவற்றை யும்வேரோடுகூட நாசஞ்செய்யும்படியான இந்த மஹா னர்த்தம் உனக்காக உண்டாயிற்று (உன்னாலேயேன் விளைந்தது).நீயே இந்த ராக்ஷஸகுலத்தையெல்லாம்திக் கற்றதாகச் செய்தனை. பலத்திலும் பௌருஷத்திலும் ப்ரக்யாதி அடைந்த மஹா சூரனாகிய நீ யுத்தத்தில் மர ணம் அடைவதற்கு நான் துக்கிக்கவேண்டிய அவஸ்ய மில்லை. ஆயினும் பெண்ணானகையால், என் புத்தி நிலைநிற் காமல் தைன்யத்தில் தடைபடுகின்றது. உன் புண்யத்தை யும் பாபத்தையும் எடுத்துக்கொண்டு நீ பெறவேண்டிய கதியைப்பெற்றனை. ஆகையால் உன்னைக் குறித்து வருந் தப்படவேண்டிய அவஸ்யமில்லை யன்றி, உன்னைப்பிரிந் தமையால் விளையும் துக்கம் பொறுக்கக் கூடாமையால் என்னைக் குறித்தே வருந்துகின்றனன். நிர்தோஷனே! உனது நண்பர்கள் உன் ஹிதத்தை விரும்பிச்சொன்ன வார்த்தையைக் கேளாமற்போயினை. அவரது வார்த்தை அப்படி இருக்கட்டும். உன் தம்பிகள் உனக்குக் குறை வற மொழிந்த ஹிதத்தை யாயினும் கேட்கலாகாதா? அதையும் கேளாது போயினை. விபீஷணன், யுக்திகளும் ப்ரயோஜனமும் அமைந்ததும் நன்மையை விளைப்பதும் சாஸ்த்ரங்களில் சொன்ன க்ரமந்தவறாததும் விரட்டுத

வின்றி நல்வார்த்தையை முன்னிட்டுக் கொண்டிருப்பது மாக மொழிந்த வார்த்தையையும், நீ தாயாதி, என் வ்ய ஸனத்தையே விரும்புவாய்' என்று இப்படிப்பட்ட ஏதோ சில காரணங்களைச் சொல்லி, யுக்தியுடன் கைப்பற்று து போயினை. அப்பொழுது மாரீசனும் கும்பகர்ணனும், என் தந்தை மயனும் மொழிந்த வார்த்தைகளை, நீ வீர் யத்தினுல் மதித்திருந்தமையால் கேளாமற் போயினை. அதற்கு இப்படிப்பட்ட பயன் இதோ ப்ராப்தமாயிற்று. என்ன செய்யலாம்? நீலமேகம்போல் விளக்கமுற்றுப் பீதாம்பர முடுத்து. (பொன் நிறமுடைய வஸ்த்ரம் தரித் து) அழகான தோள்வளைகளால் ப்ரகாசித்துக் கொண் டிருப்பாயே! இப்படி ரக்தத்தில் நனைந்து கால்கைகளைச் சாய்த்து நித்ரிப்பதுபோல் விழுந்திருக்கின்றனையேனே? நான் இங்ஙனம் துக்கத்தினுல் புலம்பிக்கொண்டிருப் பினும் மறுமொழி கூருதிருப்பதேனே? மஹா பராக்ரம சாலியும் ஸமர்த்தனும் யுத்தத்தில் பின்வாங்கி ஓடாத வனுமாகிய மால்யவானுடைய (அல்லது ஸுமாலியினு டைய) பேரனே! என்னைக் கண்ணெடுத்தும் பாராதிருப் பதேனே? நீ மாண்டு விழுந்தமையால் பயமற்று ஸூர்ய கிரணங்கள் இப்பொழுது லங்கையினுள் ப்ரவேசித்தன. இங்ஙனம் என்றும் இல்லாமல் புதிதாக அவமானம் வந் திருக்கும்பொழுது நீ ஏன் படுத்திருக்கின்றனையே? எழுந்திரு, எழுந்திரு. நீ யுத்தத்தில் சத்ருக்களை உரு மாய்ப்பதற்கு முக்யஸாதனமும் ஸூர்யன்போல் தகதக வென்று ஜ்வலிப்பதும் உன்னுல் நித்யம் பூஜை செய் யப் பெற்றதும் யுத்தத்தில் சத்ருக்களை அழிப்பதும் [1] காஞ்சன ஜாலங்களால் அலங்காரஞ் செய்யப்பெற்ற

1. பொற்சங்கிலி பொன் பதக்கம் முதலிய பொன்னலங்காரங் களால்.

தும் இந்த்ரனுடைய வஜ்ராயுதம்போல் ப்ரகாசிப்பதுமாகிய உன்னுடைய இரும்புத்தடி ராமபாணங்களால் ஆயிரம் துனுக்கைகளாகத் துண்டிக்கப்பெற்று இப்பொழுது பூமியில் விழுந்திருக்கின்றதே. நீ, ப்ரீதிக்கிடமான பெண்மணியைப்போல் யுத்த பூமியை அணைத்துக்கொண்டு பூமியில் விழுந்திருக்கின்றனையே. ப்ரீதிக்கிடமாகாதவளைப்போல் என்னை மாத்ரம் துறந்து என்னோடு பேசவும் விரும்பாதிருக்கின்றனையேனோ? நீ மரணம் அடைந்தபின்பும், என்னுடைய இந்த ஹ்ருதயம் துக்கத்தினால் வருந்தி ஆயிரஞ் சுக்கலாய்ப் பிளவாதிருக்கின்றதே! சீ! இப்படிப்பட்ட கடினையாகிய நான் பாழாய்ப்போவேனாக' என்று புலம்பினள். பட்ட மஹிஷியான மண்டோதரி இவ்வண்ணம் நீர்களால் கண்கள் கலங்கப்பெற்றுப் புலம்பிக்கொண்டேயிருந்து பர்த்தாவினிடத்திலுள்ள ஸ்னேஹத்தின் மிகுதியால் ஹ்ருதயம் நனைந்திருப்பதுபற்றி (நிறைந்திருப்பதுபற்றி) துக்கத்தை அடக்கமுடியாமல் மூர்ச்சை அடைந்தனள். இங்ஙனம் மண்டோதரி துக்கத்தினால் வருந்தி மூர்ச்சித்து, நீலநிறமுடையதாகி ரக்தத்தில் நனைந்திருக்கிற ராவணனது மார்பில் விழுந்து, ஸந்த்யையின் காந்தியால் சிவந்த கறுத்தமேகத்தில்விளங்கும் மின்னற்கொடிபோல்ப்ரகாசித்தனள். மண்டோதரி அங்ஙனம் ரோதனஞ் செய்துகொண்டு பர்த்தாவின் வக்ஷஸ்தலத்தில் மூர்ச்சித்து விழுகையில், அந்தச் சக்களத்திகள் மிகுதியும் வருந்தி விரைந்தோடி வந்துதாமும் மிதமில்லாமல் ரோதனஞ்செய்துகொண்டு அவளை எழுந்திருக்க எடுத்து 'தேவீ! ராஜாக்களின் ஸம்பத்து நிலையற்றவையென்று உனக்கு நன்றாகத் தெரிந்தேயிருக்கின்றது. மற்றும், பால்யம் கௌமாரம் யௌவனம்வார்த்தகம் மரணம்முதலிய வேறுவேறு அவஸ்த்

தைகள் பலவும் உண்டாகப்பெற்று மாறிக்கொண் டிருக்கையால் உலகங்களின் ஸ்திதியும் நிலை நிற்பதன் றென்று நன்றாக அறிவாயல்லவா? இதற்கு ஏன் வருந்து கின்றனை?' என்று ஸ்மாதானப்படுத்தினர். இங்ஙனம் சக்களத்திகள் ஸமாதானப் படுத்திக்கொண்டிருக்கை யில், அம்மண்டோதரி, உயர்ந்திருக்கிற தன் கொங்கை களைக் கண்ணீர் பெருக்குக்களால் நனையச் செய்து கொண்டு பெருங்கோஷத்துடன் ரோதனஞ்செய்தனள். இங்ஙனம் அவர்கள் ரோதனஞ் செய்துகொண்டிருக் கையில், ராமன் விபீஷணனைப் பார்த்து 'இந்த ஸ்த்ரீ களெல்லோரையும் பட்டணத்திற்குத் திருப்பியனுப்பி அண்ணனுக்கு உத்தரக்ரியைகளை (ப்ரேதகார்யங்களை) நடத்துவாயாக' என்றனன். அனந்தரம் தர்மஜ்ஞனாகிய விபீஷணன், ராமன் மொழிந்த வசனத்தைக் கேட்டு, முன்பு ராவணனுக்கு உத்தரக்ரியைகளைச் செய்கிறே னென்று சொல்லுகையால், ராமன் அதை அங்கீகரித் துச் சொல்லுகிறானென்று தன் புத்தியில் ஆலோசித்து, தன் வார்த்தையைத் தள்ளமுடியாமல் அவன் அங்ஙனம் மொழிந்தானோ என்னவோ, அவனே அனுமதி கொடுப் பானாயின் அப்பொழுதே செய்வேனன்றி மற்றொருவிதஞ் செய்யேனென்று நிச்சயித்து அவனது அபிப்ராயத் தையே அனுஸரிக்கும் பொருட்டு வணக்கத்துடன் தர் மார்த்தங்கள் நிறைந்த வசனங்களை இங்ஙனம் மொழி யத்தொடங்கி, அவனைப்பார்த்து 'இந்த ராவணன் தர் மத்தையும் வ்ரதங்களையும் துறந்தவன்; கொடியன்; ப்ரா ணிகளை ஹிம்ஸிக்குந் தன்மையன்; பொய்பேசும் ஸ்வபா வமுடையவன்; மற்றும் பரஸ்த்ரீகளைப் புணர்தலே பணி யாயிருப்பவன். இப்படிப்பட்டவனுக்கு ஸம்ஸ்காரஞ் செய்ய நான் தகுந்தவனல்லேன் இந்த ராவணன் எனக்கு

ப்ராதாவின் உருவந்தரித்த சத்ருவேயன்றி வேறல்லன். மற்றும், ஸமஸ்த ப்ராணிகளுக்கும் கெடுதிசெய்வதிலேயே மிகுதியும் விருப்பமுடையவன். ஆகையால் எனக்குப் பெரியவனென்று பூஜிக்கவேண்டியவனுயினும் இந்த தோஷங்களைப்பற்றிச் சிறிதும் பூஜிக்கத் தகுந்தவனல்லன். நான் தமையனுக்கு ஸம்ஸ்காரஞ் செய்யாத விஷயத்தில் பூமியிலுள்ள மஹா ஜனங்கள் என்னை க்ரூரனென்று இஷ்டப்படி சொல்லினும் சொல்லுவார்கள். ஆயினும், இவன் செய்த தோஷங்களைக் கேட்பார்களாயின், ‘விபீஷணன் ராவணனுக்கு ஸம்ஸ்காரஞ் செய்யாதுபோயினும் நல்லகார்யமே செய்தவனுயினன்’ என்று மீளவும் எல்லோரும் சொல்லுவார்கள்’ என்றனன். பேசுவதில் ஸமர்த்தனும் தார்மிகர்களில் சிறந்தவனுமாகிய ராமன் விபீஷணன் அங்ஙனஞ் சொன்னதைக் கேட்டு மிகுதியும் அஸந்துஷ்டி (ஸந்தோஷ மில்லாமையை) அடைந்து பேசவல்லவனுன விபீஷணனைப் பார்த்து ‘ராக்ஷஸேஶ்வரா! நீ எனக்கு ப்ரியத்தையே செய்யவேண்டியவன். மற்றும், உன் மஹிமையாலேயே எனக்கு இந்த ஜயம் உண்டாயிற்று. ஆகையால், நான் அவஶ்யம் உனக்கு ஹிதத்தையே சொல்ல வேண்டியவன். ராவணனுக்கு ஸம்ஸ்காரஞ் செய்தல் எனக்கு ப்ரியமானது; உனக்கும் ஹிதமாயிருப்பது. ஆகையால் அதைச் செய்வாயாக. இந்த ராவணன் அதர்மமும் அஸத்யமும் உடையவனென்பது உண்மையே. தோஷங்களுடையவனுயினும் குணங்கள் பலவும் அமைந்தவன். மஹா தேஜஸ்வியும் மஹா பலிஷ்டனும் எப்பொழுதும் யுத்தங்களில் தோல்வி யடையாத மஹா ஶூரனுமாயிருக்கின்றனன். இவன் தேவேந்த்ரன் முதலிய தேவதைகளாலும் தோல்வி அடையாதவனென்று கேள்

விப்படுகின்றனன். மற்றும், இவன் மஹானுபாவன்; நானுவித பலங்களும் அமைந்தவன்; ஸமஸ்தலோகங்களையும் ரோதனஞ் செய்விக்கையால் (அழப்படுத்துகையால்) ராவணனென்னும் பேர் பெற்றனன். 'குணங்கள் பல உளவாயினும் உனக்குச் சத்ருவானவனை எங்ஙனம் ஸம்ஸ்கரிப்பேன்?' என்கிருயோ? * சாகாதிருக்கும் வரையிலுமே எல்லாவைரங்களும் செத்துப்போன பின்பு வைரங்களைப் பாராட்டலாகாது. அதுவுமன்றி நங்கார்யம் நிறைவேறிற்று. ஆகையால் இவனுக்கு உத்தரக்ரியைகளை நடத்துவாயாக. இனி, இவன் உனக்கு எப்படி பந்துவோ அப்படியே எனக்கும் பந்துவன்றி வேறல்லன். உன்னைப்போலவே இவனும் எனக்கு பந்து. விபீஷணு! உனக்கு தர்மங்களெல்லாம் தெரிந்தவையே. ஆகையால் ராவணன் உன் கையால் சாஸ்த்ரங்களிற் சொல்லிய விதியின்படி ஸம்ஸ்காரம் பெறுதற்குத் தகுந்தவனே. பாபிஷ்டனுனவனுக்கும் ஸம்ஸ்காரஞ் செய்தானென்று உனக்குக் கீர்த்தியும் விளையும்' என்றனன். ராமன் மொழிந்தது கேட்டு விபீஷணன் ஸ்த்ரீகளெல்லோரையும் அனுப்பிவிட்டு ராவணனுக்கு விரைவுடன் யாகசீலனுக்குச் செய்வதுபோல் ஸம்ஸ்காரஞ் செய்தனன். அனந்தரம் ருத்விக்குகள், மத்மகம் வெட்டிவேர் முதலிய கந்த த்ரவ்யங்களோடு சந்தனக் கட்டைகளால் சிதை அடுக்கி, அதன்மேல் வெளுத்தமயிருடைய மான் தோலை விரித்து, வேதங்களிற் சொல்லிய க்ரமத்தின்படி ராவணனை அதில் சேர்த்தனர். அங்ஙனம் சிதையில் சேர்த்து ராக்ஷஸராஜனை ராவணனுக்கு வேதங்களில் விதிக்கப்பட்ட அந்த்யேஷ்டியை (ப்ரேதகார்யத்தை) நடத்தினர். அப்பொழுது

* 3218-ஆவது பக்கத்தில் அடிக்குறிப்பில் காண்க,

அந்த ராக்ஷஸேஸ்வரனுக்குப் பித்ருமேத ஸம்ஸ்காரத்தை க்ரமப்படியே முடித்தனர். ருத்விக்குகள் சிதைக்கு ஆக்னேயபாகத்தில் வேதிகையைக் கற்பித்து அதில் மேற்கில் கார்ஹபத்யாக்னியையும் கிழக்கில் ஆஹவனீயாக்னியையும் தெற்கில் தக்ஷிணாக்னியையும் ஆக மூன்று அக்னிகளையும் அந்தந்த இடங்களில் ஸ்தாபித்தனர். அப்பால் தயிருடன் கலந்த நெய்நிறைந்த ஹோம பாத்ரத்தை எல்லோரும் சிதையில் பொகட்டனர். கர்மங்களை உணர்ந்த ராவணனது ருத்விக்குகள் ராவணனுடைய பாதங்களில் ஸோமராஜங் கொண்டுவருஞ் சகடத்தையும் துடைகளின் இடையில் யாகத்திற்கு வேண்டிய நெல்லைக் குத்துவதற்குஉரிய உரலையும் ஸமஸ்தமான மரப்பாத்ரங்களையும் அரணியையும் உலக்கையையும் மற்றுமுள்ள ஸ்தாலி முதலியவற்றையும் அந்தந்த இடங்களில் வைத்து வேதங்களிலும் அவற்றை அனுஸரித்து மஹர்ஷிகள் இயற்றின ஸ்ம்ருதிகளிலும் விதிக்கப்பட்ட விதியின்படி அந்தச் சிதைக்கு ஸமீபத்தில் பரிசுத்தமான சாகத்தை (ஆட்டை)க் கொன்று ஹோமஞ்செய்து [1] மேல் தோலை நெய்யில் நனைத்து ராக்ஷஸராஜனான ராவணன்மேல் போர்த்தனர். அப்பொழுது அந்த ராக்ஷஸர்கள் விபீஷணனோடுகூடி மனவருத்தத்துடன் சந்தனம் முதலிய வாஸனாத்ரவ்யங்களாலும் பல

---

1 இங்கு 'பரிஸ்தரணிகாம் ராஜ்ஞோ வ்ருதாக்தாம் ஸமவேஸயந்' என்பது மூலம். மஹேஸ்வரதீர்த்தர் 'அநுஸ்தரணிகாம் ராஜ்ஞோ வ்ருதாக்தாம்' என்று பாடங்கொண்டு அனுஸ்தரணிகையென்றால் ராஜகவியை வதித்து அதன் தோலால் ராவணனை மூடினரென்று பொருள் கூறி அதற்கு 'யயா ம்ருதாயாநுஸ்தரணீம் வ்யந்தி' என்று ஸ்ருதியை ப்ரமாணமாக எடுத்திருக்கிறார். ராஜகவியாவது-ராஜார்ஹமான பசு.

வகை வஸ்த்ரங்களாலும் ராவணனை அலங்கரித்து முகங்களில் கண்ணீர் பெருகப்பெற்று அப்பொழுது சிதையின் மேல் பொரிகளை இறைத்தனர். அப்பால் விபீஷணன் மந்த்ரங்களைச் சொல்லிக்கொண்டே ராவணனுக்கு அக்னி ப்ரதானஞ் செய்தனன். அவ்விபீஷணன் ஸ்னானஞ்செய்து ஈரத்துணியுடன் பூமியில் அறுகம் புல்லுகளையும் எள்ளுகளையும் ஜலத்தையும் இட்டு அதில் ப்ரேதத்தை ஆவாஹனஞ்செய்துராவணனுக்கு உதக (ஜல)ங்கொடுத்துத் தலை வணங்கி நமஸ்காரஞ்செய்து அந்த ராவணஸ்த்ரீகளை, பட்டணத்திற்குப் போவீர்களென்று பலவாறு நல்வார்த்தைகளை மொழிந்து அவர்களைப் பட்டணத்திற்கு அழைத்துக்கொண்டுபோயினன். அவர்களெல்லோரும் அப்பொழுது பட்டணத்திற்குள் ப்ரவேசித்தனர். அந்த ராக்ஷஸ ஸ்த்ரீகளனைவரும் பட்டணம் ப்ரவேசித்த பின்பு, வீபீஷணன் ராமனிடம் வந்து அவனது பார்ஶ்வத்தில் வணக்கத்துடன் நின்று பணிந்திருந்தனன். ராமனும் அங்ஙனம் சத்ருக்களைக் கொன்று, வ்ருத்ராஸுரனைக்கொன்ற மஹேந்த்ரன்போல் விளக்கமுற்று ஸைன்யங்களும் ஸுக்ரீவனும் லக்ஷ்மணனும் சூழ்ந்திருக்கப்பெற்று மிகுதியும் ஸந்தோஷம் அடைந்தனன். நூற்றுப் பதினொன்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராமனது கட்டளையின்படி லக்ஷ்மணன் விபீஷணனுக்குப் பட்டாபிஷேகஞ்செய்தலும், ஸீதைக்குத் தன் விஜயத்தை அறிவிக்கும்பொருட்டு ஹனுமானை அனுப்புதலும்.

அனந்தரம் யுத்தத்தைப் பார்க்கவந்திருந்த அநந்த தேவதைகளும் கந்தர்வர்களும தானவர்களும் ராவணவதத்தைக் கண்டு தந்தமது விமானங்களில் ஏறிக்கொண்டு மேலான வார்த்தைகளைச் சொல்லிக்கொண்டு

தந்தமது இடங்களுக்குப் போயினர். அம்மஹாநுபாவர்கள் ஸந்தோஷமுற்று பயங்கரமான ராவணவதத்தையும் ராமனது பராக்ரமத்தையும் வானரர்கள் செய்த மஹாயுத்தத்தையும் ஸுக்ரீவனுடைய ஆலோசனையையும் ஸுமித்ரையின் புதல்வனாகிய லக்ஷ்மணனுக்கு ராமனிடத்திலுள்ள அநுராகத்தையும் அவனுடைய பராக்ரமத்தையும் அங்ஙனம் நல்ல பிள்ளையைப்பெற்ற ஸுமித்ரையின் ஸௌபாக்யத்தையும் புகழ்ந்து சொல்லிக்கொண்டு தாம் வந்தவழியே போயினர். மஹாநுபாவனாகிய ராமன் மாதலியை மிகுதியும் கௌரவித்து தேவேந்த்ரன் அனுப்பினதும் அக்னிபோல் தகதகவென்று ஜ்வலிப்பதுமாகிய திவ்யரதத்தைக் கொண்டு போகும்படி அநுமதி கொடுத்தனன். இந்த்ரஸாரதியான மாதலியும் ராமனிடம் அநுமதிபெற்று அந்த திவ்யரதத்தின்மேல் ஏறிக்கொண்டு தேவலோகத்திற்குப் போயினன். தேவஸாரதிகளில் தலைவனாகிய அம்மாதலி ஸ்வர்க்கலோகத்திற்குப் போனபின்பு ராமன் இவ்வளவு விஜயமும் ஸுக்ரீவனுடைய ஸஹாயத்தினால் விளைந்ததுபற்றி மிகுதியும் ஸந்தோஷம் அடைந்து அவனை ஆலிங்கனஞ் செய்தனன். அவன் இங்ஙனம் ஸுக்ரீவனை அணைத்துக்கொண்டு கௌரவித்து, லக்ஷ்மணன் விடுதிக்கும் போவோமென்று தூண்டுகையில், வானரோத்தமர்களால் பூஜிக்கப்பெற்று விடுதிக்குப் போயினன். அப்பொழுது ராமன் தன் ஸமீபத்தில் தேஜஸ்ஸுமிகுதியும் விளங்கப்பெற்றிருக்கும் ஸத்ய ஸம்பன்னனும் ஸுமித்ரையின் புதல்வனுமாகிய லக்ஷ்மணனைப்பார்த்து [1] 'நல்லியற்கை யுடையவனே! என்னிடத்

---

1 இங்கு 'விபீஷணமிமம் ஸௌம்ய லங்காயாமபிஷேசய| அநுரக்தஞ்ச பக்தஞ்ச மமசைவோபகாரிணம்| ஏஷமே பரமஃ காமோ

தில்அநுராகமும் (மிகுந்தப்ரீதியும்)பக்தியும் அமைந்து எனக்கு உபகாரஞ் செய்த இவ்விபீஷணனுக்கு, முன்பு லங்கைக்குப்போய், பட்டாபிஷேகம் நடத்துவாயாக. பின்பு மற்றைக் கார்யங்களை நடத்தலாம். ஸௌம்யா! ராவணன் தம்பியாகிய இவ்விபீஷணன் லங்கையில் பட்டாபிஷேகம் பெற்றிருக்கக் காண்பேனாயின், இதுவே எனக்கு முக்யமான விருப்பம்' என்றனன். மஹாநுபாவனாகிய ராமன் அங்ஙனஞ் சொல்லுகையில், லக்ஷ்மணன் அப்படியே ஆகட்டுமென்று மிகுந்த ஸந்தோஷத்துடன் பொற்கலசங்களை வரவழைத்தனன். லக்ஷ்மணன் அந்தப்பொற்கலசங்களை மேன்மையுடைய வானரமுக்யர்வசங் கொடுத்து ஸமுத்ரஜலங் கொண்டுவரும் பொருட்டு மனோவேகமுடையவர்களும் மஹாபலிஷ்டர்களுமான வானரர்களை நியமித்தனன். அங்ஙனம் லக்ஷ்மணன் ஆஜ்ஞாபிக்கையில், மஹா பலிஷ்டர்களும் வானர ஸ்ரேஷ்டர்களுமான அவ்வானரர்கள் அங்கிருந்து சீக்ரமாகப் புறப்பட்டுப்போய் ஸமுத்ரங்களினின்று ஜலம் கொண்டுவந்தனர். அனந்தரம் லக்ஷ்ம

---

யஃமம ராவணாநுஜம்| லங்காயாம ஸௌம்ய பஶ்யேயமபிஷிக்தம விபீஷணம்' என்பது மூலம். முன்பு ஸமுத்ரக்கரையிலேயே லங்காராஜ்யத்திற்காக அபிஷேகம் நடந்திருந்தும் மீளவும் அதை விதிப்பது ராவணஸிம்ஹாஸனத்தில் அபிஷேகஞ் செய்வதற்காக வென்று தெரிகிறது. 'அநுரக்தம்' என்கையால் நண்பனுடைய கார்யமும் 'ஃக்தம்' என்கையால் தாஸனுடைய கார்யமும் சொல்லப்பட்டன. 'உபகாரிணம்' என்கையால் ப்ரீதியும் பக்தியும் கார்யத்தில் வந்து முடிந்தமை தெரிவிக்கப்பட்டது. 'ஏஷமே பரமஃ காமஃ என்று விபீஷணனை லங்கா ராஜ்யத்தில் பட்டாபிஷேகஞ் செய்கையே தனக்கு மேலான விருப்பமென்கையால் சரணாகதனான விபீஷணனுடைய விருப்பத்தை நிறைவேற்றுவதே தான் ஜயித்ததற்கு முக்யமான ப்ரயோஜனமென்று தோற்றுவிக்கப்பட்டது.



3251. லக்ஷ்மணன் ராம நியோகத்தின்படி விபீஷணனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்தல்.

ணன் விபீஷணனை ஸிம்ஹாஸனத்தில் உட்காரவைத்து ஒரு கலசத்தை எடுத்து அதனால் அவனுக்கு அபிஷேகஞ்செய்தனன். தர்மஸ்வபாவனாகிய அந்த லக்ஷ்மணன் ராமனது ஆஜ்ஞையின்படி, லங்கா நகரத்தில் நண்பர் கூட்டஞ் சூழ்ந்திருக்கப் பெற்றிருக்கும் சுத்தஸ்வபாவனாகிய விபீஷணனுக்கு வேதங்களிற் சொன்ன விதியின்படி ஸமஸ்த ராக்ஷஸர்களினிடையில் பட்டாபிஷேகம் நடத்தினன். விபீஷணன் லங்கையில் பட்டாபிஷேகம் நடக்கப்பெற்று ராக்ஷஸ ராஜனானதைக் கண்டு அவனுடைய மந்த்ரிகளும் அவனிடம் பக்தர்களான ராக்ஷஸர்களும் ஸந்தோஷம் அடைந்தனர். அவ்விபீஷணன் அங்ஙனம் ராமன் கொடுத்த அம்மஹாராஜ்யத்தைப் பெற்று ப்ரஜைகளை யெல்லாம் குளிர்ந்த வாக்யங்களால் ஸமாதானப்படுத்தி, உடனே மீண்டு ராமனுடைய ஸந்நிதானத்திற்கு வந்தனன். அப்பொழுது பட்டாபிஷேகம் நடந்த பின்பு பட்டணத்திலுள்ள ராக்ஷஸர்கள் மிகுதியும் ஸந்தோஷம் அடைந்து அக்ஷதைகளையும் குழக்கட்டைகளையும் பொரிகளையும் மங்களத்தின் பொருட்டு அவ்விபீஷணனுக்கு ஸமர்ப்பித்தனர். வீர்யசாலியும் பிறர்க்குப் பரிபவிக்க முடியாதவனுமாகிய விபீஷணன் அந்த வஸ்துக்களையெல்லாம் அங்கீகரித்து, தான் ராமனுக்கும் லக்ஷ்மணனுக்கும் மங்களத்தை விளையும்படியான ஹரித்ரை (மஞ்சள்) முதலிய மங்களத்ரவ்யங்களையெல்லாங் கொண்டுவந்து ஸமர்ப்பித்தனன். ராமன் அங்ஙனம் கார்யத்தை நிறைவேற்றினவனும் மனவிருப்பம் ஈடேறப்பெற்றிருக்கின்றவனுமாகிய விபீஷணனைப் பார்த்து, தான்போகங்களில் விருப்பமற்றவனாயினும் விபீஷணனுக்கு ப்ரீதியைச் செய்ய விரும்பியே அந்த வஸ்துக்களை யெல்லாம் அங்கீகரித்தனன். அனந்தரம் ராமன் தனது பார்ஸ்வத்

தில் கைகளைக்குவித்துப் பணிந்திருக்கின்ற பர்வதாகாரனும் வீரனும் வானரனுமான ஹநுமானைப் பார்த்து 'ஸௌம்யனே! (நல்லியற்கை யுடையவனே!) ஜயசீலர்களில் தலைவனே! நீ மஹா ராஜனுகிய விபீஷணனுடைய அநுமதியைப் பெற்று ராவணக்ருஹத்தில் ப்ரவேசித்து நான் ஜயித்த ஸங்கதியைச் சொல்லி ஸீதைக்கு ஸந்தோஷத்தை விளைவித்து அந்த விதேஹராஜன் புதல்விக்கு நானும் ஸுக்ரீவனும் லக்ஷ்மணனும் க்ஷேமமாயிருக்கிறோமென்றும் ராவணன் என்னால் அடியுண்டு மாண்டானென்றும் கூறுவாயாக. வானரஸ்ரேஷ்டனே! நீ இந்த ப்ரிய ஸமாசாரத்தை ஸீதைக்குச் சொல்லி, அவள் மொழியும் ஸமாசாரத்தைத் தெரிந்துகொண்டு திரும்பிவருவாயாக' என்றனன். நூற்றுப்பதினைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஹநுமான் ராமன் ஜயித்ததை அறிவித்து ஸீதையிடத்தினின்று ஸமாசாரங் கொண்டு, மீண்டு ராமனிடம் வருதல்.

ராமன் இங்ஙனம் ஆஜ்ஞாபிக்கையில் வாயுகுமாரனுகிய ஹநுமான் ராக்ஷஸர்களால் பூஜிக்கப்பெற்று லங்காபுரத்தில் ப்ரவேசித்தனன். அப்பால் மஹா தேஜஸ்வியாகிய அந்த ஹநுமான் ராவணக்ருஹத்தில்புகுந்து அங்கு ஓர்வ்ருக்ஷத்தினடியில் ராக்ஷஸ மடந்தையர்சூழ்ந்திருக்கப்பெற்று ஆநந்தமற்று தேஹ ஸம்ஸ்காரம் இல்லாமல் கொடிய க்ரஹத்தினுல் பிடியுண்டு வருந்தும் ரோஹிணியைப்போன்ற ஸீதாதேவியைக் கண்டனன். ஹநுமான் ஸீதையினருகிற் சென்று தன் பேரைச்சொல்லி நமஸ்காரஞ் செய்து அசையாமல் வணக்கத்தினுல் உடம்பைக் குறுக்கிக்கொண்டு நின்றிருந்தனன். அங்ஙனம் வந்து

மஹா பலனான ஹனுமானைப் பார்த்து ஸீதாதேவி முத லில் பார்த்திருந்தும் இப்பொழுது அடையாளங் கண்டு பிடிக்க முடியாமல் வெறுமனே இருந்தாளன்றிப் பின்பு ஏற இறங்கப்பார்த்து முன்பு வந்து போனவனென்று நினைவுமூட்டிக்கொண்டு மிகுதியும்ஸந்தோஷம் அடைந் தனள்.வானரோத்தமனான ஹனுமான் தன்னைப்பார்த்து ஸீதாதேவி முகம் மலரப்பெற்றிருப்பது கண்டு, ராமன் மொழிந்த வ்ருத்தாந்தத்தை யெல்லாம் சொல்லத் தொடங்கி 'ஸீதே! தேவி! ராமனும் ஸுக்ரீவனும் லக்ஷ் மணனும் விபீஷணனும் வானரஸைன்யங்களும் க்ஷேம மாயிருக்கின்றனர். பகைவரை முடிக்குந்திறமையுடைய ராமன் தான் இப்பொழுது சத்ருவை முடித்துக் கார்யம் நிறைவேறப் பெற்றுத் தன் க்ஷேமத்தை உனக்குத் தெரிவிக்கச் சொல்லினன். தேவீ! விபீஷண ஸஹாயத் தினாலும் வானர ஸஹாயத்தினாலும் லக்ஷ்மணனுடைய நீதி பலத்தினாலும் ராமன் ராவணனை வதித்தனன். வீரனாகிய ரகுநந்தனன் (ராமன்) சத்ருவை வதித்தானா கையால் மிகுதியும் ஸந்தோஷமுற்றுக் கார்யம் நிறை வேறப் பெற்ற மனத்துடன், இங்ஙனஞ் சொல்லு வாயென்றனன். என்னுடைய தேவீ! உனக்கு ப்ரிய ஸமாசாரத்தைச் சொல்லுகிறேன். உன்னை மிகுதியும் ஸந்தோஷப் படுத்துகிறேன். பாதிவ்ரத்யதர்மம் தெரிந் தவளே! என் பாக்யத்தினால் நீ ஜீவித்திருக்கின்றனை. நீ இல்லாதபக்ஷத்தில் நான்ஜயித்தது வீணேயாய்விடும். ஸீதே! என் பராக்ரமத்தினால் நமக்கு யுத்தத்தில் ஜயம் உண்டாயிற்று. ஆகையால் நீ இனி மனவருத்தம் தீர்ந்து ஸுகமாயிருப்பாயாக.பகைவனாகிய ராவணனும் மாண்ட னன். இந்தலங்கையும் நமது ஆதீனத்தில் இருக்கின்றது. உன்னைச் சத்ருவினிடத்தினின்று விடுவிப்பதிலேயே

மனத்தை உறுதியாக நிறுத்தி, அதனால் தூக்கமும் பிடிக்காமல் மஹா ஸமுத்ரத்தில் ஸேதுவைக் கட்டி, ராவணனை வதிப்பேனென்ற இந்த ப்ரதிஜ்ஞையையும் தீர்த்துக்கொண்டேன். ராவணனுக்கு வாஸஸ்தான மாகிய இந்த லங்கையில் இருக்கிறேனென்று சிறிதும் வருந்தவேண்டாம். ராவணன் மாண்டு இந்த லங்கையின் பரிபாலனமெல்லாம் நமது விபீஷணனுக்கு உட்பட்ட தாகையால் நீ ஸொந்தக்ருஹத்தில் இருப்பதுபோலவே யன்றி வேறன்று. ஆகையால் பயம் ஏதும் உண்டாகா தென்று நம்பி ஸமாதான முற்றிருப்பாயாக. இவ்விபீஷ ணனும் உன்னைப் பார்க்க வேண்டுமென்று விருப்புற் றிருக்கிறனுகையால் 'இதோ வருவான்' என்று தான் சொல்லச் சொன்னதாக உன்னேடு சொல்லச் சொன் னன்' என்றனன். ஹனுமான் ஸீதையைப் பார்த்து இங் ஙனம் மொழிந்தவுடனே சந்த்ர பிம்பம்போன்ற முக முடைய அப்பெண்மணி ஸந்தோஷத்துடன் திடீலென எழுந்திருந்து ஸந்தோஷம் மிகப்பெற்று ஒன்றுஞ்செய்ய முடியாமல் வெறுமனே இருந்தனள். அங்ஙனம் ஸீதை தனக்கு மறுமொழி கூறுதிருப்பதைக் கண்டு, அவ்வான ரோத்தமன் ஹனுமான் 'தேவீ! என்ன ஆலோசிக் கின்றனை? எனக்கு மறுமொழி கூறுதிருப்பதேனே?' என்று வினவினன். ஹனுமான் இங்ஙனம் வினவுகையில், ஸீதை பதிவ்ரதாதர்மத்தில் மிகுதியும் நிலையுற்றிருப் பவளாகையால், கணவன் ஸமாசாரஞ் சொல்லியனுப்பின தற்கு மிகுதியும் ஸந்தோஷம் அடைந்து, ஸந்தோஷப் பெருக்கினல் வார்த்தைகள் தழதழக்கப்பெற்று 'என் கணவன் விஜயம் அடைந்தானென்ற இந்த ப்ரிய ஸமா சாரத்தைக் கேட்டவுடனே மிகுந்த ஸந்தோஷத்தினல் விளைகின்ற மெய்ம்மறப்பினல் ஒருவ்யாபாரமும் செய்ய

முடியாதிருக்கின்றனன்; ஆகையால் க்ஷணகாலம் பேச முடியாதிருந்தனன். ஹநுமானே! எனக்கு இப்படிப் பட்ட ப்ரியஸமாசாரத்தைச்சொன்ன மஹோபகாரனை உனக்கு மறுமொழிகூறத்தகுந்த ப்ரியவசனத்தை எவ்வளவு ஆலோசிக்கினும் இவ்வுலகம் முழுவதிலும் எனக்குப் புலப்படவில்லை. எந்த ப்ரிய வசனத்தைச் சொல்லப் பார்க்கினும், அது நீ கொண்டுவந்த ப்ரிய ஸமாசாரத்திற்குக் குறைந்ததாகவே தோற்றுகின்றது. ஸௌம்யா! ஹநுமானே! நீ எனக்கு இப்படிப்பட்ட ப்ரிய ஸமாசாரஞ் சொன்னதற்காக உனக்கு மறுமொழி கூறத்தகுந்த நல்வார்த்தை இல்லாது போனமை மாத்ரமேயல்லாமல், மற்றும் உனக்குக் கொடுக்க மிகுதியுந் தகுந்தவஸ்து எதுவும் பூமியிலாவது ஸ்வர்க்க பாதாளங்களிலாவது எனக்குப் புலப்படவில்லை. வெள்ளியாவது பொன்னாவது நானாவிதரத்னங்களாவது த்ரைலோக்ய ராஜ்யாதிபத்யமாவது (மூன்று லோகங்களுக்கும் ராஜாவாயிருத்தலாவது) இவையெல்லாம் நீ சொன்ன ப்ரிய ஸமாசாரத்திற்கு நிகரென்று மொழியவும் தகுந்தவையல்ல' என்றனள். ஸீதை இங்ஙனம் மொழிகையில் ஹநுமான் கைகளைக் குவித்து அப்பெண்மணியின் ஸம்முகத்தில் (எதிரில்) நின்று 'நீ பர்த்தாவுக்கு ப்ரியத்தையும் ஹிதத்தையும் செய்வதிலேயே மனவூக்கமுடையவள்; பர்த்தா ஜயம் பெறவேண்டுமென்றே விருப்பமுற்றிருப்பவள். ஸ்நேஹம் விளங்கப்பெற்ற இப்படிப்பட்ட வார்த்தையை மொழிவது உனக்கே தகுமன்றி மற்றொருத்திக்கும் தகாது. இப்படிப்பட்ட ஸ்னேஹமே எனக்கு மறுமொழி கூறத்தகுந்த லோகோத்தரமான ப்ரிய ஸமாசாரம். நல்லியற்கையுடையவளே! மற்றும் எனக்கு மறுமொழி கூறத்தகுந்த நல்வார்த்தை உனக்குத் தோற்றவில்லை

யென்றனேயே. இங்ஙனம் நீ மொழிந்த இவ்வார்த்தை 'என் வார்த்தைமிதமில்லாத ஸந்தோஷத்தை விளைவிப்பது' என்னும் பெருங் கருத்தை அறிவிக்கின்றது. மற்றும் உன் வார்த்தை மிகுந்த ப்ரீதியை முன்னிட்டுக்கொண்டிருக்கின்றது. இப்படிப்பட்ட உன் வார்த்தையொன்றே பலவகையான ரத்னஸமூஹங்களைக் காட்டிலும் மேற்பட்டது. அவ்வளவேயன்றி, தேவேந்த்ர பதவியைக் காட்டிலும் விசேஷித்திருப்பது. இப்படிப்பட்ட வார்த்தையைக் கேட்ட மாத்ரத்தினலேயே, நீ எனக்குக் கொடுக்கத் தகுந்ததே இல்லையென்ற ஸர்வோத்தரமான வஸ்துக்களை யெல்லாம் பெற்றுற் போலவே ஆயிற்று. ராமன் சத்ருக்களை வதித்து விஜயம் அடைந்து ஸுகமாயிருக்கக் காண்கின்றேனல்லவா? இந்த ஒரு ப்ரயோஜனத்தினலேயே தேவராஜ்யம்முதலிய அதிசயங்களெல்லாம் பெற்றுற்போலாயிற்று. ராமன் விஜயம் பெற்றிருப்பதைக் காணப் பெற்றமையே எனக்கு தேவராஜ்யம் முதலிய ஸமஸ்த ஸம்பத்துக்களுமாம்' என்றனன். அவன் அங்ஙனஞ் சொன்னதைக் கேட்டு, ஜனகராஜன் புதல்வியாகிய ஸீதை அந்த வாயுகுமாரனைப் பார்த்து மேலும் மங்களமான வார்த்தையை மொழியத்தொடங்கி, [1]'வாக்யத்திற்கு வேண்டிய ஸமஸ்தலக்ஷணங்களும், அமைந்து கேட்டவுடனே ஆநந்தம் விளைப்பதான மாதுர்யகுணத்தினல் அழகியதும் க்ரஹணதாரணுதியான எட்டு அங்

1 ஆகாங்க்ஷை யோக்யதை ஸந்நிதி என்னுமிவை வாக்யலக்ஷணங்கள். ஆகாங்க்ஷையாவது—பதங்கள் ஒன்றையொன்று எதிர்பார்த்திருத்தல். யோக்யதையாவது—'அக்நிநா ஸிஞ்ச' (நெருப்பை விட்டு நனை) என்றாற்போலிராமல் பொருள் அமைந்திருக்கை. ஸந்நிதியாவது—பதங்களைக் காலதாமதமின்றி உச்சரித்தல். இவை மூன்றுமுள்ளதேவாக்யமாம். 'ஸ்ரீரஹணம் யாரணம் சைவ ஸ்மரணம் ப்ரதிபாத



3256. ஹனுமான் ராக்ஷஸிகளைக் கொல்லவேண்டுமென்ன, ஸீதை கூடாதென்று தடுத்தல்.

கங்களோடு கூடின புத்தியின் விளக்கமுடையதுமான வசனத்தை மொழிய நீயே வல்லவனன்றி மற்றெவனு மல்லன். நீ மிகுதியும் தயாஸ்வபாவமுடையவன். அதனுல் நீ வாயுதேவனுக்குப் புகழத்தகுந்த புதல்வனுவாய். நீ அந்த தர்மத்தினுல் என்னைப்போன்ற லோகங்களுக்கு வாயுவைக்காட்டிலும் ஸஞ்ஜீவனத்தை (நற்பிழைப்பை) விளைவிப்பவனுயிருக்கின்றனை. ப்ரயாஸங்களைப் பொறுக்கும்படியான பலமும் யுத்தத்திற்கு உத்ஸாஹப்படும் ஶௌர்யமும் ஶாஸ்த்ரஜ்ஞானமும் தேஹத்திண்மையும் பராக்ரமமும் ஸாமர்த்யமும் பிறரை அவமதிக்கும்படியான தேஜஸ்ஸும் அபராதங்களைப் பொறுக்கும் பொறுமையும், கலக்கமுறவேண்டிய காரணங்கள் பல இருப்பினும் கலக்கமுருதிருக்குந் தன்மையாகிய தைர்யமும் வணக்கமும் சிறந்த நீதியொழுக்கமும் ஆகிய இவைமுதலிய சிறந்தநற்குணங்களும் மற்றும் பலவகை நற்குணங்களும் உன்னை அடைந்தேமிகுதியும் சோபிக்கின்றன. இதற்கு ஸந்தேஹமில்லை. நான் இல்லாத குணங்களை ஏறிட்டுப்புகழுந்தன்மையளல்லேன்' என்றனள். அப்பால் அந்த ஹனுமான் ஸந்தோஷத்தினுல் பரபரப்பின்றி அஞ்சலி செய்து வணக்கத்துடன் ஸீதையினெதிரில் நின்று 'நீ பதியே தெய்வமாயிருக்கப் பெற்றவளாகையால் அவனைப் பிரிந்த துக்கத்தினுல் அசோகவனிகையில் இளைப்புற்றிருக்கையில், பயங்கரமான உருவமும் நடத்தையும் அமைந்து தயையில்லாத மனமும் அதைக்காட்டிலும்

---

நம்! ஊஹாபோஹோஉர்யவிஜ்ஞாநம் தத்வஜ்ஞாநம் சயீஞுணு:' என்னும் இவை புத்திகுணங்கள். முன்பு ராமன் (கிஷ்கிந்தாகாண்டத்தில்) 'நாந்ருக்வேதவிநீதஸ்ய' என்று இத்யாதிகளால் ஹனுமானுடைய வாக்ய ஸௌஷ்டவத்தைப் புகழ்ந்தாற்போல் ஸீதையும் இங்குப் புகழ்கின்றனள்.

தயையில்லாத பார்வையும் உடையவராகி இந்த ராக்ஷஸ ஸ்த்ரீகள் உன்னைக்குறித்து முன்பு பயங்கரமான பேச்சுக்களைப் பேசினர்; மற்றும், மிதமில்லாமல் விரட்டினர். 'ஆகையால் நீ அனுமதி கொடுப்பாயாயின், இவர்களெல்லோரையும் பிடித்துக் கொல்லவேண்டுமென்று விரும்புகின்றேன். உனக்கு ப்ரியஸமாசாரஞ் சொன்னதற்கு வெகுமதியாக எனக்கு இந்த வரங்கொடுப்பாயாக. மங்களஸ்வ்பாவமுடையவளே! உனக்கு அப்ரியஞ்செய்தவரும்பயங்கரமான உருவமுடையவர்களுமாகிய இந்த ராக்ஷஸஸ்த்ரீகளை பூமியில் விழத்தள்ளி முட்டிகளால் குத்தியும் உள்ளங்கைகளால் அறைந்தும் கால்களால் உதைத்தும் முழங்கால்களால்தாருணமாகமோதியும்பற்களால்கடித்தும் காதுமூக்குகளைக் கடித்துப் போகட்டும் தலைமயிர்களைப் பிச்சிப்பிடுங்கியும் கூரிய நுனியுடைய நகங்களால் பீறியும்மற்றும்பலவாறுபீடித்தும் கிளம்பிக்கிளம்பிமேல் பாய்ந்தும் கைகளால்புடைத்தும் என்கோபம் உள்ளவளவு இங்ஙனம் பலவகைகளில் கொல்ல விரும்புகின்றேன், தேவீ! பெரும்புகழுடையவளே! உனக்கு அபராதஞ் செய்த துஷ்டைகளான இந்த ராக்ஷஸஸ்த்ரீகளை இங்ஙனஞ் சொன்னப்ரகாரம் பலவாறு ஹிம்ஸித்து வதிக்க விரும்புகிறேன்' என்றனன். பெரும்புகழுடையவளும் ஜனகராஜன் புதல்வியுமான ஸீதை, ஹனுமான் அங்ஙனஞ் சொன்னதைக் கேட்டு அவனைப் பார்த்து தர்மம் அமைந்திருக்கும்படி, 'வானரோத்தமனே! ராஜனைப் பணிந்து பிழைப்பவராகையால் ராஜன் மொழிந்த கார்யத்தைச் செய்பவராகிச் செய்யாதிருக்கும் பக்ஷத்தில் தண்டனைக்கு உட்படுகின்றவருமாகிய தாஸிகளிடத்தில் (வேலைக்காரிகளிடத்தில்) எவன் கோபிப்பான்? ராவணனுக்குஅப்படிப்பட்ட தாஸிகள் இவர்கள். ஆகையால்

இவர்களிடத்தில் உன்னைப் போன்றவன் கோபமுறுவது எள்ளளவும் யுக்தமன்று. மற்றும், என்பாக்யம் பரிபக்வமடையாமல் தலைகீழாயிருந்தபடியாலும் முன்பு நான்செய்த பாபத்தினாலும், எனக்கு இவையெல்லாம் நேர்ந்தனவேயன்றி மற்றேதுவும் இல்லை. முன் செய்த வினையெல்லாம் இப்பொழுது அனுபவிக்காமல் தீராது. ராவணனுடைய தாஸிகளால் இப்படிப்பட்ட விரட்டல் முதலியவற்றை அனுபவிக்கவேண்டுங்காலம் கூடியிருக்கையால் நான் அனுபவித்தே தீரவேண்டியவையென்று நிச்சயித்துக் கொண்டனன். (இங்ஙனம் இவர்களை தண்டிக்கத் தகுந்த காரணமானவலிமை யாதும் எனக்கு இல்லாமையால்) தயைக்கு உட்பட்டு இவர்களைப் பொறுக்கின்றனன். வானரோத்தமா! ராவணன் ஆஜ்ஞாபிக்கையில் இந்த ராக்ஷஸஸ்த்ரீகள் என்னை அங்ஙனம் விரட்டினர். இப்பொழுது அவன் மரணம் அடைகையில் என்னை அங்ஙனம்விரட்டாதிருக்கின்றார்களல்லவா? இங்ஙனம் தமது இச்சையாலன்றி ராஜனது ஆஜ்ஞையைப் பற்றி இவர்கள் செய்ததை நாம் தப்பாகக் கொள்ளலாகாது. இவர்கள் தாமாகவே தப்பு செய்திருப்பினும் இருக்கட்டும். அப்பொழுதும் நாம் மன்னிக்க வேண்டியதே. வானரா! இவ்விஷயத்தில் [1] ஒரு கரடி, பழையதும் தர்மம் அமைந்ததுமான இந்தப் பழமொழியை ஓர் புலிக்குச் சொல்லிற்று. அதைச் சொல்லுகிறேன்.

---

1 ஒரு வேட்டைக்காரன் புலி துரத்தப் பெற்று மரத்தின்மேல் ஏறிக்கொண்டனன். அம்மரத்தில் ஓர் கரடி இருந்தது. மரத்தின் கீழிருந்த புலி அந்தக் கரடியைப் பார்த்து 'காட்டு ம்ருகங்களாகிய நம்மெல்லோர்க்கும் இவன் ஜாதிசத்ருவாகையால் இவனை மரத்தினின்று விழத்தள்ளுவாய்' என்ன, 'நானிருந்த இடத்திற்கு வந்த இவனை விழத்தள்ளேன். அப்படி செய்தால் தர்மஹானியாம்' என்று

கேட்பாயாக. [1] கரடி, 'அறிஞனுயிருப்பவன், ஒருவன் தனக்கு அபகாரஞ்செய்யினும் ப்ரதியாகத்தானும் அபகாரஞ் செய்யலாகாது. இது பெரியோர்களின் வழக்கம்: இதை அவஶ்யம் பாதுகாக்க வேண்டும். ஸத்புருஷர்களுக்கு நன்னடத்தையே அலங்காரம்' என்றது. [2]ஹனுமானேபாபிஷ்டராயினும் புண்யசாலிகளாயினும் வதத்திற்குரியரா யிருக்கும்பொழுது. பெரியோனுயிருப்பவன் அவர்களிடத்தில் தயையே செய்யவேண்டும். இப்படியாயின், அபராதிகளைத் தண்டிக்காதிருக்க வேண்டி

---

மொழிந்தது:அது ஸித்ரித்தது. அப்பால் புலி அவ்வேட்டைக்காரனைப் பார்த்து 'உன்னைக் கொல்லாமல் விடுகிறேன், ஸித்ரிக்கின்ற அந்தக் கரடியை விழத்தள்ளுவாய்' என்ன, அவன் அப்படியே ஸம்மதித்து அதைக் கீழே விழத்தள்ளினன். அந்தக் கரடி பழக்கத்தினுல் மற்றொரு கிளையைப் பிடித்துக்கொண்டு விழாமல் தப்பித்துக்கொண்டது. அதன் பிறகு புலி 'இதோ இவன் உனக்கு அபராதஞ் செய்தானுகையால் இவனை விழத்தள்ளுவாய்' என்று அடிக்கடி வேண்டிக்கொள்ளினும் கரடி 'இவன் இந்த ஒருதடவைமாத்ரமேயன்று; இப்படி பலதடவை அபராதஞ் செய்யினும், உனக்குப் பிடித்துக் கொடுக்க மாட்டேன்' என்று மொழிந்து அவனைக் காப்பாற்றிற்றென்னும் புராணகதையை இங்குக் கண்டுகொள்க.

1 இங்கு 'ந பரஃ பாபமாதத்தே பரேஷாம பாபகர்மணாம்| ஸமயோ ரக்ஷிதவ்யஸ்து ஸந்தஶ் சாரித்ரபூஷணாஃ' என்பது மூலம். ஸுக்ரீவனுக்கு ராமன் கபோதோபாக்யானஞ் சொன்னுற் போல், ஸீதாதேவியும் தான் சொன்ன பொருளுக்கு ப்ரமாணமாக ருக்ஷகீதத்தை (கரடியின் பாட்டை) ஹனுமானுக்குச் சொல்லுகிருளென்று தெரிகிறது.

2 இங்கு 'பாபாநாம்வா ஶுபாநாம்வா வதார்ஹாணாம் ப்லவங்கம| கார்யம் கருணமார்யேண நகஶ்சிந் நாபராத்யதி' என்பது மூலம். இது ஸீதாதேவியின் அபயப்ரதான ஶ்லோகம். (பாபாநாம் வா ஶுபாநாம் வா) உனது அபிப்ராயத்தின்படி பாபைகளாயினும் ஆகட்டும். என் அபிப்ராயத்தின்படி ஸாதுக்களாயினும் ஆகட்டும். 'ஷோஷோ

வருமே' என்கிருயோ? உலகத்தில் அபராதஞ் செய்யா தவன் ஒருவனும் இல்லை. சாஸ்த்ரத்தின்படி இவர்க்கு தண்டனையும் உண்டாகாது. ராக்ஷஸர்கள் காமரூபர்களாகி லோகஹிம்ஸையே விநோதமாகப் பெற்றுவிளையாடலுற்றிருப்பதும் நானுவகைப் பாபங்களைச் செய்வது மாயிருப்பினும் அது அவர்க்கு ஜாதியைப் பற்றி வந்த தாகையால், அவர்க்கு தண்டனை விதிப்பது சிறிதும் தகாது' என்றனள். ஸீதை இங்ஙனஞ் சொல்லுகையில், பேசுவதில் ஸமர்த்தனுகிய ஹனுமான், உடனே பெரும்புகழுடையவளும் ராமனது பத்னியுமான அந்த ஸீதையைப் பார்த்து, 'சரணுகத ரக்ஷணமே வ்ரதமாகப்

---

யதியபி தஸ்ய ஸ்யாத்' என்று ராமன் மொழிந்தாற்போல் தோஷமே எனக்கு உததேஸ்யம். அழுக்குடையவனன்றோ குளிக்கவிரும்புவான். அவர்கள் பாபைகளாகிலன்றோ நாம் முகங் கொடுக்க வேண்டியிருக்கிறது. சுபைகளாயின் நம்மைப் பற்றிக் கார்யமென்? அவருடைய புண்யமே அவரைக் காக்குமாகையால அவருடைய பாபமே நமக்கு உத்தேஸ்யம். ஆயினும் தண்டிக்கத் தகுந்தவர்களைத் தண்டிக்கவேண்டும். தண்டிக்கத் தகாதவர்களைத் தண்டிக்கலாகாது' என்னும் தர்மசாஸ்த்ரம் உன்னிடத்தில் பங்கம் அடைகின்றதேயென்னில்— 'துஷ்டனுயினும் சரணுகதன் ரக்ஷிக்கத் தகுந்தவனே' என்னும் விசேஷசாஸ்த்ரம் உன்னிடத்தில் பங்கம் அடையவேணடுமோவென்கிருள் (வயார்ஹாணும்) வதிக்கத் தகுந்தவராயினும் சரணம் அடைவாராயின் அவர் விஷயத்தில் தயைசெய்யவேண்டும். (ப்லவங்கம) குரங்காகையால் ஆசைப்படத்தகாததையே அபேக்ஷித்தாய். (கார்யம கருணமார்யேண) இவர்கள் புண்யபாபங்கிடக்க இப்போதுள்ள தயனீயமான தசையைக் காண்பாய். இன்கையில் அகப்பட்டு நாம் என்படக்கடவோவென்று தியங்குகிற படியைப் பாராய். இவர்களுக்கு ஒரு ரக்ஷகனில்லையே இப்போது இவ்வளவிலே நாம் இரங்கவேணும் காண். (நகஸ்சிந்நாபராத்யதி) ஸம்ஸாரத்தில் குற்றமில்லாதார் ஆர்? அலைகளை அடக்கி ஸமுத்ரஸ்னனஞ் செய்யமுடியுமோ?

பெற்ற ராமனுக்கு நீயே தகுந்த தர்மபத்னி; பாதிவ்ரத்யம் முதலிய குணங்களில் புகழ்பெற்றவள்; தேவீ! எனக்கு மறுமொழி கூறி அனுப்புவாயாக. நான் ராமனிருக்குமிடத்திற்குப்போகின்றேன்' என்றனன். ஹநுமான் அங்ஙனம் மொழிகையில், ஜனகராஜன் புதல்வியாகிய ஸீதை அவனைப் பார்த்து, 'வானரோத்தமா! என் ப்ராணேஸ்வரனான ராமனைக் காணவிரும்புகின்றேன்' என்றனள். ஸீதை இங்ஙனம் மொழிந்ததைக் கேட்டு, மஹாதேஜஸ்வியும் வாயுகுமாரனுமாகிய அந்த ஹநுமான் ஸீதைக்கு ஸந்தோஷத்தை விளைத்துக்கொண்டு 'பூஜைக்கிடமானவளே! சசீதேவி அஸுரர்களைக் கொன்று திரும்பிவந்த தேவேந்த்ரனைக் காண்பது போல், ஸமஸ்த சத்ருக்களையும் உருமாய்த்து க்ஷேமமாயிருக்கின்ற ராமனை அவஸ்யம் காண்பாய்' என்றனன். ஸாக்ஷான் மஹாலக்ஷ்மிபோல் ப்ரகாசிக்கின்ற அந்த ஸீதைக்கு ஹநுமான் இங்ஙனம் மொழிந்து, அப்பால் ராமனிருக்குமிடத்திற்கு வந்தனன். நூற்றுப் பதினாறுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

விபீஷணன் ஸீதையை ராமனிடம் அழைத்துக் கொண்டு வருதலும், ஸீதை ஸந்தோஷத்துடன் ஸ்ரீராமனைக் காணுதலும்.

கார்யங்களை உணர்ந்த ஹநுமான் மஹாப்ராஜ்ஞனும் வில்லாளிகளனைவரிலும் மேன்மையுற்றவனுமாகிய ராமனிடம் போய், 'எவளைப் பெறுதற்காக ராவணனை ஜயிக்கையாகிற பலன் பெறலாயிற்றோ, அப்படிப்பட்ட ஸீதாதேவி சோகத்தினால் பரிதபித்துக்கொண்டிருக்கிறாளாகையால் அவளை நீங்கள் காண்பது யுக்தமாயிருக்கின்றது. சோகத்தின் மிகுதியால் விளையும் நீர் பெருக்கி



3263. விபீஷணன் ஸீதையை ராமனிடம் அழைத்துக் கொண்டு வருதல்.

னால் கண்கள் நிரம்பவும் கலங்கப்பெற்று வருந்துகின்ற ஸீதாதேவீ, நீ ஜயம் பெற்றதைக்கேட்டவுடனே ஸந்தோஷம் அடைந்தனள். அவள் முன்பு என்னை அறிந்திருப்பவளாகையால் என்னிடத்தில் நம்பிக்கைஉண்டாகப்பெற்று என்னுடன் 'ஜயம் பெற்றுக் கார்யம் ஈடேறப்பெற்றிருக்கின்ற ராமனை லக்ஷ்மணனுடன் பார்க்க விரும்புகிறேன்' என்பாய்' என்றனள். ஹனுமான் இங்ஙனஞ் சொல்லுகையில், ராமன் தார்மிகர்களனைவரிலும் சிறந்தவனாகையால் சிறிது கண்ணீர் பெருகப்பெற்று 'வெகுகாலமாக ராவணன் வீட்டிலிருந்த ஸீதையை அங்கீகரிப்பின், லோகாபவாதம் நேரும். தோஷமில்லாத அப்பெண்மணியைத் துறந்தால் பாபம் உண்டாகும். என் செய்யலாம்' என்று உடனே சிந்தையுற்றவனாயினன். அப்பால் ராமன் வெப்பம் நிறைந்த நெடுமூச்செறிந்து நிலத்தைப் பார்த்துக்கொண்டு அருகாமையில் மேகம்போல் கறுத்திருக்கின்ற மேனியுடையவனும் ஸீதையை அழைத்துக் கொண்டுவர விரைகின்றவனுமாகிய விபீஷணனைப்பார்த்து 'நீ ஸீதையை [1] சிரஸ்னானஞ் செய்வித்து (தலைமுழுகுவித்து) மேலான அங்கராகங்களைப் பூசுவித்துச் சிறந்த ஆபரணங்களையும் அணியச் செய்து இவ்விடம் அழைத்துக்கொண்டுவருவாயாக. தாமதிக்கவேண்டாம்' என்ற

---

1 ராமன் ஸீதையுடன் மேல் பருஷம்பேச உத்தேசித்திருக்கையால், அப்பொழுது அவள் முன்போல் அலங்காரமில்லாத தீனதசையிலிருப்பின் அங்ஙனம் பருஷமாகப் பேசத் தகாதாகையால் அதற்குத் தகுந்தபடி ஸ்னானஞ் செய்வித்து அலங்காரங்களை அணியச் செய்து அழைத்துக்கொண்டு வரச்சொன்னதாகத் தெரிகிறது. அங்ஙனம் பருஷமாகப் பேசினது அவளைத் துறப்பதற்கன்று. ப்ரஹ்மாதியான தேவதைகளின் முன் அவளுடைய பாதிவ்ரத்யத்தை வெளியிடுவதற்காக வென்று தெரிகிறது. கோவிந்தராஜர்.

னன். ராமன் இங்ஙனஞ் சொல்லுகையில் விபீஷணன் விரைந்து லங்கையில் ப்ரவேசித்து அந்தப்புரத்திற்குச் சென்று தன் மாதர்களால் ஸீதாதேவிக்கு, 'ஸீதே! நீ ஸ்நானஞ் செய்து திவ்யமான அங்கராகங்களைப் பூசி திவ்ய ஆபரணங்களை அணிந்து வாஹனத்தில் ஏறுவாயாக. உனக்கு மங்களம் உண்டாகுக. உன் பர்த்தா உன்னைப் பார்க்க விரும்புகின்றான்' என்று சொல்லுவித்தனன். விபீஷணன் அங்ஙனம் தன் மடந்தையர் மூலமாய்ச் சொன்ன வார்த்தையைக் கேட்டு ஸீதை அவ் விபீஷணனைப் பார்த்து 'ராக்ஷஸராஜனே! நான் இது வரையில் இருந்த வண்ணமாகவே ஸ்நானஞ் செய்யாமலே என் பர்த்தாவைக் காணவிருப்புகின்றேன்' என்றனள். அவள் இங்ஙனஞ் சொல்வது கேட்டு விபீஷணன் 'அப்படி அன்று; ராமன் உனக்கு பர்த்தாவும் ராஜனுமாகையால் அவன் என்ன மொழிந்தானோ அதை அப்படியே நீ செய்வது யுக்தம்' என்று மடந்தையர் மூலமாய் மறுமொழி கூறினன். அவன் மொழிந்த வார்த்தையைக் கேட்டு ஸீதை பர்த்தாவையே தெய்வமாக நினைத்து, பதிபக்தியே (பர்த்தாவினிடத்தில் பக்தியே) வ்ரதமாயிருக்கப்பெற்ற மஹாபதிவ்ரதையாகையால் அப்படியே செய்கிறேனென்று மறுமொழி கூறினள். அப்பால் விபீஷணன் ஸீதைக்கு ஶிரஸ்நானஞ் செய்வித்து மடந்தையரைக்கொண்டு சந்தனம் புஷ்பம் முதலியவற்றால் அலங்காரமுஞ் செய்வித்து மிகுந்த விலையுள்ள பூஷணங்களையும் அணியச்செய்து திவ்யமான வஸ்த்ரத்தையும் உடுத்துவித்து அவளை மேலான வஸ்த்ரம் பரப்பப்பெற்று விளங்குகின்ற பல்லக்கின்மேல் ஏற்றிப் பலராக்ஷஸர்கள் சூழ்ந்து பாதுகாத்துவரச் செய்து ராமனிடம் அழைத்துக்கொண்டு வந்தனன். அவ்விபீஷணன் ஸீதையை

அழைத்துக்கொண்டு ராமனிடம் வருகையில், அம் மஹானுபாவன் அது தெரிந்தும் ஏதுஞ்சொல்லாமல் சிந்தையுற்றிருந்தனன். விபீஷணன் நமஸ்கரித்து மிகுதியும் ஸந்தோஷம் பெருகப் பெற்று 'ஸீதாதேவியை அழைத்துக்கொண்டு வந்தேன்' என்று விண்ணப்பஞ் செய்தனன். அங்ஙனம் ராக்ஷஸ க்ருஹத்தில் வெகுகாலம் இருந்த ஸீதை வந்தாளென்று கேட்டவுடனே ராமனுக்கு, ராவணனைக் கொன்று ஸீதையை வரவழைத்தமையால் ஸந்தோஷமும், நெடுநாள் ராவணன் வீட்டில் இருந்தனளே யென்று தைன்யமும், அதைப்பற்றியே ரோஷமும் ஆகிய இம்மூன்றும் உண்டாயின. அப்பால் ராமன் சிறிதுநேரம் ஸாதக பாதகங்களை ஆலோசித்து மனக்களிப்பற்றுத் தன்பார்ஶ்வத்திலிருக்கும் விபீஷணனைப் பார்த்து 'நல்லியற்கை யுடையவனே! ராக்ஷஸாதிபதி! நீ எப்பொழுதும் என் விஜயத்திலேயே விருப்பமுடையவனல்லவா? சீக்ரமாக ஸீதையை என் ஸமீபத்திற்கு அழைத்துக்கொண்டு வருவாயாக' என்றனன். அவன் ராமன் மொழிந்த அவ்வார்த்தையை அறிந்து சீக்ரமாக அங்கெங்கும்நிறைந்திருக்கின்ற ஜனங்களையெல்லாம் அப்புறம் அனுப்பும்படி தகுந்தவர்களை நியமித்தனன். கஞ்சுகங்களையும் (சட்டைகளையும்) தலைப்பாகைகளையும்தரித்து எப்பொழுதும் பிரம்பைப்பிடிக்கின்றமையால் தகனேறினகைகளையுடைய புருஷர்கள் அங்குள்ள ஜனங்கள் அப்புறம் போகும்படி பிரம்புகளைத் தட்டிக்கொண்டு சுற்றிலும் உலாவினர். அங்ஙனம் அவர்களை நாற்புறத்திலும் ஒதுங்கும்படி துரத்திக்கொண்டிருக்கையில், கூட்டங்கூடி யிருக்கும் பல்லூகர்களும் வானரர்களும் ராக்ஷஸர்களும் கூட்டங்கூட்டமாக அப்புறம் ஒதுங்கிப் போயினர். அவர்களெல்லோரையும் ஒதுங்கத்

துரத்திக் கொண்டிருக்கையில் கிளம்பின பெருத்த்வனி வாயுவால் கிளம்பின மஹாஸமுத்ரத்தின் கோஷம்போல் செவிப்பட்டது. அங்ஙனம் நாற்புறங்களிலும் துரத்தப் பட்டு வருந்துகின்ற அவர்களெல்லோரையும் ராமன் கண்டு அவர்களிடத்திலுள்ள ப்ரீதியால் அதைப் பொறுக்காமல் 'ஒதுக்கவேண்டாம்' என்று தடுத்தனன். ராமன் விரைந்து கண்களால் தஹிப்பவன்போன்று மஹாப்ராஜ்ஞனாகிய விபீஷணனைக்கண்டு, வெறுப்புடன்கூடின இந்த வசனத்தை மொழியத்தொடங்கி,'நீஎன்னை அனாதரித்து இந்த ஜனங்களையெல்லாம் ஏன் இங்ஙனம் வருத்துகின்றனை? இவர்களெல்லோரையும் துரத்தும் முயற்சியை நிறுத்துவாயாக. இவர்களெல்லோரும் என்னுடையவர்களேயன்றி வேறன்று.பெண்டிர்க்கு மறைவுக்ருஹங்களுமன்று,வஸ்த்ரங்களுமன்று,கோட்டைகளுமன்று; திறைகளும் அன்று; மற்றும் இவ்வாறு ஜனங்களை ஒதுக்குவது முதலிய ராஜமர்யாதைகளும் அன்று. ஆசாரமே அவர்க்கு மறைவு. இஷ்டஜனங்களைப் பிரிந்திருத்தல் முதலிய வ்யஸனங்களிலும், ராஜ்யக்கலக்கம் முதலிய ஆபத்துக்களிலும் யுத்தபூமிகளிலும் ஸ்வயம்வரங்களிலும் யாகத்திலும்விவாஹத்திலும் பெண்டிர் பிறர்க்குப்புலப்படுவது தோஷமன்று. இந்த ஸீதை இப்பொழுது யுத்தபூமியில் இருக்கின்றனள்; மற்றும் மஹத்தான கஷ்டத்தில் அகப்பட்டிருக்கின்றனள். ஆகையால் இம்மடந்தையைப் பார்ப்பதனால் தோஷம் இல்லை. மேலும் ஆலோசித்துப் பார்க்கையில், நான் அருகிலிருக்கும்பொழுது தோஷமே ஆகாது. விபீஷணா! ஆகையால் அப்பெண்மணியை என்ஸமீபத்திற்கு அழைத்துக்கொண்டு வருவாயாக. ஸீதை,நண்பர் கூட்டங்கள் சூழப்பெற்றிருக்கிற என்னைக் காண்பாளாக' என்றனன். ராமன் இங்ஙனஞ் சொல்லுகையில்

விபீஷணன் 'பெரும் கஷ்டத்தில் ஆழ்ந்திருக்கிருள்' என்ற அவனது வசனத்தைக் கேட்டு மனத்தில் சங்கை யுற்று வணக்கத்துடன் ஸீதாதேவியை ராமனிடம் அழைத்துக் கெண்டு வந்தனன். அனந்தரம் லக்ஷ்மண னும் ஸுக்ரீவனும் ஹனுமானும் அங்ஙனம் ராமனு டைய வார்த்தையில் ஸீதையைப்பற்றின ப்ரேமம் தோற் ருதிருப்பதைக் கண்டு மிகுதியும் துக்கித்திருந்தனர். அவர்கள் ராமனுக்கு பார்யையிடத்தில் அபேக்ஷை யில் லாமையை பயங்கரமாக அறிவிக்கின்ற கருத்துக்களைக் கண்டு ராமனுக்கு ஸீதையிடத்தில் ப்ரீதி மாறினதாக ஊஹித்தனர். அந்த ஸீதை விபீஷணன் பின்ருெட ரப்பெற்று வெட்கத்தினுல் தன்னுடைய அவயவங்களில் தான் புகுகின்றவள்போல் அங்கங்களை ஒடுக்கிக்கொண்டு பர்த்தாவின் ஸமீபத்திற்குப் போயினள். அவள் பர்த்தா வின் சந்நிதியைச் சேர்ந்து ஜனக்கூட்டத்தினிடையி லிருக்கின்றமையால் வஸ்த்ரத்தினுல் முகத்தை மறைத் துக் கொண்டு 'ஆர்யபுத்ர!' என்று மொழிந்து ரோத னஞ்செய்தனள். பர்த்தாவையே தெய்வமாகவுடைய அம்மடந்தையர்மணி பர்த்தாவைக் கண்டவுடனே மிகு தியும் அழகான முகமுடையவளாகித் தெளிந்திருப்பதா ன ப்ராணேஶ்வரனுடைய முகத்தைக்கண்டு, அப்படிப் பட்டதசையிலிருந்து மீளவும் பர்த்தாவைக்காண நேர்ந் ததே என்னும் ஆச்சர்யத்தினுலும் 'வெகுகாலம் பாரா திருந்த காதலனைக் காண்கிறேனல்லவா?' என்னும் மிகு ஸந்தோஸத்தினுலும் ப்ரியனிடத்தில் இயற்கையாக வே உள்ள ஸ்னேஹத்தினுலும் பார்த்துக் கொண்டிருந் தனள். அப்பொழுது நிர்மலமான சந்த்ரன்போன்ற முகமுடைய அப்பெண்மணி, அப்பொழுதே உதித்த பூர்ண சந்த்ரன்போல் அழகாயிருப்பதும் வெகுநாள்

தான் காணுதிருந்ததுமான கணவனது முகத்தைக் கண்டு மன வருத்தத்தைத் துறந்து மிகுதியும் ஸந்தோஷம் அடைந்தனள். நூற்றுப் பதினேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராமன் ஸீதையைப் பார்த்து வெகுகாலம் ராவண க்ருஹத்திலிருந்ததற்குப் பருஷ வசனங்களைப் பேசுதல்.

ராமன் அங்ஙனம் தன் பக்கத்தில் வெட்கத்தினுல் வணங்கி நின்றிருக்கும் ஸீதையைக்கண்டவுடனே மனத்தில் கோபம் ஜ்வலிக்கப்பெற்று மொழியத்தொடங்கி, 'மங்களஸ்வபாவ முடையவளே! இதோ யுத்தத்தில் சத்ருவை ஜயித்து உன்னை ஸாதித்தனன். இதெல்லாம் பௌருஷத்தைப்பற்றிச் செய்யவேண்டியதா யிருக்கையால் செய்தேனேயன்றி உன்னைப் பெறுதற்காகச்செய்த யத்னம் ஒன்றுமே இல்லை. கோபத்தின் பயனைப் பெற்றனன். பகைவன் செய்த அவமானத்திற்குப் பதில்செய்து முடித்தனன். அவமானத்தையும் அதைச் செய்த பகைவனையும் ஒரே தடவையில் நிர்மூலஞ் செய்தனன். இப்பொழுது என் பௌருஷந் தெரிந்தது. இப்பொழுது என் ஶ்ரமம் ஸபலமாயிற்று (பயன் பெற்றது). இப்பொழுது ப்ரதிஜ்ஞையை முடித்தேனுகையால் எனக்குள் நான் ஸ்வதந்த்ரனுயினன். நான் இல்லாத பொழுது மனம் சலபமாயிருக்கப்பெற்ற ராக்ஷஸன் உன்னை அபஹரித்துக்கொண்டு போயினன். இங்ஙனம் உன்னைப் பற்றி எனக்கு தெய்வாதீனமாய் வந்த அவமானத்தைப் புருஷ ப்ரயத்னத்தினுல் நான் மாற்றிக்கொண்டனன். அவமானம்வந்தபொழுது அதை எவன் தன் பராக்ரமத்தினுல் போக்கடித்துக் கொள்ளானே, அற்ப தேஜஸ்வியாகிய அப்படிப்பட்டவனுக்குப் புருஷார்த்தம் என்

னிருக்கின்றது? ஏதும்இல்லை. ஸமுத்ரத்தைததாண்டுதல் லங்கையைப் பாழ்செய்தல் ஆகிய ஹநுமான் செய்த சிறந்த மஹா கார்யங்களும் எனக்குண்டாயிருந்த அவ மானத்தைப் போக்கடித்தன வாகையால் இப்பொழுது பயன் பெற்றன. ஸுக்ரீவன் யுத்தத்தில்பராக்ரமத்தைக் காட்டி என் ஹிதத்தை ஆலோசித்து ஸைன்யங்களும் தானுமாகப்பட்ட ஶ்ரமங்களெல்லாம் இப்பொழுது பயன் பெற்றன; குணஹீனனான அண்ணனைத் துறந்து தானே என்னிடம் வந்து என்னைப் பணிந்திருக்கும் பக்தனாகிய விபீஷணன் பட்ட ப்ரயாஸமெல்லாம், இப்பொழுது எனக்குண்டான அவமானத்தைப் போக்கடித்தமை யால் ஸபலமாயிற்று' என்றனன். இங்ஙனம் அந்த ராமன் மிகுதியும் கடினமாகவும் நிராசையாகவும் அம்மொழி களை உரைத்துக் கொண்டிருக்கையில், ஸீதை மான் பேடைபோல் மிகுதியும் மலர்ந்த கண்களுடன் நிரம்பவும் கலங்கிக் கண்ணீர் பெருக்கிக்கொண்டிருந்தனள். முத வில் தானே எரிந்துகொண்டிருக்கிற அக்னியில் மிகவும் நெய்யை விட்டு நனைக்கையில் அது மேலும் தாருணமாக ஜ்வலிப்பதுபோல், முதலே கோபித்திருக்கின்ற ராம னுக்கு அங்ஙனம் துக்கித்திருக்கின்ற ஸீதையைப் பார்த் தவுடனே மிகுதியும் கோபம் வளர்ந்தது. அவன் அங்ங னம் மிகுந்த கோபாவேசத்துடன் முகத்தில் புருவத்தை நெரித்து ஸீதையை நேரேபார்க்கப் பொறுமல், கண்பார் வைகளைக் குறுக்கே விடுத்து, வானரர்களும் ராக்ஷஸர் களும் நிறைந்த கூட்டத்தினிடையில் அப்பெண்மணி யைப் பார்த்துப் பருஷம் பேசத் தொடங்கி, 'ஸீதே! நேர்ந்த அவமானத்தைப் போக்கடித்துக்கொள்ளவிருப் பமுற்றவன் என்செய்து நிறைவேற்ற வேண்டுமோ, அதெல்லாம் செய்தாய்விட்டது. முன்பு தென்திசையில்,

இல்வலவாதாபிகள் ஆக்ரமித்திருக்கையால் ப்ராணி ஸமூஹங்களுக்கு ஸஞ்சரிக்க முடியாதிருப்பது கண்டு கோபமுற்று ஆத்மத்யானகரிஷ்டராகிய அகஸ்த்யர் தபோபலத்தினுல் அவர்களை உருமாய்த்து அதை ஸாதித்தாற்போல், நான் ராவணன் அபஹரித்த உன்னை, கோபமுற்று அந்தப் பகைவனைக் கொன்று ஸாதித்தனன். கல்யாணி! நான் இப்பொழுது என் ஸ்னேஹிதர்களின் பராக்ரமத்தினுல் யுத்தத்தில் நிறைவேற்றின ப்ரயாஸமெல்லாம் உனக்காகச் செய்ததன்றென்று உனக்குத் தெரிந்திருக்கட்டும். 'ஆனுல் எதுக்காக நீ செய்தது' என்கிருயோ? ஆசாரத்தை ரக்ஷிப்பதற்காகவும் முழுவதும் விளைந்த அபவாதத்தையும் ப்ரக்யாதிபெற்ற என் வம்சத்திற்குண்டான அபகீர்த்தியையும் பரிஹரிப்பதற்காகவும் நான் இங்ஙனம் யுத்தத்தில் ப்ரயாஸத்தை எடுத்துக்கொண்டேனன்றி வேறில்லை: பரக்ருஹ வாஸத்தினுல் உன் நடத்தையைக் குறித்து எனக்கு ஸந்தேஹம் உண்டாயிருக்கிறது. ஆகையால் என்னெதிரில் நின்றிருக்கிற நீ, கண்ரோகமுடையவனுக்கு தீபம்போல் மிகுதியும்[1] ப்ரதிகூலமாயிருக்கின்றனை. கல்யாணீ! ஜனகராஜன் புதல்வீ! ஆகையால் போவாயாக. அனுமதி கொடுத்தனன். இந்தப் பத்துத் திசைகளில் உனக்கிஷ்டமான இடத்திற்குப் போகலாம். இனி எனக்கு உன்னுல் ஆகவேண்டிய கார்யம் இல்லை. நல்ல குலத்தில் பிறந்து, அதிலும் மிகுதியான தேஜஸ்ஸுடன் ப்ரகாசிக்குந் தன்மையுடைய புருஷன் எவன் தான், பிறன் வீட்டில்

---

1 இங்கு நேத்ரரோக முடையவனுக்கு தீபம்போல் ப்ரதிகூலமாயிருப்பதற்குக் காரணம் தன்னுடைய ஸந்தேஹமாகிற தோஷமேயன்றி ஸீதையிடத்தில் ஒரு தோஷமும் இல்லையென்று கருதுவதாகத் தெரிகிறது.

வெகுகாலம் இருந்த தன் காதலியை மன விருப்பத்துடன் மீளவும் கைப்பற்றுவான்? இத்தனை காலம் ராவணனோடிருந்து இப்பொழுது நழுவி வந்தனை; காமவிகாரமுற்ற அவனுடைய துஷ்டப்பார்வைகளுக்கு உட்பட்டிருந்தனை. பெருங் குலத்தை நாற்புறத்திலும் விளம்பரஞ்செய்து வருகின்றநான், இப்படிப்பட்ட உன்னை மீளவும் எங்ஙனம் கைப்பற்றுவேன்? அந்தக் குலத்தின் கீர்த்திக்காக உன்னை ஸாதித்தேனன்றி வேறில்லை. போன கீர்த்தியைத் திருப்பிக்கொண்டனன். இனி உன்னிடத்தில் எனக்குச்சிறிதும் ஆஸக்தி இல்லை. இங்கிருந்து இஷ்டமான இடத்திற்குப் போகலாம். மங்கலஸ்வபாவமுடையவளே! இது, நான் புத்தியில் நன்றாக நிச்சயித்துக்கொண்டு சொன்ன வார்த்தையேயன்றி வேறன்று. ஆகையால், ஸீதே! எப்படி ஸுகமோ, அப்படி [1] லக்ஷ்மணனிடத்திலாவது பரத னிடத்திலாவது புத்தியை வைப்பாயாக. அல்லது, வானரராஜனான ஸுக்ரீவனிடத்திலாவது, ராக்ஷஸ ராஜனான விபீஷணனிடத்திலாவது, மற்றும் உனக்கு எப்படி ஸுகமென்று தோற்றுமோ அப்படியாவது இருக்க மனம் வைப்பாயாக. ஸீதே! திவ்யமான ரூபம் அமைந்து அழகியளாயிருக்கின்ற நீ, வேறு கதியில்லாமல் ராவணனகத்திலேயே தகையுண்டிருக்கையில், அவன் இத்தகையளான உன்னைப்பார்த்துக் கொண்டே வெகுகாலம் பொறுத்து வெறுமனே இருப்

---

1 இங்கு லக்ஷ்மணாதிகளிடம் 'மனம் வைப்பாய், புத்தியைவைப்பாய்' என்னில்—பர்த்தா கைவிடப் பெற்ற பெண்டிர்க்கு பந்துக்ருஹத்தில் வாஸம் விதித்திருக்கிற தாகையாலும் பெண்டிர்க்கு ஸ்வாதந்த்ர்யத்தை விதிக்காமையாலும் புத்ரர் போன்ற லக்ஷ்மணாதிகளின் க்ருஹங்களில் அவருடைய ரக்ஷணத்தின் கீழிருந்து காலங்கழிப்பாளென்று பொருள்.

பானு? வெறுமனே இருக்கமாட்டான்' என்று பருஷமாகப் பேசினன். அப்பால், ப்ரியவசனங்களைக் கேட்பதற்கே உரியளாகிய மைதிலி வெகுகாலத்திற்குப் பின்பு ப்ரியனிடத்தினின்று அந்த அப்ரியவார்த்தையைக் கேட்டு, மேலான யானையின் துதிக்கையால் அடியுண்டு ஒடிந்த யானைவணங்கி யென்னுங்கொடி மிகுதியும் நடுங்கிப் பால் பெருக்குவதுபோல், கிடுகிடுவென்று நடுங்கிக் கண்ணீர் பெருக்கினள். நூற்றுப் பதினெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஸீதை ராமனது வசனங்களுக்கு மறுமொழி கூறி அவனுக்கு நம்பிக்கை உண்டாகும் பொருட்டு அக்னி ப்ரவேசஞ்செய்தல்

இங்ஙனம் ராமன் ரோஷத்தினால் கேட்போர்களுக்கு மயிர்க்கூச்சல் உண்டாகும்படி பருஷமாகப் பேசக்கேட்டவைதேஹி, மிகுதியும் வருந்தினள். ஸீதை, இதுவரையில் தான் என்றும் கேட்டறியாத அந்தப் பருஷ வசனங்களைத் தன்பர்த்தாவான ராமன் பெரியகூட்டத்தினிடையில் மொழியக் கேட்டு, லஜ்ஜையினால் வணங்கின தலையை மிகுதியும் வணக்கிக்கொண்டனள். ஜனகராஜன் புதல்வியாகிய ஸீதைதனது அவயவங்களில்தான் நுழைபவள் போல், அங்கங்களை ஒடுக்கிக்கொண்டு, ஆணிகள் போன்ற அம்மொழிகளைக்கேட்டு, ஆணிகள் பொற்றினாற்போல் நோயைப் பொறுக்க முடியாமல் மிகுதியும் கண்ணீர் பெருக்கினள். அனந்தரம் அம்மஹானுபாவை கண்ணீர்களால் நனைந்திருக்கிற தன்முகத்தைத் துடைத்துக்கொண்டு பர்த்தாவை பார்த்து தழதழத்த உரைகளை மெல்ல மெல்ல மொழியத்தொடங்கி, 'வீரனே! என்னைக் குறித்து என் இப்படிப்பட்ட வார்த்தைகள் பேசுகின்றனை? இது நீ சொல்வதற்கும், நான் கேட்பதற்கும் தகுமா?

இது மிகுதியும் பருஷமாகிச் செவிகளைப் பிளக்கின்றதே ஸாமான்யமாயிருப்பவன் ஸாதாரணமாயிருக்கின்ற ஒருத்திக்குச் சொல்லும்படியான இப்படிப்பட்ட வார்த்தைகளை உன்னைப்போன்றவன் மொழியலாகுமா? மஹாபாஹூ! உனக்கு நான் எப்படிப்பட்டவளாகத் தோற்றுகின்றேனோ அப்படிப்பட்டவளல்லேன். உனக்காக எனது நன்னடத்தையின்மேல் ஆணையிடுகின்றனன். (ஏதேனும் ஒரு ப்ரமாணத்தினால் என்னிடத்தில் நம்பிக்கைவைப்பாயாக. சில அல்பஸ்த்ரீகளின் துராசாரத்தைப் பார்த்து ஸ்த்ரீஜாதியெல்லாம் அப்படியே இருக்குமென்று சங்கிக்கின்றனை. நீ என் ஸ்வபாவத்தை நன்றாகப் பரீக்ஷித்துத் தெரிந்துகொண்டிருப்பாயாயின்,இந்தஸந்தேஹத்தைத் துறப்பாயாக. ப்ரபூ! என் ஸ்வபாவம் உனக்குத் தெரிந்திருப்பினும், ராவணனுடைய சரீரம் என்மேல் பட்ட தோஷம் இருக்கிறதாகையால் 'உன்னைத் துறப்பேன்' என்கிறாயோ? அப்பொழுது நான் பராதீனையாயிருந்தனன்; ஆகையால் அவனது சரீரஸ்பர்சம் பெறவேண்டியதாய் வந்தது. ஆயினும் அதில் என் மனவிருப்பத்தோடு செய்த பிசகு ஒன்றும் இல்லை. அது தெய்வம் செய்த அபராதம். என் மனதோ பிறர்க்குப் பிடிக்கமுடியாததாகி என்வசத்திலேயே இருக்கின்றது. ஆகையால் இது அக்காலத்தில் என்னிடத்திலேயே இருந்தது. எனது அங்கங்களோ பிறர்க்குத் தொடமுடிந்தவைகளே. மற்றும், அவற்றை விடுவித்துக்கொள்ள நான் ஸ்வாதீனமற்றவளாயினன். ஆகையால் அவற்றின் விஷயத்தில் நான் என் செய்வேன்? சத்ருக்களின் கர்வத்தைப் போக்குவதும் நண்பர்களுக்கு வெகுமதியைக் கொடுப்பதும் தன்மையாயிருக்கப் பெற்றவனே! நாம் இருவரும் வெகுகாலம் ஒருவரோடொருவர் கூடி ஆடி வளர்ந்தனம்; ஒரு

ரோடொருவர் பலவர்ஷங்கள் கலந்து களித்திருந்தனம். இவ்விரண்டினாலேயே என்ஸ்வபாவம் உனக்கு நன்றாகத் தெரிந்திருக்கவேண்டும். இவற்றாலும் உனக்கு என் ஸ்வபாவம் தெரியாதுபோமாயின், இனி எதனாலும் தெரியநேராது. ஆகையால் நான் இனி உள்ளகாலமெல்லாம் பாழாயினன். வீரா! நீ என்னைத் தேடுவதற்காக வீரனான ஹனுமானை அனுப்பினையே. அங்ஙனம் அனுப்பும்பொழுது நான் லங்கையில் இருக்கும்பொழுதே என்னை ஏன் விடாமற்போயினை? வீரனே! நீ அப்பொழுதே என்னைத் துறந்திருப்பாயாயின். அந்த ஸங்கதியைக்கேட்டவுடனே, என்னை நீ கைவிட்டாயென்று வானரோத்தமனான ஹனுமானுடைய ஸமக்ஷத்திலேயே ப்ராணன்களை விட்டிருப்பேன். இத்தனைகாலம் உன்னைப்பிரிந்த துக்கத்தை நான் அனுபவியாதிருப்பேனல்லவா ? என் விஷயம் அப்படி இருக்கட்டும். அப்படி செய்திருப்பேனாயின், ப்ராணஸங்கடத்தில் உயிரைப் பிடித்துக்கொண்டு இவ்வளவு யுத்தஞ் செய்து வீணாக உங்களுக்கு ஶ்ரமப்படவேண்டியதாயிராதே. உனது நண்பர்களுக்கு இவ்வளவு தூரம் நிஷ்ப்பலமாக வருத்தப்படவேண்டியதில்லாதிருக்குமே. நரஸிம்ஹனே! நீ அற்பனாகிய ஓர் மனிதன் போலகோபத்தையே அனுஸரித்துஎனது பெண்மையையே முன்னிட்டு இங்ஙனம் மொழிந்தாயன்றி நிர்மலமான என் சீலத்தைக் கணிசிக்கவில்லை. (என்னைஸ்த்ரீயென்று இவ்வளவு மாத்ரமே நினைத்து மொழிந்தாயன்றி என் சீலத்தை நினையாது போயினை). நீ ஆசாரங்களை அறிந்தவனே. ஆனால் என்? ஜனகனுக்குப் பிறந்ததாக வ்யாஜமேயன்றி வாஸ்தவத்தில் பூமியினின்றுமேபிறந்தனன். இப்படிப்பட்ட என் பிறப்பையும், வெகுகாலம் நீ பரிசீலித்து வந்த எனது ஆசாரத்தையும் கூட முன்னிடாமற்

போயினை. முக்யமாகப் பாராட்டவில்லை). நீ இளைஞனு யிருக்கும்பொழுதே, என்னை, எனது இளம்பருவத்திலே யே, அக்னிஸாக்ஷிகமாகப் பாணிக்ரஹணஞ்செய்துகொ ண்டனையே. (மணம் புரிந்தனையே). அங்ஙனம் இளமைப் பருவத்தில் பிடித்த கையுங்கூட ப்ரமாணமாகவில்லையே. இளமையிலேயே நடந்த விவாஹத்தையும், இளமையே பிடித்துவந்த மனைவியென்பதையும்பாராட்டாதுபோயி னை உன்னிடத்தில் எனக்குள்ள பக்தியையும் என்சிலத் தையும் எல்லாவற்றையும் பின்னே தள்ளிவிட்டாயன்றிச் சிறிதுங் கணிசிக்கவில்லையே' என்றனள். ஸீதைராமனைப் பார்த்து மொழிந்து ரோதனஞ் செய்துகொண்டு மனக் களிப்பற்று ஏதுந்தோற்ருமல் சிந்தையிலாழ்ந்திருக்கிற லக்ஷ்மணனைப் பார்த்துக் கண்ணீரால் தடைபட்டமொ ழிகளுடன் 'லக்ஷ்மணு! எனக்குச் சிதை ஏற்படுத்துவாயா க. இதுவே என் வ்யஸனத்திற்கு மருந்து. மற்றென்றும் அன்று. அதில் விழுந்து ப்ராணன்களை இழக்கின்றனன். வீணபவாதத்தினுல் அடியுண்டு நான் இனி ஜீவித்திருக் கப்பொறேன். என்னுடைய பாதிவ்ரத்யாதிகுணங்களில் ப்ரீதி அடையாமல் பர்த்தா என்னை மஹாஜனஸபாமத் யத்தில் பரித்யாகஞ் செய்யும்பொழுது என் கணவனுக்கு நம்பிக்கை விளைவிப்பதற்குரிய கதி அக்னியில் விழுதலே. ஆகையால் அங்ஙனம் செய்கிறேன். இதைக்காட்டிலும் வேறுகதி இல்லை' என்றனள். ஸீதை அங்ஙனம் மொழி கையில், சத்ருவீரர்களை அழிக்குந்திறமையுடைய லக்ஷ் மணன் தைன்யம் அடைந்து ராமனது முகத்தைப்பார்த் தனன். அப்பால் வீர்யவானுகிய லக்ஷ்மணன் ராமனது புருவநெரிப்பு முதலிய முகஸம்ஜ்ஞைகளால் அவனுக்கு அபிமதமென்று தெரிந்துகொண்டு ராமனது மதத்தின் படி சிதை ஏற்படுத்தினன். அப்பொழுது ராமன் 'ஒரு

நிபமும் இல்லாமல் பதிவ்ரதை செய்யும் ப்ரத்யயத்தை எங்ஙனம் பார்க்கலாம்' என்று வெட்கமுற்று, 'ஸீதை யின் முகத்தைக்காணில் தாக்ஷிண்யம் உண்டாம்' என்று தலைவணக்கிக் கொண்டிருக்கையில், ஸீதை ராமனது மேனியை அனுபவித்துக்கொண்டே மெதுவாக அவனை ப்ரதக்ஷிணஞ் செய்து ஜ்வலிக்கின்ற அக்னியின் அருகே வந்தனள். ஸீதை, தேவதைகளுக்கும்ப்ராஹ்மணர்களுக் கும் நமஸ்காரஞ் செய்து அக்னியின் ஸமீபத்தில் சென்று கைகளைக் குவித்து 'என் ஹ்ருதயம் எப்பொழுதும் ராம னிடத்தினின்று மற்றொரு புருஷனிடஞ் செல்லாதிருக் குமாயின், இப்படியே லோகங்களுக்கு ஸாக்ஷியான இவ் வக்னிதேவன் என்னை எல்லாவிதத்திலும் பாதுகாப் பானாக. நான் பரிசுத்தமான நடத்தையுடையவளாகவே இருந்து ராமன் என்னை அந்யாயமாக துஷ்டையென்று நினைப்பது உண்மையாயின், ஸமஸ்த லோகங்களுக்கும் ஸாக்ஷியாகிய இவ்வக்னிதேவன் என்னை எல்லாவிதத்தி லும் பாதுகாப்பானாக. நான் மனத்தினாலும் வாயினாலும் செயலாலும், ஸகல தர்மங்களையும் அறிந்த ராமனை அதி க்ரமித்து நடவாதிருப்பேனாயின், ஸகலலோக ஸாக்ஷியா கிய அக்னிதேவன் என்னை எல்லாவிதத்திலும் பாதுகா ப்பானாக. பகவானான ஸூர்யனும் வாயுவும் திசைகளும் சந்த்ரனும் பகலும் இரவும் காலைமாலை ஸந்திகளும் பூமி யும்மற்றுமுள்ளவரும் என்னைநன்னடத்தையுடையவளா கவேநினைப்பார்களாயின், அக்னிதேவன் என்னைப்பாது காப்பானாக' என்று மொழிந்தனள். இங்ஙனம் மொழிந் து ஸீதாதேவி அக்னிக்கு ப்ரதக்ஷிணஞ் செய்து சரீரத் தின்மேல் மனத்தில் சிறிதும் அபிலாஷமின்றி ஜ்வலிக் கின்ற அவ்வக்னியில் ப்ரவேசித்தனள். அங்குக் கூட்டங் கூடின ஜனங்கள் குழந்தை முதல் கிழவர் வரையிலும்



3276. ஸீதை அக்னி ப்ரவேசம் செய்தல்.

மிகுதியும் பயந்து ஸீதை அக்னியில் ப்ரவேசிப்பதைக் கண்டனர். மேலான பொன் பூஷணங்களை அணிந்துநல்ல பொன்னிறமுடைய அப்பெண்மணி ஸமஸ்த லோகங்களும் பார்த்துக்கொண்டிருக்கையில், ஜ்வலிக்கின்ற அக்னியில் வீழ்ந்தனள். மஹாபாக்யவதியான அந்த வைதேஹி பரிசுத்தமான ஆஜ்யாஹுதிபோல் அக்னியில் ப்ரவேசிக்கும்பொழுது மூன்று லோகங்களும் கண்டன. அந்த ஸீதை யாகத்தில் மந்த்ரங்களால் ஸம்ஸ்காரஞ்செய்யப்பெற்று, ஓயாதுசெய்கையில் விழுகின்ற நெய்தாரைபோல், பெரும்ஜ்வாலையுடன் எரிகின்ற அக்னியில் விழுகையில், ஸ்த்ரீகளெல்லோரும் பார்த்துக்கூச்சலிட்டனர். ஸ்வர்க்கத்திலும் பூலோகத்திலும் பாதாளத்திலும்உள்ளதேவதைகளும் கந்தர்வர்களும் தானவர்களும்,[1] சாபம் அடைந்து ஸ்வர்க்கத்தினின்று நரகத்தில்விழுகின்ற தேவதையைப்போல்அக்னியில் விழுகின்றஸீதையைக்கண்டனர். அப்பெண்மணி அக்னி ப்ரவேசஞ் செய்யும்பொழுது ராக்ஷஸர்களும் வானரர்களும் மிகுந்த ஆச்சர்யத்துடன் பெருங்கோஷம் உண்டாகும்படி ஹாஹாகாரஞ் செய்தனர். நூற்றுப்பத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

1 ஸமஸ்த போகங்களையும் அனுபவிக்கத் தகுந்த திவ்யரூபமுடைய ஸீதை அக்னியில் விழுவது ஸ்வர்க்கத்திலுள்ள தேவதை நரகத்தில் விழுவது எவ்வளவு தகாததோ அவ்வளவு தகாததென்று த்ருஷ்டாந்தத்தின் கருத்து. ஸீதை, ராவணன் தன்னைப் பறித்துக் கொண்டு போக வந்தது முதல் இதுவரையில் பரமபாகவதனான லக்ஷ்மணன் விஷயத்தில் பட்ட அபசாரத்தின் பலனை அனுபவித்தமை சொல்லப்பட்டது. வாஸ்தவத்தில் ஸீதை ராவணன் வந்தபோது அக்னியில் ப்ரவேசித்தாளென்றும் ராவணன் கொண்டுபோனது மாயா ஸீதையென்றும், முன்பு அக்னியில் ப்ரவேசித்த ஸீதை அக்னியினின்று வெளிவருவதற்காக மாயா ஸீதை அக்னியில் ப்ரவேசித்தாளென்றும் சிலர் கருதுகின்றனர்.

## ப்ரஹ்மாதி தேவதைகள் ராமனை ஸ்தோத்ரஞ் செய்தல்.

அனந்தரம் தர்மஸ்வபாவனாகிய ராமன் ஸமஸ்தஜனங்களும் மொழியும் வார்த்தைகளைக் கேட்டுக்கொண்டே மனத்தில் துக்கித்துக் கண்ணீர்களால்கண்கள் கலங்கப்பெற்றுச் சிறிதுநேரம் மனத்தில் சிந்தித்துக்கொண்டிருந்தனன். அனந்தரம் யக்ஷராஜனாகிய குபேரனும் சத்ருக்களை அழிக்குந் திறமை அமைந்த யமனும் ஆயிரங் கண்ணனாகிய தேவேந்த்ரனும் பகைவரைத் தபிக்கச் செய்யும் வருணனும் முக்கண்ணனும் எருத்துக்கொடியுடையவனும் செல்வப்பெருக்கமைந்தவனுமாகிய சிவனும், ஸமஸ்தலோகங்களையும் படைப்பவனும் ப்ரஹ்மத்தை உணர்ந்தவர்களில் சிறந்தவனுமாகிய ப்ரஹ்மதேவனும் ஆகிய இவர்களனைவரும் ஸூர்யன்போன்ற விமானங்களில் ஏறிக்கொண்டு லங்காபுரியைச் சேர்ந்து ராமனிடம் வந்தனர். அனந்தரம் ப்ரஹ்மாமுதலிய மேலான தேவதைகள், தம்மைப் பார்த்துக் கைகூப்பி நிற்கின்ற ராமனைக் கண்டு, கங்கணம் முதலிய ஹஸ்தாபரணங்களால் விளங்கும் தமது நீண்ட பாஹுதண்டங்களை மேலெடுத்துராமனைப்பார்த்து 'நீ, ஸமஸ்தலோகங்களுக்கும் கர்த்தா; ஸர்வோத்தமன்; ஜ்ஞானமுடையவரனைவரிலும் மேலாயிருப்பவன். இப்படி ஸர்வஜ்ஞனாகிய (எல்லாம் அறிந்த) நீ, ஸீதை அக்னியில் விழுகையில் ஏதுந் தெரியாதவன்போல் உபேக்ஷித்திருப்பதேனோ? ப்ரஹ்மாதியான ஸமஸ்த தேவக்கூட்டங்களிலும் ஶ்ரேஷ்டனான உன்னை நீ ஏன் அறியாதிருக்கின்றனை? தேவதைகளனைவரிலும் நீயே ஶ்ரேஷ்டனென்கிற உன் மஹிமை உனக்கு ஏன் தெரியாமல் போயிற்று? நீ முன்பு அஷ்டவஸுக்களில் ப்ரஜாபதியான ருததாமனென்

னும் வஸுவாயிருந்தனை. நீயன்றோ மூன்று லோகங்களுக்கும் ஆதிகர்த்தா (நீயே மூன்று லோகங்களையும் அண்டாதிபதிவரையிலும் முதலில் நேரே ஸ்ருஷ்டித்தவன்). நீ ஸ்வதந்த்ரனேயன்றி உன்னை நியமிப்பவன் மற்றொருவனும் இல்லை. நீ ஏகாதச ருத்ரர்களில் மஹாதேவனென்கிற எட்டாவது ருத்ரன்; ஸாத்யர்கள் பன்னிருவரில்வீர்யவானென்கிற ஐந்தாவது ஸாத்யன். பரந்தபனே! உனக்கு அஶ்வினி தேவதைகள் செவிகள்; ஸூர்யசந்த்ரர்கள் கண்கள். உலகங்களின் ஸ்ருஷ்டிக்கு முன்பும் ப்ரளயத்திலும் நீ உத்பத்தி விநாசங்களின்றிப் புலப்பட்டுக் கொண்டிருப்பாய். இங்ஙனம் ஸர்வஜ்ஞனும் (எல்லாமறிந்தவனும்) ஸர்வசக்தியும் (எல்லாவற்றையும் நிறைவேற்ற வல்லவனும்) ஸர்வேஶ்வரனும் (எல்லோர்க்கும் அதிபதியும்) ஆயிருந்தும் ஒன்றுந்தெரியாத ஓர் கேவல மனுஷ்யன்போல் ஸீதை அக்னியில் விழக்கண்டு ஏன் உபேக்ஷித்திருக்கின்றனை?' என்று வினவினர். இங்ஙனம் லோகரக்ஷகரான அந்த ப்ரஹ்மாதி தேவதைகள் அனைவரும் வினவுகையில், லோகநாதனும் தார்மிக சிரோமணியும் ரகுகுலத்தில் பிறந்தவனுமாகிய ராமன் அந்த மேலான தேவதைகளைப் பார்த்து 'நான்[1] தசரத குமாரனுகிய ராமனென்றே (மனுஷ்யனென்றே) என்னை

1 இங்கு 'ஆத்மாநம் மாநுஷம் மந்யே ராமம் தஶரதாத்மஜம் யோஹம் யஸ்ய யதஶ்ச அஹம் பகவாம்ஸ்தத் ப்ரவீது மே' என்பது மூலம், ராமன் ப்ரஹ்மாதிகளால் ஸ்தோத்ரஞ் செய்யப் பெறினும் ஸமஸ்த தேவதைகளுக்கும் பூஜிக்கத் தகுந்த ப்ரஹ்மாவின் மூலமாய், தன் ப்ரபாவத்தை உலகத்தில் ப்ரசுரஞ் செய்யும் பொருட்டுத் தன் ஸௌஶீல்யத்தை (அதாவது—தான் எல்லோரிலும் மேலாயிருந்தும் தன்னைக் காட்டிலும் மிகுதியும் தாழ்ந்தவரோடு புரையறக் கலந்திருப்பதை) அறிவிக்கிறான்—(ஆத்மாநம் மாநுஷம் மந்யே என்னை மனுஷ்யனாக நினைத்துக்கொள்ளுகிறேன். என்னுடைய

நினைத்துக்கொண்டிருக்கின்றனன். நான்எவனோ? எவருடையவனோ? எதற்காக வந்தேனோ? அந்த விவரத்தை

பரத்வத்தைக் காட்டிலும் மனுஷ்யத்தனத்தை அபிநயிப்பதே எனக்கு ஸம்மதமா யிருக்கின்ற தென்று பொருள். அதிலும் விசேஷம் சொல்லுகிறான்—(ராமம்) மனுஷ்யனுயிருத்தலும் அதிலும் ராமனென்னும் பேருடையவனுயிருத்தலுமே எனக்கு ஸம்மதமென்கை. அதைக் காட்டிலும் விசேஷம் சொல்லுகிறான்—(தஶரயாத்மஜம்) தசரத குமாரன் ராமனாக நினைத்திருக்கிறே னென்கை. அவதாரங்களெல்லாவற்றிலும் தசரத சக்ரவர்த்தியின் புத்ரனுயிருத்தலே எனக்கு மிகுதியும் ப்ரியமென்று கருத்து. இதற்கு ஸம்ப்ரதாயரவிகர் கூறும் உதாரண மொன்றுண்டு. 'ஶங்க சக்ர ஗தாபாணே த்வாரகா நிலயாச்யுத|கோவிந்த புண்டரீகாக்ஷ ரக்ஷமாம் ஶரணாகதாம்' என்பதே. இங்கு (ஶங்கசக்ர ஗தாபாணே) என்று பரத்வசிஹ்னங்களான சங்கு சக்ரம் முதலிய ஆயுதங்களைத் தரித்திருப்பதைச் சொல்லக் கேட்டு க்ருஷ்ணன் அனாதரித்து முகத்தை வணக்கிக் கொண்டானென்றும், 'த்வாரகாநிலய' க்ருஷ்ணாவதாரத்தை யெடுக்கையால் சிறிது முகத்தை எடுத்தானென்றும், ('கோவிந்த புண்டரீகாக்ஷ' என்று கோபாலபுத்ரன் இடப்பையல் என்று சொல்லக் கேட்டுப் பரத்வத்தைக் காட்டிலும் வஸுதேவனுக்குப் புத்ரனுயிருக்கையே தனக்கு அபிமதமென்று ஸந்தோஷத்தினால் கண்மலரப் பெற்றானென்றும் கூறுவர். தான் விஷ்ணுவின் அவதாரமென்பதை ஸுக்ரீவாதிகள் அறியார்களாகையால் அவர்க்கு நன்றாகத் தெரியட்டுமென்றும் அதில் அவர்க்கு நம்பிக்கை உண்டாவதற்காகவும் நான்முகன் மூலமாய்த் தன் ஸ்வரூபத்தை வெளியிடும்பொருட்டு வினவுகின்றனன்—(யோஹம்) நான் எவனோ? என் ஸ்வரூபம் எதுவோ? என்று தன் ஸ்வரூபத்தைக்குறித்த கேள்வி.(யஸ்ய)நான் யாருடையவனோ? என்று தன் ஸம்பந்தத்தைப் பற்றின கேள்வி.(யதஃ) எதற்காகவோ? என்று தான் வந்த ப்ரயோஜனத்தைக்குறித்த கேள்வி.(஭஗வாம்ஸ்தத் ப்ரவீது) பகவானாகிய ப்ரஹ்மதேவன் அதைச் சொல்லவேண்டும், சக்ரவர்த்தியின் புத்ரனுயிருக்கையே எனக்கு ப்ரியமாயிருப்பது. நீ உனக்குள் ஸர்வஜ்ஞனாகையால் எனக்கு இஷ்டமில்லாததாயினும் என் பரத்வத்தை வெளியிடுவாயாக வென்று பொருள்.

யெல்லாம் பகவானுகிய ப்ரஹ்மதேவன் சொல்லவேண்டும்' என்றனன். இங்ஙனம் ராமன் வினவுகையில் பரப்ரஹ்மத்தை உணர்ந்தவரனைவரிலுஞ் சிறந்த ப்ரஹ்மதேவன் அந்த ராமனைப் பார்த்து 'ராமா! ஸத்யபராக்ரமா! (உண்மையான பராக்ரமமுடையவனே!) வாஸ்தவத்தைச் சொல்லுகிறேன், கேட்பாயாக.[1] நீ ஸமஸ்த

தன் ஸ்வரூபத்தை வெளியிடுவது தனக்கு ஸம்மதயன்ருயினும் தான் வெளியிடும்படி அனுமதி கொடுப்பது ராமனென்னும் பேரால்தான் செய்யவேண்டிய கார்யம் நிறைவேறிற் றென்பதைப் பற்றியே யென்று தெரிகிறது.

1 இங்கு 'ஹவாந் நாராயணோ தேவஸ் ஸ்ரீமாஞ்சக்ராயுதோ விஹு:ஏகஶ்ருங்கோ வராஹஸ்த்வம்ஹூ தஸபத்நஜித்'என்பது மூலம். (நாராயண:) 'ஆபோ நாரா இதி ப்ரோக்தா ஆபோவை நரஸூநவ:। தா யதஸ்யாயநம் பூர்வம் தேந நாராயண: ஸ்ம்ருத:' ஜலங்கள் நரனுல் (பரமாத்மாவால்) உண்டானவையாகையால் நாரங்களென்று கூறப்படுபவை. அந்த ஜலங்கள் முன்னம் இவனுக்கு ஸ்தானமாயிருந்தமைபற்றி நாராயண னெனப்பட்டனன் என்று மனுஸ்ம்ருதி. முன்பு ஜலங்களை ஸ்ருஷ்டித்து மற்றவைகளை ஸ்ருஷ்டிப்பதற்கு முன்னம் அந்த ஜலங்களில் வஸித்திருந்தானென்கை. இப்படிப்பட்ட நாராயண னென்கையால் ஜகத்காரணமென்றமையும் கூறப்பட்டது. இதற்கு 'ஏகோஹவை நாராயண ஆஸீந்ந ப்ரஹ்மா நேஶாநோ நேமே த்யாவாப்ருதிவீ' என்று ஶ்ருதி. ஸமஸ்த காமங்களும் கைகூடப் பெற்றவனுக்கு ஜகத்தை ஸ்ருஷ்டிப்பது முதலிய வ்யாபாரங்களைச் செய்தல் பொருந்தாதே யென்னில்—(தேவ:) 'தீவ்யதி இதி தேவ:' க்ரீடிப்பவன். க்ரீடை விளையாட்டு. விளையாட்டில் முயன்றவனென்கையால் ஸ்ருஷ்டி முதலியவற்றை விளையாட்டுக்காகச் செய்கிருனென்கை. ஆகையால் பரிபூர்ணமாயிருக்கப் பெற்றவனுக்கும் ஏதேனுமொரு கார்யம் ஸம்பவிக்கு மென்று கருத்து. (ஸ்ரீமாந) ஸ்ரீமகா லக்ஷ்மியோடு நித்யயோகமுடையவன் நித்யயோகம்—நித்ய ஸம்பந்தம். (சக்ராயுத:) ஸுதர்ஶன சக்ரத்தை ஆயுதமாகவுடையவன். (விஹு:) வ்யாபகன். அணுஸ்வரூபரான ஜீவாத்மாக்களுக்கு ஸ்வரூபவ்யாப்தி இல்லை. விபுவான பரமாத்மாவுக்கு எம்

வஸ்துக்களையும் இருப்பிடமாகவுடையவனும் ஸமஸ்த வஸ்துக்களுக்கும் இருப்பிடமாயிருப்பவனும் ஜகத்காரணமுமாகிய நாராயணன். நீ எல்லா விருப்பங்களும் கைகூடப்பெற்றவனுமாயினும் விளையாட விருப்பமுற்றிருக்கையால் உலகங்களைப் படைப்பது முதலிய வ்யாபாரங்களையெல்லாம் லீலையாகவே நிறைவேற்றிக்கொண்டிருப்பாய். நீ எப்பொழுதும் ஸ்ரீ மஹாலக்ஷ்மியோடிணைபிரியாதிருப்பவன்; ஸுதர்சன சக்ரத்தை அஸாதாரணமான ஆயுதமாக ஏந்தியிருப்பவன்; ஸர்வவ்யாபகன்; (எல்லோர்க்கும் மேற்பட்டவன்); ஒற்றைக் கொம்புடையதாகி பூமியை எடுத்த ஆதி வராஹமூர்த்தி; இதற்கு முன்பிருந்த சத்ருக்களையும் இனிமேல் வரும் சத்ருக்களையும் ஜயிப்பவன். ராமா! நீ[1] அக்ஷரமென்று வே

---

கும் ஸ்வரூபவ்யாப்தி உண்டு. ஜீவராசியைக் காட்டிலும் விலக்ஷணனென்கை. (ஏகஶ்ருங்கோ வராஹஃ) ஒற்றைக் கொம்புடைய ஆதிவராஹன். ப்ரளயஸமுத்ரம் பொங்கிவரும்பொழுது வராஹரூபந் தரித்து பூமியை எடுத்தானென்கை. 'உத்த்ருதாஸி வராஹேண' என்று ஶ்ருதி. 'தம்ஷ்ட்ரயா பர்வதேந்த்ராணாம் க்ருதவாம்ஸ் சாலநம் மஹத்| ததஸ்தம் துஷ்டுவுர்தேவா ஏகஶ்ருங்கத்வஸித்தயே: ஏகஶ்ருங்கவராஹோ உ ஹு-ஜித் தஜாப்ரஹ்ருதி மாயவஃ' (வராஹமூர்த்தி ஒரு கோரைப்பல்லால் பூமியை எடுத்துக் கொண்டு இரண்டாவது கோரைப் பல்லால் பர்வதத்தை அசக்கத்தொடங்கினன். அப்பால் தேவதைகள் ஒரே கோரைப் பல்லுடையவனுகைக்காக பகவானை ஸ்தோத்ரஞ் செய்தனர். அனந்தரம் அதுமுதல் வராஹமூர்த்தி ஏரே கோரைக்கொம்புடையவனுயினன்) என்று ஸ்காந்த புராணத்தில் சொல்லிற்று. அநிஷ்டங்களைப் போக்குந்தன்மை சொல்லுகிறது. (ஹுதஹவ்ய ஸபத்னஜித்) முன்புள்ள சத்ருக்களையும் ஜயிப்பவன். முன்புள்ள சத்ருக்கள் மதுகைடபாதிகள். பின்பு வருஞ்சத்ருக்கள் சிசுபாலாதிகள்—என்று தெரிகிறது.

1 இங்கு 'அக்ஷரம் ப்ரஹ்ம ஸத்யம் ச மத்யே சாந்தே ச ராகவ| லோகாநாம் த்வம் பரோ தர்மோ விஷ்வக்ஸேநஶ் சதுர்ஹு

தங்களில் ஓதப்படுமவன்; நீ பரப்ரஹ்மம்; இருத்தல் பிறத்தல் முதலிய விகாரங்கள் ஆறும் இல்லாதவன். ஆதி நடு அந்தங்களில் இருக்கும் நித்யன்; ஸமஸ்தலோகங்களுக்கும் நன்மையை நிறைவேற்றிக் கொடுக்குந் தன்மையன் நீயே. நீ ஸர்வஸ்வாமி(எல்லோர்க்கும் ப்ரபுவாயிருப்பவன்) நான்கு புஜங்களால் ஒரேதடவையில் நான்கு புருஷார்த்தங்களையும் கொடுப்பவன்.[1] நீ சார்ங்கமென்னும் தனுஸ்ஸைத் தரிப்பவன்; ஸமஸ்த இந்த்ரியங்களுக்

---

ஜ:' என்பது மூலம். (அக்ஷரம்) நக்ஷரதீத்யக்ஷரம் ஆப்நோதீதிவா அக்ஷரம்—நாசமில்லாதமையைப் பற்றியாவது எங்கும் வ்யாபித்திருக்குந் தன்மையைப் பற்றியாவது அக்ஷரமெனப்படும் வஸ்து, (ஹவாந்) நீயே. ஏதத்வைதத்க்ஷரம் கார்கி ப்ராஹ்மணா அபிவதந்தி' என்று ஸ்ருதி. (ப்ரஹ்ம) ப்ருஹதி ப்ரும்ஹயதீதிச ப்ரஹ்ம'-தானொருவனே ஜகத்ரூபமாகப் பலவாருகையாலும் தன்னைப்பற்றினார்க்கு 'ஸசாநந்த்யாயகல்பதே' என்கிற ஆநந்த்யத்தை விளைக்கையாலும் ப்ரஹ்மமெனப்படும் வஸ்து நீயே. 'ப்ருஹதி ப்ரும்ஹயதி தஸ்மாதுச்யதே பரம் ப்ரஹ்ம' என்று ஸ்ருதி. (ஸத்யம்) விபர்யாஸம் அடையாதவன், ஆறு வகைப்பட்ட விகாரங்களற்றவன். (அஸ்தி, ஜாயதே, பரிணமதே, வர்யதே, அபக்ஷீயதே, விநஶ்யதி—இருத்தல் பிறத்தல் மாறுதல் வளர்தல் குறைதல் நாசமடைதல்—ஆகிய இவை ஆறுவிகாரங்கள்) )மத்யே சாந்தேச) சகாரத்தினால் 'ஆதௌ' என்று கூட்டிக்கொள்க. ஆதி நடு அந்தங்களில் இருப்பவன். இதனால் நித்யத்வஞ் சொல்லப்பட்டது. (லோகாநாம் பரோ தர்ம:) லோகங்களுக்கு ஹிதரூபமான பரமதர்மம். தர்மமாவது நன்மையை ஸாதித்துக் கொடுப்பதாகையால் ஸர்வலோகங்களுக்கும் மேலான மேன்மையை நிறைவேற்றிக் கொடுப்பவனென்கை. (விஷ்வக்ஸேந:) முழுவதும் ஸேனையுடையவன். ஸர்வஸ்வாமியென்கை. (சதுர்புஜ:) நான்கு புஜங்களால் ஒரே ஸமயத்தில் நான்கு புருஷார்த்தங்களையுங் கொடுப்பவனென்கை. அல்லது-சத்ருக்களை யெல்லாம் அழிக்குந் திறமை யுடையவனென்கை.

1 இங்கு 'ஶார்ங்கதந்வா ஹ்ருஷீகேஶ: புருஷ: புருஷோத்தம:| அஜித: கட்கத்ருத் விஷ்ணு: க்ருஷ்ணஶ்சைவ ப்ருஹத்பல:' என்

கும் நியாமகனுமிருப்பவன். நீ புருஷன்; புருஷோத்தமன்; எப்படிப்பட்டவராலும் வெல்லப்படாதவன்; நந்தகமென்னுங் கத்தியைக் கையிலேந்தியிருப்பவன்; நீ விஷ்ணு; க்ருஷ்ணன்; மிகுந்த பலமுடையவன். நீ தேவஸேனைகளை நடத்துமவன்; க்ராமங்களை (திவ்யஜனபதங்களை)ப் பரிபாலித்து வருமவன்; புத்தி ஸத்வகுணம் க்ஷமை (பொறுமை) தமம் (இந்த்ரிய நிக்ரஹம்) ஜகத்தின் உற்பத்தி நாசம் ஆகிய இவையெல்லாம் நீயே; நீ

---

பது மூலம். (ஶார்ங்தன்வா) ரக்ஷிப்பதற்கு வேண்டிய கருவியுடையவனென்னுதல். (ஹ்ருஷீகேஶः) ஸமஸ்த இந்த்ரியங்களையும் அழகினால் இழுக்கும்படியான திவ்யமங்கள விக்ரஹமுடையவனென்னுதல். (புருஷ:) அபாரமாகக் கொடுப்பவன். அல்லது—ஹ்ருதய குஹையில் சயனித்திருப்பவன். 'புரிஶயம் புருஷமீக்ஷதே' என்று ஶ்ருதி. அல்லது உலகமெங்கும் நிறைந்திருப்பவன். 'தேநேதம் பூர்ணம் புருஷேணஸர்வம்' என்று ஶ்ருதி. அல்லது—முன்னமே இருப்பவனாகையால் புருஷன் 'பூர்வமேவாஹமிஹாஸமிதி தத்புருஷஸ்ய புருஷத்வம்' என்று ஶ்ருதி. (புருஷோத்தம:) க்ஷர அக்ஷரங்களைக் காட்டிலும் மேலாயிருப்பவன். (சித் அசித்) இவைகளைக் காட்டிலும் உத்தமனென்னுதல்) 'யஸ்மாத் க்ஷரமதீதோஉஹம் அக்ஷராதபிசோத்தம: | அதோஉஸ்மி லோகே வேதேச ப்ரதித: புருஷோத்தம:' என்று கீதையில் கூறப்பட்டது. அல்லது புருஷர்களிற் சிறந்தவனாகையால் புருஷோத்தமன். (அஜித:) எவராலும் வெல்லப்படாதவன். ஆஶ்ரித ஸம்ரக்ஷணத்தில் எப்பொழுதும் தோல்வி அடையாதவன். வஹீமயூத்) நந்தகமென்னும் கட்கத்தைத் தரித்தவன். (விஷ்ணு:) என்றும் எங்கும் வ்யாபித்து நிற்பவன். எவன் தன்தயைக்கு விஷயமாவானோ அவனை அப்பொழுதே அவ்விடத்திலேயே இருந்து ரக்ஷிப்பவனென்றுதல். (க்ருஷ்ண:) 'க்ருஷிர் பூவாசகஶ் ஶப்தோ ணஶ்ச நிர்வ்ருதிவாசக:' என்னும் நிர்வசனத்தின்படி பூமியின் பாரத்தை நீக்கி ஸமாதானப்படுத்துமவன். (வ்ருஹத்பல:) தாரணசக்தி மிகுந்திருக்கப் பெற்றவன். தாரண சக்தியாவது—எல்லாவற்றையும் தரிக்கும் வல்லமை.

இந்த்ரனுக்குத் தம்பியாக முதலில் அவதரித்தவன்; வேதங்களை அபஹரித்த மதுவென்னும் அஸுரனைக் கொன்றவன் நீயே. நீ இந்த்ரனுடைய செயலுடையவன் நீ எல்லையில்லாத ஐஶ்வர்யமுடையவன், நீ நாபியில் தாமரைமலருடையவன் (பத்மநாபன்) நீ யுத்தத்தில் சத்ருக்களை நாசஞ்செய்பவன். திவ்யஜ்ஞானமுடைய மஹர்ஷிகள் உன்னை ரக்ஷிப்பதில் வல்லவனாகவும் ரக்ஷிப்பதற்குரிய உபாயமாகவும் சொல்லுகின்றனர். ஆயிரம் சாகைகளாகிற ஆயிரங் கொம்புகளையுடையதும் பல வகைப்பட்ட தர்மவிதிகளையே பல நாக்குகளாக வுடையதுமாயிருக்கையால் மஹாவ்ருக்ஷம்போன்ற வேதமும் நீயே. நீ மூன்று லோகங்களுக்கும் ஆதிகர்த்தாவன்றோ? உன்னை நீயே தூண்டுகிறவனன்றி உன்னைத் தூண்டுகிறவன் மற்றொருவனில்லை; நீ ஸித்யர்களுக்கும் முக்தர்களுக்கும் உன்னோடொத்த போகத்தைக் கொடுப்பவன். உன்னைப் பற்றினவர் விரும்புவதற்கு முன்னமே அவர்களை ரக்ஷிப்பதற்குப் பிறப்பவன் [1] நீ யஜ்ஞஸ்வரூபன். நீ வஷட்காரம். ப்ரணவத்தின் பொருள் நீயே.

---

1 இங்கு 'த்வம யஜ்ஞஸ்வத்ம வஷட்காரஸ்த்வமோம௦காரঃ பரந்தபঃ। ப்ரஹவ௦ நிதந௦ வா தே நவிதுঃ கோ ஹவாநிதி' என்பது மூலம் (த்வம யஜ்ஞம். யஜ்ஞம். 'யஜ்ஞோ வை விஷ்ணுঃ' என்று ஶ்ருதி. யஜ்ஞத்திற்கு நிர்வாஹகங்களான பசு ஹவிஸ்ஸு ஸ்ருக் ஸ்ருவம் முதலியவற்றைச் சக்ரமாகவுடையவன். யஜ்ஞங்களால் ஆராதிக்கப்படும் இந்த்ராதி தேவதைகளைச் சரீரமாகவுடையவன். 'ப்ரஹ்மார்ப்பண௦ ப்ரஹ்மஹவிர் ப்ரஹ்மாக்நௌ ப்ரஹ்மணா ஹுதம்' என்று கீதையில் கூறிற்று. (வஷட்காரঃ) இது 'ஆஶ்ராவய' என்பது முதலிய மற்றவைகளுக்கும் உபலக்ஷணம் 'வஷட்' என்று இரண்டக்ஷரம், 'ஆஶ்ராவய' என்று நான்கக்ஷரம். 'அஸ்து ஶ்ரௌஷட்' என்று நான்கக்ஷரம். 'யஜ' என்று இரண்டக்ஷரம் 'ய்ய யஜாமஹே' என்று ஐந்தக்ஷரம். ஆகப்பதினேழு அக்ஷரங்களால் ஆராதிக்கப்படுமவன்

சிறந்த தவங்களால் ஆராதிக்கப்படுமவன் நீயே. வேதங்களும் வைதிகர்களும் உன் பிறப்பையும் உனது நாசத்தையும் அறியார். உன்னை யோகிகள் ஸமஸ்த பூதங்களிலும் விசேஷித்து ப்ராஹ்மணர்களிலும் கோக்களிலும் ஸமஸ்த திக்குகளிலும் ஆகாயத்திலும் பர்வதங்களிலும் அரண்யங்களிலும் ஸமஸ்த பூமிகளிலும் காண்பார்கள். நீ ஆயிரம் பாதங்களையுடையவன். நீ ஸ்ரீ பூமிதேவிகளை என்றும் பிரியாதிருப்பவன். நீ ஆயிரம் சிரஸ்ஸுக்களை யுடையவன். நீ பர்வதங்களோடு கூடிய பூமியையும் மற்ற மஹா பூதங்களையும் தரிப்பவன். [1] ராமா! நைமித்திக ப்ரளயத்தில் பூமிநாசம் அடையும் பொழுது நீ ஜலத்தில் ஆதிசேஷன்மேல் படுத்து, தேவதைகளும் கந்தர்வர்களும் தானவர்களும் வஸிக்கும் ஸ்வர்க்கம் பூமி பாதாளம்என்கிற மூன்றுலோகங்களையும் வயிற்றில் தரித்து ரக்ஷித்துக்கொண்டு மார்க்கண்டேயாதிகளுக்குப் புலப்படுவாய் [2] ராமா!நான் உனக்கு வக்ஷ

'சதுர்பிஸ்ச சதுர்பிஸ்ச த்வாப்யாம் பஞ்சபிரேவச। ஹூயதேச புநர் த்வாப்யாம் ஸநோ விஷ்ணுः ப்ரஸீதது' என்று ப்ரமாணம் (ஓங்காரः) ப்ரணவத்தினுல் ஓதப்படுமவன் 'ஓமித்யேகாக்ஷரம் ப்ரஹ்ம' என்று ஸ்ருதி. (பரம்தபः) மேலான தவம் நீயே; மேலான தவத்தினுல் ஆராதிக்கப்படுமவனென்னுதல். (ப்ரபவம் நிதனம் வா தே நவிது:) வேதங்களும் வைதிகர்களும் உன் பிறப்பையும் உன் நாசத்தையும் அறிய மாட்டார்கள். (கோபவாநிதி நீ எவனே அதையும் அறியார்கள்; அளவிடமுடியாத மஹிமையுடையவனுகையால் உன்னை உள்ளபடியே அறியவல்லவரல்லர். 'க இத்தா வேத யத்ர ஸः' என்று ஸ்ருதி. இதனுல் 'என் ஸ்வரூபம் யாது' என்ற கேள்விக்கு உத்தரம் கூறப்பட்டது.

1 நைமித்திக ப்ரளய வ்ருத்தாந்தத்தைச் சொல்லுகிறது— 'அந்தே ப்ருதிவ்யாஸ் ஸலிலே த்ருஸ்யஸே த்வம் மஹோரக:। த்ரீந் லோகாந் தாரயந் ராம தேவகந்தர்வதாநவாந்' என்பது மூலம்.

2 இங்கு 'அஹமர்க்யா தேவதா:' என்கிறபடியே ஸர்வதேவ

ஸ்தலம். ஸரஸ்வதிதேவி உனக்கு நாக்கு. ப்ரபூ!. தேவதைகள் பரப்ரஹ்மமாகிய உன் சரீரத்தின் ரோமங்கள் போல் உன்னைப் பிரியாதிருப்பர். நீ இமை மூடுவது ராத்ரியாம், இமை திறப்பது பகலாம். உன் மூச்சுக்களே வேதங்களாயின. ஆயிரஞ் சொல்லி என்? நீயில்லாதது ஒன்றுமே இல்லை. [1] உலகமெல்லாம் உனக்குச் சரீரம். பூமியின் திண்மையும் நீயே. உன் கோபமே அக்னி. உன் ப்ரஸாதமே சந்த்ரன். நீ ஸ்ரீ

---

தாஸ்வரூபனாயிருத்தல் கூறப்படுகிறது. 'அஹம் தே ஹ்ருதயம் ராம ஜிஹ்வா தேவீ ஸரஸ்வதீ। தேவா காத்ரேஷு ரோமாணி நிர்மிதா ப்ரஹ்மணः ப்ரபோ। நிமேஷஸ்தே பவேத் ராத்ரிருந்மேஷஸ்தே பவேத் திவா। ஸம்ஸ்காராஸ் தேऽபவந் வேதா ந தத்ஸ்தி த்வயா விநா' என்பது மூலம். ஸம்ஸ்காரங்களாவன மூச்சுக் காற்றுகள். 'தஸ்ய ஹவா ஏதஸ்ய மஹதோ பூதஸ்ய நிஶ்வஸிதமேதத்யத்ருக்வேதः' என்று ஶ்ருதி. ஆயிரஞ் சொல்லியென் (நதத்ஸ்தி விநாத்வயா) நீ அந்தர்யாமியாயிராத வஸ்துவே இல்லையென்று பொருள்.

1 இங்ஙனம் நிஷேத ஶ்ருதியின் பொருளைக் கூறி 'ஸர்வம்கல்விதம் ப்ரஹ்ம' 'தத்த்வமஸி' இத்யாதியான ஸாமாநாதிகரண்ய ஶ்ருதியின் பொருளைச் சொல்லுகிறது. 'ஜகத்ஸர்வம் ஶரீரம் தே ஸ்தைர்யம்தே வஸுதாதலம்। அக்நிः கோபः ப்ரஸாதஸ்தே ஸோமः ஸ்ரீவத்ஸலக்ஷணः' என்பது மூலம். (ஸர்வம் ஜகத் தே ஶரீரம். எவனுக்கு எது எப்போதும் எங்கும் ஆதேயமாகவும் விதேயமாகவும் சேஷப்பட்டதுமாயிருக்குமோ அது அவனுக்குச் சரீரம். ஜகத்தெல்லாம் உனக்கு இவ்வண்ணமிருக்கையால் சரீரமெனப்பெற்றது. இங்ஙனம் உனக்குச் சரீரமாகையால் சரீரத்திற்குச் சொல்லும் விசேஷங்களெல்லாம் உன் விசேஷங்களே யென்கிறது—(வஸுதாதலம் ஸ்தைர்யம்) பூமிக்குள் திண்மை உன்னுடையதே. 'காந்யவாந் யோ பிபர்த்தி தஸ்மை பூம்யாத்மநே நமः' என்று ஸ்ரீ விஷ்ணு புராணத்திற் சொன்னபடியே பூமியின் உட்புகுந்து காடின்யத்தையுடையவனாகி எல்லாவற்றையும் தரிப்பவனென்று பொருள்.

வத்ஸமென்னும் அடையாளமுடையவன். [1] நீ த்ரிவிக்ரமாவதாரஞ் செய்து மூன்று அடிகளால் மூன்று லோகங்களையும் பலியினிடத்தினின்று வாங்கிக் கொண்டனை. அங்ஙனம் மூன்று லோகங்களையும் மூன்று அடிகளால் தாண்டிப் பலிசக்ரவர்த்தியைப் பந்தனஞ் செய்து அவனால் பரிபவப்பட்டு ஓடிப்போன தேவேந்த்ரனை மூன்று லோகங்களுக்கும் ராஜனாகச் செய்தனை. [1] ஸீதை மஹாலக்ஷ்மி. நீ மஹாவிஷ்ணு. நீ உலகங்களைப் படைப்பது காப்பது அழிப்பது முதலிய செயல்களால் விளையாடுமவனும் எல்லாவற்றையும் ஜயித்தவனும் அனைவரும் துதிசெய்யப் பெற்றவனும் என்றும் ஆனந்த ஸ்வரூபனும் மிகுந்த ஒளிப்பெருக்குடையவனும் எங்கும் நிறைந்திருப்பவனுமாகையால் உன்னைத்

---

1 இங்கு 'த்வயா லோகாஸ்த்ரயঃ க்ராந்தাঃ புராணே விக்ரமைஸ்த்ரிபிঃ। மஹேந்த்ரஶ்ச க்ருதோ ராஜா பலிம் பத்த்வா மஹாஸுரம்' என்பது மூலம். இதனால் வாமனாவதாரமும் த்ருவிக்ரமாவதாரமும் தோற்றுவிக்கப்பட்டன. 'இதம் விஷ்ணுர் விசக்ரமே த்ரேதா நிதயே பதம்' என்ற ஶ்ருதி இங்கு ப்ரமாணம்.

1 இதில் ப்ரயோஜனமென்? என்கிற கேள்விக்கு உத்தரஞ் சொல்லுகிறது—'ஸீதா லக்ஷ்மீர் பவாந் விஷ்ணுர் தேவঃ க்ருஷ்ணঃ ப்ரஜாபதিঃ। வதார்த்தம் ராவணஸ்யேஹ ப்ரவிஷ்டோ மாநுஷீம் தநும்' இதில் பகவானுடைய அவதாரங்களெல்லாவற்றிலும் ஸ்ரீமஹாலக்ஷ்மி தொடர்ந்து வருதல் கூறப்பெற்றது. (க்ருஷ்ணঃ) மேல் க்ருஷ்ணாவதாரஞ் செய்பவனும் நீயே. (ப்ரஜாபதিঃ) ப்ரஜாபதியென்று சொல்லப்படுமவனும். நீயே. அதாவது—ப்ரஹ்மதேவனுக்கு அந்தர்யாமியாயிருந்து தேவமனுஷ்யாதிகளை ஸ்ருஷ்டித்து ப்ரஜாபதியென்கிற அந்த ப்ரஹ்மதேவனுடைய நாமத்தால் நீயே கூறப்படுகின்றனை யென்றபடி அவதாரத்தின் ப்ரயோஜனத்தைச் சொல்லுகின்றனன்— மாநுஷீம் தநும் ப்ரவிஷ்டঃ) மானிட உருவம்போன்ற உருவமுடைய அப்ராக்ருத சரீரம் பெற்றனை.

தேவனென்பர்ாள். அவதரிக்கப்போகிற க்ருஷ்ணனும் நீயே. ப்ராஜாபதி யெனப்படுமவன் நீயே. ராவணனை வதிக்கும் பொருட்டு மானிட உருவங்கொண்டு நீ இங்கு அவதரித்தனை. ராமா! தார்மிக சிரோமணீ! நீ இதோ எமக்காக முயன்ற கார்யத்தைச் செய்தாய் விட்டது. ராவணனை வதித்தனை. இனி மனக்களிப்புடன் வைகுண்ட லோகத்திற்குக் கிளம்புவாயாக. உன் பலமும் வீர்யமும் வீணுகாதவை. உன் பராக்ரமமும் அமோகமாயிருப்பது. உன் காட்சியும் அமோகமாமிருக்கும். உன்னைத் துதி செய்தலும் வ்யர்த்தமாகாது; மஹத்தான பலனைக் கொடுக்கும். உன்னிடத்தில் பக்தியுடைய மனிதர்கள் விரைவில் தமது இஷ்டம் நிறைவேறப் பெறுவார்கள். என்றும் அழியாதிருப்பவனும் அனுதியும் புருஷோத்தமனுமாகிய உன்னிடத்தில் மாருத பக்தியுடையவர் இவ்வுலகத்தில் சரீரத்துடனிருக்கும்வரையில் எப்பொழுதும் போகங்களை அனுபவித்துச் சரீரத்தின் முடிவில் பரலோகத்திலும் எல்லா விருப்பங்களையும் பெறுவார்கள். [1] வேதங்களில் ஏற்பட்டதும் அனுதியாயிருப்பதும் இதிஹாஸமுமான இந்தஸ்தோத்ரத்தை எவர் நித்யமும் வாசிப்பரோ, அம்மனிதர்களுக்குப் பரலோகத்தினின்று மீண்டு வருதல் நேராதிருக்கும்' என்றனன். நூற்றிருபதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

1 தவம் முதலியவற்றைக் காட்டிலும் ராமபக்தியே ஸ்ரேஷ்டமான தர்மமென்று கூறப்பெற்றது. ராமனிடம் பக்திசெய்யாதவர்க்கு இந்த ஸ்தோத்ரமே அத்தகைய பலனை கொடுக்குமென்கிறுர்.

அக்னிபுருஷன் சிதையின் மத்யத்தினின்று கிளம்பி ஸீதையின் நடத்தையைப் புகழ்ந்து அவளை ராமனுக்கு ஸமர்ப்பித்த லும், ராமனும் ஸீதையைப்புகழ்ந்து அவளை அங்கீகரித்தலும், மஹாநந்தமடைதலும்.

ப்ரஹ்மதேவன் ராமனைப் பார்த்து மொழிந்த இந்தச் சுபவார்த்தையைக் கேட்டு அக்னி புருஷன் ஸீதாதேவியைத் துடையில் இட்டுக்கொண்டு சிதையினின்று திடீலென்று கிளம்பி வந்தனன். அவ்வக்னிதேவன் அந்தச் சிதையைச் சிதறும்படி உதறி மனுஷ்யதேஹத்துடன் ஜனகராஜன் புதல்வியாகிய ஸீதையை எடுத்துக்கொண்டு விரைவுடன் வெளித்தோற்றினன். பாலஸூர்யன்போல் விளக்கமுற்று மேலான பொன்பூஷணங்களை அணிந்து சிவந்த வஸ்த்ரந் தரித்து இளம்பிராயமுடையவளும் கறுத்துச் சுருண்டு அழகான கேசங்களுடையவளும் வாடுதல் நிறம் மாறுதல் முதலிய விகாரங்களொன்றுமின்றி அழகாயிருக்கின்ற பூமாலையும் ஆபரணங்களும் அமையப்பெற்று விளங்குகின்றவளும் மனக்கலக்க மற்றவளுமான ஸீதாதேவியைத் தன் மடியில் வைத்துக்கொண்டு வந்து, அக்னிதேவன் ராமனுக்குக் கொடுத்தனன். அப்பொழுது உலகங்கள் செய்யும் ஸமஸ்த சுபாசுபகர்மங்களுக்கும் ஸாக்ஷியாகிய அக்னிதேவன் ராமனைப்பார்த்து 'ராமா! முன்பு என்னிடத்தில் ப்ரவேசித்த உன் பத்னியாகிய ஸீதை இதோ இருக்கின்றனள். இவளிடத்தில் ஒரு பாபமும் கிடையாது. ஆகையால் அங்கீகரிப்பாயாக. மிகுதியும் ப்ரியமான இந்த உன் பத்னியினிடத்தில் ஒரு தோஷமும் இல்லையென்று தெரிந்தும் உனது ஆசாரத்திற்கு ஒரு குறையும் வாராதிருக்கும் பொருட்டு அக்னியில் புகுவித்தனை. நீ எவ்வளவு ஆசாரசூரனே! இவள் வாக்கினாலாவது மனத்தினாலா



3290. அக்னிதேவன் ஸீதையை ஏந்திக்கொண்டு வந்து ராமனுக்குக் கொடுத்தலும், ப்ரஹ்மாதிகள் ராமனை ஸ்தோத்ரம் செய்தலும்.

வது ஸங்கல்பத்தினாலாவது கண்ணாலாவது உன்னை அதிக்ரமித்தவளல்லள்; ஸதாசாரம் மாறாதிருக்கப் பெற்றவள். 'இவள் ஸம்மதிக்காமல் ராவணன் எப்படி கொண்டுபோவான்?' என்கிறாயோ? நீ இல்லாதபோது தீனையாகிப் பரவசையா யிருக்கும்பொழுது, ராவணன் பராக்ரமத்தினால் கண் தெரியாதவனாகையால் பலாத்காரமாக ஜனஸஞ்சாரமில்லாத வனத்தினின்று அபஹரித்துக்கொண்டு போயினன். இங்ஙனஞ் சிறையில் அடைத்து அந்தப்புரத்தில் பத்ரமாகவைத்து விகாரமான உருவமுடையவரும் பயங்கரமான காட்சியுடையவருமான ராக்ஷஸ ஸ்த்ரீகள் பலரையும் காவலிருக்கச் செய்து அவன் எவ்வளவு நிர்ப்பந்தம் செய்யினும் இந்தப் பதிவ்ரதை உன்னிடத்திலேயே மனம் வைத்து உன்னையே பரமகதியாகப் பாவித்துக் கொண்டிருந்தனள். விஞ்சிப்போருயிப்பாளாயின் இப்படி இருப்பாளா? அந்த ராக்ஷஸன் ராவணன் பணம் பொன் மற்றும் பல வஸ்துக்கள் வாஹனங்கள் முதலிய பலவற்றையுங் கொடுக்கிறேனென்று பலவாறு பேராசைப் படுத்தினும், கொல்லுவேன் வெட்டுவேனென்று எவ்வளவு விரட்டினும், ஸீதை அவற்றை எள்ளளவும் பொருள்செய்யாமல் மனத்தையெல்லாம் உன்விடத்திலேயே வைத்து உன்னையே த்யானித்துக்கொண்டிருந்தனள். ராமா! பரிசுத்தமான மனமுடையவளும் பாபத்தை அறியாதவளுமான இப்பெண்மணியை அங்கிகரிப்பாயாக. என் வார்த்தைக்கு மறுமொழி கூறலாகாது. நான் உனக்கு ஆஜ்ஞாபிக்கிறேன்' என்றனன். அப்பால் பேசுவதில் ஸமர்த்தனும் தர்மிஷ்டனுமாகிய ராமன், அக்னி புருஷன் மொழிந்த அவ்வுரையைக் கேட்டு, தன் பத்னி தோஷமற்றவளென்று மொழிந்ததற்கு மனம் மிகுதி

யும் களிக்கப் பெற்று, அப்படிப்பட்ட மடந்தையை அக்னியில் புகுவித்ததற்குக் கண்களில் நீர் பெருகப் பெற்று, வீணுகக் கைவிட்டோமேயென்று சிறிது நேரம் சிந்தித்துக் கொண்டிருந்தனன். அக்னிதேவன் இங்ஙனஞ் சொல்லிக் கொண்டிருக்கையில், மஹா தேஜஸ்வியும் மிகுந்த ஒளியுடையவனும் பராக்ரமம் திடமாயிருக்கப் பெற்றவனும் பரமதார்மிகனுமாகிய ராமன் தேவதைகளிற் சிறந்த அக்னி தேவனை (ப்ரஹ்மதேவனை)ப் பார்த்து 'மூன்று லோகங்களிலும் ஸீதையினிடத்தில் பாபஞ்சொல்லுவது சிறிதும் தகாதென்பது வாஸ்தவமே, ஆயினும், மங்கள ஸ்வபாவையான இவள் ராவணனது அந்தப்புரத்தில் வெகுகாலம் இருந்தனளல்லவா? ஆகையால் அபவாதம் உண்டாகக்கூடும். நான் ஸீதையைப் பரிசோதிக்காமலே அங்கீகரித்திருப்பேனுயின், ஸத்புருஷர்கள் என்னை, தசரத மஹாராஜனது வயிற்றில் பிறந்தும் ராமன் மூடனும் காமுகனுமாயிருப்பவனேயன்றி மானமுடையவ னன்றென்று நிந்திப்பார்கள். ஆகையால் அந்த அபவாதத்தைப் போக்கடித்துக்கொள்ளும் பொருட்டு இங்ஙனஞ் செய்யவேண்டியதாய் வந்தது. ஜனகராஜனது குமாரத்தியான அவளுக்குங்கூட மற்றொருவர் சொல்லவேண்டுமோ? ஸீதை என்னிடத்திலேயே மனம் திடமாயிருக்கப் பெற்று என் மனம்போனவழியே போய்க்கொண்டிருப்பாளன்றித் தான் ஸ்வதந்த்ரமாய்க் கொண்டு எந்தக் கார்யத்தையும் செய்யாளென்று எனக்குத் தெரியும். ஆயினும் நான் ஸத்யத்தையே அவலம்பித்து ஸரியான நடத்தையில் நடக்க விரும்புமவனுகையால், ஸத்யத்தை வெளியிடுவதற்காவும், மூன்று லோகங்களிலுள்ளவர்க்கும் நம்பிக்கை உண்டாவதற்காகவும், ஸீதை

அக்னியில் விழும்பொழுது உபேக்ஷித்திருந்தனன். ‘இப்படிப்பட்ட அழகியைப் பார்த்து ராவணன் வெறு மனே இருப்பானு?’ என்கிருயோ? அகன்ற கண்களை யுடைய இப்பெண்மணி தன் தேஜஸ்ஸினுலேயே நன்கு பாதுகாக்கப் பட்டிருப்பவள். இப்படிப்பட்ட இவளி டத்திலுங்கூட ராவணன் அதிக்ரமித்து நடப்பானு? ஸமுத்ரம் கரையைத் தாண்ட முடியாதிருப்பதுபோல், அவன் ஸீதையை அதிக்ரமிக்க வல்லனல்லன். ஸீதை யை அணுகுவது சிறிதும் ஸாத்யமன்று. ஆகையால் துர்ப்புத்தியான ராவணன் மனத்தினுலுங்கூட அப் பெண்மணியை அணுகவல்லனல்லன். எரிகின்ற அக்னி ஜ்வாலையை எவன் தொடுவான்? ஆனுல் இவள் அப்படிப்பட்ட ஐஶ்வர்யத்தை எப்படி விடுவாள்’ என்கிருயோ? ராவணுந்தப்புரத்திலுள்ள ஐஶ்வர்யம் இம்மங்களஸ்வபாவைக்குச் சிறிதும் தகாது. என்னு டைய ஐஶ்வர்யமே இவளுக்குத் தகும். ஸூர்யனைக்காட் டிலும் அவனது ஒளி வேறுபட்டிராததுபோல், ஸீதை எனக்குச் சிறிதும் வேறுபட்டவளல்லள். மூன்று லோ கங்களிலும் எல்லோரிலும் பரிசுத்தையும் ஜனகராஜன் புதல்வியுமான இந்த ஸீதையை, புத்தியுடையவனுல் கீர்த்தியை விடக்கூடாதிருப்பதுபோல், என்னுல் விட முடியாது. ஆகையால் ஸீதைக்கு நானும் வேறுபட் டவனல்லன். நீங்கள் என்னிடத்தில் ஸ்னேஹமுடைய வர்; மற்றும், லோகங்களால் பூஜிக்கத் தகுந்தவர். இங்ஙனம் ஹிதம் உபதேசிக்கின்றனர். இந்த நீங்க ளெல்லோரும் மொழிந்த வார்த்தை எனக்கு நன்மை யை விளைப்பதாகும். ஆகையால் நான் அவஶ்யம் அதைச் செய்தே தீரவேண்டும்’ என்றனன். மஹா பலிஷ்டனுகிய ராமன் தான் அறிந்தே இங்ஙனம்

மொழிந்து மஹாபல ஸம்பன்னர்களான ப்ரஹ்மாதிகள் தான் செய்த கார்யத்தைப் புகழ்ந்துகொண்டிருக்கையில், ஸுகத்திற்கு உரியவனாகையால் காதலியுடன் சேர்ந்து ஸுகம் அடைந்தனன். நூற்று இருபத்தொன்ருவது ஸர்க்கம் முற்றிற்று.

---

சிவன் ராவணவதஞ் செய்ததற்கு ராமனைப் புகழ்தலும், ராமன் தசரதனைக் காணுதலும், ப்ரஹ்மாதிகள் திரும்பிப் போதலும்.

ராமன் இங்ஙனம் அழகாக மொழிந்த இந்தச்சுப வசனத்தைக் கேட்டு, சிவன் மேலும் சுபமான வசனங்களை மொழியத் தொடங்கி, [1] 'புண்டரீகாக்ஷனே! மஹா பாஹுவே! அகன்ற மார்புடையவனே! சத்ருக்களையழிப்பவனே! ஆயுதந் தரித்தவர்களில் தலைவனே! எமது பாக்யத்தினால் நீ இங்ஙனம் ராவணனை வதித்தனை. ராமா! ஸமஸ்த லோகங்களுக்கும் ராவணனால் உண்டாயிருந்த மஹா பயமாகிற கொடிய காடாந்தகாரத்தை எமது பாக்யவசத்தினால் நீ இப்பொழுது யுத்தத்தில் ராவணனைக்கொன்று போக்கடித்தனை. மஹா பலமுடையவனே! நீ அயோத்யைக்குப் போய், வருந்தி உன் வரவை எதிர் பார்த்துக்கொண்டிருக்கிற பரதனை

---

1 இங்கு 'புஷ்கராக்ஷ மஹாவாஹோ மஹாவக்ஷ: பரந்தப' என்பது மூலம், (புஷ்கராக்ஷ) புண்டரீகாக்ஷனே। 'தஸ்ய யதா கப்யாஸம் புண்டரீக மேவமக்ஷிணீ' 'புருஷ: புண்டரீகாக்ஷ' என்று ஸ்ருதிஸ்ம்ருதிகளில் பரப்ரஹ்மத்திற்கு அஸாதாரண சிஹ்னமான புண்டரீகாக்ஷத்வத்தை ராமனுக்குச் சொல்லுகையால் ராமனாக அவதரித்த விஷ்ணுவே வேதங்களால் அறியத்தகுந்த பரப்ரஹ்மமென்று கூறப்பட்டது. (மஹாவக்ஷ:) ஸ்ரீமஹா லக்ஷ்மிக்கு வாஸஸ்தானமாகையால் பெருமையுடைய மார்பையுடையவனென்னுதல்.

ஆஶ்வாஸப்படுத்தி, கௌஸல்யையையும் இப்படிப் பட்ட மஹா கார்யத்திற்கு மூலமாகையால் புகழ்பெற்ற கைகேயியையும் லக்ஷ்மணனுக்குத் தாயான ஸுமித்ரையையும் பார்த்து ராஜ்யத்தை அங்கீகரித்து நண்பர்களனைவர்க்கும் ஸந்தோஷத்தை விளைவித்து, பிள்ளை பேரன்களைப் பெற்று இக்ஷ்வாகு வம்சத்தைச் சாஶ்வதமாக நிலைநிறுத்தி அஶ்வமேதஞ் செய்து நிகரில்லாத புகழையும் பெற்று ப்ராஹ்மணர்களுக்கு வேண்டிய தனங்களையுங் கொடுத்து, அப்பால் வைகுண்டம் போய்ச்சேரலாம். ராமா! இதோ உன் தந்தையான தசரத மஹாராஜன் விமானத்தில் வீற்றிருக்கின்றனன். காகுத்ஸ்தனே! இவன் மனுஷ்ய லோகத்தில் இருக்கும்பொழுது உனக்குப் பிதாவாகிப் பெரும் புகழுடையவனு யிருந்தனன். ஸ்ரீமானுகிய இவன் புதல்வனுகிய உன்னுல் அஸத்யத்தைக் கடந்து இந்த்ரலோகஞ்சேர்ந்தனன். நீயும் உன் தம்பியான லக்ஷ்மணனும் இவனுக்கு நமஸ்காரஞ் செய்வீர்களாக' என்றனன். மஹாதேவன் இங்ஙனம் மொழிந்ததைக் கேட்டு ராமனும் லக்ஷ்மணனும் விமான சிகரத்திலிருக்கும் தந்தைக்கு நமஸ்காரஞ் செய்தனர். ப்ரபுவான ராமனும் லக்ஷ்மணனும், தனது திவ்யதேஹ காந்தியால் விளக்கமுற்று நிர்மலமான திவ்ய வஸ்த்ரங்களைத் தரித்திருக்கின்ற தந்தையான தசரதனைக் கண்டனர். அப்பொழுது விமானத்தில் சிறந்த ஆஸனத்தில் உட்கார்ந்திருக்கும் மஹா பாஹுவாகிய தசரத மஹாராஜன், தனக்கு ப்ராணன்களைக் காட்டிலும் ப்ரியமுள்ள புத்ரனுன ராமனைக்கண்டு மிகுதியும் ஸந்தோஷம் மேலெழப் பெற்றுத் தன் துடையில் உட்கார வைத்துக்கொண்டு புஜங்களால் அணைத்து, அப்பால் அவனைப் பார்த்து மொழியத்

தொடங்கி 'ராமா! உன்னைப் பிரிந்தமையால் எனக்கு இந்த ஸ்வர்க்க போகமாவது இந்த தேவரிஷிகள் செய்யும்ஸம்மானமாவது எனக்குஅவ்வளவு பெருமையாயிராதிருக்கின்றது. இது உண்மையே. இங்ஙனம் ஆணையிட்டுச் சொல்லுகின்றனன். இப்பொழுது சத்ருக்களை வதித்து வனவாஸ ப்ரதிஜ்ஞையைத் தீர்த்து நிறைந்த மனத்துடன் ஸந்தோஷ முற்றிருக்கின்ற உன்னைப்பார்க்கையில், எனக்கு மிகுதியும் பக்தி உண்டாயிற்று. பேசுவோர்களில் சிறந்தவனே! உன்னை ஊரைவிட்டுத் துரத்துவதற்காகக் கைகேயி என்னென்ன வார்த்தைகள் மொழிந்தனளோ அவையெல்லாம் மறக்காமல்என்மனத்திலேயே பொற்றுக்கொண்டு என்னை வருத்திக்கொண்டே யிருக்கின்றன. நீயும் லக்ஷ்மணனும் க்ஷேமமாயிருப்பதைக் கண்டு உன்னையும் அவனையும் அணைத்த பின்பு இப்பொழுது அந்த வருத்தத்தினின்று, பனியினின்று ஸூர்யன் விடுபடுவதுபோல் விடுபட்டனன். புத்ரனே! முன்பு அஷ்டாவக்ர மஹர்ஷி கஹோள னென்னும் ப்ராஹ்மணனை ஜனகமஹாராஜரது ஸபையில் வாதத்தினுல் கடைத்தேற்றினுற்போல், மஹானுபாவனும் நற்புதல்வனுமாகிய நீ ஸத்யமாகிற பாசத்தினுல் கட்டுண்டிருக்கிற என்னை அஸத்ய தோஷத்தினின்று விடுவித்துக் கடைத்தேற்றினை. நல்ல ஸ்வபாவ முடையவனே! புருஷோத்தமா! மேன்மையுடைய தேவதைகளே ராவண வதஞ் செய்விக்கும் பொருட்டு அப்பொழுது அந்தப் பட்டாபிஷேகத்திற்கு விக்னங்களை விளைத்தார்களென்று எனக்கு இப்பொழுதே தெரியவந்தது.சத்ருக்களை அழிப்பவனே! கௌஸல்யை அரண்யத்தினின்று வீட்டிற்கு வந்த உன்னை மிகுந்த ஸந்தோஷத்துடன் காண்பாள். ஆகையால் அவள் க்ருதார்த்தையாயினள் (ப்ரயோஜ

னங் கைகூடப் பெற்றனள்): ராமா! அயோத்யா புரத்திற்குப்போய், பட்டாபிஷேகம் பெற்று அபிஷேக ஜலங்களால் நனைந்து அப்பொழுது பூமிக்கு நாதனாகிய உன்னைக்காணப் பெற்ற மனிதர்களெல்லோரும் க்ருதார்த்தர்களல்லவா? உன்னிடத்தில் ப்ரீதி உண்டாகப் பெற்று பலிஷ்டனும் பரிசுத்தனும் தர்மஞ் தவறுதவனுமாகி விளங்கும் பரதனை நீ போய்க்காண விரும்புகின்றனை. ஆகையால் அவஸ்யம் அவனைப்போய்க் கிட்டுவாயாக நல்லியற்கை யுடையவனே! நீ ஸீதையோடும் புத்தியிற் சிறந்த லக்ஷ்மணனோடுங்கூடி அரண்யத்தில் வாஸஞ் செய்துகொண்டு பதினான்கு ஸம்வத்ஸரங்களையும் கடத்தினை. நீ வனவாஸத்தை தீர்த்துக்கொண்டனை. உன் ப்ரதிஜ்ஞையும் ஸபலமாயிற்று. ராவணனை யுத்தத்தில் வதித்து தேவதைகளெல்லோரையும் ஸந்தோஷப்படுத்தினை. சத்ருக்களை அழிப்பவனே! செய்யவேண்டிய கார்யத்தைச் செய்தனை. ஸ்லாக்யமான புகழைப் பெற்றனை. இனி ராஜ்யத்தில் பட்டாபிஷேகங் கொண்டு நிலைபெற்று நீயும் உன் தம்பிகளும் தீர்க்காயுஸ்ஸுக்களாய் ஸுகமாயிருப்பீர்களாக' என்றனன். தசரத மஹாராஜன் இங்ஙனம் மொழிகையில், ராமன் அஞ்சலி செய்து, அவனைப் பார்த்து 'தந்தையே! நீ ஸமஸ்த தர்மங்களையும் அறிந்தவன், 'ராமனை அரண்யத்திற்கு அனுப்புவாயாயின் உன்னையும் உன் புதல்வனையும் துறப்பேன்' என்று கைகேயியோடு சபதஞ் செய்தனையே! இப்பொழுது அந்தக் கைகேயியினிடத்திலும் பரதனிடத்திலும் அனுக்ரஹஞ் செய்வாயாக, ப்ரபூ! கோரமான இந்தச் சாபமானது கைகேயியையும் அவள் பிள்ளையான பரதனையும் தீண்டாதிருக்கும்படி தயை செய்வாயாக' என்றனன். அம்மஹாராஜன்

தன்னெதிரில் கைகுவித்துக்கொண்டு நிற்கும் ராமனைப் பார்த்து 'அப்படியே' என்று அங்கீகரித்து லக்ஷ்மணனை மீளவும் அணைத்து இங்ஙனம் மொழியத்தொடங்கி, 'நீ ராமனுக்கும் விதேஹராஜன் புதல்வியுமான ஸீதைக்கும் பக்தியுடன் சுச்ரூஷைசெய்து எனக்கு மிகுதியும் ஸந்தோஷத்தை விளைவித்தனை. தர்மத்தினால் விளையவேண்டிய பயன் உனக்கு உண்டாயிற்று. தர்மங்களை அறிந்தவனே! ராமன் அருள் புரியில் உனக்கு தர்மமும் பூமியில் விசாலமான யசஸ்ஸும் ஸுகமும் பெருந்தன்மையும் விளையும், ஸுமித்ரைக்கு ஸந்தோஷம்விளைப்பவனே! ராமனுக்கு சுச்ரூஷை செய்துகொண்டிருப்பாயாக. அதனாலுனக்குச் சுபமுண்டாகும், ராமன் ஸமஸ்த லோகங்களுக்கும் எப்பொழுதும் ஸுகத்தை விளைவிப்பதிலேயே ஆஸக்தி யுடையவன். தேவேந்த்ரன் முதலிய இந்த மூன்று லோகத்தவர்களும் ஸித்தர்களும் மஹர்ஷிகளும், மஹானுபாவனும் புருஷோத்தமனுமாகிய ராமனைப்பணிந்து பூஜித்துக்கொண்டிருக்கின்றனர். நல்லியற்கை யுடையவனே! ஸமஸ்த தேவதைகளுக்கும் அந்தராத்மாவாயிருப்பதும் வேதங்களின் உட்கருத்தும் அக்னி இந்த்ரன் முதலிய உருவங்கொண்டு ஸமஸ்த கர்மங்களாலும் ஆராதிக்கப்படுவதும் உபநிஷத்துக்களால் (வேதாந்தங்களால்) நேரே அறியத்தகுந்ததும் பக்தி யில்லாதவர்களுக்கு அறியமுடியாததும் இறத்தல் பிறத்தல் முதலிய விகாரங்களாறு மற்றதுமாகி விளங்குகின்ற அந்தப் பரப்ரஹ்மமே இங்ஙனம் ராமனாக அவதரித்ததென்று ப்ரஹ்மாதிகள் சொல்லுவர். நீராமனுக்கும் விதேஹராஜன் புதல்வியானஸீதைக்கும் பக்தியுடன் சுச்ரூஷை செய்தமையால் தர்மத்தை ஆசரித்தவனாயினை; விசாலமான கீர்த்தியைப் பெற்றனை' என்ற

னன். மஹா பாஹுவும் தர்மஸ்வபாவனுமாகிய அந்த தசரதன் தன்னெதிரில் கைகூப்பி நிற்கின்ற லக்ஷ்மணனுக்கு இங்ஙனம் மொழிந்து, உடனே ஸீதாதேவியைப் பார்த்து, சுபமான வசனங்களை மொழியத் தொடங்கி ஸீதே! ராமன் 'இப்பொழுது உன்னைப் பரித்யாகஞ் செய்தேன்' என்று சொன்னதைப்பற்றி நீ கோபஞ்செய்யலாகாது. உன் சரித்ரம் பரிசுத்தமாயிருக்கவேண்டுமென்று ராமன் உனது மேன்மையை விரும்பி உன் தூய்மை வெளியாகும்பொருட்டு இங்ஙனஞ் செய்தானேயன்றி மற்றேதுமன்று. அழகிய புருவங்களுடையவளே! கணவனுக்குச் சுஶ்ருஷை செய்யும் விஷயத்தைப்பற்றி உனக்கு உபதேசிக்க வேண்டியதில்லை. ஆயினும் நான் மாமனுகையால் சொல்ல வேண்டியவன். ஆகையால் அவஶ்யஞ் சொல்லுகிறேன். இந்த ராமனே உனக்கு மேலான தெய்வம்' என்றனன். தசரதன் இங்ஙனம் புதல்வர்களான ராமலக்ஷ்மணர்களுக்கும் மருமகளான ஸீதைக்கும் மொழிந்து விமானத்தில் வீற்றிருந்து விளக்க முற்று இந்த்ரலோகம் போயினன். நூற்று இருபத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

தேவேந்த்ரனுடைய அனுக்ரஹத்தினுல் மாண்ட வானரர்களெல்லோரும் பிழைத்தெழுந்திருப்பதும், தேவதைகள் இருப்பிடம் போதலும்.

தசரதன் திரும்பிப் போனபின்பு பாகாஸுரனைக் கொன்ற மஹேந்த்ரன் மிகுதியும் ஸந்தோஷமுற்றுத் தன்னெதிரில் அஞ்சலி செய்து நிற்கின்ற ராமனைப் பார்த்து 'ராமா! சத்ருக்களை அழிப்பவனே! [1] தசரதன்

---

1 'நீ இப்பொழுது எங்களைக் கண்டது வீணுகலாகாது. நாங்கள் ஸந்தோஷித்தனம். ஆகையால் நீ மனத்தில் விரும்பும் வரத்தை வேண்டுவாயாக, கொடுக்கிறோம்' என்று மற்றொரு பொருள்.

புத்ரகாமேஷ்டி செய்யும்பொழுது நாங்கள் உன்னைக் கண்ட காட்சியானது எங்களுக்கு ராவணவத பர்யந்தமான பயனை விளைத்ததாகையால் வீணாகாததாயிற்று. நாங்கள் மிகுதியும் ஸந்தோஷம் அடைந்தனம். ஆதலால் ப்ரத்யுபகாரமாக நீ எங்களிடம் என்ன விரும்புகின்றனையோ மொழிவாயாக' என்றனன். இந்த்ரன் இங்ஙனம் சொல்லுகையில் ராமன் தானும் தம்பியான லக்ஷ்மணனும் பார்வையான ஸீதையுமாக அஞ்ஜலிசெய்து 'ஸமஸ்த தேவதைகளுக்கும் அதிபதியே! வார்த்தை சொல்பவர்களில் சிறந்தவனே! உனக்கு என்னிடத்தில் ப்ரீதி உண்டாயிருக்குமாயின், நான் விரும்புவதைச் சொல்லுகின்றனன். நீ அங்ஙனஞ் செய்து உன் வார்த்தையை ஸத்யமாகச் செய்துகொள்வாயாக. எனக்காகப்பராக்ரமத்தை நிறைவேற்றி யுத்தத்தில் மாண்டு யமலோகம்போன வானரர்கள் அனைவரும் மீளவும் பிழைத்தெழுந்திருக்கும்படி செய்வாயாக. எவர் எனக்குப்ரியமான கார்யங்களில் விருப்பமுற்றவராகி மரணத்தையுங்கூடப் பொருள்செய்யாமல் யுத்தஞ்செய்து பிள்ளைகளையும் பெண்டிர்களையும் துறந்து மரணம் அடைந்தனரோ, அவ்வானரர்களனைவரும் மீளவும் பிழைத்துத் தமது புத்ரமித்ர களத்ராதிகளுடன் சேரும்படி அனுக்ரஹிப்பாயாக. இந்த வரத்தையே நான் வேண்டுகின்றனன். மானதனே! வானரர்களும் பல்லூகர்களும் சிறிதும் வருத்தமின்றிப் புண்களுமில்லாமல் முன்போலவே பராக்ரம ஸம்பன்னர்களா யிருக்கவேண்டுகின்றனன். வானரர்கள் வஸிக்கும் இடங்களில் அல்லாத காலங்களிலும் முக்யமான காய் கிழங்குகள் விளையவேண்டும். நதிகள் நிர்மலமான ஜலங்களுடன் விளக்கமுற்றிருக்கவேண்டும்' என்றனன். மஹானுபாவனாகிய அந்த ராமன்

மொழிந்த வார்த்தையைக் கேட்டு, தேவேந்த்ரன் ப்ரீதி வழிகின்ற வார்த்தைகளுடன், 'என்னப்பனே! ரகுகுல குமாரனே! இங்குமங்கும் சிதறிக் கிடக்கிற கால் கை வால் முதலிய அவயவங்களை முன்போல் ஒன்று சேர்த்து லோகாந்தரஞ் சென்றவர்களை மீளவும் அழைத்துக் கொண்டுவந்து இங்ஙனம் வானராதிகளைப் பிழைப்பிக்க வேண்டியிருக்கையால் நீ வேண்டின இவ்வரம் மிகவும் பெரியது. ஆனால் நான் முதலில் ஒன்று சொல்லிப் பிறகு மற்றொன்றை இதுவரையில் சொன்னதேயில்லை. ஆகையால் நீசொன்னபடியே ஆகும். ராக்ஷஸர்களால் யுத்தத்தில் கால் கை தலை அறுப்புண்டு மாண்ட கொண்டமுயல்களும் கரடிகளும் குரங்குகளும் மீளவும் பிழைத்தெழுந்திருப்பார்கள். வானரர்களெல்லோரும் எவ்வித வருத்தமும் காயமுமின்றி முன்போலவே பலமும் பராக்ரமமும் விளங்கப்பெற்று உறங்கி எழுந்திருப்பதுபோல், எழுந்திருப்பார்கள். எல்லோரும் மிகுந்தஸந்தோஷம் அடைந்து தமது நண்பர்களோடும் பந்துக்களோடும் தாயாதிகளோடும் மற்றும் தம்மைச் சேர்ந்தவரோடும் கலந்து ஸுகமாயிருப்பார்கள். மேலான வில்லாளியே! இவ்வானரர்கள் வஸிக்கும் இடங்களில் அகாலத்திலும் வ்ருக்ஷங்கள் பலவகைப் புஷ்பங்களால் அழகாகி நல்ல பழங்கள்உண்டாகப் பெற்றிருக்கும். நதிகளும் தெளிந்த ஜல ப்ரவாஹமுடையவையா யிருக்கும். முன்பு புண்பட்ட அங்கங்களோடு கூடின வானரர்களெல்லோரும் மீளவும் அவயவங்களில் புண்ணில்லாமல் ஸுகமாயிருப்பார்கள்' என்றனன். அனந்தரம் மரணம் அடைந்த வானரவீரர்கள் அனைவரும் தூங்கியெழுந்தாற்போல் பிழைத்தெழுந்தனர். ஜீவித்திருந்த வானரர்களனைவரும், மரணம் அடைந்தவர் மீளவும் எழுந்ததைக்கண்டு

'இதென்ன ஆச்சர்யம்' என்று வியப்புற்றனர். செத்துப் பிழைத்த வானரர்கள் அனைவரும் எழுந்து வந்து ராம னுக்கு நமஸ்காரஞ்செய்தனர். சிறப்புடைய அந்த தேவ தைகளனைவரும், ராமன் ஸமஸ்த அபீஷ்டங்களையும் பெற்று ஸந்தோஷித்திருப்பதுகண்டு, ஸ்தோத்ரஞ்செய் யத்தகுந்த அம்மஹானுபாவனை முதலில் ஸ்தோத்ரஞ் செய்து, அனந்தரம், லக்ஷ்மணன் கேட்டுக்கொண்டிருக் கையில் அந்த ராமனைப் பார்த்து 'வீரனே! சத்ருக் களைத் தபிக்கச் செய்பவனே! நீ இங்கிருந்து புறப்பட்டு அயோத்யைக்குப் போவாயாக. இந்த வானரர்களையும் அவரவரது இருப்பிடங்களுக்குப் போகும்படி விடை கொடுத்து அனுப்புவாயாக. உன்னிடத்தில் மிகுந்த ப்ரீ தியுடையவளும் மிகுந்த தவமுடையவளுமான இந்த ஸீதை அனுபவித்த வருத்தங்களை நினைக்கில் மனஇரக் கம் உண்டாகின்றது. ஆகையால் இந்த ஸீதாதேவியை உபலாலனஞ் செய்வாயாக(ஸந்தோஷப்படுத்துவாயாக.) உன் தாய்மார்களனைவரையும், மஹானுபாவனாகிய சத் ருக்னனையும் உன்னைப் பிரிந்த சோகத்தினால் தாபஸவ்ர தம் தரித்திருக்கின்ற உன் தம்பியாகிய பரதனையும் காண் பாயாக. நீ பட்டாபிஷேகங் கொண்டு பட்டணத்து ஜனங்களெல்லோரையும் ஸந்தோஷப் படுத்துவாயாக' என்றனன். இங்ஙனம் மொழிந்து தேவதைகள் ராம லக்ஷ்மணரிடம் விடைபெற்று மிகவும் ஸந்தோஷ முற்று ஸூர்யன்போல் ஜ்வலிக்கின்ற விமானங்களில் ஏறிக்கொண்டு[1] தேவலோகத்திற்குப் போயினர். ரா மன் லக்ஷ்மணனும் தானுமாக அந்த மேன்மையுடைய

---

1 இங்கு ப்ரதமையினன்று ராவணஸம்ஸ்காரம் நடக்கையில் த்விதீயையினன்று விபீஷணபட்டாபிஷேகமும் ஸீதாப்ராப்தியும் தேவதைகளை அனுப்பினதும் நடந்தனவென்று தெரிகிறது.

தேவதைகளனைவர்க்கும் நமஸ்காரம் செய்து, அப்பொழுது வானரர்களெல்லோரையும் விடுதிகளில் இளைப்பாறும்படி ஆஜ்ஞாபித்தனன். அப்பால் விஜயம் பெற்றுக் கீர்த்தியை அடைந்த மஹத்தான அவ்வானர ஸைன்யமெல்லாம் மிகுதியும் ஸந்தோஷமுற்றது. ராம லக்ஷ்மணர்களின் பாலனத்திற்குட்பட்டு ஒளிப்பெருக்குடன் விளக்கமுற்று, சந்த்ரனால் ப்ரகாசிக்கின்ற சுக்ல பக்ஷராத்ரிபோல் மிகுதியும் ப்ரகாசித்து கொண்டிருந்தது. நூற்று இருபத்து மூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

விபீஷணன் ராமனை லங்கைக்கு வரும்படி வேண்டுதலும், ராமன் கூடாதென்று தடுத்தலும், புஷ்பகவிமானத்திலேறி அயோத்யைக்குப் புறப்படுதலும்.

ப்ரஹ்மாதி தேவதைகள் வந்துபோனபின்பு அன்றிரவெல்லாம் சத்ருக்களை அழிக்குந் திறமையுடையராகவன் லங்கையில் இருந்து ஸுகமாக நித்ரித்து விடியற்காலத்தில் விழித்துக்கொண்டிருக்கையில், விபீஷணன் அஞ்சலிசெய்து 'ஜயமா' என்று வினவி, அவனைப்பார்த்து 'ராமா! ஸ்னானத்திற்குத் தகுந்த ஜலங்களும் குங்குமம் முதலிய அங்கராகங்களும் வஸ்த்ரங்களும் பூஷணங்களும் திவ்யமான சந்தனங்களும் நானாவித புஷ்பமாலைகளும் கொண்டு வந்திருக்கின்றனன். நன்றாக அலங்காரம் செய்யத் தெரிந்தவர்களும் தாமரை யிதழ்போன்ற கண்களையுடையவர்களுமான பெண்மணிகளும் இதோ வந்திருக்கின்றனர். உன்னை உபசாரத்துடன் நன்கு ஸ்னானஞ் செய்விப்பார்கள். மற்றொன்றுக்கும் அன்று' என்னை அனுக்ரஹிக்கும் பொருட்டு நீ அவற்றை அங்கீகரிப்பாயாக' என்றனன். விபீஷணன் இங்ஙனம் சொல்லுகையில், ராமன் அவனைப்பார்த்து 'ஸுக்ரீவன் முதலிய

வானர வீரர்களை மாத்ரமே நீ ஸ்னனத்தின் பொருட்டு அழைப்பாயாக. மஹா பாஹுவாகிய பரதன் என்மனத்திலேயே இருக்கின்றனன். அவன் மேன்மையான இயற்கையுடையவன்; மேலும், இளம்பருவத்தி லிருப்பவன்; காமஸுகங்களுக்கே தகுந்தவனுயினும் என்னைமீளவும் பெறுதற்காகத் தாபஸ தர்மங்களை ஆசரித்துக்கொண்டு வருத்த முற்றிருக்கின்றனன். மற்றும், பதினான்கு ஸம்வத்ஸரங்கள் நிறைந்தவுடனே வராதபக்ஷத்தில் அக்னியில் குதித்து விடுவேனென்று ப்ரதிஜ்ஞை செய்திருக்கின்றனன். அவன் ப்ரதிஜ்ஞை தவறுபவனன்று. அப்படிப்பட்டவன் அவனே எனக்குக் கருவியாகையால் அவனில்லாமல் நான் எப்படி ஸ்னனஞ் செய்வேன்? கைகேயியின் வயிற்றில் பிறந்ததற்கே அவளால் அவன் துக்கப்பட்டிருக்கின்றனன். இனி நானுங்கூட அவனை அவ்வண்ணம் துக்கப்படுத்தலாகுமா? என்னைப் பிரிந்தமையால் பல தர்மவ்ரதங்களை அவன் ஆசரித்துக்கொண்டிருக்கையில், நான் மாத்ரம் வ்ரதங்களை இழப்பது யுக்தமாகுமா? மற்றும், ராஜாவான தசரதரும் நானும் இல்லாத ஸமயத்தில் ராஜ்யத்தை நன்ருக நடத்தினவன், அப்படிப்பட்ட பரதன் அருகில் இல்லாததால் எனக்கு ஸ்னனமே அவ்வளவு ஸம்மதமாயில்லை. இனி வஸ்த்ர ஆபரணுதி ஸங்கதியைப் பற்றிச் சொல்லவேண்டுமோ? இதுவேயன்ரு அயோத்யைக்குப் போகும் வழி? இது வெகுதூரமாகையால் போவதற்கு மிகுதியும் கஷ்டமாயிருக்கும். இந்த மார்க்கத்தையே பற்றி நான் இப்பொழுதே சீக்ரமாக என் பட்டணத்திற்கும் போகின்றேன்' என்றனன். ராமன் இங்ஙனஞ் சொல்லுகையில், விபீஷணன் மீளவும் அவனைப் பார்த்து 'ராஜகுமாரனே! நிகரில்லாத பராக்ரமமுடையவனே! ஒரு தினத்திற்குள்

உன்னை அவ்வயோத்யாபுரத்திற் கொண்டுபோய்ச் சேர்த்துவிடுகிறேன். உனக்குச் சுபம் உண்டாகுக. ஸூர்யன் போல் ப்ரகாசிப்பதான புஷ்பகமென்னும் விமானம்இருக்கின்றது. அது என் தமையனாகிய குபேரனுடையது. அதை ராவணன் பலாத்காரமாகப் பிடித்து வரவழைத்துக்கொண்டனன். திருட்டுத்தனத்தினாலன்று; குபேரனை யுத்தத்தில் ஜயித்து வரவழைத்துக்கொண்டனன். மிகுதியும் சிறப்புடைய அவ்விமானம் திவ்யமாகையால் நினைத்த இடத்திற்குத் தானே போகவல்லது. இதை இப்பொழுது குபேரன் வரினும் கொடாமல் நீ ஏறிக்கொண்டு போகும்பொருட்டு பத்ரமாக நிறுத்திவைத்திருக்கின்றனன். மேகம்போல் ஆகாயத்தில் மிகுந்த வேகத்துடன் ஸஞ்சரிப்பதான அப்புஷ்பக விமானம் இதோ இங்கே இருக்கின்றது. நீ அவ்விமானத்தில் ஏறிக்கொண்டு எவ்விதமனக் கவலையுமின்றி அயோத்யைக்குப்போய்ச் சேருவாயாக. ராமா! ஸ்னானாதிகள் செய்யாதுபோயின் போகட்டும். நீ எல்லாம் அறிந்தவன். ஆகையால் உனக்குத் தெரியாதது ஒன்றும் இல்லை. உனக்கு என்னிடத்தில் அனுக்ரஹம் செய்ய விருப்பம் உளதாயின், எனது பக்தி முதலிய குணங்கள் உன் மனத்தில் பட்டிருக்குமாயின், என்னிடத்தில் உனக்கு ஸ்னேஹம் உளதாயின், இரண்டொரு நாள் நீயும், உன் தம்பியாகிய லக்ஷ்மணனும் உன் பார்யையாகிய ஸீதையும் இங்கு நிற்பீர்களாக. நான் ஸமஸ்தமான அபீஷ்ட பதார்த்தங்களோடு நிறைவேற்றும் பூஜையை அங்கீகரித்து அதன் பிறகு போகலாம். உனக்கு வேண்டிய பூஜையை முன்னமே ஸித்தப்படுத்தி வைத்திருக்கிறேன். புதிதாக ஸித்தப்படுத்த முயன்று தாமதப்படுத்த வேண்டியதில்லை. ஆகையால் ப்ரீதியு

டைய நான் ஸித்தப்படுத்திச்செய்யமுன்ற ஸத்காரத்தை நீ ஸைன்யங்களோடும் நண்பர்களோடும் அங்கீகரிப்பாயாக. நிர்ப்பந்தஞ்செய்கிறேனென்று நினைக்கவேண்டாம். என் வார்த்தையைத் தவருமல் கேட்பாயென்கிற நம்பிக்கையாலும். என்னிடத்தில் நீ செய்யும் ப்ரீதியாலும், உன்னிடத்தில் எனக்குள்ள பக்தியாலும் உன் ப்ருத்யனுகிய நான் இங்ஙனஞ் செய்ய ப்ரார்த்திக்கிறேனன்றி உனக்குக் கட்டளையிடுகிறே னல்லேன்' என்றனன். விபீஷணன் இங்ஙனம் மொழிகையில், உடனே ராமன் ராக்ஷஸர்களும் வானரர்களும் எல்லோரும் கேட்டுக்கொண்டிருக்கையில், அவனைப் பார்த்து 'நல்லியற்கை யுடையவனே! பரந்தபா! நீ செய்த ஸஹாயம், யுத்தத்தில் நீ நிறைவேற்றின பௌருஷ கார்யங்கள், சிறப்புற்றதான உன் பக்தி ஆகிய இவற்ருல் எல்லாவிதத்திலும் நான் பூஜை செய்யப் பெற்றனன். ராக்ஷஸர் தலைவனே! நீ மொழிந்த அவ்வார்த்தையை நான் கேளாதிருக்கமாட்டேன். ஆயினும், என்னை வனத்தினின்று பட்டணத்திற்கு அழைத்துக்கொண்டு போகும்பொருட்டு எவன் சித்ரகூட பர்வதத்திற்கு வந்தானே, எவன் பட்டாபிஷேகஞ் செய்துகொள்ளும்படி தலை வணங்கி நமஸ்கரித்து எவ்வளவு வேண்டிக்கொள்ளினும் அங்ஙனஞ்செய்யாது வந்தேனே, அப்படிப்பட்ட பரமபக்தனும் என் தம்பியுமான பரதனைக்காண என்மனது மிகுதியும் விரும்புகின்றது. ராக்ஷஸேஸ்வரனே! எனக்காகப் புஷ்பகவிமானத்தை விரைவில் வரவழைப்பாயாக. இரண்டு மூன்று தினங்கள் இருக்கவென்னிலும், பதினுன்கு வருஷங்கள் வனவாஸத்தை நிறைவேற்றி, வந்த கார்யத்தை நிறைவேற்றின பின்பு 'பதினுன்காவது ஸம்வத்ஸரத்திற்கும் வராத பக்ஷத்தில் அக்னி ப்ரவேசஞ் செய்வேன்'

என்று பரதன் ப்ரதிஜ்ஞை செய்திருக்கும்பொழுது நான் இங்கிருக்க எப்படி மனம் வரும்? நல்லியற்கையுடையவனே! விபீஷணா! எனக்கு அனுமதி கொடுப்பாயாக. இவ்விமானங் கொடுப்பதனாலேயே பூஜை செய்யப் பெற்றனன். நீ கோபங் கொள்ளவேண்டாம். விரைவில் போகும்படி எனக்கு அனுமதி கொடுப்பாயாக' என்றனன். ராமன் மொழிந்ததைக் கேட்டு, ராக்ஷஸர் தலைவனாகிய விபீஷணன் போய்ச் சீக்ரமாக அவ்விமானத்தை எடுத்துக்கொண்டு திரும்பி வந்தனன். அது பொன்மயமான விசித்ர ஸந்நிவேசங்களும் வைடூர்யமயமான வேதிகைகளும் (திண்ணைகளும்) இயற்றப் பெற்றிருந்தது. அதனுள் மண்டபங்கள் பலவும் நிறைந்திருந்தன. அது முழுவதும் வெள்ளிபோல் மிகவும் வெளுப்பான ஒளியுடன் விளக்கமுற்றுப் பதாகைகளாலும் த்வஜங்களாலும் நன்கு அலங்காரஞ் செய்யப்பெற்றிருந்தது. மற்றும், அதில் பொன்மயமான ராஜக்ருஹங்களும் இடையிடையில் அழகாகப் புலப்பட்டன. அது வரிசை வரிசையாகப் பொன்தாமரை மலர்கள் தொங்கவிடப் பெற்று ரமணீயமாயிருந்தது. அதில் முத்துக்களால் இயற்றின சாளரங்கள் விளங்கின. மற்றும், அது நாற்புறங்களிலும் சிறு சதங்கைகளின் ஸமூஹங்களும் மூலைகளில் பெரிய மணிகளும் நிறைந்திருக்கையால் எல்லாப்புறங்களிலும் செவிக்கினிதாக ஒலித்துக்கொண்டிருந்தது. அது விஸ்வகர்மாவினால் நிர்மிக்கப் பெற்றது. மேரு சிகரம்போல் புலப்படுவதும் முத்துபோலும் வெள்ளி போலும் நிர்மலமான பல உப்பரிகைகளால் உயர்வுற்றதும் ஸ்படிகக்கல் படுத்த நானாவித இடங்களமைந்ததும் வைடூர்யமணிமயமான மேலான படுக்கைகளோடும் மிகுதியும் விலையுயர்ந்த உத்தம ஆஸனங்களோடுங்கூடி

விளக்க முற்றதுமாயிருந்தது. அது எப்படிப்பட்டவர்க்கும் அணுகமுடியாததாகி மனோவேகமுடையதுமாயிருக்கும். அப்படிப்பட்ட அவ்விமானத்தைக் கொண்டு வந்து ராமனுக்கு ஸமர்ப்பித்து அங்கே நின்றிருந்தனன். நூற்று இருபத்து நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராமனது ஆஜ்ஞையின்படி விபீஷணன் வானரர்களை வெகுமானித்தலும், ஸ்ரீராமன் அனைவரோடுங்கூடிப் புஷ்பகவிமானமேறி அயோத்யைக்குப் புறப்படுதலும்.

விபீஷணன், புஷ்பமாலைகளால் அலங்காரஞ் செய்யப்பெற்ற அந்தப் புஷ்பகவிமானம் வந்திருப்பதை ராமனுக்குக் காண்பித்து அருகாமையில் நின்றிருந்து அவனுடன் இங்ஙனம் உரைத்தனன். ராக்ஷஸேஸ்வரனான அவ்விபீஷணன் கைகளைக் குவித்துக்கொண்டு விநயத்தினால் சரீரம் வணங்கப்பெற்று ப்ரீதியின் மிகுதியால் விரைவுடன் ராமனைப் பார்த்து 'இனி நான் என் செய்ய வேண்டும்?' என்று வினவினன். மஹா தேஜஸ்வியாகிய ராமன் ஆலோசித்து லக்ஷ்மணன் மாத்ரம் அருகில் கேட்டுக் கொண்டிருக்கையில், அவனது ஸம்மதியின் மேல் அவ்விபீஷணனைப் பார்த்து 'விபீஷணா! கஷ்டப்பட்டு ஸாதிக்கத் தகுந்த இந்தக் கார்யத்தையெல்லாம் தகுந்தபடி ப்ரயத்னப்பட்டு ஸாதித்தவர் வானரர்கள். ஆகையால் நீ நாநாவித ரத்னங்களையும் வஸ்த்ரங்களையும் ஆபரணங்களையும் கொடுத்து இவர்களை ஸத்கரிப்பாயாக. ராக்ஷஸேஸ்வரா! இதுவரையில் தேவதைகளுக்குங்கூட ஜயிக்க முடியாதிருந்த இந்த லங்கையை, யுத்தத்தில் பின்வாங்காமல் ப்ராணபயத்தைத் துறந்து ஸந்தோஷத்துடன் இவர்கள் ஸஹாயஞ் செய்தமை

யால் நாம் ஜயித்தோமன்றி வேறன்று. இந்த லங்கா ராஜ்யமும் இவர்களாலேயே உனக்குக் கிடைத்ததென்னலாம். அங்ஙனம் கார்யத்தை ஸாதித்த அவ்வானரர்களனைவரையும் பூஜிப்பாயாக. தனங்களையும் ரத்னங்களையும் கொடுத்து இவர்கள் பட்ட ப்ரயாஸத்தையெல்லாம் ஸபலஞ் செய்வாயாக. மானதா! நீக்ருதஜ்ஞதை (செய்தநன்றி மறவாமை) உடையவனாகி ஸம்மானஞ் செய்யத்தகுந்த இவ்வானரவீரர்களை இங்ஙனம் ஸம்மானிப்பாயாயின் இவர்களெல்லோரும் மனோரதம் நிறைவேறப்பெற்று ஸுகமாயிருப்பார்கள். அங்ஙனம் செய்வாயாயின், நீ த்யாக சீலனென்றும் (தானஞ் செய்யும் ஸ்வபாவனென்றும்) த்யாகங்களால் நண்பர்களைச் சேர்த்துக்கொள்பவனென்றும் தயையுடையவனென்றும் உன்னை எல்லோரும் நினைப்பார்கள். ஆனதுபற்றியே உனக்கு இதைத் தெரிவிக்கிறேனன்றி ஆஜ்ஞையிடவில்லை. தமக்கு ப்ரபுவாயினும், ப்ரீதியை விளக்கும்படியான ஔதார்யம் முதலிய குணங்களொன்றுமின்றி ஹிம்ஸித்துக்கொண்டிருக்கும் மன்னவனை ஸேனையிலுள்ளவர் பயத்தினால் யுத்தகாலத்தில் கைவிடுவார்கள். ஆகையால் அவர்களை ஸம்மானித்தலே நலம்' என்றனன். ராமன் இங்ஙனம் மொழிகையில் விபீஷணன் அவ்வானரர்களனைவரையும் அவரவரது கௌரவத்திற்குத் தகுந்தபடி ரத்னங்களையும் தனங்களையும் பிரித்துக்கொடுத்து ஸம்மானித்தனன். அனந்தரம் அவ்வானர யூதபதிகளனைவரும் ரத்னவஸ்த்ராதிகளால் ஸம்மானஞ் செய்யப்பெற்றதைக் கண்டு, ராமன் புகழுடையவளும் வெட்கமுறுகின்றவளுமான ஸீதையை மடியில் எடுத்துக்கொண்டு பராக்ரமசாலியான லக்ஷ்மணன் தன் தனுஸ்ஸை எடுத்துப்

பின்ருெடர்ந்து வரப்பெற்றுச் சிறந்ததாகிய அந்தப் புஷ்பக விமானத்தில் ஆரோஹித்தனன். ராமன் அங்ஙனம் ஏறுவது மாத்ரமேயன்றி ஸமஸ்த வானரர்களையும் மஹா வீர்யசாலியான ஸுக்ரீவனையும் விபீஷணனையும் பார்த்து, கௌரவத்துடன் 'வானரோத்தமர்களே! நீங்கள் உமது நண்பனுகிய என்னுடைய இக்கார்யத்தை நிறைவேற்றினீர்கள். உங்களெல்லோர்க்கும் விடை கொடுத்தனன். உங்களிஷ்டபடி உங்கள் இருப்பிடம் செல்வீர்களாக. சத்ருக்களைத் தபிக்கச் செய்யும் ஸ்வபாவனே! ஸுக்ரீவ! நல்ல மனமுடைய நண்பன் என்ன செய்யவேண்டுமோ, அவ்வளவும் நீ அதர்மத்திற்கு பயந்து எனக்குச் செய்தனை. இனி நீ உன் ஸேனைகளோடுகூடி விரைவில் கிஷ்கிந்தைக்குப் போய் ஸுகமாயிருப்பாயாக. விபீஷணு! நீ நான் கொடுத்த உன் ஸொந்த ராஜ்யத்தை அனுபவித்துக்கொண்டு, ராவணனைப்போல் பிறருடைய ராஜ்யங்களை ஆக்ரமிக்காமல் இலங்கையில் ஸுகமாயிருப்பாயாக. அப்பொழுது தேவேந்த்ரனேடுகூட தேவதைகள் எதிர்த்துவரினும் உன்னை அணுகமுடியாது. நான் இனி என் தந்தையின் ராஜதானியாகிய அயோத்யைக்குப் போகின்றனன். நீங்கள் எனக்கு அனுமதி கொடுக்கும்படி விரும்புகிறேன்' என்றனன். ராமன் இங்ஙனம் சொல்லுகையில் மஹா பலசாலிகளான அந்த ஸுக்ரீவாதிவானரர்களும் ராக்ஷஸனுன விபீஷணனும் அஞ்சலி செய்து ராமனைப் பார்த்து 'நாங்கள் அயோத்யைக்கு வர விரும்புகின்ருேம். நீ எங்களெல்லோரையும் அழைத்துக்கொண்டு போகவேண்டும். அங்கு தேசங்களுக்குச் சிறிதும் ஹிம்ஸை உண்டாகாதபடி வனங்களிலும் நகரங்களிலும்மன ஆக்கத்துடன் உலாவுகின்ருேம். ராஜகுமாரனே நீ பட்

டாபிஷேக ஜலங்களால் நனைவதைக் கண்டு கௌஸல்யைக்கு நமஸ்காரஞ்செய்து விரைவாகவே எங்கள் இருப்பிடங்களுக்குப் போய்ச் சேருகின்றனம்' என்றனம் அங்ஙனம் விபீஷணனும் ஸுக்ரீவாதி வானரர்களும் ப்ரார்த்திக்கையில் தர்மஸ்வபாவனும் ஸ்ரீமானுமாகிய ராமன் அவர்களெல்லோரையும் பார்த்து 'நான் பரதன் முதலான என் பந்துக்களோடும் உங்களனைவரோடும்கூடி அயோத்யாபுரத்தில் ப்ரவேசித்து மனக்களிப்புறுவேனாயின், இது எனக்கு ப்ரியமான எல்லாவற்றிலும் மேன்மேலும் ப்ரியமாயிருப்பதொன்று நேர்ந்தாற்போலல்லவா? ஸுக்ரீவா! நீயும் வானரர்களும் சீக்ரமாகப் புஷ்பக விமானத்தில் ஆரோஹிப்பீர்களாக. ராக்ஷஸேந்த்ரனே! விபீஷணா! உன் மந்த்ரிகளோடு நீயும் விரைவில் ஆரோஹிப்பாயாக' என்றனன். சீக்ரமாகச் செல்வதும் திவ்யமுமான அந்தப் புஷ்பக விமானத்தில் ஸுக்ரீவனும் வானரஸைன்யமும் விபீஷணனும் அவன் மந்த்ரிகளும் மிகவிரைவுடன் ஆரோஹித்தனர். அவர்களனைவரும் ஆரோஹித்தவுடனே குபேரனுடைய சிறந்த வாஹனமாகிய அவ்விமானம். ராமன் புறப்படும்படி அனுமதி கொடுக்கையில், ஆகாயத்திற் கிளம்பிற்று, ராமன் ஹம்ஸ ப்ரதிமைகளோடு கூடி ப்ரகாசிக்கின்ற அவ்விமானத்தில் மிக மனக்களிப்புடன் தேவாதிகள் புகழ்ந்துகொண்டிருக்கையில் குபேரன் போல் ப்ரகாசித்தனன். அந்தப் புஷ்பகவிமானம் தேவனால் இயற்றப்பெற்று நெருக்கமில்லாமல் எத்தனைபேர்க்கும் இடங்கொடுக்குந் தன்மையதாகையால் மஹாபலசாலிகளான அவ்வானரர்களும் ராக்ஷஸர்களும் அனைவரும் சிறிதும் இடுக்கமின்றி அதில் ஸுகமாக உட்கார்ந்திருந்தனர். நூற்று இருபத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராமன் ஸீதைக்கு வழியிலுள்ள விசேஷங்களைச் சொல்லுதலும், கிஷ்கிந்தைக்குப் போகும்போது ஸீதையின் வேண்டுகோளால் ஸுக்ரீவாதி வானரபத்னிகளை அழைத்துக்கொண்டு பரத்வாஜாஸ்ரமத்திற்குப் போதலும்.

மிகுதியும் சிறப்புற்றதாகிய அந்தப் புஷ்பகவிமானம் ராமன் அனுமதி கொடுத்தவுடனே, வாயுவினுல் கிளப்பப்பெற்ற மஹாமேகம்போல் மிகுந்த வேகத்துடன் ஆகாயத்தில் கிளம்பிப் போயிற்று. அனந்தரம் ரகுகுல குமாரனுகிய ராமன் நாற்புத்திலும் கண்ணை விட்டு உற்றுப் பார்த்துச் சந்த்ரன்போல் அழகான முகமுடையவளும் மிதிலாதிபதியின் குமாரத்தியுமான ஸீதையைப் பார்த்து 'ஸீதே! கைலாஸபர்வதத்தின் சிகரம்போன்ற த்ரிகூட பர்வதத்தின் சிகரத்தில் இருக்கும் லங்காபுரத்தைக் காண்பாய். இது விஸ்வகர்மாவால் இயற்றப்பெற்றது. ஸீதே! இதோ இங்குக் காண்பாய். மாம்ஸங்களும் ரக்தங்களும் நிறைந்து சேருயிருக்கின்ற யுத்த பூமி இது. வானரர்களும் ராக்ஷஸர்களும் பலர் இதில் மாண்டு போயினர். அகன்ற கண்களுடையவளே ப்ரஹ்மாவினிடம் வரம்பெற்று உலகங்களை யெல்லாம் ஹிம்ஸித்துக் கொண்டிருந்த ராக்ஷஸராஜனுகிய ராவணன் உன் நிமித்தமாக என்னுல் அடியுண்டு மாண்டு இதோ நீருகிப் படுத்திருக்கின்றனன், காண்பாய். இவ்விடத்தில் நான் கும்பகர்ணனை அடித்துக் கொன்றனன். இங்கு ப்ரஹஸ்தனென்னும் ராக்ஷஸன் உயிர்மாய்ந்தனன். இங்கு ஹனுமானுல் தூம்ராக்ஷன் முடிந்தனன். [1] மஹானுபாவனுகிய ஸுஷேணன் இங்கு

1 ஸுஷேணன் வித்யுன்மாலியை வதித்தலும், அங்கதன் விகடனைக் கொன்றதும் முன்பு சொல்லவில்லையாயினும் இப்பொழுது அனுவதித்து முன்பு நடந்ததாகச் சொல்லுகையால் நடந்ததென்று தெரிகிறது.



3311. ராமன் ஸுக்ரீவ விபீஷணாதிகளுடனே புஷ்பகவிமானத்தில் உட்கார்ந்து அயோத்யைக்குப் போதல்.

வித்யுன்மாலியை ஹதஞ் செய்தனன். இந்த லக்ஷ்மணன் ராவண குமாரனாகிய இந்த்ரஜித்தை வதித்தனன். இங்கு அங்கதன் விகடனென்னும் ராக்ஷஸனைக் கொன்றனன். இங்குப் பிறர்க்கு எதிர்க்க முடியாத விரூபாக்ஷனும் இங்கு மஹோதர மஹாபார்ஸ்வர்களும், இங்கு அகம்பனனும, இங்கு பலிஷ்டர்களான வேறு சில ராக்ஷஸர்களும் மாண்டனர். இங்கு மண்டோதரியென்னும் ராவண பார்யை, சக்களத்திகள் பலர் கண்ணீர் பெருக்கிக் கொண்டு சூழ்ந்து வரப்பெற்று, மரணம் அடைந்த ராவணனைக் குறித்துப் புலம்பினள். அழகான முகமுடையவளே! இதோ இந்த ஸமுத்ரத்துறையைக் காண்பாயாக. இங்கு நாங்கள் ஸமுத்ரத்தைத் தாண்டி அன்றிரவெல்லாம் வஸித்திருந்தனம். அகன்ற கண்களுடையவளே! ஸகரனால் தோண்டப்பெற்ற இந்த ஸமுத்ரத்தில் உன் நிமித்தமாக நலனைக்கொண்டு நான் கட்டுவித்த ஸேதுவை இதோ காண்பாயாக. இது மிகுதியும் துஷ்கரமானது (செய்யமுடியாதது) ஸீதே! கலக்க முடியாததும் வருணனுக்கு ஸ்தானமுமாகிய ஸமுத்ரத்தைக் காண்பாய். இதனிடையில் தீவு முதலிய இடங்கள் எவையும் கிடையாது. இது அலைகளால் கர்ஜித்துக்கொண்டு சங்குகளும் முத்துச் சிப்பிகளும் நிறைந்து விளங்குகின்றது. ஸீதே! ஹனுமான் ஸமுத்ரத்தைத்தாண்டும்பொழுது அவன் இளைப்பாறும் பொருட்டு ஸமுத்ரத்தினின்று மேற்கிளம்பின மைநாகமென்கிற பொன்மயமான இம்மேலானபர்வதத்தைக் காண்பாயாக ஸமுத்ரத்தினிடையில், [1]ஸேதுவின்மேல்இந்த இடத்தில்வானர ஸேனையெல்லாம் இறங்கியிருந்தது. பெருந்

1 இதற்கு முன்பு ஸேதுவின் தக்ஷிண கோடியைச் சொல்லி இங்கு உத்தரகோடியைச் சொல்லுகிறது.

தன்மையுடைய ஸமுத்ரத்தின் துறை இதோ புலப்படுகின்றது காண்பாய். இது ஸேது பந்தனமென்னும் ப்ரஸித்தி பெற்றிருப்பது. இது மூன்று லோகங்களாலும் பூஜிக்கத்தகுந்தது. இது மிகுதியும் பரிசுத்தமாகி ஸமஸ்த பாபங்களையும் போக்குவதாயிருக்கும். [1] இங்கு ஸமுத்

---

1 இங்கு 'அத்ரபூர்வம் மஹாதேவ: ப்ரஸாதமகரோத் ப்ரபு:' என்பது மூலம். (இங்கு முன்பு ப்ரபுவாகிய மஹாதேவன் என்னிடத்தில் அனுக்ரஹஞ் செய்தான்) என்று ஸாமான்யமாகத் தோற்றும் பொருள், இங்கு மஹாதேவனென்றால் ருத்ரனென்று பொருளாகச் சிலர் சொல்லுவர். ஆயினும் அது ஸரியன்று. முன்பு ருத்ரன் ராமனுக்கு அருள்புரிந்ததாகச் சொல்லவில்லை. முன்பு சொல்லப்பட்டவையே மீளவும் இங்குச் சொல்லப்படுகின்றன. ஆகையால் முன்பு சொல்லாத ருத்ரனை இங்குச் சொல்லுவது யுக்தமன்று. ஆயினும் அங்கதன் விகடனைக்கொன்றதை முன்பு சொல்லாதிருப்பினும் இங்கு அனுவதிக்கையால் (மீளவும் சொல்லுகையால்) அது ஸித்திக்கிறாப்போல், ருத்ரன் அருள்புரிந்தமை முன்பு சொல்லாததாயினும் இப்பொழுது அனுவதிக்கையால் ஸித்தித்ததென்னலாகாதா? என்னில், அது ஸரியன்று, அதில் விரோதம் ஒன்றுமில்லை. அப்படியே இதிலும் விரோதமில்லையென்னலாகாது. இதில் விரோதம் புலப்படுகின்றது. எப்படியென்னில்—ருத்ரன் அருள்புரிந்தமை ஸேது நிர்மித்தகாலத்திலா? அல்லது மீண்டுவருங் காலத்திலா? ஸேது நிர்மிக்கும்பொழுதென்னில்—முன்னமே ஏற்பட்டிருக்கிற ஸமுத்ரனுடைய அனுக்ரஹத்தினாலேயே அது நிறைவேறுகிறதாகையால் அதற்கு இதைக் காரணமாகச் சொல்லவேண்டிய அவஸ்யமில்லை. மற்றொரு ஸமயத்தில் ராவணவதம் முதலிய கார்யங்களொன்றுமில்லாமையால் அருள் புரியவேண்டிய அவஸ்யமில்லை. கீழ் ஸமுத்ரன் அருள் புரிந்ததாகச் சொன்னமையால் மஹாதேவஸப்தம் ஸமுத்ரனையே சொல்லுகிறதென்று சொல்லக்கூடும். ஆகையால் ஸமுத்ரத்தில் அணைகட்டும்பொழுதென்பது பொருந்தாது. மீண்டுவரும்பொழுதென்னில் 'அத்ர பூர்வம்' என்ற பூர்வசப்தத்திற்கு விரோதம் வரும். 'பூர்வம்' என்பதற்குப் பூர்வகல்பத்திலென்று பொருள்கூறுவதும் யுக்தமன்று. 'ஆத்மாநம் மாநுஷ மந்யே' என்றுதன் பரத்வத்தை மறைத்துக்கொண்டு மனுஷ்

ரத்திற்கு அதிஷ்டான தேவதையான ஸமுத்ரராஜன், முன்பு தன்னை உலர்த்தும்படி பெருங் கோபமுற்றிருந்த எனக்கு அருள் புரிந்தனன். ராக்ஷஸராஜனாகிய விபீஷணன் இங்கு என்னிடம் வந்து சேர்ந்தனன். ஸீதே! இதோ, விசித்ரமான அரண்யங்கள் அடர்ந்து அழகாயிருக்கின்ற கிஷ்கிந்தை யென்னும் ஸுக்ரீவபட்டணம் புலப்படுகின்றது, பார். இங்கு நான் வாலியை வதித்தேன்' என்றனன். அனந்தரம் ஸீதை, முன்பு வாலியால் பரிபாலனஞ் செய்யப்பெற்ற கிஷ்கிந்தாபுரத்தைக் கண்டு, ஸுக்ரீவாதிகள் எதிரில் இருக்கையால், ப்ரீதியுடன் பயமும் தொடரப்பெற்று ராமனைப் பார்த்து வணக்கத்துடன் இங்ஙனம் மொழியத்தொடங்கி 'நிர்த்தோஷனே! ராஜா! தாரை முதலிய ஸுக்ரீவனது அருமைக் காதலிகளையும் மற்ற வானரோத்தமர்களின் பார்யைகளையும் அழைத்துக்கொண்டே நீயும் நானும் ராஜதானியாகிய அயோத்யைக்குப் போகவேண்டுமென்று விரும்புகிறேன்' என்றனள். ஸீதை இங்ஙனம் சொல்லுகையில், ராமன் 'அப்படியே ஆகட்டும்' என்று அவளுக்கு மறுமொழிகூறிக் கிஷ்கிந்தையில் சென்று விமானத்தைக் கீழே நிறுத்தி ஸுக்ரீவனைப் பார்த்து 'வானரஸிம்ஹனே! ஸீதைக்காக வானரோத்தமர்களனைவர்க்கும்

---

யனாகச் சொல்லிக்கொள்பவன் ஸுக்ரீவாதிகளுக்கு எதிரில் தான் விஷ்ணுவாக அவதரித்ததை அறிவிக்கும்படியான பூர்வவ்ருத்தாந்தத்தை 'பூர்வகல்பம்' என்று சொன்னனென்பது உசிதமன்று. பூர்வகல்பத்தில் இயற்றின ஸேது இருக்கும்பக்ஷத்தில் மீளவும் அதை நிர்மிப்பது வீணே. 'அத்ர' என்னும் பதம், முன் ஸ்லோகத்தில் சொல்லப்பட்டதும் நளன் நிர்மித்ததுமான ஸேதுவையே சொல்லுமன்றிப் பூர்வகல்பத்தில் நிர்மித்த ஸேதுவைச் சொல்லாது. அன்றியும், அப்பொழுது ஸேது உளதாயினும் மறைந்துபோயிருக்கக்கூடும். ஆகையால் இப்பொழுது கூறினபொருளே பொருந்தும்.

இங்ஙனஞ் சொல்லுவாயாக. 'தந்தமது பார்யைகளோடு கூடவே எல்லோரும் அயோத்யைக்கு வரவேண்டும்' என்பாயாக. மஹாபலமுடையவனே! வானரேஶ்வரா! அங்ஙனமே நீயும் பார்யைகளனைவரையும் அழைத்துக் கொண்டுவருவாயாக. தாமதிக்கவேண்டாம். சீக்ரமாகப் போகவேண்டும்' என்றனன். மஹாதேஜஸ்வியாகிய ராமன் அங்ஙனம் செல்வப்பெருக்குடைய வானரேஶ்வரனை ஸுக்ரீவனுக்கும் அவனைச் சுற்றியிருக்கின்ற ஸமஸ்தவானரர்களுக்கும் சொல்லினன். ஸுக்ரீவன் சீக்ரமாக அந்தப்புரத்திற்குப் போய்த் தாரையைப் பார்த்து; 'அருமைக் காதலி! நீயும் மஹாபராக்ரமர்களான மற்ற வானரர்களின் பார்யைகளும் அயோத்யைக்கு வரவேண்டுமென்று ஸீதை விரும்புகையால் ராமன் அவளுக்கு ப்ரியஞ் செய்யவிரும்பி அங்ஙனமே எல்லோரும் வரவேண்டுமென்று ஆஜ்ஞாபித்தனன். ஆகையால் தாமதிக்க வேண்டாம். அயோத்யா நகரத்தைக் கண்டு தசரத மஹாராஜனது பார்யைகளனைவரையும் பார்த்து வருவோம்' என்றனன். ஸுக்ரீவன் சொன்னதைக் கேட்டு ஸமஸ்த அவயவங்களையும் பூஷணங்களால் அலங்கரித்துக்கொண்டிருக்கின்ற தாரை வானர பார்யைகளனைவரையும் அழைத்து 'நீங்கள் உங்கள் கணவரோடு அயோத்யைக்கு வரவேண்டுமென்று ஸுக்ரீவன் ஆஜ்ஞாபித்தனன். நீங்கள் என்னுடன் அயோத்யைக்கு வந்து அங்குள்ள விசேஷங்களைக் கண்டு எனக்கும் ஸந்தோஷத்தை விளைவிக்க வேண்டும். பட்டணத்து ஜனங்களும் எதிர்கொள்ள அவருடன்கூடி ராமன்பேரோலக்கமாக அயோத்யையில் ப்ரவேசிப்பதையும் தசரதமஹாராஜ பார்யைகள் அனைவர்க்குமுள்ள ஐஶ்வர்யத்தையும் கண்ணாரக்கண்டு வருவோம்' என்றனள். தாரை இங்ங

ணம் அநுமதி கொடுக்கையில், வானரமடந்தையர் அனை வரும் மங்கள கார்யங்களைச் செய்து அலங்கரித்துக் கொண்டு ஸீதையைப் பார்க்க வேண்டுமென்னும் விருப் பம் மேலெழப்பெற்று அவ்விமானத்திற்கு[1] ப்ரதக்ஷிணஞ் செய்து தாரையும் தாமும் ஆரோஹித்தனர். ராமன், தாரை முதலிய வானரஸ்த்ரீகள் ஏறும் வரையில் அவ் விமானம் கீழே இருந்து ஏறினபின்பு உயரக் கிளம்பக் கண்டு ருஶ்யமூகபர்வதத்தினருகே சென்று மீளவும் ஸீதையைப் பார்த்து 'ஸீதே! பர்வதஶ்ரேஷ்டனாகிய இந்த ருஶ்யமூகபர்வதம் பொன் தாதுக்களால் நிறைந்து மின்னல்களோடு கூடின மேகம்போல் விளங்குகின் றது, காண்பாய். ஸீதே! இதில் எனக்கும் வானரராஜ னான ஸுக்ரீவனுக்கும் ஸமாகமம் நேர்ந்தது. இங்குத் தான் நான் வாலியை வதிக்கும்பொருட்டு ப்ரதிஜ்ஞை செய்தனன். விசித்ரமான அடவிகள் சூழ்ந்த அந்தப் பம்பையென்னும் ஸரஸ்ஸு இதோ புலப்படுகின்றது, பார். இங்கு நான் உன் பிரிவினையால் விளைந்த பெருந் துயரத்தைப் பொறுக்கமுடியாமல் புலம்பினன். இந்த ஸரஸ்ஸின் கரையில் நான் தர்மசாரிணியான (தர்மஞ் செய்யுந் தன்மையளான) சபரியைக் கண்டனன். இங்கு நான் யோஜனைதூரம் வளர்ந்த கைகளையுடைய கபந் தனைக் கொன்றனன். விலாஸமுடையவளே! ஸீதே!

---

1 வானரபார்யைகளை அழைப்பதற்கும் அலங்காரஞ் செய்து கொண்டு வந்து விமானமேறுவதற்கும் கிஷ்கிந்தையில் ஒருநாள் பிடித் ததெனக் கூறுவர். மற்றும் வானரஸ்த்ரீகள் 'க்ருத்வாசாபி ப்ரதக்ஷி ணம்' என்று ப்ரதக்ஷிணஞ் செய்ததாகச் சொல்லியிருப்பினும் அது மிகுதியும் அகன்றதாகையால் அங்ஙனம் சீக்ரத்தில் அதை ப்ரதக்ஷி ணம் பண்ணமுடியாதாகையால் ப்ரதக்ஷிணமாகச் சென்று அதில் ஏறிக்கொண்டார்களென்று கொள்ளவேண்டும்.

ஜனஸ்தானத்தில் ஜடாயுவின் வாஸஸ்தானமாகையால் மஹாபாக்ய மூடையதான ஆலமரம் அதோ புலப்படு கின்றது, காண்பாய். அந்த வ்ருக்ஷத்தினருகில் கொடி யனுகிய ராவணனுக்கும் மஹானுபாவனுகிய ஜடாயு வுக்கும் மஹத்தான யுத்தம் நடந்தது. மடந்தையரில் சிறந்தவளே! நான் கரனையும் தூஷணனையும் மஹா வீர்யமுடைய த்ரிசிரனையும் குறிதவருமல் நேரே பாயுந் தன்மையுடைய பாணங்களால் எந்த இடத்தில் முடித் தேனே இந்த நமது ஆஶ்ரமம் இதோ இருக்கின்றது, பார். அதோ சித்ரமாகி அழகாகப்புலப்படும் நமது பர்ண சாலையைக் காண்பாய். இங்குத்தான் ராக்ஷஸராஜனுகிய ராவணன் பலாத்காரமாக உன்னை அபஹரித்துக் கொண்டுபோயினன். ஸீதே! இதோ அழகானகோதா வரீநதி நிர்மல ஜலமுடையதும் மங்களம்விளைப்பதுமாகித் தோற்றுகின்றது பார். இதோ அகஸ்த்யாஶ்ரமம் புலப்படு கின்றது. மஹானுபாவராகிய ஸுதீக்ஷ்ணருடைய ஆஶ்ர மம் அதோ ஜ்வலிப்பதுபோல் விளங்குகின்றது, பார். ஸீதே! பகைவரது பட்டணங்களைப் பிளக்குந் திறமை யுடையவனும் ஆயிரக்கண்ணனுமாகிய இந்த்ரன் எவ்வி டத்திற்கு வந்தானே அப்படிப்பட்ட மஹனீயமான சர பங்காஶ்ரமம் இங்குப் புலப்படுகின்றது, காண்பாய், இவ்விடத்திலேயே பெருஞ் சரீரமுடைய விராதனை நான் கொன்றேன். ஸீதே! நுண்ணிதான இடையுடைய வளே! நாம் பத்து ஸம்வத்ஸரங்கள் ஆங்காங்கு வஸித்திருந்த ரிஷிகளின் ஆஶ்ரமங்கள் இவையே. இங்கு அவர்களுக்குக் குலபதியும் (ப்ரதானரும்) ஸூர் யனையும் அக்னியையும் நிகர்த்த ஒளியுடையவருமாகிய அத்ரிமஹர்ஷி வாஸம் செய்கின்றனர். இங்கு நீ தர்மஞ் செய்யுந்தன்மையுடையவளும் தாபஸியும் பதஞ்செய்பவ

ளும்)ஆன அனஸூயா தேவியைக் கண்டனே. அழகான அங்கமுடையவளே! இதோ பர்வதங்களிற் சிறந்த சித்ர கூடம் ப்ரகாசிக்கின்றது. கைகேயியின் குமாரனுகிய பரதன் என்னை அருள்புரிவித்து ராஜ்யத்தை அங்கீகரிக்கச் செய்யும்பொருட்டு வந்த இடம் இதுவே. அதோ யமுனாநதி அழகான அரண்யங்களுடன் தூரத்தில் புலப்படுகின்றது. நாம் முன்பு பரத்வாஜாஶ்ரமத்தைக் கண்ட அழகான இடம் ஸமீபித்திருக்கையால் அதோ நன்றாகத்தோற்றுகின்றது பார். வரவர்ணினீ! இதோ ஆகாயம் பூமி பாதாளம் ஆகிய மூன்று மார்க்கங்களிலும் பெருகுவதாகையால் த்ரிபதகையெனப்படும் கங்கைமாநதி நானுவகைப் பறவைகள் நிறைந்து கரைகளில் நன்குபுஷ்பித்த அரண்யங்களும் அடர்ந்து அழகாகத் தோற்றுகின்றது. இதுவே ஶ்ருங்கிபேரபுரம். இங்குத்தான் குஹன் நம்மிடம் வந்தனன். ஸீதே! அந்த ஸரயூநதி இதோ புலப்படுகின்றது. அதன் கரைகளில் பலயாகங்கள் நடந்துவந்தமையால் வரிசை வரிசையாகப் பல யூபஸ்தகம்பங்கள் நாட்டப் பெற்றிருக்கின்றன. பலவகையான வ்ருக்ஷங்களும் நன்கு புஷ்பித்து அந்நதியின் இருபுறங்களிலும் நிரைநிரையாயிருக்கின்றன. என் தந்தையின் ராஜதானியாகிய அவ்வயோத்யா நகரம் இதோ புலப்படுகின்றது, பார். ஸீதே! அயோத்யைக்கு க்ஷேமமாகத் திரும்பிவந்தனை யாகையால் அந்நகரத்திற்கு நமஸ்காரஞ் செய்வாயாக' என்றனன். அனந்தரம் கூட வந்த அவ்வானரர்களெல்லாரும் ராக்ஷஸனுன விபீஷணனுமாக அனைவரும் எழுந்தெழுந்து அழகானகாட்சியுடைய அவ்வயோத்யாபுரத்தைக் கண்டனர். அனந்தரம் வெளுத்த உப்பரிகைகளின் வரிசைகளால் விளக்கமுற்றதும் அகன்ற கட்டடங்கள் அமைந்ததும் குதிரைகளும் யானைகளும்

நிறைந்து தேவேந்த்ரனுடைய அமராவதிபோல் ப்ரகாசிப்பதுமான அயோத்யாபுரத்தை வானரர்கள் கண்டனர். நூற்று இருபத்தாருவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராமன் பரத்வாஜாஸ்ரமத்தில் ஒருநாள் தங்கியிருத்தலும், அம்முனிவர் தனது ஆஸ்ரமம் முதல் அயோத்யை வரையில் வழியெல்லாம் செழிப்பாயிருக்கும்படி வரங்கொடுத்தலும்.

லக்ஷ்மணனுக்ரஜனான ராமன் பதினான்கு ஸம்வத்ஸரங்கள் நிரம்புகையில், [1] சித்திரை மாதம் சுக்லபக்ஷம்

---

1 சித்திரைமாதம் சுக்லபக்ஷம் பஞ்சமியினன்று ராமன் அரண்யவாஸத்திற்காக அயோத்யையை விட்டு வந்தானாகையால் மீளவும் சித்திரைமாதம் சுக்லபக்ஷ சதுர்த்தியோடு பதினான்கு ஸம்வத்ஸரங்கள் நிரம்புகையில் சித்திரைமாதம் சுக்லபக்ஷ பஞ்சமியினன்று பரத்வாஜாஸ்ரமஞ் சேர்ந்தானென்று தெரிகிறது. இது எப்படியென்னில்—சித்திரைமாதம் சுக்லபக்ஷபஞ்சமியினன்று அயோத்யையினின்று புறப்பட்டது. அன்றைத்தினம் ராத்ரி தமஸா தீரத்தில் இருத்தல். ஷஷ்டியினன்று ஸ்ருங்கிபேரபுரத்திலும், ஸப்தமியினன்று வ்ருக்ஷமூலத்திலும், அஷ்டமியினன்று பரத்வாஜாஸ்ரமத்திலும், நவமியினன்று யமுனாதீரத்திலும், தசமியினன்று ராமன் சித்ரகூடம் போகப்போகிறானென்று குஹனுடைய சாரன்மூலமாய் ஸமாசாரந் தெரிந்து ஸுமந்த்ரன் அன்று ஸாயங்காலமே அயோத்யைக்குப்போய்ச் சேருதலும், அன்றைத்தினம் ராத்ரியே தசரதன் மரணம் அடைதல் ஏகாதசியினன்று ராஜனது சரீரத்தை எண்ணெய்க்கிடாரத்தில் வைத்தல். த்வாதசியினன்று பரதனிடம் தூதர்களை அனுப்புதல். அவர்கள் வழியில் த்ரயோதசி சதுர்த்தசிகளைக் கடத்திப் பௌர்ணமாஸியன்று கேகயநகரம்போதல். ப்ரதமையினன்று பரதன் அயோத்யைக்குப் புறப்படுதல். வழியில் ஏழு ராத்ரிகள் இருந்து எட்டாவது நாள் மிகுந்த விரைவுடன் இரவும் பகலுமாகச் சென்று நவமியினன்று ஸூர்யோதயஸமயத்தில் பரதன் அயோத்யையில் ப்ரவேசித்தல். அந்த நவமியினன்றே தசரதனுக்கு ஸம்ஸ்காரம், அன்றைத்தினம் முதல்

பஞ்சமியினன்று பரத்வாஜாஸ்ரமஞ் சேர்ந்து மனோவாக்

பதின்மூன்றுவது நாள் (அதாவது-வைகாசிமாதம் சுக்லபக்ஷம் பஞ்சமியினன்றும் அதன் முதனாளும்) ராஜனுக்கு ஸ்ராத்தகர்மங்களைச் செய்தல். ஷஷ்டியினன்று தேசாசாரத்தின்படி தஹனஞ்செய்த இடத்தைச் சோதித்தல். ஸப்தமியினன்று ராமனிடம் போக வழியைச் செவ்விப்படுத்த வேலைக்காரர்களை அனுப்புதல். வேலைக்காரர்கள் தசமிவரையில் நான்கு தினங்கள் வழியைச் செவ்விப்படுதல். ஏகாதசியினன்று பரதன் ராமனிடம் ப்ரயாணமாய்ப்போதல். அன்றைத்தினம் ராத்ரி சங்காபேரத்தில் வஸித்திருத்தல். த்வாதசியினன்று பரத்வாஜாஸ்ரமத்தில் இருத்தல். த்ரயோதசியினன்று ராமனுடன் சேர்தல். சதுர்தசி பௌர்ணமாஸி ப்ரதமைகளில் பரதன் சித்ரகூடத்தில் இருத்தல். வைகாசிமாசம் க்ருஷ்ணபக்ஷம் த்விதீயையினன்று பரதன் அயோத்யைக்கு மீண்டு புறப்படுதல். ,சதுர்த்தியினன்று அயோத்யையில் நுழைதல். இங்ஙனம் ராமன் அயோத்யையினின்று சித்திரை மாதம் சுக்லபக்ஷம் பஞ்சமியினன்று புறப்பட்டது முதல் வைகாசி மாதம் க்ருஷ்ணபக்ஷம் சதுர்த்தி வரையில் ஒன்றரைமாதம் ஆயிற்று. வைகாசிமாதம் க்ருஷ்ணபக்ஷம் பஞ்சமியினன்று ராமன் சித்ரகூடத்தினின்று புறப்பட்டு அத்ரிமஹர்ஷியின் ஆஸ்ரமத்திற்கும்போனது. ஆஸ்ரமங்களில் பத்து ஸம்வத்ஸரங்கள் கடந்தன. இங்ஙனம் பத்து ஸம்வத்ஸரங்களும் ஒன்றரைமாதமும் கடந்துபோகையில் மிகுந்த காலத்தில் பஞ்சவடியில் வாஸஞ்செய்யும்பொழுது இரண்டு வர்ஷங்களும் பத்தரைமாதங்களும் கடக்கையில் பதின்மூன்று ஸம்வத்ஸரங்கள் சென்றன. பதினான்காவது ஸம்வத்ஸரம் சித்திரை மாதத்தில் ஸீதாபஹரணம். வைகாசிமாதத்தில் ஸுக்ரீவதர்ஸனம். ஆனிமாதத்தில் வாலிவதம். கார்த்திகமாதத்தில் ஸீதையைத் தேடும்பொருட்டு ஸைன்யங்களைக் கூட்டினது. பங்குனியில் ஹனுமான் முதலிய வானரர்கள் ப்ராயோபவேசஞ் செய்தது. பங்குனிமாதம் சுக்லபக்ஷம் சதுர்த்தசியினன்று லங்காதஹனம். பங்குனிமாதம் அமாவாஸ்யையினன்று ராவணவதம். சித்திரைமாதம் சுக்லபக்ஷம் ப்ரதமையினன்று ராவண ஸம்ஸ்காராதிகள். த்விதீயையினன்று விபீஷணாபிஷேகமும், ஸீதா ப்ராப்தியும், தேவதைகளை விடைகொடுத்தனுப்பினதும். த்ருதீயையினன்று லங்கையினின்று புறப்பட்டது. சதுர்த்தியி

காயங்களென்கிற மூன்று கரணங்களும் சுத்தமாயிருக்கப்பெற்று அம்மஹர்ஷிக்கு நமஸ்காரஞ் செய்தனன். ராமன் தவமே தனமாகப்பெற்ற பரத்வாஜ மஹர்ஷிக்கு நமஸ்கரித்து 'மஹானுபாவரே! அயோத்யா நகரம் ஸுபிக்ஷமாகவும் க்ஷேமமாகவும் இருக்கிற ஸங்கதியைக் கேட்டிருப்பீரோ? பரதன் ப்ரஜைகளைப் பரிபாலனஞ் செய்வதில் மனவூக்க முற்றிருக்கிறானல்லவா. தாய்மார்கள்முதலியவர் அனைவரும் பிழைத்திருக்கிறார்களா? என்று வினவினன். ராமன் இங்ஙனம் வினவினவுடனே பரத்வாஜ மஹர்ஷி ராமனை மீளவும் கண்டமைக்கு ஸந்தோஷம் அடைந்து [1] புன்னகையுடன் ராமனைப்

---

னன்று கிஷ்கிந்தையில் தங்கிப் பஞ்சமியினன்று பரத்வாஜாஸ்ரமத்தில் இருந்தது—என்று தெரிகிறது. இதில் அவ்வவற்றிற்கு உபபத்திகள் ஆங்காங்குத் தெரிவிக்கப்பட்டன. ஆகையால் ஹனுமானுடைய எதிரில் ராவணன் 'த்வௌ மாஸௌ ரக்ஷிதவ்யௌ' என்று இரண்டு மாதங்களென்று சொன்னது ஸீதையை ஸமாதானப்படுத்துவதற்காகச் சொன்ன வார்த்தையேயன்றி வேறன்று. 'ஊர்த்வம் மாஸாந் நஜீவிஷ்யே' (மாதத்திற்குமேல் பிழைத்திருக்கமாட்டேன்) என்று ஸீதை மொழிந்ததே பொருந்துகின்றது. அந்த ஸீதை மொழிந்த மாதமும் அப்பொழுது நடந்துகொண்டிருந்த மாதமேயென்று பலவாறு கூறப்பெற்றது. ராவணன் 'பத்துமாதங்கள் ஆயின. இன்னம் மிகுதி இரண்டுமாதங்களே இருக்கின்றன' என்று மொழிந்தது மத்யபானத்தினால் மதித்து விவேசிக்கமாட்டாமல் மொழிந்ததாம். ஸீதை 'ஊர்த்வம் மாஸாந் நஜீவிஷ்யே' என்ற மாதம் நடந்துகொண்டிருந்த மாதமேயென்று தெரிகிறது. கோவிந்தராஜர். பரத்வாஜாஸ்ரமம் போனதாகச் சொல்லுகையால் பெரியோர்களிருக்குமிடம் தேடிச்செல்லவேண்டுமென்று தெரிவிக்கப்பட்டது.

1 இங்கு முனிவர் புன்னகை செய்ததற்குக் காரணம் 'ராமன் ஸர்வஜ்ஞனாயிருந்தும் அறியாதவன்போல் வினவுகின்றானே' என்று மனத்தில் தோற்றினமையேயென்று கொள்ளவேண்டும். அல்லது 'பரதன் ராஜ்யபரிபாலனத்தில் ஜாகரூகனாயிருக்கின்றானா? என்று

பார்த்து' பரதனே என்னில்[1] தூள் படிந்த உடம்புடன் ஜடைகள் தரித்து உன் பாதுகைகளை முன்னிட்டு ப்ரஜைகளைப் பாதுகாப்பவனாகி உன் வரவை எதிர்ப்பார்த்துக்கொண்டிருக்கின்றனன். க்ருஹத்தில் எல்லாம் க்ஷேமமே. ஸமிதிஞ்ஜயா! (யுத்தத்தில் ஜயிக்கும் ஸ்வபாவனே!) நீ முன்பு கேவலம் தர்மத்தையே விரும்பிப் பிதாவின் வசனத்தை மறுக்காமல் செய்பவனாகிக் கைகேயியின் சொல்லை அங்கீகரித்து ஸமஸ்த ஐஸ்வர்யத்தையும் துறந்து ஸமஸ்த போகங்களையும் இழந்து நார்த்துணிகளை உடுத்து ஸீதையும் லக்ஷ்மணனும் பின்றொடரப் பெற்று, ஸ்வர்க்கத்தைப் பிரிந்த தேவதைபோல் ராஜ்யத்தைப் பிரிந்து மஹாரண்யத்தில் காய் கிழங்குகளை ஆஹாரமாகக் கொண்டு கால் நடையாகவே நடந்து புகும்பொழுது உன்னைப் பார்க்கையில் எனக்கு மன வருத்தமாயிருந்தது. இப்பொழுதோ என்னில் சத்ருக்களை ஜயித்துக் கார்யம் நிறைவேறப்பெற்று நண்பர் கூட்டங்களோடும் பந்துக்களோடுங் கூடி நீ க்ஷேமமாய்

---

ராமன் வினவினதற்கு, 'பரதன் ப்ரஜைகளைப் பரிபாலிப்பதில் ஸந்துஷ்டனாயிருக்கின்றானா?' என்று அபிப்ராயமாகையால், 'பரதந்த்ரனாயிருக்கிற பரதன் இங்ஙனம் ஸந்தோஷித்திருப்பது ஏது?' என்று தோற்றுகையே புன்னகைக்குக் காரணமென்று கொள்ளவேண்டும்.

1 பரதன் அழுக்கடைந்திருந்தமைக்குக் காரணம் ஜடைகள் தரித்திருந்தமையால் ஸ்நானஞ் செய்யாதிருந்தமைபற்றியென்று தெரிகிறது. ஸ்நானமில்லாமற்போயினும் தீக்ஷிதனைப்போல் கௌணஸ்நானத்தினாலேயே நித்யதர்மங்களைச் செய்தமை தெரிகிறது. பரதன் ஸ்நானமே செய்யாதிருப்பானாயின், 'கதங்ந்வபர ராத்ரேஷு ஸரயூமவகாஹதே' என்று பரதன் குளிரில்ஸரயூநதியில் எப்படி ஸ்நானஞ் செய்வான்?' என்று பரிதபித்தது எங்ஙனம பொருந்தும் ? என்னில் ஏதேனுமொரு காலத்தில் செய்யும் ஸ்நானமாகக் கொள்ளின் பொருந்திவரும்.

வருவதைக் காண்கையில் எனக்கு மிகுதியும் ஸந்தோ ஷமாயிருக்கின்றது. ராமா! உனக்கு வனவாஸ காலத் தில்பஞ்சவடி முதலிய இடங்களில் உண்டான ஸுக மும் ஸீதையைப் பறிகொடுத்தமையாலுண்டான துக்க மும் எனக்குத் தெரியும். தர்மவத்ஸலா? (தர்மத்தில் ப்ரீ தியுடையவனே!) நீ ஜனஸ்தானத்தில் நேர்ந்த கோர மான மஹா யுத்தத்தில் ராக்ஷஸர்களை வதித்தமை முதலியதும், ரிஷிகளின் வேண்டுகோளால் நீ அங்ஙனம் கராதிகளைக்கொன்று அவர்களை ரக்ஷித்துக் கொண் டிருக்கையில், நிந்தைக்கிடமில்லாத உன் பார்யையாகிய இந்தப் பெண்மணியை ராவணன் பறித்துக் கொண்டு போக நினைத்ததும், மாரீசன் மானுருவத்துடன் புலப் பட்டதும்,ஸீதையை அபஹரித்துக்கொண்டுபோனதும், கபந்தனைக் கண்டதும், பம்பாஸரஸ்ஸுக்குப் போய்ச் சேர்ந்ததும், ஸுக்ரீவனோடு நீ ஸ்னேஹமுற்றதும், வா லியை நீ வதித்ததும், ஸீதையைத் தேடினதும், ஹனு மான் ஸமுத்ரத்தைத் தாண்டி ஸீதையைக் கண்டு லங்கையைக் கொளுத்தித் திரும்பிவந்த பெருஞ்செயல் நடத்தினதும், ஸீதையின் ஸங்கதி தெரிந்தபின்பு நல னைக்கொண்டு ஸேதுகட்டுவித்ததும், வானரவீரர்கள் ஸந்தோஷத்தினால் வளர்ந்து லங்கையைக் கொளுத்தின தும், தேவதைகளுக்குச் சத்ருவாகிய ராவணன் புதல் வர்களோடும் பந்துக்களோடும் வாஹனங்களோடும்கூட யுத்தத்தில் மாண்டதும் ப்ரஹ்மாதியான தேவதைகள் உன்னிடம் வந்ததும், உனக்கு இந்த்ரன் மரணம் அடைந்த வானரர்கள் பிழைக்கும்படி வரங்கொடுத்த தும், ஆகிய அனைத்தும் நான் தவமஹிமையால் அறிந் திருக்கின்றனன். ஆயுதம் பிடித்தவர்களில் மேன்மை யுற்றவனே! நானும் உனக்கு இங்கு வரங்கொடுக்கிறேன்,

கேட்பாயாக. இப்பொழுது நான் செய்கிற இந்தப்பூ ஜையை அங்கீகரித்து நாளைத்தினம் அயோத்யைக்குப் போகலாம்' என்றனன். ராஜகுமாரனாகிய ராமன் புத்தி யிற் சிறந்தவனாகையால் பரதனிடம் தூதனை அனுப்பு தல் உசிதமென்று நினைத்துக்கொண்டு பரத்வாஜ மஹர் ஷியின் வசனத்தைச் சிரஸா வஹித்து அப்படியே யென்று மொழிந்து மிகுந்த ஸந்தோஷத்துடன் அம்ம ஹர்ஷியைப் பார்த்து 'மஹானுபாவரே! நான் அயோத் யைக்குப் போகும் வழியில் வ்ருக்ஷங்களெல்லாம் அல் லாத காலத்திலும் பலிப்பனவாகித் தேனைப்பெருக்கிக் கொண்டிருக்கவேண்டும். பழங்கள் அம்ருதம்போன்ற ருசியுடையவையாகிப் பலவாறு செழித்திருக்கவேண்டும்' என்று வரம் வேண்டிக்கொண்டனன். அம்மஹர்ஷி அப் படியேயென்று ப்ரதிஜ்ஞை செய்கையில், உடனே அங் குள்ள வ்ருக்ஷங்களெல்லாம் ஸ்வர்க்கத்திலுள்ள கல்ப வ்ருக்ஷங்கள்போல் ஸர்வ காலங்களிலும் ஸம்ருத்தமா யிருந்தன. அப்பொழுது அவ்வானரர்கள் அயோத்யைக் குப்போகும்பொழுது வழியில் எந்தப்பக்கம் பார்க்கினும் மூன்று யோஜனை தூரம் வரையில் பலியாதிருந்த வ்ரு க்ஷங்களும் பலித்திருந்தன. புஷ்பிக்காத வ்ருக்ஷங்களும் புஷ்பித்திருந்தன. உலர்ந்துபோன வ்ருக்ஷங்களெல்லாம் நிரம்பவும் கிளைகளும் இலைகளும் தளிர்களும் பூக்களும் காய்களும் பழங்களும் நிறைந்து தேனைப் பெருக்கின. அனந்தரம் அவ்வானர வீரர்கள் மேனி முழுவதும் மயிர்க்கூச்சல் உண்டாகப்பெற்று மிகுந்த ஸந்தோஷம் அடைந்து திவ்யமான பலவித பழங்களையும் யதேஷ் டமாக நிரை நிரையாய்ப் பக்ஷித்துக்கொண்டு ஸ்வர்க்க வாஸிகள்போல் ஆநந்தம் அடைந்தனர். நூற்று இரு பத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராமனது கட்டளையின்படி ஹநுமான் குஹனுக்கும் பரதனுக்கும் ராமனுடைய வரவை அறிவிக்கையில் அவர்களிருவரும் ஆநந்தம் அடைதல்.

ராமன் அயோத்யையை நினைத்துக்கொண்டு சிறிதுநேரம் ஆலோசித்தனன். அங்ஙனம் ஆலோசித்து வானரோத்தமனான ஹநுமானை அழைத்து, 'அயோத்யையில் ராஜக்ருஹத்தில் என் தாய் முதலியவர் அனைவரும் க்ஷேமமா' என்பதைத் தெரிந்துகொள்வாயாக. நீ ஶ்ருங்கிபேரபுரத்திற்குப்போய், அங்குக் காடுகளில் திரிபவனும் வேடர்களுக்கரசனுமாகிய குஹனைப் பார்த்து நான் சொன்னதாக நீ என் க்ஷேமத்தை அவனுக்குச் சொல்வாயாக. அந்த குஹன் நான் ஆரோக்யத்துடன் மனக்கவலையற்று க்ஷேமமாகத் திரும்பி வந்தேனென்பதைக்கேட்டவுடனே மிகுந்தஸந்தோஷம் அடைவான். [1] அவன் எனக்கு என்னைப்போன்ற நண்பன். அந்த வேடர் தலைவனான குஹன் அயோத்யைக்குப் போகும் மார்க்கத்தையும் பரதனுடைய வ்ருத்தாந்தத்தையும் உனக்கு ஸந்தோஷத்துடன் தெரிவிப்பான். நான் சொன்னதாகப் பரதனுக்கு என் க்ஷேமத்தைச் சொல்ல வேண்டும். நான் வனவாஸந் தீர்ந்து பிதாவின் வசனப்படி நடந்து பார்யையாகிய ஸீதையோடும் லக்ஷ்மணனோடும் க்ஷேமமாக வந்திருக்கிறேனென்று அவனுக்குச் சொல்வாயாக. மற்றும் பலிஷ்டனாகிய ராவணன் ஸீதையை அபஹரித்துக்கொண்டு போனதையும், ஸுக்ரீவனோடு கலந்து ஸ்னேஹஞ் செய்துகொண்டதையும், வா

1 'ஸ மமாத்மஸமஸ்ஸகா' என்பது மூலம். ராமன் குஹனை 'ஆத்மஸமஃ' (தன்னோடொத்தவன்) என்று சொல்லுகையால் குஹனுடைய ஹீனஜாதியைப் பாராட்டாமல் ப்ரீதியின் மிகுதியால் தன்னைப்போல் இக்ஷ்வாகுவம்சத்தில் பிறந்தவனாக நினைத்தானென்று கருத்து.

வியைக் கொன்றதையும், ஸீதையைத் தேடினதையும், மிதமில்லாத பலமுடைய நீ அழிவின்றி நதநதீபதியான ஸமுத்ரத்தைத் தாண்டி ஸீதையைக் கண்ட விதத்தையும், எல்லோரும் ஸமுத்ரதீரத்தினருகே போனதையும், ஸமுத்ரராஜன் தர்சனங்கொடுத்ததையும், அதில் ஸேது கட்டுவித்ததையும், நான் ராவணனை வதித்ததையும், [1] தேவேந்த்ரனும் ப்ரஹ்மதேவனும் வருணனும் எனக்கு வரங்கொடுத்ததையும், சிவனுடைய அனுக்ரஹத்தினுல் எனக்குத் தந்தையுடன் ஸமாகமம் நேர்ந்ததையும், பரதனுக்குச் சொல்வாயாக. மற்றும், நான் ராக்ஷஸராஜனுன விபீஷணனேடும் வானராதிபதியான ஸுக்ரீவனேடும் [2] ஸமீபித்து வந்திருக்கிறேனென்றும், நல்லியற்கை யுடையவனே! அவனுக்கு மெல்லமெல்லச் சொல்வாயாக. இந்த வ்ருத்தாந்தத்தைக் கேட்கும்பொழுது[3] பரதனுக்கு எவ்விதமானமுகஜாடை தோற்றுமோ, என் விஷயமாக மனக்கருத்து சேஷ்டை

---

1 முன்பு தேவேந்த்ர னெருவனே வரங்கொடுத்ததா யிருக்கையில் ப்ரஹ்மாவும் வருணனுங்கூட வரங்கொடுத்ததாகச் சொல்லுகையால் ப்ரஹ்மாதிகளின் அனுமதியால் இந்த்ரன் அந்த வரங் கொடுத்தானென்று தெரிகிறது.

2 சதுர்த்தியினன்றே பதினுன்காவது ஸம்வத்ஸரம் கடந்து போகையால், நான் வந்திருப்பதைச் சொல்லியனுப்பாத பக்ஷத்தில் பரதன் அக்னி ப்ரவேசஞ் செய்வானென்றும், 'ஸௌம்ய' என்கையால் மெல்ல மெல்லச் சொல்லவேண்டுமென்றும் இல்லையாயின் பரதனுக்கு ஸந்தோஷம் தலைக்குமேல் போய் விடுமென்றும் ராமன் கருத்து.

3 இங்குப் பரதனுடைய மனேபாவம் முதலியவற்றைத் தெரிந்துகொண்டு வரச்சொன்னதற்குக் காரணம் யாதெனில் அவனேடு 'நீயே ராஜ்யத்தைப் பாதுகாத்து வருவாய்' என்னில் அங்கீகரிப்பனு மாட்டானு என்று தெரிந்துகொள்வதற்காகவென்று தெரிகிறது.

முதலியவை எவ்வண்ணம் புலப்படுமோ, அதை யெல்லாம் நீ ஊக்கத்துடன் தெரிந்துகொள்ளவேண்டும். நீ பரதனைப் பார்த்து 'ராமன் சத்ருக்கூட்டங்களை ஜயித்து மேலான யசஸ்ஸையும்பெற்று மனக்கருத்தும் நிறைவேறப்பெற்று மஹா பலிஷ்டர்களான நண்பர்களோடுகூடி ஸமீபித்துவருகின்றனன்' என்றுமொழிந்து அவனது முகநிறத்தினாலும் பார்வையினாலும் வார்த்தையாலும் அவனுடைய ஸமஸ்த வ்ருத்தாந்தங்களையும்

---

வேறுவிதமாகக் கருத்துக்கொள்ளில் பரதஸ்வபாவத்திற்கும் ராமஸ்வபாவத்திற்கும் வருத்தமாகும், ராமன் 'ந ஸர்வே ப்ராதரஸ் தாத பவந்தி பரதோபமா:' (அப்பனே! எல்லா உடன்பிறந்தவர்களும் பரதனைப் போன்றவராகார்) என்றும், பரதன் 'யாவந் நசரணௌ ப்ராது: பார்திவவ்யஞ்ஜநாந்விதௌ। ஶிரஸா தாரயிஷ்யாமி ந மே ஶாந்திர் பவிஷ்யதி' (ராஜலக்ஷணங்களமைந்த ப்ராதாவின் பாதங்களைச் சிரஸா தரியாதிருக்கும் வரையில் எனக்கு ஆற்றல் உண்டாகாது) என்றும் மொழிந்தனர். இவ்விருவருடைய ஸ்வபாவங்கள் இங்ஙனமிருக்கின்றன வாகையால் ராமன் பரதனுடைய ஸ்வபாவத்தை ஆராய்ந்து பாராமல் தன் ஸ்வபாவத்தின்படி 'நீயே ராஜ்யத்தை ஆள்வாய்' என்று அவனைக் குறித்து மொழியின், பொருந்துமோ பொருந்தாதோ என்று தெரிந்து கொள்வதற்காக இங்ஙனம் ஆராய்ந்து பார்க்கிறானென்று கோவிந்தராஜர். பரதனுக்கு ராஜ்யத்திலேயே அபிப்ராயம் இருக்கிறதோ இல்லையோ ஆகாரத்தினாலும் மனோபாவத்தினாலும் தெரிந்து கொள்வாயென்று ராமன் மொழிகையில், அப்படிப்பட்ட ஸ்னேஹமுடையவனை இங்ஙனம் பரீக்ஷிக்கலாமா என்று ஹநுமான் வினவுகையில், வம்சபரம்பரையாக வந்த ராஜ்யம் எப்படிப்பட்டவனுடைய மனத்தையும் இழுக்கும்—என்று ராமன் மொழிய, அப்படியாயின் அவன் தானே ஆள்வதாகச்சொல்லின் என் செய்வாய்? என்று அவன் வினவ, பலநாள் ராஜ்யத்தில் பழக்கத்தினால் அதைத் தானே ஆளவிரும்புவானாயின் அவனே ஆளக் கொடுப்பேனென்று ராமன் மறுமொழி கூறினதாகத் தெரியவருகிறதென்று மஹேஶ்வரதீர்த்தர்.

மனோபாவங்களையும் உள்ளபடி தெரிந்துகொள்ள வேண்டும். ஸமஸ்த காலங்களிலும் ஸம்ருத்தமாகி ரத கஜ துரகங்கள் நிறைந்து வம்சபரம்பரையில் வருவதும் அனுபவத்திலிருப்பதுமான ராஜ்யம் எவனுடைய மனத்தைத்தான் இழுக்காது? பதினான்கு ஸம்வத்ஸரங்கள் அனுபவித்து ருசிகண்டமையால், செல்வப்பெருக்கனும் ரகுகுலகுமாரனுமாகிய பரதன் தான் ராஜ்யத்தை விரும்புவானாயின், சிறிதும் குறைவில்லாமல் பூமண்டலத்தையெல்லாம் அவனே ஆண்டு வருவானாக. ஆகையால் அவனுடைய புத்தியையும் நிச்சயத்தையும் அறிந்துகொண்டு, நாங்கள் வெகுதூரம் கடந்து வருவதற்கு முன்னமே விரைந்து வரவேண்டும். (இந்த ராஜ்யத்தை நாமே ஆளலாம்' என்று அவன் அபிப்ராயப்பட்டிருப்பதையும், 'இது நமக்குவேண்டாம், இது ராமனுக்கே ஆகவேண்டும்' என்று நிச்சயித்திருப்பதையும் அறிந்துகொண்டு, 'அவன் ராஜ்யத்தில் விருப்பமுற்றிருப்பானாயின், நான் வெகுதூரங் கடந்து வருவதற்கு முன்னமே சீக்ரமாக வருவாயாக. [1] அவன் ராஜ்யத்தில் விருப்பமில்

1 ஆனதுபற்றியே ஹனுமான் பரதன் ராஜ்யத்தை அங்கீகரிக்கமாட்டானென்றும் நிச்சயத்தை அறிந்து பரதனிடத்திலேயே இருந்தானன்றித் திரும்பி ராமனிடம் வரவில்லையென்று தெரிகிறது. சிலர் 'ராமன் பரதனுடைய பாவந் தெரிந்தவனாயினும், எல்லாவிதத்திலும் ப்ரீதியுடையவனையுங்கூட ராஜன் பரீக்ஷிக்கவேண்டுமென்னும் ராஜநீதியை உலகத்தில் ப்ரசுரஞ் செய்வதற்காக இங்ஙனம் மிகுந்த ஸந்தேஹத்தோடு கூடின வார்த்தைகளைச் சொல்லினன். வாஸ்தவத்தில் தான் திடீலென்று வருவானாயின் பரதனுக்கு ஸந்தோஷம் உன்மஸ்தகமாமென்று (தலைகடந்து போமென்று) முன்னதாக ஹனுமானை அனுப்பினன். ஹனுமான் ராமனுடைய ஹ்ருதயந் தெரிந்தவனாகையால் பரதனுக்கு ராமனுடைய வரவைச்சொல்லி பரதனோடுகூடவே ராமனிடம் வந்தான் என்று கூறுவர் கோவிந்தராஜர்.

லாதிருக்கும் பக்ஷத்தில் நீ திரும்பி வரவேண்டாம்' என்றனன். இங்ஙனம் ராமன் சொல்லி அனுப்புகையில், வாயுகுமாரனாகிய ஹனுமான் மனுஷ்ய ரூபம் தரித்து விரைவுடன் அயோத்யைக்குப் போக முயன்றனன். அங்ஙனம் முயன்ற அவ்வாயுகுமாரன், கருத்மான் நல்ல ஸர்ப்பத்தைப் பிடிக்க விரும்பி அதன்மேல் வேகமாகக் கிளம்பிப்போவதுபோல், மிகுந்த வேகத்துடன் ஆகாயத்தில் கிளம்பிப்போயினன். வீர்யம் மிகுந்திருக்கிற அந்த ஹனுமான் அங்ஙனம் தனது தந்தையின் ஸஞ்சார மார்க்கமாகிய ஆகாயத்திற் கிளம்பி, மஹா ஸர்ப்பங்களுக்கு வாஸஸ்தானமாயிருப்பதும் மங்களத்தை விளைப்பதுமான கங்காயமுனைகள் கலக்கும் இடத்தைக்கடந்து ஶ்ருங்கிபேரபுரத்திற்குப்போய் குஹனைப்பார்த்து ஸந்தோஷமுற்று இனிய உரைகளை மொழியத் தொடங்கி 'உண்மையான பராக்ரம முடையவனும் ககுத்ஸ்த குலாலங்காரனும் உனது நண்பனுமாகிய ராமன் ஸீதையோடும் லக்ஷ்மணனோடும் கூடி உனக்குத் தன் க்ஷேமத்தை மொழியச் சொல்லினன். ராமன் பரத்வாஜ மஹர்ஷியின் கட்டளைப்படி இந்தப் பஞ்சமியின் ராத்ரி அம்முனியின் ஆஶ்ரமத்தில் இருந்து நாளை விடிந்தவுடன் அம்முனிவரிடம் அநுமதிபெற்றுப் புறப்பட்டு வருவான். சீக்ரத்திலேயே அவனைக்காண்பாய்' என்றனன், மஹா தேஜஸ்வியும் மஹா வேகமுடையவனுமாகிய அந்த ஹனுமான் இங்ஙனம் மொழிந்து ஸமஸ்த லோகங்களுக்கும் ஆநந்தம் விளைப்பதான ராமனது வரவைப் பரதனுக்கு விண்ணப்பஞ் செய்யும்படியான பாக்யம் நேர்ந்ததற்கு மேனிமுழுவதும்மயிர்க்கூச்சல் உண்டாகப்பெற்று மார்க்கத்திலுள்ள பர்வதம் நதி முதலியவற்றின் அழகைப் பாராட்டாமல் காணுக்கண்ணிட்டு மிகுந்த வேகத்துடன் ஆகாயத்தில்

கிளம்பிப்போயினன். அவன் வழியில் பரசுராம தீர்த்தத்தையும் வாலுகினீ நதியையும் ப்ரஸித்தமான கோமதீ நதியையும் பயங்கரமான ஸாலவனத்தையும், பலவகைப் பயிர்கள் நிறைந்து ஸம்ருத்தமாயிருக்கிற கோஸலதேசங்களையும் அங்குள்ள பலவாயிரம் ப்ரஜைகளையும் கண்டனன். அந்த வானரஸிம்ஹன் விரைவுடன் வெகுதூரம் சென்று நந்திக்ராமத்திற்கு ஸமீபத்தில் புஷ்பித்திருக்கின்ற வ்ருக்ஷங்களைக் கண்டனன். அவை ஸ்த்ரீகளென்றும் பாலரென்றும் முதிர்ந்தவரென்றும் பேதமில்லாமல் அனைவர்க்கும் ஆநந்தம் கொடுப்பவையாகையால் ஸ்த்ரீகளும் புதல்வர்களோடு வ்ருத்தர்களும் அவற்றினருகே வந்து விளையாடலுற்று அவற்றிற்கு மிகுதியும் அழகை விளைத்துக்கொண்டிருந்தனர். மற்றும், அவை தேவேந்த்ரனுடைய நந்தனவனத்திலும் குபேரனுடைய சைத்ரரதவனத்திலும் உள்ள வ்ருக்ஷங்கள்போல் விளக்கமுற்றிருந்தன. அயோத்யாபுரிக்கு இரண்டுநாழிகை வழி தூரத்தில் மரவுரியையும் க்ருஷ்ணாஜினத்தையும் வஸ்த்ரமாகக்கொண்டு ஆஶ்ரமத்தில் வாஸஞ்செய்பவனாகி இளைத்து, ராமன் அதுவரையிலும் வாராமையால் வருந்தியிருக்கின்ற பரதனைக் கண்டனன். அந்தப் பரதன் ஜடைகளைத் தரித்துச் சரீரம் முழுவதும் அழுக்கடைந்து ராமனைப்பிரிந்த சோகத்தினால் இளைத்து இந்த்ரியங்களை அடக்கிக் காய்கிழங்குகளை ஆஹாரமாகக் கொண்டு தாபஸர்களின் நடத்தையில் நிலைநின்று தர்மங்களை ஆசரித்துக்கொண்டிருந்தனன். அவன் பெரிய ஜடாபாரத்தை உயரத் தூக்கிமுடிந்து மரவுரியையும் க்ருஷ்ணாஜினத்தையும் வஸ்த்ரமாகக்கொண்டு வாக்நியமத்துடன் (பேசாமையாகிற வ்ரதத்துடன்) கூடி மனத்தை அடக்கிப் பரமாத்மத்யானஞ் செய்பவனாகி ப்ரஹ்

மர்ஷியைப்போல் பேரொளியுடன் ப்ரகாசித்துக்கொண் டிருந்தனன். மற்றும், அவன் ராமன் கொடுத்த பாதுகைகளை முன்னிட்டு பூமண்டலத்தைப் பாதுகாப்பதாகிற தன் தொழிலை நிறைவேற்றுமவனுகி நான்கு வர்ணத்தவர்க்கும் எவ்வித பயமும் இல்லாமல் ரக்ஷித்துக்கொண்டிருந்தனன். மனவூக்கமுடையவரும் பரிசுத்தருமான மந்த்ரிகளும் புரோஹிதர்களும் ஸேனுதிபதிகளும் காஷாயவஸ்த்ரம்தரித்து அவனைப் பணிந்திருந்தனர்.[1] அவர்கள், ராஜகுமாரனுகிய பரதன் மரவுரிகளையும் க்ருஷ்ணாஜினத்தையும் தரித்திருக்கையில், தர்மத்தில் மிகுதியும் விருப்பமுற்றிருக்கிற தாங்களும் அவனை விட்டு நல்ல வஸ்த்ரம் முதலிய போகங்களை அனுபவிக்கப் பொருதிருந்தனர். வாயுகுமாரனுகிய ஹனுமான் ஸமஸ்ததர்மங்களையும் உணர்ந்து தர்மமே வடிவங்கொண்

---

1 இங்கு 'நஹிதே ராஜபுத்ரம் தம் சிரக்ருஷ்ணாஜிநாம்வரம்। பரிஹோக்தும் வ்யவஸ்யந்தி பௌரா வை யர்மவத்ஸலம்' என்பது மூலம் (பௌராঃ) மந்த்ரிகள் முதலிய பட்டணத்து ஜனங்கள், (பரி)பரதனைச் சுற்றிச் சூழ்ந்திருப்பினும் (தம்ஹரதம் ஹோக்தும் நவ்யவஸ்யந்தி அந்த பரதனை அனுபவிக்க (காண்பதற்கு) முயற்சி கொள்ளாதிருந்தனர். அவனைக் காணும் விஷயத்தில் ஆசையற்றிருந்தனரென்று கருத்து. ஏனென்னில் (ராஜபுத்ரம்) ராமனைப் பிரிந்த உத்தரக்ஷணத்திலேயே மரணம் அடைந்த சக்ரவர்த்தியின் புதல்வனல்லவா இவன். இப்பொழுது ராமன் வாரானுயின், இவனை நாம் எப்படி பெறவோமென்று வருந்தி அவனைக் காணப் பொருதிருந்தனர். அங்ஙனம் காணுதிருந்தமைக்கு மற்றொரு காரணமும் சொல்லுகிருர்—(யர்மவத்ஸலம்) தர்மத்திற்காகச் சரீரத்தை விடுவதில் பிதாவைப்போன்றவன். பதினுன்கு ஸம்வத்ஸரங்கள் கடந்த பின்பும் ராமன் வருவதைக் காணுமையால் ப்ராணன்களை விடமுயன்ற பரதனைக் கண்டு பட்டணத்து ஜனங்கள் வருத்தப்படுவதாக இந்த ச்லோகத்தில் சொல்லப்பட்டது. இங்ஙனம் பூர்வாசார்யர்கள் கூறும்படி.



3333. பரதன் ராமபாதுகைகளை பூஜித்துக்கொண்டு அக்னி ப்ரவேசத்திற்கு ஸித்தனாயிருத்தலும், ஹனுமான் மனுஷ்ய ரூபமாய் வந்து அவனுக்கு ராமன் வருகையைப்பற்றி தெரிவித்தலும், ஸமாதானப்படுத்தலும்.

டாற்போல் ப்ரகாசிப்பவனும் (விதியின்படி அக்னியை வளர்த்தித் தூய்மையுடன் சரீரத்தைவிட விருப்புற்ற வனும்) ஆகிய அந்தப் பரதனைக்கண்டு அஞ்ஜலி செய்து மரவுரி உடுத்து ஜடைகளைத் தரித்து தண்டகாரண் யத்திலிருக்கின்ற எவனைக் குறித்து நீ இங்ஙனம் வருந் துகின்றனையோ, அந்த ராமன் தன் க்ஷேமத்தை உனக் குச் சொல்லும் பொருட்டு என்னை அனுப்பினன். தேவா! ப்ரியமான வார்த்தையை உனக்குச் சொல்லு கிறேன். மிகுதியும் பயங்கரமான இந்த உன் துக்கத்தை யெல்லாம் இதோ துறக்கப்போகின்றனை. ஏனென்னில், நீ இம்முஹூர்த்தத்திலேயே உனது அண்ணனாகிய ராமனுடன் சேருவாய். ராமன் ராவணனைக் கொன்று ஸீதையை மீட்டுக்கொண்டு மனோரதம் (மனக்கருத்து) நிறைவேறப் பெற்று மஹாபலிஷ்டர்களான நண்பர் களோடு வருகின்றனன். மஹாதேஜஸ்வியாகிய லக்ஷ்ம ணனும் வருகின்றனன். பெரும்புகழுடைய ஸீதையும் கருத்து ஈடேறப்பெற்று, தேவேந்த்ரனுடன் இந்த்ரா ணிபோல் ராமனுடன்கூடி வருகின்றனள்' என்றனன். [1] ஹனுமான் இங்ஙனஞ் சொல்லுகையில், பரதன் தமை

1 இங்கு ஹனுமான் பரதனோடு பரிசயமில்லாமையால் அவனுக்கு வந்தனஞ் செய்யவில்லை யென்றுணர்க. அல்லது முன்பு செய்த அஞ் ஜலி வந்தனத்தை முன்னிட்டுக்கொண்ட தென்றுணர்க. அல்லது பரதனிருக்கும் இருப்பைப் பார்த்தவுடனே ப்ரியஸமாசாரத்தை விண் ணப்பஞ் செய்வதற்கு க்ஷணகாலம் தாமதிப்பினும் அவன் ப்ராணன் களை விடுவானென்று சங்கித்து. 'ஸதி குட்யே சித்ரகர்ம' (சுவர் இருப்பின் சித்ரம் எழுதலாம்) என்னும் ந்யாயத்தின்படி தன் வந்த னத்திற்கு விஷயமான வஸ்து நாசமடைகையில் வந்தனஞ் செய்வ தால் ப்ரயோஜனமென்ன? என்று அவனை உஜ்ஜிவிக்கச் செய்யும் ப்ரியவார்த்தையையே முன்பு மொழிந்தானென்று கண்டுகொள்க அல்லது—பரதனைக் கண்டவுடனே தன் ஸ்வரூபத்தை மறந்தானு கையால் வந்தனஞ் செய்யவில்லை யென்றுணர்க, கோவிந்தராஜர்.

யனிடத்தில் மிகுதியும் ப்ரீதியுடையவனுகையால் ஸந்தோஷத்தை அடக்கமுடியாமல் திடீலென்று தரையில் வீழ்ந்தனன். மற்றும், அந்த ஸந்தோஷத்தினுல் மூர்ச்சை அடைந்தனன். ராமன் வருகிருனென்ற வார்த்தைக்கே இப்படியாயின், இனி ராமனே திடீலென்று வருவானுயின், என்னுகுமோ அப்பால் சிறிதுநேரம் கழித்து ரகுகுலகுமாரனும் மஹா பாக்யமுடையவனுமாகிய பரதன் எழுந்து பரபரப்புடன் ப்ரியஸமாசாரஞ் சொல்லுகின்ற ஹனுமானை அணைத்துச் சோகத்தைத் துறந்து ஆநந்தத்தினுல் விளையுங் கண்ணீர்களால் அவன் தேஹத்தையெல்லாம் நனைத்தனன். அவன் ஹனுமானைப் பார்த்து அவனுடைய தேஜஸ்ஸின் பெருக்கினுல் 'மனுஷ்யனு இவன்?' என்று ஸந்தேஹித்து, அவனை நோக்கி 'நல்லியற்கை யுடையவனே! நீ என்னிடத்தில் தயை உண்டாகப்பெற்று இவ்விடம் வந்த தேவதையோ? மனுஷ்யனே? தெரியவில்லை. மிகுதியும் இனிமையாகப் பேசுகின்றனை. இப்படிப்பட்ட உன் ப்ரியவார்த்தைக்குப் பரிசிலாக லக்ஷம்பசுக்களையும் சிறப்புள்ள நூறு க்ராமங்களையும், அழகான குண்டலங்களை அணிந்து நன்னடத்தையும் அமைந்து பொன்னிறம் விளங்கப்பெற்று அழகான மூக்கும் துடையும் சந்த்ரன் போல் ரமணீயமான முகமும் உடையவராகி ஸமஸ்த ஆபரணங்களும் பூண்டு நற்குலமும் நல்லஜாதியும் நேர்ந்து மணம் புரியத்தகுந்தவருமான பதினுறு கன்னிகைகளையும் கொடுக்கின்றேன்' என்றனன். அந்த ராஜகுமாரன் வானரஸிம்ஹனுகிய ஹனுமான் மூலமாய் ராமன் வந்தானென்ற அற்புதமான வ்ருத்தாந்தத்தைக் கேட்டு ராமனைப் பார்க்க விருப்பமுற்று மீளவும் ஸந்தோஷத்தை அடக்கமுடியாமல் ஹனுமானைப் பார்த்து இங்ஙனம்

உரைத்தனன். நூற்று இருபத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஹனுமான் ராமன் சித்ரகூடம் விட்டுப்போனதுமுதல் மீண்டு பரத்வாஜாஸ்ரமம் வந்ததீறுன வ்ருத்தாந்தத்தைப் பரதனுக்கு மொழிந்து நாளை இவ்விடம் ராமன் வருவானென்று கூறுதலும், பரதன் ஆநந்தப்படுதலும்.

'மஹத்தான அரண்யத்திற்குப் பல ஸம்வத்ஸரங்களாகப்போயிருந்த என்னப்பனுகிய ராமனைப் பற்றின இனிய வ்ருத்தாந்தத்தை இப்பொழுதுகேட்கநேரப்பெற்றேனல்லவா? இதனுல் 'மனுஷ்யன் பிழைத்திருப்பானுயின் நூறுண்டுகள் கழிந்தபின்பாயினும் தவறுமல் ஆநந்தம் அடைவான்' என்று லோகத்தில் வழங்கிவருவதான இந்தப் பழமொழி பொய்யாகாமல் மங்களமாயிருப்பதென்றே எனக்குத்தோற்றுகிறது. [1] ராமனுக்கும் வானரர்களுக்கும் சேர்த்தி எங்ஙனம் நேர்ந்தது? எதற்காக உண்டாயிற்று? வினவுகின்றேனுகையால் உள்ளதை உள்ளபடியே மொழிவாயாக' என்றனன். அந்த ராஜகுமாரன் இங்ஙனம் வினவித் தாபஸர்க்குத் தகுந்த ஓராஸனத்தில் அவனை உட்கார வைக்கையில், அப்பால் அவன் அரண்யத்தில் நடந்த ராமவ்ருத்தாந்தத்தையெல்லாம் பரதனுக்குச் சொல்லத்தொடங்கி, 'ப்ரபூ! மஹாபாஹோ! உன் தாயான கைகேயிக்குத் தசரதன்

---

1 வானரர்களோடு சேர்ந்ததைப்பற்றிப் பரதன் இங்கு வினவுகையால் இதற்கு முன்பு ஹனுமான் பரதனுக்கு வானரஸேனைகளைக் கூட்டி வந்ததை ஸாமான்யமாகச் சொல்லியிருக்க வேண்டுமென்று தெரிகிறது.

வரங்கொடுத்ததும், அதனால் ராமன் அரண்யம்போகத் துரத்தப்பெற்றதும், புத்ரசோகத்தினால் தசரதமஹா ராஜன் மரணம் அடைந்ததும், தூதர்கள் உன்னைக் கேகய ராஜக்ருஹத்தினின்று அயோத்யைக்கு அழைத் துக்கொண்டு வந்ததும், நீ அயோத்யைக்கு வந்து சத்ருக்களை அடக்கி ராஜ்யத்தை ரக்ஷிக்கவல்லவனா யிருந்தும் கைப்பற்ற விரும்பாதிருந்தமையும், ஸத் புருஷர்களின் தர்மங்களை அனுஷ்டிக்க முயன்று சித் ரகூட பர்வதத்திற்குப் போய் ராஜ்யத்தை அங்கீக ரிக்க வேண்டுமென்று ராமனை ப்ரார்த்தித்தும், ராமன் தந்தையின் ஆஜ்ஞையில் நின்று ராஜ்யத்தை விரும் பாமல் துறந்ததும், 'நீ அம்மஹானுபாவனுடைய பாது கைகளைப் பெற்றுத் திரும்பி வந்ததும் ஆகிய இந்த வ்ருத்தாந்தங்களெல்லாம் உனக்கு உள்ளபடி தெரிந் திருக்கின்றது. நீ பாதுகைகளைப் பெற்றுக்கொண்டு திரும்பிப் போனபின்பு என்ன நடந்ததோ, அதைச் சொல்லுகிறேன், கேட்பாயாக. நீ திரும்பிப் போன பின்பு அப்பொழுது என்றுங்காணாத புருஷர்களைக் காண்கையால் அவ்வனத்திலுள்ள ம்ருகங்களும் பக்ஷிக ளும் இங்குமங்கும் கலங்கிப் பயந்தோடுகையில் அவ்வ னம் முழுவதும் மிகப்பரிதாப முற்றாற்போலிருந்தது. அப்பால் ராமன் காட்டானைகள் துகைக்கப் பெற்றதும் ஸிம்ஹங்களும் புலிகளும் மிருகங்களும் நிரம்பி ஜனஸஞ் சாரமில்லாமல் மிகுதியும் விஸ்தீர்ணமாயிருப்பதுமான தண்டகாரண்யத்திற்குப் போயினன், ராமலக்ஷ்மணர்க ளும் ஸீதையும் நிர்ஜனமான (ஜனஸஞ்சாரமில்லாத) அரண்யத்திற்குப் போய்க்கொண்டிருக்கையில், பலிஷ்ட னாகிய விராதன் பெருங்கோஷத்துடன் உரைக்க இரைச் சலிட்டுக்கொண்டு அவர்க்கு எதிரே புலப்பட்டனன்

அவன் அங்ஙனம் உரக்கக் கூச்சலிட்டுக்கொண்டு வருகையில், அவர்கள் கால்கள் மேலும் தலை கீழுமாக அவனைப் பிடித்தெடுத்து கர்ஜிக்கின்ற மத்தகஜத்தைப்போல் பள்ளத்தில் [1]விழத்தள்ளிப் புதைத்தனர். அனந்தரம் அண்ணனும் தம்பியுமான அந்த ராமலக்ஷ்மணர்களிருவரும் அங்ஙனம் தேவதைகளுக்குஞ் செய்யமுடியாத அந்தக் கார்யத்தைச்செய்து, அன்று ஸாயங்காலம் அழகாயிருப்பதான சரபங்கமாமுனியின் ஆஸ்ரமத்திற்குப்போயினர். சரபங்கமாமுனிவர் சரீரத்தைத் துறந்து தேவலோகத்திற்குப் போனபின்பு, ஸத்யபராக்ரமனுன ராமன் அங்குள்ள முனிவர் அனைவர்க்கும் நமஸ்கரித்து ஜனஸ்தானம் போய்ச்சேர்ந்தனன். அப்பால் சிறிது காலங்கழித்துச் சூர்ப்பணகை யென்பவள் ராமனிடம் வந்தனள். அனந்தரம் ராமனது ஆஜ்ஞையால் மஹாபலமுடைய லக்ஷ்மணன் திடீலென்று எழுந்து கத்தியைக்கொண்டு அவ்வரக்கியின் காதுமூக்குகளை அறுத்துப் போகட்டனன். மஹானுபாவனுகிய ராமன் அந்த ஜனஸ்தானத்தில் இருக்கும்பொழுது பயங்கரமான செயலுடைய பதினுலாயிரம் ராக்ஷஸர்களை வதித்தனன். அந்த ராக்ஷஸர் பதினுலாயிரம் பேர்களும் ஒன்றுகூடி ராமன்மேல் எதிர்த்துவந்தனர். ஆனுல் ராமனொருவனே அவர்களை எதிர்த்துப்பகலின் நான்காவது ஜாமத்தில் மூன்று நாழிகையில் எல்லோரையும் நிச்சேஷமாகக் கொன்றனன். தண்டகாரண்யத்தில் வாஸஞ் செய்துகொண்டு தவங்களுக்கு விக்னஞ் செய்வதில் மனஊக்க முற்றிருந்த மஹாபலிஷ்டர்களும் மஹாவீர்யசாலிகளுமான அந்த ராக்ஷஸர்க

---

1 இதற்கு 'ப்ரக்ஷிபந்திஸ்ம' என்று மூலம். இது பன்மையாயிருக்கையால் ராமலக்ஷ்மணர்களோடு ஸீதையுங்கூட அவனை விழத்தள்ளுவதில் ஸஹாயமாயிருந்தாளென்று தெரிகிறது.

ளெல்லோரையும் ராமன் யுத்தத்தில் வதித்தனன். அந்த ராக்ஷஸர்கள் யுத்தத்தில் பொடி செய்யப்பெற்றனர். அவர்களுக்கு நாதனுகிய கரனும் மாண்டனன். (தூஷணன் முதலிலேயே மரணம் அடைந்தனன். த்ரிசிரன் அவனைப் பின்றொடர்ந்து முடிந்தனன்.) அங்ஙனம் ராமனுல் விரூபஞ் செய்யப் பெற்றவளும் மூர்க்கையும் (ஒன்றும் தெரியாதவளும்) ஆகிய அந்தச் சூர்ப்பணகை, கராதிகள் மாண்டபின்பு, உடனே ராவணனிடம் போய் தன் வ்யஸனத்தை முறையிட்டனள். ராவணனுடைய வேலைக்காரனும் பயங்கரனுமாகிய மாரீசனென்னும் ராக்ஷஸன் ரத்னமயமான ஓர் மானுருவம் தரித்து ஸீதையின் முன்னே உலாவி அவளை ஆசைப்படுத்தினன். அப்பால் ஸீதை ராமனைப் பார்த்து 'இந்த மானைப் பிடித்துக் கொடுப்பாய். இது இருக்குமாயின் நமது ஆஸ்ரமம், ஆ! மிகுதியும் அழகாகி மனத்திற்கினிதாயிருக்கும்' என்றனள். அனந்தரம் ராமன் தனுஸ்ஸை எடுத்துக்கொண்டு அந்த ம்ருகம் பறந்தோட, அதைத் துரத்திக்கொண்டு போயினன். அப்பால் அது அகப்படாமல் ஓடுவதைக் கண்டு அது மாயை யென்றறிந்து வளைந்த கணுக்களையுடைய ஓர் பாணத்தினுல் அதை அடித்தனன். நல்லியற்கையுடையவனே! அப்பால் ராமன் மானைத் தொடர்ந்து போய்க்கொண்டிருக்கையில், லக்ஷ்மணனும் புறப்பட்டு ராமனைப் பின்றொடர்கையில், அப்பொழுது ராவணன் இது ஸமயமென்று ராமனது ஆஸ்ரமத்தில் நுழைந்தனன். ஆகாயத்தில் அங்காரகக்ரஹம் ரோஹிணியைப் பிடிப்பதுபோல், அவன் பலாத்காரமாக ஸீதையைப் பிடித்துக்கொண்டு போகையில், உடனே அவளைப் பாதுகாக்க விரும்பிக் குறுக்கே வந்த ஜடாயுவென்னும் கழுகு ராஜனை யுத்தத்தில் வதித்தனன். அந்த ராவணன், இங்ஙனம் பலாத்காரமாக

ஸீதையை எடுத்துக்கொண்டு வேகமாகப் போயினன். அனந்தரம் பர்வதம்போல் அற்புதமான உருவமுடைய வானரர்கள் ருஶ்யமூகபர்வதத்தினின்று, ஸீதையை எடுத்துக்கொண்டு போகின்ற ராக்ஷஸநாதனுகிய ராவணனை ஆச்சர்யத்துடன் கண்டனர். அனந்தரம் மஹாபலனும் லோகங்களை அழப்படுத்துந் தன்மையனுமாகிய அந்த ராவணன் (மிகுந்த வேகத்துடன் சென்று மனோவேகமுடைய புஷ்பகவிமானத்தில் ஏறி) ஸீதையுடன் லங்கையில் ப்ரவேசித்தனன். ராவணன் அந்த ஸீதையைப் பொன்பூச்சு பூசப்பெற்று மிகவும் அழகாயிருப்பதான ஓர் பெரிய மந்திரத்தில்(வீட்டில்)வைத்து,நல்வார்த்தைகளால் ஆஶ்வாஸப்படுத்தினன். ஸீதை அவ்வார்த்தைகளையும் அந்த ராக்ஷஸராஜனையும் த்ருண்மாக நினைத்துச் சிறிதும் பொருள் செய்யாதிருப்பது கண்டு, ராவணன் அப்பெண்மணியை அசோகவனிகைக்கு அனுப்புகையில், அவள் அங்கேயே இருந்தனள். அப்பால் ராமன் அம்மஹாவனத்தில் அந்த ம்ருகத்தைக் கொன்று திரும்பி ஆஶ்ரமத்திற்கு வந்தனன். அங்ஙனம் அவன் திரும்பி வந்து ஸீதையையும் கழுகுராஜனுகிய ஜடாயுவையும் காணுமல் மிகுதியும் வருத்தமுற்றனன். அப்பால் ஸ்ரீராமன் லக்ஷ்மணனும் தானுமாக ஸீதையைத் தேடிக்கொண்டு போய்த் தன் தந்தைக்கு நண்பனுகிய ஜடாயு மாண்டு விழுந்திருப்பதைக் கண்டு, அவனுக்கு அக்னிஸம்ஸ்காரஞ் செய்து கோதாவரிக் கரையிலும் அங்குப் புஷ்பித்திருக்கின்ற அரண்ய ப்ரதேசங்களிலும் ஸீதை புஷ்பங்களுக்காக வந்திருப்பளோ என்னவோ என்று ஸஞ்சரித்தனன். அனந்தரம் ஸத்யபராக்ரமனுன ராமன் கபந்தனுடைய வசனத்தைக் கேட்டு, ருஶ்யமூக பர்வதத்திற்குப் போய் அங்கு ஸுக்ரீவனேடு கலந்த

னன். அந்த ராம ஸுக்ரீவர்களிருவரும் ஒருவரை யொருவர் பார்த்துக்கொள்வதற்கு முன்னமே ஒருவர்க் கொருவர் ஸ்னேஹஞ் செய்துகொள்ளவேண்டுமென்று விருப்பம் உண்டாயிற்று. முன்பு ஸுக்ரீவனை அவன் தமையனுகிய வாலி கோபித்து ராஜ்யத்தினின்று ஓடிப் போகும்படி துரத்தியிருந்தனன். அந்த ராமஸுக்ரீவர்க ளிருவரும் தந்தமது ப்ரயோஜனங்களை ஒருவரோடொரு வர் சொல்லிக்கொள்கையில் அவர்க்கு ஸ்னேஹம் மிகு தியும் வளர்ந்து வந்து ராமனது புஜபராக்ரமத்தினுல் ஸுக்ரீவன் மஹாசரீரமுடையவனும் மஹாபலிஷ்டனு மாகிய வாலியை யுத்தத்தில் வதித்து வானரராஜ்யத் தைப்பெற்று நிலைமை அடைந்தனன். ஸுக்ரீவன் ராஜ் யத்தில் பட்டங் கட்டிக்கொண்டு ஸமஸ்த வானரர்க ளோடுங்கூடினன். மற்றும், அவன் ராஜகுமாரத்தியான ஸீதையைத் தேடுவிப்பதாக ராமனுக்கு ப்ரதிஜ்ஞை செய்தனன். மஹானுபாவனும் வானரர் தலைவனுமாகிய ஸுக்ரீவன் ஆஜ்ஞை செய்கையில் ஸீதையைத் தேடும் பொருட்டுப் பத்துக்கோடி வானரவீரர்கள் ஸமஸ்த திசைகளுக்கும்போயினர். அங்ஙனம் ஸீதையைத்தேடும் பொருட்டு அனுப்பப்பட்ட வானரர்களில் நாங்கள் பர்வத ஸ்ரேஷ்டமான விந்த்யபர்வதத்திலேயே வெகு காலம் ஓர் பிலத்தில் வெகுதூரம் போய் வழிதெரியாமல் மிகுந்த சோகத்தினுல் பரிதபித்துக் கொண்டிருக் கையில் வெகுகாலம் கடந்தது. ஜடாயுவுக்குத் தமைய னும் பராக்ரமசாலியுமான ஸம்பாதி, ஸீதாதேவிலங்கை யில் ராவணக்ருஹத்தில் இருக்கிருளென்று எங்களுக்குச் சொல்லினன்; அப்பொழுது நான், பந்துக்களான வான ரர்களெல்லோரும் துக்காவேசமுற்றிருப்பது கண்டு அவர்களுடைய துக்கத்தைப் போக்கடிக்க முயன்று

என் பலத்தைக் கைப்பற்றி நூறு யோஜனைதூரம் விஸ்தாரமுடைய ஸமுத்ரத்தைத் தாண்டினன். அந்தராவணனது க்ருஹத்தில் அசோகவனிகையில் ஸீதைதனியளாயிருக்கக் கண்டனன். அப்பெண்மணி முன்பு உடுத்திருந்த பட்டு வஸ்த்ரத்தோடுகூடி அங்கங்களெல்லாம் அழுக்கடையப் பெற்று மனக்களிப்பற்றுப் பாதிவ்ரத்யமென்னும் வ்ரதத்தை மாத்ரம் கைவிடாமல் திடமாகக்கொண்டிருந்தனள். நான் விதிப்படி அப்பெண்மணியைக் கண்டு நிந்தைக்கிடமில்லாத அந்த ஸுந்தரியின் வ்ருத்தாந்தத்தையெல்லாம் வினவித் தெரிந்துகொண்டு (அடையாளத்திற்காக ராமன் கொடுத்த சிறந்த மோதிரத்தைக் கொடுத்தனன். ஸீதை என்னைப் பார்த்து மீளவும் பிழைப்பில் ஆசை உண்டாகப்பெற்றனள்). ஸீதை மிகுந்த ஒளியுடன் விளங்குகின்ற தன் சூடாமணியை ராமனிடம் அடையாளமாகக் கொடுக்கும்படி என் கையில் கொடுத்தனள். (நான் அப்பொழுது ராவணனுடைய மனத்திற்கு மிகுதியும் ப்ரியமான அசோகவனிகையை த்வம்ஸஞ் செய்துமேலான ராக்ஷஸர்களையும் யுத்தத்தில் வதித்து லங்கையைப் பஸ்மஞ் செய்து மனக்களிப்புடன் சூடாமணியை அடையாளமாக வாங்கிக்கொண்டு ப்ரயோஜனம் கைகூடப்பெற்றுத் திரும்பிவந்தனன்) நான் திரும்பி வந்து எப்படிப்பட்ட கார்யத்தையும் விரைந்து செய்யுந்திறமையுடைய ராமனைக் கண்டு, அவனுக்கு அடையாளமாக ஸீதை கொடுத்ததும் பேரொளியுடையதுமான அம்மஹாமணியைக் கொடுத்தனன்; ரோகம் தலைக்கு மேலேறி ப்ராணன்கள் புறப்படும் பொழுது அம்ருதபானஞ் செய்து ரோகமுடையவன் மீளவும் பிழைப்பதுபோல், இதற்கு முன்பு பிழைப்பதில் ஆசையற்றிருந்த ராமன் ஸீதையின்

க்ஷேமவ்ருத்தாந்தத்தைக் கேட்டு ஸந்தோஷம் அடைந்து மீளவும் ப்ராணன்மேல் ஆசை உண்டாகப்பெற்றனன். அப்பால் ராமன் லங்கைக்குப் போக முயன்று மனத்தில் ராவணனை வதிக்கமிகுதியும் விருப்பமுற்று ப்ரளயகாலத்தில் மூன்று லோகங்களையும் ஸம்ஹரிக்க விரும்பி மேலெழுந்து வளர்ந்த காலாக்னிபோல் ஆயினன். அனந்தரம் ராமன் ஸமுத்ரஞ் சேர்ந்து நளனைக்கொண்டு ஸேது கட்டுவித்தனன். அந்த ஸேதுவின் வழியாகவே வானர ஸைன்யமெல்லாம் ஸமுத்ரத்தைக் கடந்தது. நீலன் ப்ரஹஸ்தனைக் கொன்றனன். லக்ஷ்மணன் இந்த்ரஜித்தை முடித்தனன், ராவணனை ராமன் தானே வதித்தனன். அப்பால் இந்த்ரன் யமன் வருணன் சிவன் ப்ரஹ்மதேவன் ஸ்வர்க்கத்திலிருக்கும் தசரதன் ஆகிய இவர்கள், செல்வப் பெருக்கனும் சத்ருக்களை அழிப்பவனுமாகிய ராமனிடம் வந்து அவனுக்கு வரங்கொடுத்தனர். ரிஷிகளும் தேவ ரிஷிகளும் வந்து ராமனுக்கு வரமீந்தனர். ராமன் அங்ஙனம் தேவதைகளிடம் வரம்பெற்று அதனல் மரணம் அடைந்த வானரர்களைப் பிழைப்பித்து அவர்களுடன்கூடி ஸந்தோஷம் அடைந்து புஷ்பகவிமானத்தில் ஆரோஹித்துக் கிஷ்கிந்தைக்கு வந்தனன். அவன் இப்பொழுது மீளவும் கங்கையின் கரைக்கு வந்து பரத்வாஜாஶ்ரமத்தில் அம்முனிவரது ஸந்நிதானத்தில் இருக்கின்றனன். நாளைப் புஷ்ய நக்ஷத்ரத்தில் நீ அவனை நிர்விக்னமாக (இடையூறின்றி)க் காணலாம். (புஷ்யயோகம் பெறுவதற்காக இப்பொழுது கங்கையின் கரையில் இருக்கின்றான்)' என்றனன். அப்பால் பரதன் உண்மையும் பெரும்பொருள் அடங்கியதுமான ஹனுமானுடைய வார்த்தையைக் கேட்டு ஸந்தோஷம் அடைந்து அஞ்சலி செய்து 'வெகுகாலம் கழித்து என் மனோரதம்




3343. பரதன் பாதுகைகளைச் சிரஸாவஹித்துக்கொண்டு
ராமனை எதிர்கொள்ளல்.

ஈடேறிற்று' என்று மனத்தில் மிகுதியும் ஸந்தோஷம் விளைப்பதான வசனத்தை மொழிந்தனன். நூற்றிருபத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

{பரதன் பட்டணத்தை அலங்கரிக்கும்படி ஆஜ்ஞைசெய்து சத்ருக்னுதிகளுடன் ராமனிடம் போதலும், ராமன் பரதாஸ்ரமத்திற்குவந்து புஷ்பகவிமானத்தைக் குபேரனுக்குக்கொடுத்து பரதாஸ்ரமத்தில் வஸிஷ்டாதிகளுடன் உட்கார்ந்திருத்தலும்.}

சத்ருவீரர்களை அழிக்கும் ஸத்ய பராக்ரமனுன பரதன் மிகுதியும் ஆநந்தம் விளைப்பதான ஹநுமானுடைய வசனத்தைக் கேட்டு ஸந்தோஷ முற்றிருக்கின்ற சத்ருக்னனைப் பார்த்து இங்ஙனம் கட்டளையிடத் தொடங்கி 'புருஷர்கள் பரிசுத்தர்களாகி ஸமஸ்த தேவதைகளையும் பட்டணத்திலுள்ள நாற்சந்தி மண்டபங்களையும் நல்ல கந்தங்களாலும் பூமாலைகளாலும் வாத்யங்களாலும் பூஜிப்பார்களாக. ஸ்தோத்ரங்களிலும் புராண கதைகளிலும் ப்ராஜ்ஞர்களான ஸ்துதி பாடகர்களும் பட்டணத்திலுள்ள வைதாளிகர்களனைவரும், வாத்யம் வாசிக்கத்தெரிந்த எல்லோரும் வேச்யா ஸமூஹங்களும் (வேசிக்கூட்டங்களும்) சந்த்ரன்போன்ற ராமனது முகத்தைப் பார்க்கப் புறப்படுவார்களாக' என்றனன். பரதன் சொன்னதைக் கேட்டுச் சத்ருவீரர்களை முடிக்குந் திறமையுடைய சத்ருக்னன் கூலிக்காரர்கள் பலரையும் வரவழைத்து 'நந்திக்ராமத்தினின்று அயோத்யை வரையிலும் பள்ளங்களில் மண்ணிட்டுத் தூர்த்தும் மேடுகளை அழித்து ஒழுங்குபடுத்தியும் பூமியையெல்லாம் மேடுபள்ளமில்லாமல் ஸமமாகச் செய்யவேண்டும். அன்றியும், சிலர் பூமிமுழுவதும் பனி

போல் குளிர்ந்த தண்ணீரால் நனைத்து அப்பால் முழுவதும் நிரம்பப்பொரிகளையும் புஷ்பங்களையும் இறைப்பார்களாக. ஸூர்யன் உதயம் ஆவதற்கு முன்னமே பட்டணங்களிற் சிறந்த அயோத்யையின் ராஜமார்க்கங்களில் த்வஜங்களை எடுத்துக் கட்டுவார்களாக. வரிசை வரிசையாகப் புஷ்பஸரங்களைக் கட்டித் தாமரை நெய்தல் முதலிய விடுதிப்புஷ்பங்களை இறைத்து க்ருஹங்களை அலங்கரிப்பார்களாக. விசாலமான ராஜமார்க்கத்தில் அனேகமாயிரம் மனிதர் நன்மணங்கமழ்கின்ற ஐந்துநிறமுடைய சூர்ணங்களால் கோலமிட்டு அலங்காரஞ் செய்வார்களாக' என்று ஆஜ்ஞாபித்தனன். ராஜபார்யைகளும் மந்த்ரிகளும் ஸேனாஜனங்களும் ஸைனிகர்களின் (ஸேனாஜனங்களின்) பார்யைகளும் ப்ராஹ்மணர்களும் க்ஷத்ரியர்களும் சேரிகளிலிருக்கும் ப்ரமுகர்களும் மற்றுமுள்ள ஜனக்கூட்டங்களும் ராமனைப் பார்க்கப் புறப்பட்டனர். த்ருஷ்டி ஜயந்தன் விஜயன் ஸித்தார்த்தன் அர்த்தஸாதகன் அசோகன் மந்த்ரபாலன் ஸுமந்த்ரன் ஆகிய இவர்கள் ஸ்வர்ண ஆபரணங்களால் அலங்கரிக்கப்பெற்ற மத்தகஜங்களின்மேல் ஏறிக்கொண்டு அனேகமாயிரம் யானைகளோடு புறப்பட்டனர். ராஜனுக்கு அந்தரங்கரான வேறு சில புருஷர்கள் பொன்மயமான வயிற்றுப் பட்டையுடைய பெண் யானைகள் மேலும், மஹா ரதிகர்களான சிலர் நல்ல குதிரைகள் பூட்டின ரதங்கள்மேலும் ஆரோஹித்துப் புறப்பட்டனர். அவ்வண்ணமே பொன்னலங்காரஞ் செய்யப் பெற்றுப் போர்வீரர்கள் ஆரோஹித்திருப்பனவாகிய அநேகமாயிரம் மேலான குதிரைகளும் சக்தி அஷ்டி ப்ராஸம் த்வஜம் பதாகை ஆகிய இவைகளைத் தரித்த அனேகமாயிரம் காலாட்களும் சூழ்ந்து வரப்பெற்று வீரர்கள் புறப்பட்டனர். அப்பால்

கைகேயியோடு தசரத பார்யைகளனைவரும் கௌஸல்யையையும் ஸுமித்ரையையும் முன்னிட்டுக்கொண்டு தண்டிகைகளின் மேலேறிப் புறப்பட்டனர். தசரதபார்யைகளனைவரும் அப்பொழுது நந்திக்ராமத்திற்குவந்தனர். அயோத்யா புரத்திலுள்ளவர் அனைவரும் அப்பொழுது நந்திக்ராமம் வந்து சேர்ந்தனர். ரதகஜ துரகபதாதிகள்(தேர்யானை குதிரை காலாட்கள்)ஆகிய நான்கு வகைப்பட்ட ஸைன்யங்கள் நடந்து போகும்பொழுது குதிரைகளின் குளப்படியோசையாலும் தேர்களின் சக்ரக்கட்டுகளாலுண்டாகும் த்வனிகளாலும் சங்கம் பேரி முதலிய வாத்யங்களின் த்வனிகளாலும் பூமி நடுக்கமுற்றாற்போலிருந்தது. பரதன் மஹானுபாவனும் ஸமஸ்த தர்மங்களையும் உணர்ந்த மஹாதார்மிகனுமாகையால் தமையனுக்காக உபவாஸங்களால் இளைத்து மனக்களிப்பற்று மரவுரியையும் க்ருஷ்ணாஜினத்தையும் தரித்திருந்தனன். மற்றும், அப்பொழுது ஹனுமான் மூலமாக ராமன் வரவைக்கேட்டு ஸந்தோஷ முற்றிருந்தனன். அப்படிப்பட்ட பரதன் அப்பொழுது ப்ராஹ்மணோத்தமர்களும் வர்த்தகர்களும் அந்தந்தச் சேரியிலுள்ள ப்ரமுகர்களும் சூழ்ந்து வரவும், வஸிஷ்டாதி மந்திரிகள் பூமாலைகளையும் மோதகங்களையும் (குழக்கட்டை, அல்லது லட்டு) கையில்கொண்டு பின்றொடரவும், சங்கம் பேரி முதலிய வாத்யங்கள் முழங்கவும், ஸ்துதிபாடகர் பிருதங்களைச் சொல்லிப் புகழவும் பெற்று ராமபாதுகைகளைச் சிரஸில் தரித்து வெளுத்த பூமாலைகளால் அலங்கரித்த வெண்கொற்றக் குடையையும் பொன் காம்பிடப்பெற்று ராஜார்ஹமான (ராஜனுக்குரியதான) வெண்சாமரங்களையும் எடுத்துக்கொண்டு ஸுமந்த்ரர் முதலிய மந்த்ரிகளோடு ராமனை எதிர்கொள்ளப் போயினன்.

பரதன் சிறிதுநேரம் எதிர்பார்த்து அப்பால் ஹநுமானை நோக்கி 'உனக்கு, வானரர்களுக்கு இயற்கையாகவே உண்டாயிருக்கும் சித்தசாபல்யம் (மனச்சஞ்சலம்)நேரா தல்லவா? அதனால் வெறுமனே ராமன் வருகிறானென்று சொல்லமாட்டா யல்லவா! ஏனென்னில், ககுத்ஸ்த்த குலதிலகனும் பூஜிக்கத் தகுந்தவனும் சத்ருக்களை அழிப்பவனுமாகிய ராமன் இன்னம் புலப்படவில்லையே! அவன் தூரத்தி விருப்பினும் அவனது ஸேனையின் முன்னே வரும் வானரர்களாவது புலப்படவேண்டுமே! அவரும் புலப்படவில்லையே! அவர்கள் காமரூபிகளாகை யால் ஸ்வரூபத்துடன் புலப்படாமற் போயினும் வேறு உருவத்தோடாயினும் புலப்பட வில்லையேனோ? என்று வினவினன். பரதன் இங்ஙனஞ் சொல்லுகையில் ஹநுமான் ஸத்யபராக்ரமனான அவனைப் பார்த்து ராம னும் வானரர்களும் வருதற்குத் தாமதப்படும் காரணத் தை விண்ணப்பஞ்செய்ய முயன்று 'பரத்வாஜ முனிவ ரது அனுக்ரஹத்தினால் வ்ருக்ஷங்களெல்லாம் எப்பொ ழுதும் பழமும் காயும் பூவும் நிறைந்து வண்டுகள் மதித்து ஜங்காரஞ் செய்யப்பெற்றுத் தேனைப்பெருக்கிக் கொண்டிருக்கின்றன. வானரர்கள் அவற்றைப் பற்றி ஸந்தோஷ முற்றிருக்கின்றனர். பரந்தபனே! தேவேந் த்ரன் அந்த ராமனுக்கு வானரர்களிருக்கு மிடத்தில் வ்ருக்ஷங்கள் எல்லாக்காலத்திலும் பலிப்பனவாயிருக் கும்படி வரங்கொடுத்தனன். அங்ஙனமே பரத்வாஜ மஹர்ஷியும் ராமனுக்கும் அவனுடைய ஸேனாஜனங்க ளுக்கும் ஸமஸ்த குணங்களும் அமைந்திருப்பதான ஆதித்யத்தை (விருந்துணவைக்) கொடுத்தனர். இப் பொழுது வானரஸேனை கோமதிநதியைத் தாண்டுகிற தென்று நினைக்கின்றனன். ஏனென்னில், வானரர்கள்

ஸந்தோஷத்துடன் செய்யும் கோலாஹலத்வனி இதோ பயங்கரமாகச் செவிப்படுகின்றது. அதோ வாலுகினீ நதிக்கு நேராக மழைபெய்தாற்போல் மேல் கிளம்பிப் புலப்படுகின்ற ரேணுவை (தூளை)க் காண்பாய். இதனால், வானரர்கள் வாலுகினீ நதியில் வருவதாகத்தோற்று கின்றது. வானரர்கள் இப்பொழுது ரமணீயமான ஸாவனத்தில் வ்ருக்ஷங்களை அசக்கிக்கொண்டு விளையாடுகிறார் களென்று நினைக்கின்றனன். இங்ஙனம் வானரர்கள் விளையாடிக்கொண்டு வருகையால் தாமதமன்றி, வேறில்லை), அதோ தூரத்தில் சந்த்ரன்போல் நிர்மலமான புஷ்பகவிமானம் புலப்படுகின்றது. இதை ப்ரஹ்மதேவன் மனத்தினாலேயே நிர்மித்தனன். மஹானுபாவனாகிய ராமன் ராவணனை பந்துக்களோடுகூடவதித்து இதைப் பெற்றனன். பாலஸூர்யன்போல் ப்ரகாசிப்பதும் ராமன் ஏறிக் கொண்டு வருவதுமான இந்த திவ்யவிமானம் ப்ரஹ்ம தேவனது அனுக்ரஹத்தினால் குபேரனுக்குக் கிடைத்தது. மனோவேகத்துடன் போகுந்தன்மையுடையது. இதில் வீரர்களும் அண்ணன்தம்பிகளுமான ராமலக்ஷ்மணர்களும் ஸீதாதேவியும் மஹாதேஜஸ்வியாகிய ஸுக்ரீவனும் ராக்ஷஸ ராஜனான விபீஷணனும் உட்கார்ந்திருக்கின்றார்கள்' என்றனன். அப்பால் 'இதோ ராமன் வந்தான்' என்றவுடனே ஸ்த்ரீகளும் பாலர்களும் வயதுசென்றவர்களும் ஸந்தோஷம் வளரப்பெற்றுச் செய்யுங் கோலாஹலத்வனி ஆகாயத்தை அளாவி நின்றது. அம்மனிதர்களனைவரும் தேர் யானை குதிரை முதலிய வாஹனங்களினின்று இறங்கித் தரையில் நின்றிருந்து ஆகாயத்தில் சந்த்ரன்போல் புஷ்பகவிமானத்தில் விளங்கும் ராமசந்த்ரனைக் கண்டனர். அதன்பிறகு பரதன் மிகுந்த ஸந்தோஷத்துடன் ராமனுக்கு எதிரே நின்று

கைகளைக் கூப்பி, 'பதினுன்கு ஸம்வத்ஸரங்கள் நிறைந்தவுடனே மீளவும் தவருமல் வருவேனென்ற வார்த்தையைப்பழுது செய்யாமல் ராமன் விஜயஞ் செய்தான்' என்று அவனைக் கொண்டாடினன். பரதனுக்குத் தமையனுகிய ராமன் அகன்று நீண்ட கண்களுடன் விளக்கமுற்று, ப்ரஹ்ம தேவன் மனத்தினுல் நிர்மித்த அந்த திவ்யவிமானத்தில் வீற்றிருந்து இரண்டாவது தேவேந்த்ரன்போல் ப்ரகாசித்தனன். அப்பொழுது பரதன் மேருபர்வதத்திலிருக்கும் ஸூர்யனுக்கு நமஸ்காரஞ் செய்வதுபோல், புஷ்பகவிமானத்திலிருக்கும் ராமனுக்கு மனத்தூய்மையுடன் நமஸ்கரித்தனன். அப்பால் ஹம்ஸம் போன்ற ப்ரதிமைகள் அமைக்கப்பெற்றதும் மஹாவேகமுடையதும் மிக்க சிறப்புற்றதுமான அவ்விமானம் ராமனது அனுமதியினுல் பூமியில் இறங்கிற்று. அப்பால் ராமன் ஸத்யபராக்ரமனுன பரதனைப் புஷ்பகவிமானத்தில் ஏற்றிக் கொள்கையில் அவன் ராமஸாந்நித்யம் அடைந்து ஸந்தோஷம் பெற்று மீளவும் ராமனுக்கு (நமஸ்காரஞ் செய்தனன். ராமன் நெடுநாள் கழித்துக்) கண்களில்பட்ட தம்பியாகிய பரதனை எடுத்துத் தன் துடையில் உட்காரவைத்துக் கொண்டு ஸந்தோஷத்துடன் அழுந்தக் கட்டியணைத்தனன். அப்பால் பரதன் தனக்கு நமஸ்காரஞ் செய்த லக்ஷ்மணனைக் கௌரவித்து, [1] ஸீதாதேவிக்குத் தான் நமஸ்கரித்து ஸங்

---

1 இங்கு லக்ஷ்மணன் செய்ய முயன்ற நமஸ்காரத்தை பரதன் ராமஸந்நிதியில் வேண்டாமென்று தடுத்ததாகச் சிலர் கூறுவர். பரதன் லக்ஷ்மணனை வெகுமதித்த பின்பு ஸீதாதேவிக்கு நமஸ்கரித்ததாகச் சொல்லுகையால் ஸீதை ராமனது ஸமீபத்திலேயே தாரை முதலியவர்களோடு சிறிது அப்புறம் ஒதுங்கியிருந்தாளென்று தெரிகிறது கோவிந்தராஜர்.

ஸந்தோஷத்துடன் தனது பேரையும் சொல்லினன். பரதன் ஸுக்ரீவனையும் ஜாம்பவானையும் அங்கதனையும் த்விவிதனையும் நீலனையும் ருஷபனையும் ஆலிங்கனஞ் செய்து கௌரவித்தனன் மற்றும். அவன், கவாக்ஷன் கந்தமாதனன் சரபன் பனஸன் ஆகிய இவர்களையும் ஆலிங்கனஞ் செய்து கௌரவித்தனன். அவ்வானரர்களனைவரும் காமரூபிகளாகையால் முன்னமே மனுஷ்ய ரூபம் தரித்திருந்தனர். ஆகையால் அவர்கள் அப்பொழுது பரதனைப் பார்த்து ஸந்தோஷம் அடைந்து க்ஷேமம் வினவினர். அப்பால் மஹாதேஜஸ்வியும் தார்மிகஸ்ரேஷ்டனுமாகிய அந்த ராஜகுமாரன் வானரர்தலைவனான ஸுக்ரீவனை மீளவும் ஆலிங்கனஞ் செய்து 'ஸுக்ரீவா! நீ எங்கள் நால்வர்க்கும் ஐந்தாவது உடன்பிறந்தோனாயினை. உலகத்தில் நன்மனத்துடன் உபகாரஞ் செய்பவன் நண்பனாவான். தீமனத்துடன் அபகாரஞ் செய்பவன் சத்ருவாவான். அபகாரமே சத்ருவுக்கு லக்ஷணம் (அடையாளம்)' என்றனன். பின்பு பரதன் விபீஷணனைப் பார்த்து, நல்வார்த்தையுடன் 'எமது பாக்யவசத்தினால் நீ ராமனுக்கு ஸஹாயமாயிருந்து மிகுதியுஞ் செய்யமுடியாத கார்யத்தைச் செய்தனை' என்றனன். அப்பொழுது சத்ருக்னனும் ராமலக்ஷ்மணர்களுக்கு நமஸ்காரஞ் செய்து, உடனே ஸீதாதேவியின் பாதாரவிந்தங்களில் வணக்கத்துடன் ப்ரணாமஞ் செய்தனன். ராமன், சோகத்தினால், இளைத்து மிகுதியும் புலம்பிக் கொண்டிருந்த தன் தாயான கௌஸல்யையிடம் போய் 'முன்பு வேண்டாமென்று மறுக்கினும் கேளாமற் போனதற்கு மனவருத்தப் படவேண்டாம்' என்று அவள் மனக்கலக்கம் தீர்த்து அவளது பாதங்களைப் பிடித்துக் கொண்டு நமஸ்காரஞ் செய்தனன். ராமன் ஸுமித்

ரைக்கும் [1]கீர்த்தி மதியான கைகேயிக்கும் மற்றுமுள்ள தாய்மார்களனைவர்க்கும் நமஸ்கரித்து, உடனே புரோஹிதரான வஸிஷ்டரிடம் வந்து நமஸ்கரித்தனன். பட்டணத்து ஜனங்களனைவரும் ராமனைக் கண்டு 'மஹாபாஹூ! கௌஸல்யைக்கு ஸந்தோஷம் விளைப்பவனே! உனக்கு நல்வரவாக வேண்டும்' என்றனர். அந்தப் பட்டணத்து ஜனங்கள் அங்ஙனம் தாமரை மலர்போல் செய்த பலவாயிரம் கை கூப்புதல்களைக் கண்டு ராமன் ஆதரித்தனன். பரதன் தர்மங்களை அறிந்தவனுகையால் முன்பு தன்னிடம் ராமன் கொடுத்திருந்த அந்தப் பாதுகைகளைக் கையில் கொண்டு நரநாதனுகிய ராமனது பாதங்களில் தானே தொடுத்தனன் அப்பொழுது பரதன் அஞ்சலி செய்து ராமனைப் பார்த்து 'ராஜனே! நான் நிக்ஷேபமாக (வைப்பாக) ரக்ஷித்துக் கொண்டிருந்த இந்த ராஜ்யத்தை இதோ உனக்கு ஒப்புவித்துவிட்டனன். நீ மீளவும் அயோத்யைக்கு வந்து ராஜனுயிருக்கக் காண்கிறேனுகையால் இப்பொழுது என் ஜன்மம் பயன் பெற்றது. இப்பொழுது என் கருத்தெல்லாம் நிறைவேறிற்று. நீ பொக்கசத்தையும் தான்யசாலைகளையும் பட்டணத்தையும் ஸைன்யத்தையும் பார்த்துக் கொள்வாயாக. உன் ப்ரபாவத்தினுல் அனைத்தும் நீ போகும் பொழுதிருந்ததை விட இப்பொழுது பத்துமடங்கதிகமாய் வ்ருத்தி அடைந்திருக்கின்றது' என்றனன். அங்ஙனம் மொழிகின்ற பரதனுக்குத் தனது அண்ணனிடத்திலுள்ள பக்தியின் மிகுதியைக் கண்டு தமது வம்சத்திலுள்ளவர்க்கு இப்படிப்பட்ட உடன் பிறந்தவர் இல்லா

---

1 இங்குக் கைகேயியைக் கீர்த்திமதி யென்றது ராவணுதிவத ரூபமான தேவகார்யம் நடத்துவதற்கு அப்பெண்மணி காரணமானதைப் பற்றியென்று தெரிகிறது.



3350. ராமன் புஷ்பகவிமானத்திலிருந்து இறங்குதலும், பரதன் பாதுகைகளை ஸமர்ப்பித்து அவைகளை தரித்துக் கொள்ள ராமனை ப்ரார்த்தித்தலும்.

மைக்கு வானரர்களனைவரும் ராக்ஷஸனான விபீஷண னும் கண்ணீர் பெருக்கினர். அப்பால் ராமன் ஸந்தோஷத்துடன் பரதனைத் தன்மடிமேல் உட்காரவைத்துக் கொண்டு ஸைன்யத்துடன் கூட அந்தப் புஷ்பகவிமானத்தின் வழியாகவே பரதனது ஆஸ்ரமமாகிய நந்திக்ராமத்திற்குப் போயினன். ராமன் நந்திக்ராமஞ் சேர்ந்த பின்பு ஸைன்யங்களும் தானுமாகப் புஷ்பக விமானத்தினின்று பூமியில் இறங்கினன். அப்பொழுது ராமன் மிகுதியும் சிறந்ததாகிய அவ்விமானத்தைக் கண்டு 'நீ இனி, குபேரனுக்கு வாஹனமாயிருப்பாயாக; அநுமதி கொடுத்தேன்; போவாய்' என்றனன். அனந்தரம் மேன்மையுடையதாகிய அவ்விமானம் ராமனிடம் அநுமதி பெற்று வடதிசை வழியாகச் சென்று குபேர பவனஞ் சேர்ந்தது. தேவேந்த்ரன் ப்ருஹஸ்பதியின் பாதங்களில் நமஸ்கரிப்பதுபோல் ராமன் தனக்குத் தகுந்த புரோஹிதரான வஸிஷ்டரது பாதங்களைப் பிடித்துக் கொண்டு நமஸ்கரித்து அவரும் தானுமாக அழகான ஆஸனங்களில் தனித்தனியே ஒரேகாலத்தில் உட்கார்ந்தனன். நூற்று முப்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

{ ராமன் அயோத்யைக்குச்சென்று பட்டாபிஷேகங் கொண்டருளி ஸுக்ரீவாதிகளை விடைகொடுத்தனுப்புதலும், பரதனுக்கு யௌவராஜ்யத்தில் பட்டங்கட்டுதலும், ராமன் ராஜ்யபரிபாலனஞ் செய்த வைபவமும், பலஸ்ருதியும். }

பரதன் சிரஸ்ஸில் அஞ்சலி செய்து கைகேயிக்கு ஸந்தோஷம் வளர்ந்து பெருகும்படி, ஸத்யபராக்ரமனான தன் அண்ணனை ராமனைப் பார்த்து 'நீ ராஜ்யத்

தைத் துறந்து வனவாஸத்தை அங்கீகரிக்கையால் என் தாயை ஸந்தோஷப்படுத்தினை. பின்பு இந்த ராஜ்யத்தைச் சித்ர கூடத்தில் எனக்குக் கொடுத்தனை. நீ எவ்வண்ணம் என்னிடத்தில் ராஜ்யத்தை வைத்தனையோ, அவ்வண்ணமே அந்த ராஜ்யத்தை மீளவும் உனக்குக் கொடுத்து அந்த பாரத்தைத் தீர்த்துக்கொண்டனன். இந்தக் காரணத்தைப்பற்றியே நீ மீளவும் அதை அங்கீகரிக்காமல் தீராது. 'அயோத்யையில் ராஜ்ய போகங்களை இஷ்டப்படி அனுபவிக்கின்றனன். ராஜ்யத்தை நீயே பாதுகாத்துக் கொள்வாய்' என்கிருயோ? 'அல்லது நான் வேண்டும்போது கொடுப்பாய்' என்கிருயோ? பலமுடைய பெரிய வ்ருஷபம் ஸஹாயமில்லாமல் சுமக்கக்கூடிய பெரும்பாரத்தைக் கன்றுக்குட்டியின்மேல், வைத்தால் அது அதைச் சுமக்க முடியாதிருப்பதுபோல், நீ யொருவன் நிறைவேற்ற வேண்டியது இந்த ராஜ்யபாரத்தை என்மேல் வைத்தால் அதை நான் நிறைவேற்ற வல்லனல்லேன். பெரிய ஜலப்ரவாஹத்தினுல் உடைந்து நீர் பெருகப்பெற்ற அணைக்கட்டைப் புற்சுமை கொடி கிளை முதலியவற்றைப் பொகட்டு மண்ணிட்டு மறைக்காமல் நிலை நிறுத்துவது முடியாதது போல், பற்பல அபாய ஸ்தானங்களையுடைய ராஜ்யத்தை மந்த்ரகோபனம் முதலிய ராஜகுணங்களால் அவ்வபாயஸ்தானங்களை வசப்படுத்திக்கொண்டு ராஜ்யத்தை ஆள்வாய்' என்கிருயோ? சத்ருக்களை அழிப்பவனே! நல்ல குதிரைபோல் கழுதை ஓடமுடியாதது போலவும், ஹம்ஸம்போல் காக்கை பறக்கமுடியாதது போலவும், நான் உன்னைப்போல் ராஜ்யபாரம் நடத்த வல்லனல்லேன். 'ஆனுல் என் கீழிருந்து என் ஸஹாயத்தினுல் நீயே ராஜ்யத்தைப் பாதுகாத்துவருவாய்' என்கிருயா? மஹா

பாஹோ! வீட்டிற்குள் ஒரு வ்ருக்ஷத்தை நடுகையில், அது மிகுதியும் வளர்ந்து சிறிதும் ஏறமுடியாதபடி பெரிய கிளைகள் அடர்ந்து புஷ்பங்களும் நிறைந்து பலிக்காமலே பாழடையுமாயின் அதை எதற்காக நட்டுவளர்த்தானோ அந்தப்பயன் வளர்த்தவனுக்கு விளையாமற் போமல்லவா? [1] தசரதர் புத்ரகாமேஷ்டி முதலியவற்றைச்செய்து உன்னைப் பெறுகையில், நீயும் வளர்ந்து மஹாபராக்ரமசாலியாகி பந்துக்களும் நண்பர்களும் பெரியோர்களும் சூழப்பெற்று மங்கள குணங்களெல்லாம் அமைந்து விளங்குகின்றனை. அப்படிப்பட்ட நீ உன்னைப் பெற்றதற்குப் பயனாக ராஜ்யத்தைப் பாதுகாத்து பக்தர்களும் ப்ருத்யர்களுமான எங்களை ஆளாது போவாயாயின், முன்பு உதஹரித்த வ்ருக்ஷம் உபமானமாகும். இந்த உவமை உனக்காகவே மொழிகின்றேனாகையால் இதன் பொருளை நீயே அறிவாயாக. இப்பொழுது பட்டாபிஷேகங்கொண்டு, பகலில் ஜ்வலிக்கின்ற ஸூர்யன்போல் தேஜஸ்ஸுடன் நாற்புலத்திலும் விளங்கப்பெற்றிருக்கின்ற உன்னை உலகமெல்லாம் கண்டு களிக்குமாக. நானாவித வாத்யங்களின் த்வனிகளையும் நர்த்தனஞ் செய்யும் மடந்தையர்களின் அரைநூல்மாலை சப்தங்களையும் அழகான கீதத்வனிகளையும் கேட்டுக் கண் விழிப்பாயாக. இங்ஙனம் ஸமஸ்த ராஜபோகங்களையும் அநுபவிப்பாயாக. நக்ஷத்ரமண்டலம் எவ்வளவு காலம் உலாவுமோ, பூமி எவ்வளவு காலம் நிலை

---

1 விதை விதைத்தலுக்கும் புத்ரகாமேஷ்டி முதலியன செய்தமைக்கும், பெரிய அடிபாகத்திற்கும் உடன் தோன்றல்களோடு கூடியிருந்தமைக்கும், கிளைகளுக்கும் ஸுக்ரீவாதி மித்ரகணங்களுக்கும், புஷ்பங்களுக்கும் கல்யாணகுணங்களுக்கும், பலியாமைக்கும் ராஜ்ய பரிபாலனஞ் செய்யாமைக்கும் ஸாம்யம்—என்று தெரிகிறது.

கின்றிருக்குமோ, அவ்வளவு காலம் நீ இங்கு ஸமஸ்த ராஜ்யத்திற்கும் ப்ரபுவாயிருப்பாயாக. இனி எக்காலத்திலும் நான் இந்த ராஜ்யத்தை அபேக்ஷிக்கமாட்டேன்” என்றனன். சத்ருபட்டணங்களை ஜயிக்கும் வீரனாகிய ராமன் பரதன் மொழிந்ததைக் கேட்டு அப்படியேயென்று அங்கீகரித்தனன்; அப்பால் நின்றிருந்த பரதனும் அழகான ஓராஸனத்தில் உட்கார்ந்தனன். அனந்தரம் சத்ருக்னனால் கட்டளையிடப்பெற்று, பட்டாபிஷேக முஹூர்த்தம் தவறாதிருக்குமாறு, வெகு விரைவாகவும் கையோட்டத்தினால் ஸுகமாகவும் பணி செய்யவல்லவரும் முகமயிர்களைச் சேதிருப்பவருமாகிய அம்பட்டர்கள் ராமனுக்கும் பரதனுக்கும் லக்ஷ்மணனுக்கும் முகமயிர்களைக் கத்தரித்தனர். [1] முதலில் பரதன் ஸ்னானஞ் செய்தனன். அப்பால் மஹாபலமுடைய லக்ஷ்மணன் ஸ்னானஞ் செய்தனன். அனந்தரம் வானர ராஜனான ஸுக்ரீவனும் ராக்ஷஸர் தலைவனான விபீஷண

1 ‘நமே ஸ்நாநம் வஹுமதம் தம் விநா கேகயீஸுதம்’ (கைகேயியின் புதல்வனாகிய பரதன் ஸ்னானஞ் செய்யாமல் நான் ஸ்னானஞ் செய்யப்போகிறேன்’ என்று ராமன் முன்பு மொழிந்தபடியே முதலில் பரதன் ஸ்னானஞ் செய்தனன். ஸுக்ரீவன் கிஷ்கிந்தையினின்று புறப்பட்டு வந்தது முதல் ஸ்னானமில்லாமையால் அப்பொழுது ஸ்னானஞ் செய்தான். அங்ஙனமே லங்கையை விட்டு வந்தது முதல் ஸ்னானமில்லாமையால் விபீஷணனுக்கும் அப்பொழுது ஸ்னானம். சத்ருக்னன் ஸ்னானஞ் செய்ததாகச் சொல்லாமையால் அப்பொழுது அவனுக்கு ஸ்னானஞ் செய்யவேண்டிய ப்ரஸக்தியில்லை யென்று தெரிகிறது. மற்றும் முன்பு அவன் வ்ரதத்திற்குத் தொடங்கினதாகச் சொல்லவில்லை. அல்லது—‘நந்திக்ராமே ஜடாம் ஹித்வா ப்ராத்ருபிஸ் ஸஹிதோऽநக:’ என்று நந்திக்ராமத்தில் தம்பிகளோடு ஜடைவிடுத்துக் கொண்டானென்று சுருக்கமாகச் சொல்லியிருக்கையால் சத்ருக்னனும் ஸ்னானஞ் செய்தானென்று கண்டுகொள்க.

னும் ஸ்னானஞ் செய்தனர். பின்பு ராமன் ஜடைகளை விடுத்துத் தலைமயிர்களைச் சீர்திருத்திக்கொண்டு ஸ்னானஞ்செய்து, நானாவகைப் புஷ்பங்கள் கோக்கப்பெற்று விசித்ரமான புஷ்பஸரங்களாலும் நல்ல வாஸனை கமழ்கின்ற கர்ப்பூரம் கஸ்தூரி குங்குமப்பூ முதலியவை கலந்த சந்தனத்தினாலும் அலங்கரித்து மேலானபீதாம்பரத்தை உடுத்து மிகுந்த ஒளியுடன் விளக்கமுற்று ஸிம்ஹாஸனத்தில் உட்கார்ந்தனன். மஹா வீர்யசாலியும் இக்ஷ்வாகு வம்சத்தை வளரச்செய்பவனும் செல்வப்பெருக்கனுமாகிய சத்ருக்னன் ராமனுக்கும் லக்ஷ்மணனுக்கும் பரதனுக்கும் ஹாரம் கேயூரம் (தோள்வளை) முதலிய ஆபரணம் பூட்டுவித்து அலங்காரஞ் செய்வித்தனன். அனந்தரம் தசரதபார்யைகள் நன்மனத்துடன் எல்லோரும் ஒன்று சேர்ந்து ஸீதாதேவிக்குத் தாமே தம் கைகளார அலங்காரஞ் செய்தனர். அப்பால் கௌஸல்யாதேவி புதல்வனிடத்தில் மிகுந்த ப்ரீதியுடையவளாகையால் பேரானந்தம் அடைந்து அவனது நண்பர்களான வானரர்களின் பார்யைகளனைவர்க்கும் ப்ரயத்னப்பட்டு மனோஹரமான அலங்காரஞ் செய்தனள்; அனந்தரம் சத்ருக்னனுடைய ஆஜ்ஞையால் ஸுமந்த்ரனென்னும் ஸாரதி எல்லா அவயவங்களும் அழகாயிருக்கப்பெற்ற மேலான ரதத்திற் சிறந்த குதிரைகள் பூட்டிக்கொண்டு வந்தனன்; மஹா பாஹுவும் ஸத்யபராக்ரமனுமாகிய ராமன் ஸூர்யமண்டலம்போல் விளக்கமுற்று திவ்யமாகிய அம்மேலான ரதம் வருவதைக் கண்டு அதில் ஆரோஹித்தனன். ஸுக்ரீவனும் ஹனுமானும் ஸ்னானஞ் செய்துதேவலோகத்து வஸ்த்ரம்போன்ற மேலான வஸ்த்ரங்களை உடுத்து அழகான குண்டலங்களை அணிந்து தேவேந்த்ரன்போல் ஒளி விளங்கப்பெற்று அயோத்யா புரத்தைப்

பார்க்கப் போயினர். ஸுக்ரீவனுடைய பார்யைகளும் ஸீதாதேவியும் மேலான ஆபரணங்களை அணிந்து அழகான குண்டலங்களைத் தரித்து அயோத்யா புரியைப் பார்க்க விருப்பமுற்றுப் போயினர். தசரத மஹாராஜனது மந்த்ரிகள் முன்னமே அயோத்யைக்குப்போய் புரோஹிதரான வஸிஷ்டரை முன்னிட்டுக்கொண்டு ராமனது பட்டாபிஷேகத்திற்கு வேண்டிய மங்களத்ரவ்யங்களை ஸித்தப்படுத்தும் விஷயத்தைப்பற்றி ஆலோசித்தனர். அசோகனும் விஜயனும் ஸுமந்த்ரனும் சேர்ந்து ராமனுடைய அபிவ்ருத்தியைப் பற்றியும் பட்டணத்தின் அபிவ்ருத்தியைப் பற்றியும் ஆலோசித்தனர். அம்மந்த்ரிகள் வஸிஷ்டரைப் பார்த்து 'ஜயத்திற்கே உரியவனும் மஹானுபாவனுமாகிய ராமனுக்குப் பட்டாபிஷேகம் நடத்தும்பொருட்டு வேண்டிய மங்கள த்ரவ்யங்களையெல்லாம் நன்கு ஸித்தப்படுத்துவீர்களாக' என்றனர். அவ்வமைச்சர்கள் அனைவரும் இங்ஙனம் புரோஹிதரான வஸிஷ்டருக்குச் சொல்லி உடனே பார்க்கவேண்டுமென்னும் விருப்பத்துடன் மீளவும் பட்டணத்தினின்று புறப்பட்டு ராமனுக்கு எதிரே போயினர். ஆயிரங்கண்ணனை தேவேந்த்ரன் பச்சைக் குதிரைகள் பூட்டின ரதத்தில் ஏறிக்கொண்டு போவதுபோல் நிர்த்தோஷனுகிய ராமன் மேலான ரதத்தில் ஆரோஹித்துப் பட்டணத்திற்குப் போயினன். பரதன் குதிரையின் கயிறுகளைப் பிடித்து ராமனுக்கு ஸாரத்யஞ்செய்தனன். சத்ருக்னன் குடை பிடித்தனன். லக்ஷ்மணன் முன்னே நின்று ராமனது சிரஸ்ஸின் மேல் விசிறியால் வீசிக்கொண்டு வெண்சாமரத்தையும் எடுத்து வீசினன். ராக்ஷஸ ராஜனுகிய விபீஷணன், சந்த்ர மண்டலம்போன்ற மற்றொரு வெண்சாமரத்தை எடுத்து வீசினன். அப்பொ

ழுது ஆகாயத்தில் ரிஷிகளும் வாயுகணங்களும் தேவதைகளும் ராமன் செய்த வீரச்செயல்களைப் புகழ்ந்து சொல்லிக்கொண்டிருக்கையில், அந்த த்வனி மதுரமாகச் செவியில் பட்டுக்கொண்டிருந்தது. அனந்தரம் மஹாதேஜஸ்வியும் வானரச்ரேஷ்டனுமாகிய ஸுக்ரீவன்பர்வதம் போன்ற உருவமுடைய சத்ருஞ்சயமென்னுங் குஞ்சரத்தின் மேல் ஏறிக்கொண்டு போயினன். வானரர்கள் மனுஷ்ய உருவந்தரித்து ஸமஸ்த ஆபரணங்களையும் அணிந்து அலங்காரம் செய்துகொண்டு ஒன்பதினுயிரம் யானைகளின்மேல் ஏறிப்போயினர். புருஷச்ரேஷ்டனுகிய ராமன் சங்கவாத்யத்வனிகளும் ஜனங்கள் ஸந்தோஷத்தினுல் செய்யுங் கோலாஹல த்வனிகளும் பேரிவாத்யங்களின் பயங்கரமான கோஷங்களும் மேலெழப்பெற்று உப்பரிகைகளின் வரிசைகளால் அழகாயிருக்கின்ற அயோத்யாபுரத்திற்குப் போயினன். அப்பால், அப்பொழுது அயோத்யாபுரத்திற்குப் போய் ராமனது பட்டாபிஷேகத்தைக் குறித்து ஆலோசித்துக்கொண்டு மீண்டு எதிர்கொள்ள வந்த ஸுமந்த்ரன் முதலிய மந்த்ரிகள், அதிரதனுன ராமன் பரிவாரங்களோடுகூடித் தன்தேஹகாந்தியால் விளக்கமுற்று ரதத்தில் ஏறிக்கொண்டு வரக் கண்டனர். அவர்கள் ராமனை ‘ஜய விஜயீபவ’ என்று ஆசீர்வதித்து அவனுல் மிகுதியும் வெகுமதிக்கப்பெற்றுத் தம்பிகள் சூழ்ந்து வருகின்ற அம்மஹானுபாவனைப் பின்றெடர்ந்தே போயினர். மந்த்ரிகளும் ப்ராஹ்மணர்களும் ப்ரஜைகளும் சூழப்பெற்ற ராமன் நக்ஷத்ரங்கள் சூழ்ந்த சந்த்ரன்போல் ஒளிப்பெருக்குடன் மிகுதியும் ப்ரகாசித்தனன். அவன் நானுவித வாத்யக்காரர்களும் தாளமிடுபவர்களும் ஸ்வஸ்திக வாத்யம் வாசிப்பவரும் மங்கள பாடகர்களும் முன்னே நடக்கப்பெற்றுத்

தான் பின்னே போயினன். மற்றும் மஞ்சள் தடவின அக்ஷதைகள் தரித்தவர்களும் பசுக்களும் கன்னி கழியாத பெண்களும் ப்ராஹ்மணர்களும் கையில் [1] மோதகந்தரித்த மனிதர்களும் ராமனுக்கு முன்னே போயினர். ராமன் ஸுக்ரீவனுக்குத் தன்னிடத்திலுள்ள ஸ்னேஹத்தையும், வாயுகுமாரனன ஹனுமானுடைய ப்ரபாவத்தையும்,யுத்தத்தில் வானரர்கள் செய்த வீரச்செயல்களையும், ராக்ஷஸர்க்குள்ள பல விசேஷத்தையும், விபீஷணன் தன்னைச் சரணம் அடைந்ததையும் மந்த்ரிகளுக்குச் சொல்லினன். அயோத்யாபுரத்தில் வஸிப்பவரனைவரும் அந்த வ்ருத்தாந்தத்தைக் கேட்டு ஆச்சர்யம் அடைந்தனர். மஹாதேஜஸ்வியாகிய ராமன் இந்த வ்ருத்தாந்தத்தைச் சொல்லிக்கொண்டே, மனதில் ஸந்தோஷமும் தனம் முதலியவற்றால் புஷ்டியும் அமைந்த ஜனங்கள் நிறைந்திருக்கிற அயோத்யாபுரத்தில் வானரர்களோடு கூட ப்ரவேசித்தனன். அவன் ப்ரவேசித்தவுடனே பட்டணத்து ஜனங்களெல்லோரும் வீடுகள் தோறும் த்வஜங்களை உயரவெடுத்து நிறுத்தினர். ராமன், இக்ஷ்வாகுவம்சத்து ராஜாக்கள் வாஸம் செய்வதும் அழகாயிருப்பதுமான தந்தையின் க்ருஹத்தைக் கிட்டினன். அப்பால், ரகுகுலத்திற்கு ஸந்தோஷம் விளைப்பவனும் ராஜகுமாரனுமாகிய அந்த ராமன் மஹானுபாவனன தந்தையின் மாளிகையில் ப்ரவேசித்துக் கௌஸல்யைக்கும் ஸுமித்ரைக்கும் கைகேயிக்கும் நமஸ்காரம் செய்து தார்மிக ரத்னமாகிய பரதனைப் பார்த்துப் பெரும் பொருளடக்கமுடைய வார்த்தைகளை மதுரமாக மொழியத் தொடங்கி, 'முத்துக்களும் வைடூர்யமணிகளும் இழைக்கப்பெற்று மேன்மையுடையதான என்

1. மோதகம் = குழக்கட்டை, லட்டென்று சிலர் கூறுவர்.

பெரிய மாளிகையை அதன் அந்தப்புர உத்யானத்தோடு கூட ஸுக்ரீவனுக்கு விடுதியாகக் கொடுப்பாய்' என்றனன். வீணாகாத பராக்ரமமுடைய பரதன் ராமன் மொழிந்ததைக்கேட்டு ஸுக்ரீவன் கையைப்பிடித்து அவனை அந்த ராமக்ருஹத்திற்கு அழைத்துக்கொண்டு போயினன். அனந்தரம் சத்ருக்னனுடைய கட்டளையின் மேல் பரிசாரகர்கள் தைலதீபங்களையும் (எண்ணெய் விளக்குகளையும்) மஞ்சங்களையும் (படுக்கைகளையும்) எடுத்துக்கொண்டு சீக்ரமாக அந்த க்ருஹத்தில் ப்ரவேசித்தனர். ஸுக்ரீவன் விடுதியில் ஸுகமாக ப்ரவேசித்த பின்பு, மஹாதேஜஸ்வியாகிய பரதன் அவனைப் பார்த்து 'ப்ரபூ! ராமனது பட்டாபிஷேகத்திற்கு வேண்டிய புண்யதீர்த்தங்களை வரவழைக்கும்பொருட்டு தூதர்களை அனுப்புவாயாக. அதற்கு நீயே வல்லவன்' என்றனன். அதன் பிறகு ஸுக்ரீவன் சீக்ரமாக ஸமஸ்த ரத்னங்களும் இழைக்கப்பெற்ற நான்கு ஸ்வர்ண கலசங்களை நான்கு வானரோத்தமர் கையில் கொடுத்து அவர்களை நோக்கி 'வானரர்களே! நீங்கள் நாளை உதயத்திற்குள் நான்கு ஸமுத்ரங்களினின்றும் புண்யநதிகளினின்றும் ஜலங்களை நிறைத்து இந்தக் கலசங்களைக்கொண்டு இவ்விடம்வந்து எங்களை எதிர்பார்த்திருக்கவேண்டும்' என்று ஆஜ்ஞாபித்தனன். ஸுக்ரீவன் இங்ஙனம் மொழிகையில் யானைகள்போன்ற உருவமுடையவரும் மஹானுபாவருமான அவ்வானரர்கள் கருடனைப் போல் மஹாவேகமுடையவராகையால் சீக்ரமாக காஆயத்தில் கிளம்பிப் போயினர். அப்பால் ஜாம்பவானும் ஹனுமானும் வேகதர்சியும் ருஷபனும் கலசங்களில் ஜலங்களை நிறைத்துக்கொண்டு வந்தனர். ஜாம்பவான் முதலிய அவ்வானரர்கள் நால்வரும் ஐந்நூறு நதிகளி

னின்று ஜலத்தைக் கலசங்களில் எடுத்துக்கொண்டு வந்தனர். பின்பு பலிஷ்டனுகிய ஸுஷேணன் கிழக்கு ஸமுத்ரத்தினின்று ஸர்வரத்னங்களும் இழைத்த ஸ்வர்ணகலசத்தில் ஜலம் கொண்டு வந்தனன். ருஷபன் தெற்கு ஸமுத்ரத்தினின்று பொன் கலசத்தில் ஜலத்தை எடுத்துச் செஞ்சந்தனக் கொத்துகளால் மூடி வேகமாகக் கொண்டு வந்தனன். கவயன் வாயுவேகமுடையவனுகையால் மேற்கு ஸமுத்ரத்தினின்று குளிர்ந்த ஜலத்தைப் பெரிய ரத்னகலசத்தில் எடுத்துக்கொண்டு வந்தனன். எல்லா நற்குணங்களும் அமையப்பெற்றுக் கருடனையும் வாயுவையும் நிகர்த்த வேகமுடையவனும் தர்மஸ்வபாவனுமாகிய அந்த நலன் சீக்ரமாக வடக்கு ஸமுத்ரத்தினின்று ஜலம் கொண்டு வந்தனன். அப்பால் சத்ருக்னன் மந்த்ரிகளோடுகூடி அம்மேலான வானரர்கள் கொண்டு வந்த ஜலத்தைக் கண்டு, ராமனது அபிஷேகத்திற்காகப் புரோஹிதஸ்ரேஷ்டரான வஸிஷ்ட மஹர்ஷிக்கும் பந்துக்களுக்கும் ஸமுத்ராதி ஸ்தலங்களினின்று புண்ய ஜலங்கள் வந்திருப்பதை அறிவித்தனன். அனந்தரம் பரிசுத்தரும் வயது சென்றவருமாகிய வஸிஷ்டர் ப்ராஹ்மணர்களோடுகூடி ஸீதையுடன் ராமனை ரத்னமயமான பீடத்தில் உட்கார வைத்தனர்.

( ஸ்ரீராம பட்டாபிஷேகம். )

அப்பால், அஷ்டவஸுக்கள் தேவேந்த்ரனுக்கு அபிஷேகஞ் செய்வதுபோல், வஸிஷ்டர் வாமதேவர் ஜாபாலி காஸ்யபர் காத்யாயனர் ஸுயஜ்ஞர் கௌதமர் விஜயர் ஆகிய இவ்வெண்மரும் தெளிந்து நன்மணங் கமழப்பெற்றதாகிய ஜலத்தினுல் புருஷஸ்ரேஷ்டனுகிய ராமனுக்கு அபிஷேகஞ் செய்தனர். பிறகு வஸிஷ்டாதிகள் தாம்



अभ्यषिञ्चन्नरव्याघ्रं प्रसन्नेन सुगन्धिना ।
सलिलेन सहस्राक्षं वसवो वासवं यथा ॥

3360. ஸிம்ஹாஸனாரூடனான ராமனுக்கு
புண்யதீர்த்தாபிஷேகம்

அபிஷேகஞ் செய்த பின்பு மிகுந்த ஸந்தோஷத்துடன் முதலில் ருத்விக்குகளைக் கொண்டும் பின்பு ப்ராஹ்மணர்களைக் கொண்டும் அதன்பிறகு கன்னிப்பெண்கள் மந்த்ரிகள் பட்டணத்து ஜனங்கள் போர்வீரர்கள் ஆகிய இவர்களைக் கொண்டும் ராமனுக்கு அபிஷேகஞ் செய்வித்தனர். வஸிஷ்டாதிகளால் அழைக்கப்பெற்ற லோக பாலர்கள் நால்வரும் மற்றுமுள்ள தேவர்களனைவரும் ஒன்று சேர்ந்து ஆகாயத்தில் வந்து நின்று திவ்யமான ஸமஸ்த ஓஷதி ரஸங்களாலும் ராமனுக்கு அபிஷேகஞ் செய்தனர். (பின்பு ப்ரஹ்மதேவன் எதை நிர்மித்தானோ, முனபு மனுசக்ரவர்த்தி எதை அணிந்து கொண்டு அபிஷேகம் பெற்றானோ, அவனுடைய வம்சத்தரசர்கள் எதை அணிந்து அபிஷேகஞ் செய்யப்பெற்றனரோ, அத்தகையதும் ரத்னங்கள் இழைக்கப்பெற்று ஜ்வலிப்பதும் ஒளியுடன் விளங்குவதுமான அந்தக் கிரீடத்தை, ஸ்வர்ணமயமாகி விலையுயர்ந்த வஸ்துக்களால் அலங்காரமுற்றதும் மிகுதியும் அழகான பல வகை ரத்னங்களால் விசித்ரஞ் செய்யப்பெற்றதுமாகிய ஸபையில் நானுவித ரத்னங்களிழைத்த பீடத்தில் வைத்து விதிப்படி பூஜித்து, உடனே மஹானுபாவராகிய வஸிஷ்டரும் ருத்விக்குகளும் ரிஷிகளும் அக்கிரீடத்தை ராமன் திருமுடியில் சேர்த்தனர். (மற்றும் பலவகை ஆபரணங்களையும் ராமனுக்குப் பூட்டினர்) அப்பொழுது சத்ருக்னன் ராமனுக்கு அழகான வெண்கொற்றக்குடை பிடித்தனன். வானரராஜனான ஸுக்ரீவன் வெண்சாமரத்தை வீசினன். ராக்ஷஸேந்த்ரனாகிய விபீஷணன் சந்த்ரன்போல் வெளுத்து விளங்குகின்ற மற்றொரு சாமரத்தை எடுத்து ஸந்தோஷமுற்று வீசினன். வாயுதேவன், தேவேந்த்ரனால் தூண்டப்பெற்று உருவத்தினால்

ஜ்வலிப்பதும் நூறு கமலங்களுடையதுமான காஞ்சன மாலையைக்கொண்டுவந்து ராமனுக்குக் கொடுத்தனன். வாயுதேவன் மீளவும் இந்த்ரனால் தூண்டப்பெற்று ஸமஸ்த ரத்னங்களோடு கூடியதும் இடையில் நாயக மணியால் அலங்க்ரு முற்றதுமாகிய ஓர் முத்துமாலையை ராமனுக்குக் கொடுத்தனன். பட்டாபிஷேகத்திற்குத் தகுந்தவனும் புத்தியிற் சிறந்தவனுமாகிய அந்த ராம னது அபிஷேக ஸமயத்தில் தேவதைகளும் கந்தர்வர் களும் ஸந்தோஷமுற்றுப் பாடினர். அப்ஸர ஸ்த்ரீகள் ஆடினர். ஸ்ரீராகவனது பட்டாபிஷேக மஹோத்ஸவத் தில் பூமி பயிர்கள் பலித்து ஸம்ருத்தமாயிருக்கப் பெற் றிருந்தது. வ்ருக்ஷங்கள் காயும் பழமும் நிறைந்து விளங்கின. புஷ்பங்கள் மேலான வாஸனை வீசப்பெற்றி ருந்தன. புருஷ ஸ்ரேஷ்டனாகிய ராமன் முதலில் ப்ரா ஹ்மணர்களுக்கு லக்ஷங் குதிரைகளையும் புதிதாக ஈன்ற லக்ஷம் பசுக்களையும் நூறு எருதுகளையும் கொடுத்த னன். ராமன் மீளவும் முப்பதுகோடி பொன் நாணயங் களையும், மற்றும் விலையில்லாத பலவகை ஆடையா பரணங்களையும் ப்ராஹ்மணர்களுக்குக் கொடுத்தனன். அந்தப் புருஷஸ்ரேஷ்டன் ஸூர்ய கிரணம்போல் ஜ்வலிப்பதும் நிரம்ப ரத்னங்கள் இழைத்திருப்பதுமான ஸ்வர்ண ஹாரத்தை ஸுக்ரீவனுக்குக் கொடுத்தனன். ராமன் மிகுந்த ப்ரீதியுடன் வாலிகுமாரனாகிய அங்கத னுக்கு வைடூர்ய மணிகளும் வஜ்ரமணிகளும் இழைக்கப் பெற்று அற்புதமாயிருப்பதான தோள்வளைகளைக் கொடுத்தனன். ராமன், ஸீதைக்கு, மேலான ரத்னங்க ளோடு கூடிச் சந்த்ர கிரணம்போல் நிகுநிகுப்புடன் ப்ர காசிப்பதும் இணையற்றதுமான ஓர் முக்தாஹாரத்தை (ஹநுமானுக்குக் கொடுக்கலாமென்னும் நினைவுடன்)



3363. ஸ்ரீராமனுக்கு பட்டாபிஷேக மஹோத்ஸவம்.

கொடுத்தனன். அப்பால் ஸீதை, ஸ்த்ரீகளுக்கு எது செய்யவும் ஸ்வாதந்த்ரிய மில்லாமையால் பர்த்தாவின் அனுமதியை எதிர்பார்த்து அவனது அனுமதியைப் பெற்று நிர்மலமா யிருப்பவைகளும் திவ்யங்களுமான இரண்டு வஸ்த்ரங்களையும் அழகான ஆபரணங்களையும் வாயுகுமாரனான ஹனுமானுக்குக் கொடுத்தனள். மற்றும் அப்பெண்மணி ராமன் தனக்குக் கொடுத்த [1] முத்துமாலையைக் கழுத்தினின்று கழற்றி வானரர்களில் எவர்க்குக் கொடுக்கலாமென்று வானரர்களையும், எவனுக்குக் கொடுக்கலாமென்று பர்த்தாவின் அபிப்ராயமோ வென்று பர்த்தாவையும் அடிக்கடி நோக்கினள். ராமன் கருத்தறிபவனாகையால் ஸீதையின் அபிப்ராயத்தை அறிந்து அப்பெண்மணியைப் பார்த்து 'ஸுந்தரீ! காதலீ! [2] எவனிடத்தில் பலமும் பராக்ரமமும் புத்தியும் முதலிய ஸமஸ்த கல்யாண குணங்களும் நிறைந்திருக்கின்றனவோ, மற்றும், நீ எவனிடத்தில் ஸந்தோஷ முற்றிருக்கின்றனையோ, அப்படிப்பட்டவனுக்கு இந்த் ஹாரத்தைக் கொடுப்பாயாக' என்றனன்.

---

1 ஸீதை, ராமன் அந்த ஸதஸ்ஸில் தனக்கு முக்தாஹாரங்கொடுத்தது தன் கையால் எவர்க்கோ கொடுப்பிக்க விரும்பித்தே கொடுத்தானென்று அபிப்ராயத்தைக் கண்டு, பின்பு இதை எவர்க்குக் கொடுக்கத் தகுமோ என்று எல்லாவானரர்களையும், பர்த்தாவின் அபிப்ராயம் எவனிடத்திலோ என்று பர்த்தாவையும் அடிக்கடி பார்த்தாளென்று தெரிகிறது.

2 ஸமுத்ரந்தாண்டினமையால் பலமும், லங்கையைக் கொளுத்தினமையால் பராக்ரமமும், அசோகவனிகையில் ப்ரவேசிக்கையால் புத்தியும் மிகுந்திருக்கப் பெற்றவன் ஹனுமானே யென்று ராமன் இங்கு ஸூசிப்பித்து, மீளவும் பிறரை அவமதித்தாற்போல் தோற்றுகையால் 'உனக்கு எவனிடத்தில் ஸந்தோஷம் உளதோ அவனுக்குக் கொடுப்பாய்' என்றனன்—என்று தெரிகிறது.

அனந்தரம் அக்கருங்கண்ணி அந்த முக்தாஹாரத்தை ஹநுமானுக்குக் கொடுத்தனள். வெளுத்த மேகத்துடன் கூடின பர்வதம் ப்ரகாசிப்பதுபோல், சந்த்ரகிரண ஸமூஹத்தை நிகர்த்து மிகுதியும் வெளுத்திருப்பதான அந்த ஹாரத்தை அணிந்து ஹநுமான் ப்ரகாசித்தனன். அனந்தரம் சத்ருக்களைத் தபிக்கச்செய்பவனும் பூமண்டலத்திற்கு நாதனுமாகிய ராமன் த்விவிதனுக்கும் மைந்தனுக்கும் நீலனுக்கும் அவரவர் விரும்பினபடி குணமுள்ள சிறந்த வஸ்துக்களையெல்லாம் வெகுமதியாகக் கொடுத்தனன். வானரர்களனைவரிலும் எவரெவர் வயது சென்றவரோ, அவர்க்கும் மற்றுமுள்ள வானரோத்தமர்களுக்கும் ராமன் அவரவர் மேன்மைக்குத் தகுந்தபடி வஸ்த்ரங்களையும் பூஷணங்களையும் கொடுத்து கௌரவித்தனன். அனந்தரம் எப்படிப்பட்ட கார்யத்தையும் விரைவில் செய்யுந்திறமையுடைய ராமன்[1] விபீஷணனுக்கும் ஸுக்ரீவனுக்கும் ஹநுமானுக்கும் ஜாம்பவானுக்கும் மற்றுமுள்ள வானர முக்யர்களுக்கும் அவரவர்க்குத் தகுந்தபடி, ஸம்ருத்தமாக ரத்னம் முதலிய இஷ்டவஸ்துக்களை கொடுக்கையில், எல்லோரும் மனத்தில் மிகுதியும் ஸந்தோஷம் அடைந்து தந்தமது இடங்களுக்குப் போயினர். அனந்தரம் வானர ஸ்ரேஷ்டர்களனைவரும் மஹானுபாவனாகிய ராமனது பட்டாபிஷேகமஹோத்ஸவத்தைக் கண்டு ராஜேந்த்ரனாகிய ராமனிடம் அனுமதி பெற்றுக் கிஷ்கிந்தாபுரத்திற்குப்

1 முன்பு விபீஷணனை வெகுமதித்ததாகச் சொல்லாமற் போயினும், இப்பொழுது அங்ஙனம் வெகுமதிக்கப் பெற்றவர்களை மீளவும் எடுத்துரைக்கும் பொழுது விபீஷணனை முதலில் சொல்லுகையால் விபீஷணனும் ஸுக்ரீவாதிகளுக்கு முன்னமே வெகுமதிக்கப் பெற்றானென்றுணர்க.

போயினர். வானர ஸ்ரேஷ்டனாகிய ஸுக்ரீவன் ராமனது அபிஷேகத்தைக் கண்டு (அவனால் பூஜைகளைப் பெற்றுக் கிஷ்கிந்தா புரத்திற்குப்) போயினன். (ராமன் விரும்பினவற்றை யெல்லாம் கொடுத்துப் பூஜிக்கையில்) ராக்ஷஸ ராஜனாகிய விபீஷணன் [1] இக்ஷ்வாகு வம்சத்தரசர்களின் குலதனமாகிய ஸ்ரீரங்க விமானத்தைப் பெற்று

---

1 இக்ஷ்வாகு வம்சத்தரசர்களின் குலதனமாவது—அவரது குல தெய்வதமான ஸ்ரீரங்கவிமானமென்று ஸம்ப்ரதாயம். இங்ஙனம் கோவிந்தராஜர். மஹேஸ்வரதீர்த்தர். 'இங்குக் குலதனமாவது—ராமன் முன்பு கொடுக்கிறேனென்று ப்ரதிஜ்ஞை செய்திருந்த ராக்ஷஸ குலதனமான லங்காராஜ்யமேயன்றி ஸ்ரீரங்கவிமானமன்று. எனெனில்—ராமன் தனது அவதாரம் முடியும் ஸமயத்தில் விபீஷணனுக்கு ஸ்ரீரங்கவிமானத்தைக் கொடுத்ததாக உத்தரகாண்டத்தில் சொல்லப்பட்டதாகையால் பட்டாபிஷேகஸமயத்திலேயே விபீஷணன் ரங்கவிமானத்தைப் பெற்றானென்பது பொருந்தாது. அங்ஙனம் உத்தரகாண்டத்தில் 'கிஞ்சாந்யதி வக்துமிச்சாமி ராக்ஷஸேந்த்ர மஹாபல। ஆராதய ஜகந்நாதமிக்ஷ்வாகுகுலதைவதம், (மஹாபலமுடைய ராக்ஷஸராஜனே! மற்றும் ஒன்று உன்னோடு சொல்ல நினைக்கிறேன். இக்ஷ்வாகுகுலதெய்வமான ஜகந்நாதனை ஆராதிப்பாய்)என்று ராமன் அவதாரம் முடியும் பொழுது விபீஷணனோடு சொல்லினன். அங்ஙனமே பாத்மபுராணத்திலும் 'யாவச் சந்த்ரஸ்ச ஸூர்யஸ்ச யாவத் திஷ்டதி மேதிநீ। தாவத்ரம ஸ்வ ராஜ்யஸ்ய காலே மம பதம் வ்ரஜ। இத்யுக்த்வா ப்ரததௌ தஸ்மை ஸ்வவிஸ்லேஷாஸஹிஷ்ணவே। ஸ்ரீரங்கஸாயிநம் ஸ்வஸ்யமிக்ஷ்வாகு குலதைவதம்। ரங்கம் விமாநமாதாய லங்காம் ப்ராயாத் விபீஷண:' (சந்த்ரனும் ஸூர்யனும் உள்ளவரையிலும் பூமி உள்ளவரையிலும் நீ ராஜ்யத்தைப் பரிபாலனஞ் செய்துகொண்டு ஸுகமாயிருப்பாயாக. அதன் பிறகு மஹா ப்ரளயத்தின் பொழுது என்னிடம் வந்து சேருவாய்' என்று ராமன் மொழிந்து தன் பிரிவைப் பொறுக்கமாட்டாத விபீஷணனுக்கு இக்ஷ்வாகுவம்சத்தரசர்களின் குலதெய்வமும் தன்னிடமிருப்பவரும் ஸ்ரீரங்கஸாயுமான பகவானைக் கொடுத்தனன்.

லங்கைக்குப் போயினன். அந்த ராமன் சத்ருக்களனைவரையும் வதித்துப் பெரும்புகழ்பெற்று எல்லோரிலும் மேன்மையுற்று துஷ்டர்களை அடக்கிக்கொண்டு ஸமஸ்தராஜ்யத்தையும் மிகுந்த ஸந்தோஷத்துடன் பாதுகாத்தனன். தர்மத்தை முக்யமாகவுடைய ராமன் தர்மஜ்ஞனாகிய லக்ஷ்மணனைப் பார்த்து [1] 'லக்ஷ்மணா! நீ தர்மங்களை அறிந்தவன். ஆகையால் உனக்குச் சொல்லவேண்டிய அவஶ்யமில்லை. மனு முதலிய முன்புள்ள ராஜாக்

---

விபீஷணன் ரங்கவிமானத்தைப் பெற்று லங்காபுரிக்குப் போனான்) என்று ராமாவதாரஸமாப்தி ஸமயத்தில் வந்த விபீஷணனுக்கு ராமன் ரங்கவிமானங் கொடுத்ததாகச் சொல்லியிருக்கிறது. ஆகையால் ராமன் முன்பு சொன்ன லங்காராஜ்யங்கொடுப்பதையே மீளவும் இங்குச் சொல்லுகிறதன்றி வேறன்று என்கிறார். இதற்கு ஸமாதானமெப்படி யென்னில்—'சிஞ்சாங்யஜீவக்தமிச்ஹாமி' இத்யாதியான ஶ்லோகங்களிரண்டும் புதிதாகச் சேர்த்தவையேயென்று சிலர் கூறுவதாக மஹேஶ்வரதீர்த்தரே மொழிந்திருக்கின்றனர். அவை சேர்க்கப்பட்டவையே யென்றும், பாத்மபுராணவசனங்கள் கல்பாந்தரத்தில் நடந்த வ்ருத்தாந்தத்தைக் குறித்தவையென்றும் கருத்துக்கொள்ளின் முன்னமே ப்ராப்தமான லங்காராஜ்யத்தை மீளவும் பெற்றானென்பது வீணென்பதை ஆராய்ந்தறியில் இந்த தோஷத்திற்குப் பரிஹாரம் ஏற்படும் ஆகையால் கோவிந்தராஜர் மதத்தின்படி குலதனமாவது ஸ்ரீரங்கவிமானமே யென்றுணர்க.

1 ராமன் தன் தந்தை முன்பு தனக்குப் பட்டாபிஷேகஞ் செய்ய ப்ரயத்னிக்கும்பொழுது பரதன் அருகில் இல்லாமையால் லக்ஷ்மணனைப் பார்த்து 'லக்ஷ்மணேமாம மயாஸார்த்தம் ப்ரஶாதி த்வம் வஸுந்தராம்' (லக்ஷ்மணா! நீ என்னோடு கூட இந்த பூமியைப் பாலனஞ் செய்து வருவாய்) என்றனன், 'ராமோ த்விர் நாபிபாஷதே' என்கிறபடியே ராமன் முதலில் ஒன்று சொல்லி மீளவும் மற்றொன்று சொல்லானாகையால் அந்த வார்த்தையின்படி, லக்ஷ்மணனைக் காட்டிலும் ஜ்யேஷ்டனாகிய பரதன் இருப்பினும் லக்ஷ்மணனையே யௌவராஜ்யத்தில் பட்டங் கட்டிக்கொள்ளும்படி நியமித்தானென்று தெரிகிறது.

கள் மிகுந்த பலத்துடன் பரிபாலித்துக் கொண்டிருந்த இந்த பூமண்டலத்தை நீ என்னுடன் கூடிப்பாதுகாத்து வருவாயாக. நம் பாட்டன்மார்களும் முப்பாட்டன்மார் களுமாகிய முன்புள்ளோர் ஏற்றுக்கொணடு வந்த இந்த ராஜ்யபாரத்தை, நீ இளவரசுபட்டத்தை அங்கீகரித்து எனக்கு ஸஹாயமாயிருந்து ஏற்றுக்கொள்வாயாக' என்றனன். ராமன் யௌவராஜ்யத்தை அங்கீகரிப்பாயென்று கட்டளையிட்டு எவ்வளவு சொல்லினும், நல் வார்த்தையாக எவ்வள வு வேண்டிக்கொள்ளினும், லக்ஷ்மணன் அதை அங்கீகரிக்கவில்லை. அப்பால் மஹானுபாவனுகிய ராமன் யௌவராஜ்யத்தில் (இளவரசுபட்டத்தில்) பரதனுக்கு அபிஷேகஞ் செய்தனன். ராஜாக்களில் சிறந்தவனுகிய ராமன் பௌண்டரீகம் அஸ்வமேதம் வாஜபேயம் ஆகிய இந்த யாகங்களையும் மற்றும் பலவகை யாகங்களையும் பலதடவை நடத்தினன். ராமன் பதினுயிரம் ஆண்டுகள் ராஜ்யத்தை ஆண்டு உத்தம அஸ்வங்களோடும் பூரிதக்ஷிணைகளோடும் கூடின நூறு அஸ்வமேத யாகங்களைச் செய்தனன். முழந்தாள் வரையிலும் நீண்ட புஜதண்டங்களும் பருத்தழகிய தோள்களும் அமைந்த ராமன் லக்ஷ்மணன் ஸஹாயமாயிருக்கப்பெற்று மிகுந்த பராக்ரமத்துடன் விளக்கமுற்று பூமியைப் பாதுகாத்து வந்தனன். அந்த ப்ரஜைகளின் பாக்யத்தை என்னென்று சொல்லுவேன்? தர்ம ஸ்வபாவனுகிய ராமன் மிகுதியும் சிறந்த ராஜ்யத்தைப் பெற்று நண்பர்களோடும் ஜ்ஞாதிகளோடும் பந்துக்களோடும் கூடிப் பலவித யாகங்களைச் செய்தனன். ராமன் ராஜ்யத்தை ஆண்டு வரும்பொழுது ஸ்த்ரீகள் வைதவ்ய துக்கமே தெரியாதிருந்தனர். துஷ்ட ம்ருகங்களாலுண்டாகும் பயமாவது, ரோக பயமாவது எள்ளளவும் உண்

டாகவில்லை. உலகத்தில் திருடரே இல்லை. எவ்வித அனர்த்தமும் எவனையும் தீண்டவில்லை. வயது சென்ற தந்தைமுதலியவர் பிழைத்திருக்க இளைஞர் மரணமடைவதும் இல்லை. ஆகையால் வயது சென்றவர் இளைஞர்க்கு ப்ரேதகார்யஞ் செய்தல் புலப்படவேயில்லை. எல்லாம் ஸந்தோஷமுற்றிருந்தது. ஸமஸ்த ஜனங்களும் தர்மத்தில் மிகுதியும் மனவூக்க முற்றிருந்தனர். ஜனங்கள் ஒருவர்மேலொருவர்வைர முற்றிருக்கவேண்டும்பொழுது ராமனைப் பார்த்து, அங்ஙனஞ் செய்யில் அவன் முகம் வாட்டமுறுமென்று அதைப் பொறுக்கமுடியாமல் ஒருவரையொருவர் ஹிம்ஸிக்காமல் வைரத்தை மாற்றிக் கொண்டிருந்தனர். ராமன் ராஜ்யத்தைப் பாதுகாத்து வரும்பொழுது, ஜனங்கள் ஆயிரம்பிள்ளைகளைப் பெற்று ரோகமின்றிச் சோகத்தை அறியாமல் புஷ்டியும் துஷ்டியும் அமைந்து பலவாயிர மாண்டுகள் ஜீவித்திருந்தனர். ஜனங்கள் ராமன் ராஜ்யபரிபாலனஞ் செய்யும்பொழுது 'ராமன் ராமன் ராமன்' என்று ராமவ்ருத்தாந்தத்தையே சொல்லிக்கொண்டிருந்தனர். ஜகமனைத்திலும் எவ்விடத்திலும் எந்த வ்யவஹாரமும் ராமமயமாகவே இருந்தது. வ்ருக்ஷங்கள் எப்பொழுதும் புஷ்பிப்பதும் எப்பொழுதும் பலிப்பதுமாகி மிகுதியும் பருத்த அடிபாகமுடையவைகளாய் விளக்கமுற்றிருந்தன. மேகங்கள் காலந்தவறாமல் மழைபெய்துகொண்டிருந்தன. காற்று ஸுகமாக வீசிக் கொண்டிருந்தது. ப்ராஹ்மணர்களும் க்ஷத்ரியர்களும் சூத்ரர்களும் சிறிதும் லோபமில்லாமல் (பேராசையில்லாமல்) தமக்கு விதிக்கப்பட்ட கர்மங்களிலேயே த்ருப்தி உண்டாகப்பெற்று அவற்றைத்தவறாமல் அனுஷ்டித்துக் கொண்டிருந்தனர். ராமன் பாதுகாத்து வருகையில் ஜனங்களெல்லோரும் தர்மத்தில் விருப்பமுற்று தர்மத்

தை முக்யமாகக் கொண்டு உண்மையே மொழிபவராகி அனைவரும் சுபலக்ஷணங்கள் அமைந்திருந்தனர். ராமன் தம்பிகளோடு கூடிச் செல்வப்பெருக்குடன் பதினோரா யிரம் ஸம்வத்ஸரங்கள் ராஜ்ய பரிபாலனம் செய்தனன். இந்த ராமாயணம் முன்பு வால்மீகி மஹர்ஷியால் இயற் றப்பெற்றது. காவ்யங்களெல்லாவற்றிலும் முதன்மை யாயிருப்பது. ஆகையால் இது தனத்தைக் கொடுப் பதும் புகழை விளைப்பதும் ஆயுளை வளரச்செய்வது மாயிருக்கும்; ராஜாக்களுக்கு ஜயத்தைக்கொடுப்பது; வேதார்த்தங்களைத் தெளிவுற எடுத்துரைப்பது. ஆகை யால் இதை எவன் வாசிப்பானே, அல்லது கேட்பானே, அம்மனிதன் ஸமஸ்த பாபங்களினின்று விடுபடுவான். ஸ்ரீராமனது பட்டாபிஷேகத்தைச் செவியுறுவார்களா யின் புதல்வரை விரும்புவோர்க்கு நல்லபுதல்வர் உண்டா வர். தனத்தை விரும்புவோர்க்கு தனம் உண்டாகும். ராஜனாயிருப்பவன் கேட்பானாயின், சத்ருக்களை ஜயித்து பூமியைக் கைப்பற்றுவான். ஸ்த்ரீகள் கேட்பார்களா யின், கௌஸல்யை ராமனைப் பெற்றாற்போலவும், ஸுமி த்ரை லக்ஷ்மணனைப் பெற்றாற்போலவும், கைகேயி பரத னைப்பெற்றாற்போலவும், தீர்க்காயுஷர்களான நல்ல பிள் ளைகளைப் பெறுவார்கள். எவர்க்கும் வருத்தம்விளைக்காத கார்யங்களைச் செய்யுந்தன்மையுடைய ராமனது விஜயத் தை யெல்லாம் எடுத்துரைப்பதான இந்த ராமாயணத் தைக் கேட்பவன் ஆயுள் வளரப்பெற்று ஸுகமாயிருப் பான்.வால்மீகிமஹர்ஷி நிர்மித்ததும்வேதார்த்தங்களைத் தெளிவாக எடுத்துரைப்பதுமான இந்த ஆதிகாவ்யத்

தை எவன் ஶ்ரத்தை உண்டாகப்பெற்றுக் காமக்ரோதங் களை அடக்கிக்கொண்டு கேட்பானோ, அவன் தாரித்ரி யம் (ஏழ்மை) முதலிய கஷ்டங்களைக் கடந்து ஸுகமாக வாழ்ந்திருப்பான். தேசாந்தரம் போயிருப்பவன் அந்த தேசாந்தரவாஸந் தீரப்பெற்று மீளவும் பந்துக்களோடு சேர்ந்து ஸுகம் பெறுவான்; இவ்வுலகத்திலேயே ராம னது அனுக்ரஹத்தினால் விரும்பின வரங்களையெல்லாம் பெற்று ஸுகித்திருப்பான். இந்த ராமாயணத்தை நன்று கக் கேட்பார்களாயின், இதனால் ஸமஸ்த தேவதைகளும் நல்ல ப்ரீதி அடைவர்கள். மற்றும் க்ருஹத்தில் விக்னஞ் செய்யும் பூதங்களும் சாந்தமாயிருக்கும்; இந்த ராமா யணத்தைக் கேட்பானாயின், ராஜன் பூமண்டலத்தை யெல்லாம் ஜயிப்பான். தேசாந்தரம் போனவன் க்ஷேம மாக இருப்பிடம் வந்து சேருவான். புஷ்பவதிகளான ஸ்த்ரீகள் மிகுதியும் சிறந்த புத்ரர்களைப் பெறுவார்கள். புராதனமான இந்த இதிஹாஸத்தை மனிதர் பூஜிக்கி னும் வாசிக்கினும், அவரது ஸமஸ்த பாபங்களும் நசித் துப்போம்; தீர்க்கமான ஆயுளும் உண்டாம். இந்த ராமா யணத்தை க்ஷத்ரியர்கள் எப்பொழுதும் சிரஸு பூமியில் பட நமஸ்கரித்து ப்ராஹ்மணர் மூலமாய்க் கேட்கவேண் டும். அவர்க்கு ஐஶ்வர்யமும் ஸுபுத்ரலாபமும் (நற்பிள்ளை பெறுதலும்) தப்பாமல் விளையும். ஸந்தேஹமில்லை. இந்த ராமாயணத்தை ஸம்பூர்ணமாகக் கேட்பவனிடத்திலும் வாசிப்பவனிடத்திலும் ராமன் எப்பொழுதும் ப்ரீதியுற்றி ருப்பான். அந்த ராமனே ஸனாதனனும் (என்றும் அழி யாதவனும்) ஆதிதேவனும் மஹா பாஹுவும் ஸர்வேஶ்

வரனுமாகிய நாராயணனெனப்படும் விஷ்ணு: ஆகையால் அவன் ப்ரீதி அடைவானாயின், அதற்குமேல்குறையென்? ஆதலால் அவன் ஆரோக்யத்தை மிகவும் துர்லபமான மோக்ஷத்தையும் கொடுப்பான். பெரும்பொருளடக்கமுடைய இந்தச் சுபமான காவ்யத்தைக் கேட்பவன் குடும்ப வருத்தியையும் தன்தான்ய வ்ருத்தியையும் சிறந்த மடந்தையர்களையும் மேலான ஸௌக்யத்தையும் பெறுவான். விரும்பின கார்யங்களெல்லாம் கைகூடும். இதைக்கேட்பவன் பூமியிலுள்ளவற்றையெல்லாம் பெறுவான். இந்தப் புண்யசரித்ரம் ஆயுஸ்ஸை வளர்ப்பதும் ஆரோக்யத்தை விளைப்பதும் யசஸ்ஸைக் கொடுப்பதும் நல்ல உடன்தோன்றலையும் புத்தியையும் ஸுகத்தையும் தேஜஸ்ஸையும்படைப்பதுமாயிருக்குமாகையால் க்ஷேமத்தை விரும்பும் ஸத்புருஷர்கள் நியமத்துடன் இதை அவஶ்யம் கேட்கவேண்டும். ஜனங்களே! இங்ஙனம் இது இன்பு நடந்த வ்ருத்தாந்தம். உங்களுக்கு க்ஷேமம் உண்டாகுமாக. இதை ஶ்ரத்தையுடன் படிப்பீர்களாக. ஸ்ரீமஹாவிஷ்ணுவின் பெருமை வளர்க. ராமாயணத்தைக் கேட்பினும் அதன் பொருளை உணரிலும் ஸமஸ்த தேவதைகளும் ஸந்தோஷிப்பார்கள். ராமாயணம் கேட்பதனால் பித்ருதேவதைகளும் த்ருப்தி அடைவார்கள், மற்றும் எவர் பக்தியுடன், வால்மீகி மஹர்ஷி இயற்றினதும் ஸ்ரீராமனது திவ்ய சரித்ரங்களை எடுத்துரைப்பதுமாகிய இந்த ஸம்ஹிதையைப் பிறரைக் கொண்டு எழுதுவிப்பார்களோ, தாமும் எழுதுவார்களோ, அவர், இவ்வுலகத்தில் ஸமஸ்த ஐஶ்வர்யமும் நிறைந்து அனைவராலும் பூஜிக்கப்பெற்று ஸமஸ்த போகங்களையும் அனுபவித்

துக் கடைசியில் ஸ்வர்க்கலோகத்தில் (ஸ்ரீவைகுண்டத்தில்) புனராவ்ருத்தி (திரும்பிவருதல்) இல்லாமல் ஸுகமாக வஸித்திருப்பார்கள். நூற்று முப்பத்தொன்ருவது ஸர்க்கம் முற்றிற்று.

யுத்தகாண்டமும் முற்றுப்பெற்றது.
ஸ்ரீராமாயணம் ஸம்பூர்ணம்.

ஸ்ரீ ஸீதா லக்ஷ்மண பரத சத்ருக்ன ஸமேத
ஸ்ரீராமசந்த்ர பரப்ரஹ்மணே நம:
ஸர்வம் ஸ்ரீராம சந்த்ரார்ப்பண மஸ்து.
ஓம் தத் ஸத்.

